# மறுபக்கம் நாவலில் குமரி மாவட்ட சமூகமும் வரலாறும்

(அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு)


ஆய்வாளர்

**அ.துரைப்பாண்டியன்**

பதிவு எண்: 0631

நெறியாளர்

முனைவர் **சா. அமுதன்**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தரமதிப்பீட்டுக்குழுவின் மறுமதிப்பீட்டிலும் “ஏ” தகுதி பெற்றது)

காரைக்குடி - 623003.


**நவம்பர் - 2016**

முனைவர் **சா.அமுதன்**
உதவிப்பேராசியர்
தமிழ் உயராய்வு மையம்
சேதுபதி அரசுகலைக்கல்லூரி
இராமநாதபுரம்-623502

நாள்:

# நெறியாளர் சான்றிதழ்

**'மறுபக்கம் நாவலில் குமரி மாவட்ட சமூகமும் வரலாறும்'** என்னும் தலைப்பில் அ.துரைப்பாண்டியன் இராமநாதபுரம் சேதுபதி அரசு கலைக்கல்லூரி தமிழ் உயராய்வு மையத்தில் பகுதிநேர முனைவர் பட்டத்திற்காகச் செய்துள்ள இவ்ஆய்வு, அவர் செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இவ் ஆய்வு மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

(சா.அமுதன்)
நெறியாளர்

**அ.துரைப்பாண்டியன்**
பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ் உயராய்வு மையம்
சேதுபதி அரசு கலைக்கல்லூரி
இராமநாதபுரம் - 623 502.

நாள்:

# ஆய்வாளர் உறுதிமொழி

**'மறுபக்கம் நாவலில் குமரி மாவட்ட சமூகமும் வரலாறும்'** என்னும் தலைப்பில் பிஎச்.டி பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ்ஆய்வு என் சொந்த முயற்சியால் உருவானதேயாகும். இதற்குமுன் எந்தப் பட்டத்திற்கும் இவ் ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என்று உறுதி அளிக்கிறேன்.

(அ. துரைப்பாண்டியன்)
ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம்
முனைவர். **சா. அமுதன்**
உதவிப்பேராசிரியர்
தமிழ் உயராய்வு மையம்
சேதுபதி அரசு கலைக்கல்லூரி
இராமநாதபுரம் - 623502.

# சுருக்கக்குறியீடு

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| உ. ஆ. | - | உரையாசிரியர் |
| க.ஆ. | - | கட்டுரை ஆசிரியர் |
| குறள். | - | திருக்குறள் |
| தொ.ஆ. | - | தொகுப்பு ஆசிரியர் |
| ப.ஆ | - | பதிப்பு ஆசிரியர் |
| ப. | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| பா. | - | பாடல் |
| புறம். | - | புறநானூறு |
| மேலது. | - | மேற்கூறிய நூல் |
| மொ.பெ. | - | மொழி பெயர்ப்பாளர் |

# நன்றியுரை

**'மறுபக்கம் நாவலில் குமரி மாவட்ட சமூகமும் வரலாறும்'** என்னும் தலைப்பிலமைந்த இவ்வாய்வேடு சிறந்த முறையில் உருவாவதற்கு அருள்புரிந்த இறைவனுக்கு முதற்கண் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

மண்ணை விட்டு மறைந்தாலும் என் மனதில் நீங்காது வாழ்ந்து கொண்டிருக்கின்ற எனது தாய் **அ.பூபதியம்மாள்**, தந்தை **சா.அழகன்** ஆகியோருக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஈன்றெடுக்காமல் வளர்த்து ஆளாக்கி, கல்லூரி கல்விப் பயணத்தில் பயணிக்கச் செய்து, கல்வியாளராய் என்னை வார்த்தெடுத்த எனது அன்னை திருமதி **பா.சாந்தி** மாவட்ட ஊராட்சிக்குழு உறுப்பினர் அவர்களுக்கும் என் இதயத்தின் ஆழத்திலிருந்து நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இனிய தமிழ் ஆய்வுகள் நாளும் நடைபெற அருந்தொண்டாற்றி வரும் காரைக்குடி அழகப்பா பல்கலைக் கழகத்திற்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். இவ் ஆய்வுப்பணி செய்ய வாய்ப்பளித்த சேதுபதி அரசுகலைக்கல்லூரி தமிழ் உயராய்வு மையத்திற்கும், கல்லூரி முதல்வர் அவர்களுக்கும் நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

ஆய்வு முயற்சிகளை ஊக்குவித்து, உற்சாகப்படுத்தி, உழைக்கத் தூண்டி, அரிய ஆலோசனைகளை வழங்கி நெறியாளராய் நெறிப்படுத்திய சேதுபதி அரசு கலைக்கல்லூரி உதவிப்பேராசிரியர் முனைவர் சா.அமுதன் அவர்களுக்கு என் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

எனது கல்விப் பணியில் வழிகாட்டிகளாக விளங்குகின்ற சேதுபதி அரசு கலைக்கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் ஆ.நாகராசன் அவர்களுக்கும், பேரா. திருமதி மெ. செந்தாமரை அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தமிழ்த்துறையின் அனைத்துப் பேராசிரியர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வுப் பணியில் பல்வேறு உதவிகளைச் செய்த இளமுனைவர் பட்ட மாணவி திருமதி எம். கிருஷ்ணவேணிக்கும் நன்றி

ஆய்விற்குத் தேவையான நூல்களை வழங்கி உதவிய எம் கல்லூரி தமிழ்த்துறை நூலகத்திற்கு என் நன்றி என்றும் உரியது.

அச்சாக்க முயற்சியில் உதவிசெய்து கணினி அச்சு செய்து தந்துள்ள குரு ஆப்செட் பிரிண்டர்ஸ், இராமநாதபுரம் அவர்களுக்கும் என் அன்பு கலந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அ. துரைப்பாண்டியன்

# பொருளடக்கம்

# ஆய்வு அறிமுகம்

தமிழ்ப்புனைகதை உலகின் தனித்த ஆளுமையாகப் பொன்னீலன் விளங்குகிறார். கவிதை, நாவல், சிறுகதை, வாழ்க்கை வரலாறு, திறனாய்வு, மொழிபெயர்ப்பு, பயண இலக்கியம் எனப் பல்வேறு இலக்கிய வகைமைகளில் அவர் தடம்பதித்துள்ளார். குமரிமாவட்டத்தின் புவியியல், அரசியல், சமயவியல், சமுதாய இயங்கியல், நாட்டார் வழக்காற்றியல், விளிம்புநிலை வாழ்வியல் அனைத்தையும் உள்ளடக்கியதாகப் பொன்னீலனின் எழுத்துலகம் அமைந்துள்ளது. நிகழ்வுகளை அவற்றின் சமூக வரலாற்றுச் சூழலோடு இணைத்து நோக்கும் மார்க்சியப் பின்புலத்தில் பொன்னீலன் எழுத்து அமைந்துள்ளது. பல்வேறு இலக்கிய வகைமைகளில் கால்பதித்தாலும் பொன்னீலனை நாவலாசிரியராகப் பார்க்கும் பார்வையே பொதுவெளியில் மிகுந்துள்ளது. ஏனெனில் கரிசல், கொள்ளைக்காரர்கள், ஊற்றில் மலர்ந்தது, தேடல், புதிய தரிசனங்கள், மறுபக்கம் ஆகிய அனைத்து நாவல்களுமே கனமான சமூக ஏற்பைப் பெற்றுள்ளன. புதிய தரிசனங்களுக்காக ‘சாகித்திய அகாதமி’ விருது பெற்றதோடு படைப்பாக்கத் தன்னிறைவு அடைந்துவிடாமல், அதனைத் தொடர்ந்து உயிர்ப்புடன் இயங்கும் பொன்னீலனின் எழுத்து ஆராயப்பட வேண்டியதாகிறது. மண்டைக்காட்டுக் கலவரம் என்ற மையத்திலிருந்து சாதிய முரண்களையும் சமய முரண்களையும் விமர்சிக்கும் நாவலாக மறுபக்கம் நாவல் உறுப்பெற்றுள்ளது. பத்தொன்பது மற்றும் இருபதாம் நூற்றாண்டுகளில் குமரி மாவட்டத்தில் தோன்றிய ஆளுமைகள், போராட்டங்கள், சிக்கல்கள், மாற்றங்கள் ஆகியவற்றைப் பதிவு செய்யும் மறுபக்கம் நாவலை முழுமையாக ஆராய்வது காலத்தின் தேவையாக உள்ளது.

## ஆய்வுத்தலைப்பு :

சமூகமும் வரலாறும் இலக்கியத்தின் இரு கண்களாகும். சமூகத்தோடு இசைந்தும் முரண்பட்டும் இயங்கும் தனிமனிதனின் உணர்வுகளை முன்வைப்பதாக இலக்கியங்கள் தோன்றுகின்றன. இலக்கிய வகைகளில் ஒன்றாகிய நாவலானது மனித வாழ்வோடு மிக அணுக்க உறவுகொண்டு விளங்குவதால் சமூகவியல் ஆய்வுகள் நாவலைப் பெரிதும் மையப்படுத்துகின்றன. பொன்னீலனின் எழுத்து என்பது சமூகத்தில் ஆழ வேரூன்றி கிளை பரப்பி நிற்கிறது. அவரது இடதுசாரி இயக்கம் சார்ந்த பிடிப்பானது சமூகப்புலப்பாட்டுத் தன்மையோடு, சமூக மாற்றத்தையும் தனக்குள் கொண்டுள்ளது. ஆனால்

அழகியலைப் புறந்தள்ளிவிட்டு வெறும் சமூக ஆவணமொன்றைத் தருவதாக அவரது படைப்புலகம் அமையவில்லை. நாவலின் வடிவமும் செய்நேர்த்தியும் அவரது படைப்பைக் கலைநேர்த்தியுடையதாக மாற்றிவிடுகிறது. சமுதாயப் பின்னணி, சமுதாய நிறுவனங்கள், சமுதாய மதிப்புகள், சமுதாயச் சிக்கல்கள் ஆகிய அனைத்தும் பொன்னீலன் படைப்புகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன. மறுபக்கம் நாவலில் மேற்காட்டிய சமூகக் கூறுகள் அனைத்தும் விரவிக்கிடக்கின்றன. சமூகம் பற்றிய பதிவுடன் வரலாற்றை முன்னிலைப்படுத்துவதாகவும் பொன்னீலனின் எழுத்து செயற்படுகிறது. வரலாற்றுக்கு அடிப்படையான காலம், இடம் எனும் மையங்களில் மறுபக்கம் நாவல் காலூன்றி நிற்கிறது. 'புதிய தரிசனங்கள்' நாவல் அரசியல் பதிவாக அமைந்ததென்றால், அதற்குப் பிந்தைய 'மறுபக்கம்' நாவலானது வரலாற்றில் கவனம் கொள்ளுகிறது. பொன்னீலன் சாதி சமய மோதல் எனும் சமுதாயச் சிக்கலை விளக்குவதற்குத் தேவையான தரவுகளைப் வரலாற்றிலிருந்து எடுத்துக்கொள்ளுகிறார். சமகால சமுதாய இயக்கத்தைத் தீர்மானிப்பதில் கடந்த காலத்தின் வரலாறு முக்கியப் பங்காற்றுவதை அவரது நாவலினூடாகப்புரிந்து கொள்ளமுடிகிறது. காலத்தின் ஆன்மாவாக விளங்கும் பொன்னீலனின் எழுத்து ஆய்வதற்குரிய பல்வேறு சமூக வரலாற்றுத் தரவுகளைத் தன்னகத்தே அடக்கியுள்ளது. எனவே **மறுபக்கம் நாவலில் குமரிமாவட்ட சமூகமும் வரலாறும்** என்பதை ஆய்வுத்தலைப்பாகக் கொண்டு இவ்வாய்வு நிகழ்த்தப்படுகிறது.

## முன் ஆய்வுகள் :

பொன்னீலன் நாவல்களைப் பற்றி பல்வேறு ஆய்வுகள் நிகழ்த்தப்பட்டுள்ளன. மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்தில் ஜோஸ்லின் என்பவர் 'பொன்னீலன் நாவல்களில் அழகியல் கூறுகள்' என்ற தலைப்பின் கீழ் முனைவர் பட்ட ஆய்வு செய்துள்ளார். சு.அர.கீதா எனும் ஆய்வாளர் 'பொன்னீலனின் படைப்பிலக்கியங்கள் ஓர் ஆய்வு' எனும் தலைப்பில் மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வு செய்துள்ளார். சமூக, வரலாற்றுப் பதிவுகளை ஆராயும் 'மறுபக்கம் நாவலில் குமரி மாவட்ட சமூகமும் வரலாறும்' எனும் இவ்வாய்வு மேற்காட்டிய ஆய்வுகளினின்று வேறுபட்டு நிற்கிறது.

## ஆய்வு நோக்கம் :

'புதிய தரிசனங்கள்' நாவலுக்காக 'சாகித்திய அகாதெமி' விருது பெற்ற பொன்னீலனின் எழுத்துலகம் தொடர்ச்சியாக உயிர்ப்புடன் இயங்குவதை விளக்குவதாக இவ்வாய்வு அமைந்துள்ளது.

சர்ச்சைக்குரிய கதைக்களத்தில் நின்று கொண்டு இம்மியளவும் நடுவுநிலை பிசகாமல் கதை சொல்லும் பொன்னீலனின் சார்பற்ற மனநிலையை வெளிப்படுத்தும் நோக்கில் இவ்வாய்வு அமைந்துள்ளது.

ஆய்வுலகில் வரலாற்றுப் பார்வை அருகிவரும் நவீன தமிழ் இலக்கியச் சூழலில் வரலாற்றை முன்னிறுத்தும் நோக்கில் இந்த ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

ஒடுக்குவோர் / ஒடுக்கப்படுவோர் எனும் முரணில் மையம் கொள்ளும் நாவலானது ஒடுக்கப்பட்டோருக்கான குரலாக ஒலிப்பதனை எடுத்துக்காட்டும் நோக்கில் இவ்வாய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது.

குமரி மாவட்டத்தில் வாழும் மக்கட் தொகுதியினரின் சிக்கல்கள், சிக்கல்களுக்கான காரணங்கள், சிக்கல்கள் மீதான விமர்சனங்கள் ஆகியவற்றை மறுபக்கம் நாவல்வழி ஆய்வதுடன், சிக்கல்களுக்கான தீர்வுகளை உருவாக்குவதிலும் இவ்வாய்வு கவனம் கொள்ளுகிறது.

சாதி, மொழி, சமய, அரசியல் வேறுபாடுகளை நீக்கி, ஒருமைப்பாட்டுணர்வை மனித உள்ளங்களில் விதைப்பதனை இவ்வாய்வு தன் பெரு நோக்கமாகக் கொண்டு இயங்குகிறது.

**கருதுகோள் :**

'மறுபக்கம் நாவலில் குமரி மாவட்ட சமூகமும் வரலாறும்' எனும் இந்த ஆய்வு கீழ்க்காணும் கருதுகோள்களைக் கொண்டு செயற்படுகிறது.

பொன்னீலனிடம் தனது சமயச் சார்பு எதுவும் இல்லை என்பது முக்கியமான கருதுகோளாகும்.

குமரி மாவட்டத்துக்கு அப்பாலுள்ள வரலாறுகள் குமரி மக்களின் வாழ்வியலோடு ஏதோ ஒரு விதத்தில் தாக்கம் செலுத்துவதால் அவற்றையும் பொன்னீலன் உள்ளடக்கியுள்ளார் என்பது மற்றொரு கருதுகோளாகும்.

குமரி மாவட்டத்தின் மேற்குப் பகுதியை விட கிழக்குப் பகுதிக்கே நாவலில் முக்கியத்துவம் வழங்கப்படுவதாக இறுதிக் கருதுகோள் ஊகிக்கிறது.

## ஆய்வு மூலமும் எல்லையும்:

பொன்னீலன் ‘கரிசல்’, ‘கொள்ளைக்காரர்கள்’, ‘தேடல்’ ‘புதியதரிசனங்கள்’, ‘மறுபக்கம்’ ஆகிய நாவல்களை எழுதியிருந்தாலும் அவரது ‘மறுபக்கம் ’ நாவல் மட்டுமே ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது.

**சான்றாதாரங்கள்:**

**அ. முதன்மைச் சான்றாதாரம் :**

பொன்னீலன் எழுதிய மறுபக்கம் நாவல் ஆய்வுக்கு முதன்மை ஆதாரமாக எடுத்துக் கொள்ளப்படுகிறது.

**ஆ. துணைமைச் சான்றாதாரங்கள்:**

எழுநூற்றி ஐம்பத்தொரு பக்கங்களைக் கொண்ட நாவலான ‘மறுபக்கம்’ சொல்லும் சமூக வரலாற்றுச் செய்திகளுக்குத் துணை நிற்கும் சமூகவியல், வரலாறு, நாட்டார் வழக்காற்றியல் ஆகிய துறை சார்ந்த நூற்களும் திறனாய்வு நூற்களும் துணைமை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டு இவ்வாய்வு செய்யப்படுகிறது.

## ஆய்வு அணுகுமுறை

ஆய்வு நோக்கங்களுக்கும் தேவைகளுக்கும் ஏற்ற ஆய்வு முறைகள் இங்குப் பின்பற்றப்பட்டுள்ளன. பொன்னீலனின் ஆளுமை பற்றி ஆராய வாழ்க்கை வரலாற்று அணுகுமுறை பின்பற்றப்பட்டுள்ளது. குமரி மாவட்ட ஆளுமைகள், வரலாற்று நிகழ்வுகள், போராட்டங்கள் மக்களின் சிந்தனையை இயக்கும் தேசியம் சார்ந்த ஆளுமைகள் ஆகிய செய்திகளை விளக்க வரலாற்று அணுகுமுறை பின்பற்றப்பட்டுள்ளது. சமுதாயச் செய்திகளை விளக்க சமுதாயவியல் அணுகுமுறை பின்பற்றப்பட்டுள்ளது. நாட்டார் வழக்காறுகளை அறிய நாட்டார் வழக்காற்றியல் அணுகுமுறை பின்பற்றப்படுகிறது. பொருண்மைகளை வகைப்படுத்த பகுப்பாய்வு முறை பின்பற்றப்பட்டுள்ளது.

## ஆய்வுப்பகுப்பு

ஆய்வு அறிமுகம், ஆய்வு நிறைவுரை நீங்கலாக இவ்வாய்வு நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

## இயல் ஒன்று: பொன்னீலனின் படைப்புலகம்

'பொன்னீலனின் படைப்புலகம்' என்னும் முதல் இயலில் பெயரும் புனைப்பெயரும்-இளமைப்பருவம் - தொழில் வாழ்க்கை - பல்துறைப் பங்களிப்பு - விருதுகளும் பரிசுகளும் - படைப்புகள் - பேச்சுக்கலை - மதிப்பீடுகள் ஆகியவை ஆராயப்பட்டுள்ளன.

## இயல் இரண்டு : மறுபக்கம் நாவலில் சமுதாயம்

'மறுபக்கம் நாவலில் சமுதாயம்' எனும் இரண்டாம் இயலில் சமூகம் - சமுதாயம்- சமூகவியல்- சமுதாய அணுகுமுறை - இலக்கியமும் சமுதாயமும்- சமுதாய நிலைப்பாடு - சமுதாயப் பிரிவுகள் - தொழில் வாழ்க்கை- உணவுப்பழக்கங்கள் - சமுதாயச் சிக்கல்கள் - பெண்களின் சிக்கல்கள் - சமுதாய விழுமியங்கள் ஆகியவை ஆராயப்பட்டுள்ளன.

## இயல்மூன்று : மறுபக்கம் நாவலில் குமரி மாவட்ட வரலாறு

'மறுபக்கம் நாவலில் குமரி மாவட்ட வரலாறு' எனும் மூன்றாம் இயலில் வரலாறும் இலக்கியமும் - பழங்காலக் குமரியின் வரலாறு - திருவிதாங்கூர் மன்னர்களின் வரலாறு - வைகுண்டர் வரலாறு - கிறித்தவத்தின் வரலாறு - குமரி மாவட்ட ஆளுமைகளின் வரலாறு - அடிமைகளின் விடுதலை வரலாறு தோள்சீலைக் கலக வரலாறு - தென்எல்லைப் போராட்ட வரலாறு ஆகியவை விவரிக்கப்பட்டுள்ளன.

## இயல் நான்கு: மறுபக்கம் நாவலில் நாட்டார் வழக்காறுகள்

இவ்வியலில் நாட்டார் தெய்வங்கள் - நாட்டுப்புற வழிபாட்டு மரபுகள் - நாட்டார் பண்பாடு - நாட்டுப்புற நம்பிக்கைகள் - கிறித்தவர்களின் பழக்கவழக்கங்கள் - நாட்டுப்புறக் கலைகள் ஆகியவை ஆராயப்பட்டுள்ளன.

ஆய்வில் கண்டறிந்த உண்மைகள் ஆய்வு நிறைவுரையில் தொகுத்தளிக்கப் பட்டுள்ளன.

இவ்வாய்வுக்குத் துணை செய்த நூற்கள் துணை நூற்பட்டியலாகத் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

## இயல் - 1

## பொன்னீலனின் படைப்புலகம்

### முன்னுரை:

தமிழிலக்கிய வரலாற்றில் பொன்னீலன் தனித்தொரு இலக்கிய ஆளுமையாகத் திகழுகிறார். அவர் கவிதை, நாவல், சிறுகதை, வாழ்க்கை வரலாறு, திறனாய்வு, மொழிபெயர்ப்பு, பயண இலக்கியம் எனப் பல்வேறு இலக்கிய வகைமைகளில் தடம்பதித்துள்ளார். சாகித்திய அகாதெமி விருது பெற்றபின் பொன்னீலனின் படைப்புகள் குறித்த தேடல் ஆய்வுத் துறையில் மிகுந்தது. அடித்தள மக்களின் இயல்பான வாழ்வையும், எழுச்சியையும் முன்வைக்கும் பொன்னீலனின் எழுத்து முற்போக்கு இலக்கியமாக மதிப்பிடப்படுகிறது. கலைத்தன்மை குன்றாத முற்போக்கு இலக்கியங்களைத் தந்தமையால் அவருக்குத் தமிழிலக்கிய உலகு சிறப்பான இடத்தைத் தந்துள்ளதுள்ளது. பொன்னீலனின் வாழ்வு, படைப்புக்கள், ஆகியவற்றை ஆராய்வதை நோக்கமாகக் கொண்ட இவ்வியல் அவரது படைப்புகள் குறித்த மதிப்பீடுகளையும் முன்வைக்கிறது.

### பெயரும் புனைபெயரும்:

பொன்னீலன் இந்தியாவின் தென்பகுதியாகிய கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள மணிக்கட்டிப் பொட்டலை வாழிடமாகக் கொண்டவர். இவர் 15.12.1940 -இல் பிறந்தார். பொன்னீலனின் இயற்பெயர் ஸ்ரீகண்டேஸ்வர பக்தவத்சலன் என்பதாகும். அவரது பெரியப்பா விரும்பிய ஸ்ரீகண்டேஸ்வரன் என்ற பெயரையும், தந்தை விரும்பிய பக்தவத்சலன் என்ற பெயரையும் இணைத்து அவ்வியற் பெயர் உருவாக்கப்பட்டது. சபாபதி என்ற இன்னொரு பெயரும் அவருக்கு உண்டு. எழுத்தாளரான போது அவர் தந்தையின் பெயரான பொன்னீலவடிவு என்பதை ஒட்டித் தன் புனைப்பெயரை வைத்துக்கொண்டார். இவரது தாயார் பெயர் அ.அழகிய நாயகி அம்மாள் என்பதாகும். பொன்னீலனுக்கு 10/09/1967 அன்று திருமணம் நடைபெற்றது. இவரது மனைவி அ.உமாதேவி ஆவார். இத்தம்பதியருக்கு அழகு நிலா, அமுதா என்னும் இரு மகள்கள் உள்ளனர்.

### இளமைப்பருவம்:

பொன்னீலனுக்குள் கதை கேட்கும் ஆர்வம் நான்கு வயதிலேயே தொடங்கிவிட்டது. பொன்னீலன் கதை கேட்கும் ஆர்வத்தை வளர்த்ததில் அவரது அம்மாவுக்குப் பெரும்பங்கு உண்டு. அவர்கள் நான்கு வயதிலிருந்தே சிறிய

கதைகளைப் பொன்னீலனுக்குச் சொல்லிக் கொடுப்பார்கள். ஊரிலுள்ள கோவிலில் வெள்ளிக்கிழமை தோறும் பாகவதர் பாடும் பாடல்களை அப்படியே பின் தொடர்ந்து பாடும் திறனும் பொன்னீலனுக்கிருந்தது. தந்தையும், பெரியப்பாவும் பொன்னீலனுக்குத் திருக்குறளைச் சொல்லிக் கொடுப்பார்கள். சிறுவயதிலேயே சாதி, மத பேதமற்ற மனநிலை பொன்னீலனிடம் உருக்கொண்டிருந்தது. பிற சிறுவர்களோடு பழகும் பொழுதும் அவர்களை அழைத்து வந்து விருந்து உபசரிக்கும் பொழுதும் ஒருமைப்பண்பாட்டுணர்வு அவரிடம் முழுமையாக அமையப் பெற்றிருந்தது. அவர் பத்தாம் வகுப்பு வரை எல்லாப் பாடங்களிலும் அதிக மதிப்பெண் பெற்றுத் தேர்ச்சியடைந்து வந்தார். பதினொன்றாம் வகுப்பில் தோல்வியடைந்தார். அதன் பின்னர் நாகர்கோவிலில் ஒரு பள்ளியில் சேர்ந்து தேர்ச்சியடைந்தார். நாகர்கோவிலிலமைந்த ஸ்காட் கிறித்தவக் கல்லூரியில் பி.எஸ்.சி படித்து 1960 ஆம் ஆண்டு தேர்ச்சியடைந்தார். 1961-ஆம் ஆண்டு மதுரையிலுள்ள தியாகராசர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் கல்வியியல் பயின்று தேர்ச்சி பெற்றார். 1976-ஆம் ஆண்டு பாளையங்கோட்டை தூய சவேரியார் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் கல்வியியல் பட்டமேற்படிப்பாகிய எம்.எட் பயின்றார். 1984-ஆம் ஆண்டு முதுகலைத் தமிழ் எம்.ஏ தேர்ச்சிபெற்றார்.

## தொழில் வாழ்க்கை

பொன்னீலன் குறத்தியறையிலுள்ள அரசுப்பள்ளியில் முதன் முதலாக ஆசிரியர் பணியில் சேர்ந்தார். அதன் பின்னர் பல்வேறு கிராமப்புற பள்ளிகளில் ஆசிரியர் பணிசெய்தார். பள்ளியில் கற்பித்தல் என்ற நிலையைத் தாண்டி பொன்னீலனின் பணி விரிவுபட்டிருந்தது. நாற்காலி இல்லாத பள்ளிகளுக்கு அவர் தனது செலவிலேயே நாற்காலி செய்து போட்ட நிகழ்வுகளும் உண்டு. ஏழை மாணவர்களுக்கு இலவசமாகச் சட்டை, கால்சட்டை, நோட்டு. புத்தகங்கள் வாங்கிக் கொடுப்பார். கட்டட வசதி இல்லாத பள்ளிகளில் செல்வந்தவர்களிடம் நிலமும், பொருளும் பெற்றுக் கட்டடங்களை உருவாக்கினார்.

பொன்னீலன் 18.07.1962-அன்று குறத்தியறை அரசு உயர்நிலைப்பள்ளியில் அறிவியல் ஆசிரியராகப் பணியேற்றார். நான்கு ஆண்டுகள் அப்பள்ளியில் பணிபுரிந்தார். 1966-முதல் 1969-வரை பள்ளித்துணை ஆய்வாளராக நாகலாபுரத்தில் பணியாற்றினார். 1969-ஆம் ஆண்டு முதல் 1971 -ஆம் ஆண்டு வரை பரிவல்லிக்கோட்டை ஆதார ஆசிரியர் பயிற்சிப்பள்ளியில் தலைமையாசிரியராகப் பொறுப்பு வகித்தார்.

1971-ஆம் ஆண்டு பழவூர் அரசு உயர்நிலைப்பள்ளியில் அறிவியல் மற்றும் கணித ஆசிரியராகப் பணியேற்றார். அதே ஆண்டு ஆரல்வாய்மொழி அரசு உயர்நிலைப்பள்ளிக்கு மாற்றம் பெற்று அங்கு ஐந்தாண்டுகள் ஆசிரியர் பணிபுரிந்தார்.

1977-ஆம் ஆண்டு தாமரைகுளம் நடுநிலைப்பள்ளியில் தலைமை ஆசிரியராகப் பொறுப்பேற்றார். அதே ஆண்டு குளித்துறை மாவட்டக் கல்வி அலுவலகத்தில் அறிவியல் ஆய்வாளராக மாற்றம் பெற்றார். 1980-ஆம் ஆண்டு புலியூர் குறிச்சி நடுநிலைப்பள்ளியில் தலைமையாசிரியராகப் பணியாற்றினார்.

1982-ஆம் ஆண்டு முன்சிறையில் பள்ளித் துணை ஆய்வாளராகப் பொறுப்பேற்று ஆறு மாதம் அப்பணியைச் செய்தார். அதே ஆண்டு சுசீந்திரம் பள்ளித் துணை ஆய்வாளராக மாற்றம் பெற்றார். 1983-ஆம் ஆண்டு முதல் 1988-ஆம் ஆண்டு வரை புதுக்கோட்டை மாவட்டம், அத்தாணி அரசு உயர்நிலைப்பள்ளியில் தலைமையாசிரியராகப் பணியாற்றினார். 1988-ஆம் ஆண்டு முதல் 1992-வரை மொடக்குறிச்சி வயது வந்தோர் கல்வித் திட்ட அலுவலவராகப் பணியாற்றினார். 1992-ஆம் ஆண்டு வயலூர் அரசு உயர்நிலைப்பள்ளியில் தலைமையாசிரியராகப் பணியாற்றினார். 1993-ஆம் ஆண்டு முதல் 1995-ஆம் ஆண்டு வரை களியக்காவிளை அரசு உயர்நிலைப்பள்ளியில் தலைமையாசிரியராகப் பணியாற்றினார். 1995-ஆம் ஆண்டு சென்னை பள்ளிக்கல்வித் துறையில் உதவி இயக்குநராகப் பதவி உயர்வு பெற்றார். 1997-ஆம் ஆண்டு கோவில்பட்டி கல்வி அலுவலராகப் பணிசெய்தார்.

1997-ஆம் ஆண்டு கோயமுத்தூர் திருமூர்த்தி நகர் மாவட்டக் கல்விப் பயிற்சி நிறுவனத்தின் முதல்வராகப் பொறுப்பேற்று பணியாற்றினார். 1998-ஆம் ஆண்டு கோயமுத்தூர் மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலராகப் பதவி உயர்வு பெற்றுப் பணிபுரிந்தார். இவ்வாறு பொன்னீலன் கல்வித்துறையில் பல்வேறு இடங்களில் பல்வேறு பதவிகளில் திறம்பட இயங்கிக் கல்விப்பணி புரிந்துள்ளார்.

பொன்னீலன் மொத்தம் முப்பத்தாறரை ஆண்டுகள் கல்வித் துறையில் பணியாற்றியுள்ளார். அவர் பள்ளி ஆசிரியர், தலைமை ஆசிரியர், பள்ளித்துணை ஆய்வாளர், அறிவியல் ஆய்வாளர், மாவட்டக் கல்வி அலுவலர், பள்ளிக் கல்வி கூடுதல் இயக்குநர் ஆகிய பணிகளைத் திறம்படப் புரிந்துள்ளார். மாணவனைப் புரிந்து கொண்டு அவனது ஆன்மத்துடிப்பை உணர்ந்து பாடம் கற்பிக்க வேண்டும் என்ற கொள்கையை அவர் கொண்டிருந்தார். மாணவனைத் துன்புறுத்திப் பாடம் கற்றுக்கொடுத்தல் என்பது பொன்னீலனுக்கு உடன்பாடுடையதன்று. பிரம்பை

மட்டுமே நம்பியிருக்கும் ஆசிரியர் மாணவனின் ஆளுமையைச் சிதைத்து விடுவதாக அவர் கருதினார்.

பொன்னீலன் ஆங்கிலவழிக் கல்வியை ஆதரிப்பவரல்ல. தமிழ்வழிக்கல்வி மூலம் அறிவியலைக் கற்பிக்க வேண்டும் என்பது அவரது கொள்கையாக இருந்தது.

> "தமிழன் தமிழில் கற்பது தான் உயர்வுக்கு வழி எந்த மொழியினையும் வெற்றி கொள்ளும் உள்ளாற்றல் தமிழுக்கு உண்டு. தமிழர்களே, எல்லாச் செல்வங்களையும் தமிழன்னைக்கு அணிவியுங்கள். அவள் நம்மைக் கம்பீரமாக வழிநடத்துவாள்"[1]

என்கிறார்.

ஆங்கில மோகத்தால் மண்ணுக்கேற்ற பண்பாடு, கலாச்சாரம், பழக்க வழக்கங்கள், வாழ்வியல் ஆகியவை மழுங்கி விடுவதாக அவர் கருதினார். பொன்னீலன் தனது பணிக்கால அனுபவங்களை 'விடைபெறுகிறேன்' என்ற நூலில் பதிவு செய்துள்ளார்.

## எழுதத்தூண்டிய பின்புலம்:

பொன்னீலன், தொடக்கப் பள்ளி பயின்ற போது அவரது ஆசிரியரான தாணுமாலயப் பெருமாள் பிள்ளை அவருக்குத் தமிழ் இலக்கியங்களை அறிமுகம் செய்துவைத்தார். தினமும் பத்துத் திருக்குறள் மனப்பாடம் செய்தால் கால் ரூபாய் தருவதாக ஊக்கப்படுத்திய பெரியப்பாவும் அவரது இலக்கிய ஈடுபாட்டுக்கு ஒரு காரணமாக அமைந்தார். பள்ளி, கல்லூரி ஆசிரியர்களும் அவது இலக்கிய ஆர்வத்தை வளர்த்தவர்கள் ஆவார். பொன்னீலனின் தாயாராகிய அழகியநாயகி அம்மாள் 'கவலை' எனும் நாட்டார் நெடுங்கதையின் ஆசிரியர் ஆவார். தாயாரின் தாக்கம் இயல்பிலேயே பொன்னீலனிடம் இருந்தது. கிருஷ்ணன் நம்பி எனும் எழுத்தாளருடனான நட்பு அவருக்குள் இலக்கியத் தாகத்தை மிகுவித்தது.

கடுக்கரையில் ஆசிரியராகப் பணியாற்றியபோது சுந்தரராமசாமியோடு கொண்ட நட்பால் நவீன இலக்கியப் பார்வையைப் பெற்றார். கவிதையிலிருந்து தனது கவனம் சுந்தரராமசாமியால் நாவலுக்குத் திரும்பியது பற்றி விடைபெறுகிறேன் நூலில் அவர் குறிப்பிடுகிறார்.

> "நான் படிக்க வேண்டிய புத்தகங்களின் பட்டியல் ஒன்றைத் தந்தார். மு.வ, அகிலன், கல்கி போன்றோரின் விசிறியாக இருந்த நான் முறையாகத் தற்காலத் தமிழ் இலக்கியத்திற்கு அதற்குப் பின்னர்தான் அறிமுகம் செய்து வைக்கப்பட்டேன். என்னுடைய நாட்டம் கவிதையில் இருந்து நாவலுக்கு மெல்லத் திரும்பியது"[2] -என்கிறார்.

எட்டயாபுரத்திற்கு வடக்கே உள்ள நாகலாபுரம் பகுதிக்குப் பள்ளித் துணை ஆய்வாளராகப் பணிமாற்றம் பெற்றபோது , எட்டயபுரம் பாரதி முற்போக்கு வாலிபர் சங்கத்துடன் அவருக்குத் தொடர்பு ஏற்பட்டது. பாரதி விழாவில் கலந்து கொண்டமையால் குன்றக்குடி அடிகளார், தொ.மு.சி.ரகுநாதன், பொதுவுடைமைக் கட்சித் தலைவர் பாலதண்டாயுதம், தஞ்சை இராமமூர்த்தி, மாயாண்டி பாரதி, கே.சி.எஸ் அருணாச்சலம், எஸ்.இராமகிருஷ்ணன் போன்றோரைச் சந்திக்கவும், பழகவும் வாய்ப்பு ஏற்பட்டது. இவ்வாளுமைகள் பொன்னீலனிடம் பெரிய தாக்கத்ததை உருவாக்கின. நா.வானமாமலையுடனான நட்பு தன்னில் பெரிய மாற்றத்தை உருவாக்கியதாகப் பொன்னீலன் குறிப்பிடுகிறார்.

> "அந்த அன்பு, அவரோடு அவர் காலம் வரை நான் வைத்திருந்த குரு சீடர் உறவு என்னை எவ்வளவுக்கு மாற்றிவிட்டது என்று நினைக்க மகிழ்ச்சியாக இருக்கிறது"[3]

என்று கூறுகிறார். கலை இலக்கியப் பெருமன்றம் அவரை முற்போக்கு எழுத்தாளராக வார்த்தெடுத்தது. சங்கை கைவிளக்கு, புதுமைத்தாய், செம்மலர், கல்கி, வாசுகி, குங்குமம், ஓம்சக்தி, இந்தியாடுடே, தாய், குமுதம் போன்ற இதழ்கள் பொன்னீலனின் படைப்புகளை வெளியிட்டு உற்சாகப்படுத்தின.

## பல்துறைப் பங்களிப்பு:

பொன்னீலன் எழுதிய 'உறவுகள்' எனும் குறுநாவலை மகேந்திரன் 'பூட்டாத பூட்டுக்கள்' என்ற திரைப்படமாக எடுத்துள்ளார். 1986-ஆம் ஆண்டு டென்மார்க்கில் நடைபெற்ற சமாதான மாநாட்டின் பிரதிநிதியாக கலந்து கொண்டார். நா.வானமாமலையின் 'ஆராய்ச்சி ' காலாண்டிதழ் ஆசிரியர் குழுவில் இடம் பெற்றிருந்தார். நெல்லை ஆய்வுக்குழு, அகிலஇந்திய முற்போக்கு எழுத்தாளர் தேசிய சம்மேளனம், தேசிய புத்தக நிறுவனம், மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகப் பேரவை, கொச்சிப் பல்கலைக்கழகம் அயல்மொழித் துறைப் பேரவை ஆகியவற்றில் உறுப்பினராக இருந்துள்ளார். அனைத்திந்திய சமாதான ஒருமைப்பாட்டுக் கழகத்தின் தமிழ்நாடு பிரிவு துணைச் செயலாளராகப் பொறுப்பு வகித்துள்ளார். தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றத்தின் பொதுச்செயலாளராகவும் பதவி வகித்துள்ளார்.

## விருதுகளும், பரிசுகளும்:

பொன்னீலனின் இலக்கியப் பணியைப் பராட்டி, பல்வேறு அமைப்புகள் விருதுகளையும் பரிசுகளையும் வழங்கிச் சிறப்பித்துள்ளன. 1982-ஆம் ஆண்டு 'கரிசல்' நாவலுக்குத் தமிழக அரசின் பரிசினைத் தமிழக முதலமைச்சர் எம்.ஜி.இராமச்சந்திரனிடம் இருந்து பெற்றார். 1984-ஆம் ஆண்டு 'ஜீவா என்றொரு மானுடன்' நூலுக்காகத் தமிழக அரசு வழங்கிய பரிசினைப் பெற்றுக்கொண்டார். இதே ஆண்டு 'மார்க்சிய அழகியல்' மொழிபெயர்ப்புக்குத் தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகம் வழங்கிய பரிசைப் பெற்றார். 1995-ஆம் ஆண்டு 'புதிய தரிசனங்கள்' நாவலுக்காக 'சாகித்திய அகாதமி' விருதினைப் பெற்றுக்கொண்டார்.

1988-ஆம் ஆண்டு 'எழுத்து வேந்தர்' என்னும் பட்டத்தைப் பெற்றுக்கொண்டார். 'காமம் செப்பாது' நூலுக்காக லில்லி தெய்வ சிகாமணி விருதினை 1997-ஆம் ஆண்டு பெற்றார். இந்நூலுக்காக இதே ஆண்டு திருப்பூர் தமிழ்ச்சங்க விருதினையும் பெற்றார்.

## பொன்னீலனின் படைப்புக்கள்:

பொன்னீலனின் படைப்புகள் கீழே வகைப்படுத்தித் தரப்படுகின்றன. அவை.

நாவல்கள்:

கரிசல் (1976)

கொள்ளைக்கரார்கள் (1977)

ஊற்றில் மலர்ந்தது (1978)

தேடல் (1985)

புதிய தரிசனங்கள் (1992)

மறுபக்கம் (2010)

சிறுகதைகள்:

காமம் செப்பாது (1996)

நித்தியமானது (1998)

கவிதைகள்:

பொன்னீலன் கவிதைகள் (1978)

புல்லின் குழந்தைகள் (1998)

வாழ்க்கை வரலாறு:

ஜீவா என்றொரு மானுடன் (1989)

தவத்திரு குன்றக்குடி அடிகளார் தமிழகத்தின் ஆன்மீக வழிகாட்டி (1977)

வைகுண்டர் காட்டும் வாழ்க்கை நெறி (2000)

தன் வரலாறு:

விடை பெறுகிறேன்

நாட்டார் இலக்கியம்:

அத்தாணிக் கதைகள் (2004)

பொட்டல் கதைகள் (2007)

திறனாய்வு நூற்கள்:

தற்காலத் தமிழ்இலக்கியமும், திராவிட இயக்கச் சித்தாந்தமும்(1988)

முற்போக்கு இலக்கிய இயக்கங்கள் (1994)

தாய்மொழி வழிக்கல்வி (2000)

மொழிபெயர்ப்பு:

வாழ்க்கைப்பாதை எ.எஸ்.மகரங்கோஇரண்டு பாகம் (1976)

மார்க்சிய அழகியலின் அடிப்படைகள், ஆவனர்சிஸ் (1984)

சோவியத் இலக்கியத்தில் மனித மதிப்புகள் (1985)

வகுப்புவாத வரலாறும் ராமரின் அயோத்தியும் (1990)

பயண நூல்:

புவியெங்கும் சாந்தி நிலவுக (1986)

தொகுப்பிலக்கியம்:

ப.ஜீவானந்தம் நூல் திரட்டு

சாதிமதங்களைப் பாரோம் (1999)

அன்புள்ள (பல்வேறு சிறுகதைகளின் தொகுப்பு)

ஆகிய நூற்களைப் பொன்னீலன் படைத்துள்ளார்.

## கரிசல்:

பொன்னீலன் எழுதிய முதல் நாவல் கரிசல் ஆகும். இது 1976-ஆம் ஆண்டு வெளிவந்தது. கரிசல் பகுதி மக்களின் வாழ்வியல் சிக்கல்களை வெளிக்கொணர்ந்த நாவல் இது. அடிமைத்தளையை அறுத்தெறிந்து விடுதலையைத் தேடும் ஒரு மக்கட்கூட்டத்தின் கதையை இந்நாவல் பேசியது. இக்கதையில் ஆசிரியர் பெருமாள்புரத்தைக் களமாகக் காட்டுகிறார். கதையின்

நாயகனாகக் கண்ணப்பன் என்ற ஆசிரியர் இடம் பெற்றுள்ளார். சக்கரைச்சாமி என்ற முதலாளி எதிர்த்தலைவனாகச் சித்திரிக்கப்பட்டுள்ளார். உழைக்கும் மக்களுக்கும் பண்ணையாருக்கும் இடையேயான போராட்டத்தை இந்நாவல் எடுத்தியம்புகிறது. உழைக்கும் வர்க்கம், கூலியாக நாள்தோறும் இரண்டுபடி கூலி கேட்பதும் பண்ணையார் மறுப்பதும் கதையிலமைந்த முக்கியச் சிக்கல்களாகும். அக்கூலிக்கான போராட்டம் சமூக மாற்றத்துக்கான போராட்டமாக வளர்ச்சியடைவதே கதையின் மையமாகும். இதில் வறுமை, முதலாளித்துவக் கொடுமைகள், அடிமைநிலை, சுரண்டல், ஆகிய சமூகச் சிக்கல்கள் அழுத்தமாக விளக்கப்பட்டுள்ளன. சிக்கலை மட்டும் பேசி வெறும் துன்பியல் உணர்வை எழுப்பிச் செல்வதாகக் கதை அமைக்கப்படவில்லை.

நிலவுடமை அதிகார வர்க்கத்தின் வீழ்ச்சிக்குப் பிந்தைய உழைக்கும் வர்க்க எழுச்சியைக் கதை உயர்த்திப்பிடிக்கிறது. புரட்சியைத் தடுக்க முயன்ற முதலாளியின் அடியாட்கள் உழவர் படையால் விரட்டியடிக்கப்படுவதை நாவலின் சொற்கள் கொண்டாடுகின்றன. புரட்சி முன்னால் அதிகார பலமோ, படைபலமோ, பணபலமோ நிற்க முடியாது என்ற உண்மையை நாவல் உறுதிபடப் பேசுகிறது. நா.வானமாமலை கீழ்க்காணுமாறு கரிசல் நாவலைப் பாராட்டுகிறார்.

> "படிப்பில்லாத, உலகமறியாத சுரண்டல் கொடுமைக்குள்ளான பண்டைய பழக்கங்களுக்கு அடிமையாகி சுய நம்பிக்கையற்று இருட்டில் உழன்றுவந்த கூலி விவசாயிகள், சுய உணர்வு பெற்று, உலகப் போக்கையறிந்து, சுரண்டலை யெதிர்த்து ஒழிக்க ஒன்று திரண்டு, ஒருவருக்கொருவர் உதவியாய், தம்மைப் பழமைக்குப் பணியச் செய்யும் இரும்புச் சங்கிலிகளை அறுத்தெறிந்து, வருங்கால சமூக விடுதலையென்னும் சூரியனது ஒளி வெள்ளத்தில் நடைபயிலத் தொடங்கிவிட்ட தன்மை மாற்றங்களை இந்த நாவல் சித்திரிக்கிறது."[4]

என்று கூறுகிறார்.

செ.யோகநாதன் கரிசல் நாவலிலுள்ள இயல்பான கிராமப் பாத்திரங்களின் சிறப்பை எடுத்தியம்புகின்றார். வெங்கடேஷ் மாட்கூல்கர் என்ற மராத்திய எழுத்தாளரின் 'பன்கர்வாடி' நாவலையும் பொன்னீலன் எழுதிய கரிசல் நாவலையும் ஒப்பிட்டு நோக்கும் செ.யோகநாதன், கரிசல் மேனோக்கிச் செல்லும் இடம் எதுவென்பவதைச் சுட்டுகிறார். மராட்டிய நாவல் கிராமிய வாழ்வின் சித்திரிப்பாகத் திகழ, கரிசலோ சித்திரிப்பழகுக்கு அப்பாலே போய் மக்களைச் செயல்படத் தூண்டுகிற முற்போக்கு இலக்கியமாகத் திகழ்வதாக அவர் கூறுகின்றார்.

"இயல்பான பாத்திரங்கள், உயிரோட்டமான மக்களின் பேச்சு வழக்கு; சரளமான கதைப்போக்கு; பெருமாள்புரம் என்ற கிராமமே நடமாடுகின்ற கதாப்பத்திரங்களோடு முழுமையாக உருவாகியுள்ள நாவல் கரிசல்"[5]

என்கிறார்.

பொன்னீலனின் எழுத்துக்களைக் குறித்த உயர்வான மதிப்பீடுகள் அனைத்தும் அவரது எழுத்திலிருக்கும் எதார்த்தத்தையும் முற்போக்கையும் முக்கியப்படுத்துகின்றன. கரிசல் நாவல் பற்றிய சாலினி இளந்திரையனின் விமர்சனமும் அதனை உறுதி செய்கிறது.

"விவசாயத் தொழிலாளர்களின் போராட்டத்தையே அடிப்படையாகக் கொண்டு இயங்குகிறது என்றாலும், சமுதாயத்தின் பல்வேறு உறவுகளிடையே ஏற்படும் பாதிப்புகளையும், ஒரு கிராமத்தின் வெவ்வேறு அம்சங்களையும் பல்வேறு மனிதர்களையும் துல்லியமாகச் சித்திரித்துக் காட்டுவதன் வாயிலாக, யதார்த்த மணம் கமழும் ஒரு இலட்சியப் படைப்பாக உருவாகியுள்ளது இந்நூல்"[6]

என்று அவர் மதிப்பிடுகிறார்.

தொ.மு.சி.ரகுநாதன் கரிசல் நாவலின் பாத்திரப்படைப்பைப் புகழ்கிறார். அப்பாத்திரங்கள் கற்பனையிலிருந்து வடிவமைக்கப்படாமல் வாழ்க்கையின் எதார்த்தத்திலிருந்து உருவாக்கப்பட்டுள்ளதாக அவர் கருதுகிறார். அவை உயிர்த்துடிப்புள்ள பாத்திரங்கள் என்பது தொ.மு.சி.ரகுநாதனின் மதிப்பீடாகும்.

"இந்த நாவலில் வரும் பாத்திரங்கள் எல்லாம் நாவலாசிரியரின் விருப்பு வெறுப்புக்கேற்ப உருட்டித் திரட்டிப் பிடித்து வைத்த உயிரற்ற பொம்மைகள் அல்ல. அவை யாவும் சதையும் ரத்தமும் ஜீவத்துடிப்பும் கொண்டு வாழ்ந்த, வாழ்ந்து வருகின்ற யாதார்த்தமான மானுடப் பிறவிகளேயாவர்"[7]

என்று பாராட்டுகிறார்.

## கொள்ளைக்காரர்கள்:

பொன்னீலனின் இரண்டாவது நாவலான "கொள்ளைக்காரர்கள்" 1979-ஆம் ஆண்டு வெளியானது. இந்நாவலின் கதைக்களம் கன்னியாகுமரி மாவட்டத்தின் மேற்குப் பகுதியாகும். அப்பகுதியில் ஏற்பட்ட அரிசிப் பஞ்சத்தால் அடித்தட்டு மக்களின் வாழ்வில் ஏற்பட்ட சிக்கல்களையும் போராட்டங்களையும் நாவல் பதிவு செய்கிறது. புஸ்பபாய் என்னும் கதாப்பாத்திரத்தைச் சுற்றிக் கதை பின்னப்பட்டுள்ளது. நாஞ்சில் நாட்டுக்கும் திருநெல்வேலி மாவட்ட

எல்லைப்பகுதிக்கும் வந்து அரிசி வாங்கி கஞ்சி காய்த்து வயிற்றுப் பசியைப் போக்கும் மக்களின் அவல வாழ்வை இந்நாவல் கூறுகிறது.

இந்நாவல் குமரி மாவட்டத்தில் நிகழ்ந்த சில வரலாற்று நிகழ்வுகளையும் சுருக்கமாகப் பேசுகிறது. கேரளாவோடு இருந்த கன்னியாகுமரி மாவட்டத்தைத் தமிழ்நாட்டோடு இணைப்பதற்காக நடந்த போராட்டம், பட்டம் தாணுப்பிள்ளையால் ஏவப்பட்ட காவல்துறை அத்துமீறல்கள் போன்றவற்றைச் சான்றாகச் சுட்டமுடியும். ஆயிரத்துத்தொள்ளாயிரத்து அறுபதுகளில் கடுமையான பஞ்சம் ஏற்பட்ட போது தமிழ்நாட்டிலிருந்து கேரளாவிற்கு அரிசி கடத்திய கொள்ளைக்காரர்களைப் பற்றிப் பேசுவதால் நாவலின் தலைப்பு பொருத்தமாக உள்ளது. கடத்தல்காரர்களுக்கு ஒத்துழைத்த அதிகாரவர்க்கத்தின் மீதான விமர்சனமாகவும் நாவல் செயல்படுகிறது. போலித்தனமான போராட்டங்களில் ஈடுபட்ட அரசியல்வாதிகளைப் பற்றிய பதிவுகளையும் இதில் காணமுடிகிறது. இத்தகைய சமூக அரசியல் பின்னணியின் நடுவே எழுச்சிகொள்ளும் ஒரு சாதாரணப் பெண்ணின் போராட்ட உணர்வை நாவல் எடுத்தியம்புகிறது.

நாவலின் தலைமைப் பாத்திரமாக இயங்கும் புஷ்பபாய் பல்வேறு நெருக்கடிகளுக்கு ஆளாகிறாள். அரிசி வாங்குவதற்காக காலை நான்கு மணிக்கு எழுந்து பல பெண்களுடன் இணைந்து இருபது மைல் தொலைவு நடந்து நாஞ்சில் பகுதிக்கு வரும் நிகழ்வு வாழ்க்கையின் நெருக்கடியைப் புலப்படுத்துகின்றது. மூன்று ரூபாய்க்கு விற்ற அரிசியை எட்டு ரூபாய் வரை விலைகொடுத்து வாங்குவதிலிருக்கும் அடித்தட்டு மக்களின் பொருளாதாரச் சிக்கல்களையும். நாவல் விளம்புகின்றது. அரிசியை அதிக விலை கொடுத்து வாங்கி விட்டு நடந்து வரும் வழியில் காவல்துறையினரால் அரிசி கடத்தல் குற்றச்சாட்டுக்கு ஆளாகி அரிசியை இழந்து வெறுமையோடு திரும்பும் புஷ்பபாயின் வாழ்வு துன்பியல் நிகழ்ச்சிகளாக வடிவமைக்கப்பட்டுள்ளன. புஷ்பபாயின் தந்தை தேவசகாயம், கணவன் ராஜையன், ராஜம்மை, பாலையன் ஆகியோரது வாழ்வும் குறுக்கும் நெடுக்குமாகக் காட்டப்படுகின்றன.

வறுமை எனும் சமூகச் சிக்கலை விளக்குமிடத்து ஆசிரியர் வெறும் அசட்டு உணர்ச்சிக்கொந்தளிப்பாக அதனை நிறைவு செய்துவிடவில்லை. புதிய பாதையைத் தெரிவு செய்து போராடத்துணியும் முக்கியக் கதாப்பாத்திரம், வாழ்வின் முன்மாதிரியாக நிறுத்தப்படுகிறது. பெண் என்பவள் மென்மையானவள் என்ற வகைமாதிரியை உருவாக்கிய மரபார்ந்த எழுத்திலிருந்து பொன்னீலனின் எழுத்து வேறுபட்டு நிற்குமிடமாக இதனைக் கருதமுடிகிறது. காவல்துறையின் அதிகாரம் சீறிப்பாயும் இடங்களிலும் போராளியாய் நிமிர்ந்து நிற்கும் புஷ்பபாய் கதாப்பாத்திரம்

புரட்சிப்பெண்ணாய்த் தோற்றமளிக்கிறது. வாசகனிடத்து சமூக அநீதிக்கெதிரான போர்க்குணத்தை நாவல் உருவாக்கிறது.

"தன் வாழ்க்கை, தன்னலம் என்ற உணர்வுகளுக்கு அடியில் குறுகி, புதைந்து சிறுத்துக் கிடக்கிற மனிதனை, சமூக மனிதனை, சில அனுபவங்கள் மூலம் அதிர்ச்சிக்குள்ளாக்கி அவனை விழிப்புறச் செய்து, அவனுக்குள் ஆழத்தில் நீரோட்டம் போல சமூக உணர்வுகளில் போர்க்குணங்களில் அவனை மீண்டும் உசுப்பிவிடுகிற, அவனுக்குத் தன்னுணர்வை ஏற்படுத்துகிற தரிசனத்தை ஓர் உயர்வகையான ஆளுமையை இந்நாவல் தருகிறது."[8]

என்று பழனிச்சாமி கூறுகின்றார்.

கொள்ளைக்காரர்கள் நாவலில் கிறிஸ்து புதிய கோணத்தில் பார்க்கப்படுகிறார். கிறிஸ்துவை ஒரு மனிதராகவும், தோழராகவும், போராளியாகவும், தலைவராகவும் பார்க்கும் புதிய பார்வையை நாவல் வழங்குகிறது. அநீதிக்கெதிராகப் போராடுபவர்கள் இயேசுவின் பிரதிபலிப்புகள் என்ற சிந்தனையை நாவல் தருகிறது. புஷ்பபாயின் வாழ்வில் ஆறுதலுக்கான தேடலாக இயேசு அமைவதை நாவல் ஆன்மீக தளத்திலிருந்து முன்வைக்காமல் உளவியல் தளத்திலிருந்து முன்வைப்பதையும் காணமுடிகிறது.

பொன்னீலனின் படைப்புகள் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ மார்ச்சியத்தோடு தொடர்புடையதாக அமைவதை அறியமுடிகிறது. மார்க்சியம் வலியுறுத்தும் எதார்த்தவாதம் எனும் கலைக்கோட்பாடு பொன்னீலனிடம் முழுமை பெற்று விளங்குகிறது. சூழல்களால் பாதிக்கப்படும் மனிதன் பற்றிய சித்திரிப்புகளைத் தாண்டி, சூழல்களை மாற்றியமைக்க முனையும் கதாப்பாத்திரங்களை மார்க்சிய கண்ணோட்டத்தில் பார்க்க வாய்ப்புள்ளது. வறுமையும், அதிகார அடக்குமுறையும் சமூகத்தில் உருவாக்கியுள்ள பசி, பட்டினி, சுரண்டல், ஏமாற்று போன்றவற்றை மாற்றுவதற்கான போராட்ட உணர்வை நாவல் உருவாக்குகிறது. கொள்ளைக்காரர்கள் நாவலை மதிப்பிடும் பழனிச்சாமி, நாவலானது மார்க்சியக் கோட்பாட்டின் விளக்கங்களாக அமையாமல் கலையின் வெளியீடுகளாக விளங்குவதைச் சுட்டிக்காட்டுகிறார்.

"கோட்பாட்டளவில், இந்தச் சிக்கல்களை பொன்னீலன் அணுகியதாகத் தெரியவில்லை, என்ற போதிலும் ஒரு கலைஞன் என்ற முறையில் படைப்பாக்கத்தின் மூலம் தனக்குள் தெளிவு பெற்றிருக்கிறார்"[9]

என்கிறார்.

## புதிய மொட்டுக்கள்:

நாடு விடுதலை அடைந்தாலும், சமூக விடுதலைக்குப் பின்னரே விடுதலை என்பதன் பொருள் முழுமையாகும் என்பதனைப் 'புதிய மொட்டுக்கள்' நாவல் சொல்லுகின்றது. சுதந்திரம் கிடைத்தால் ஏற்படும் உயர்வுகளை மாணவர்களுக்கு அறிவுறுத்தும் ஆசிரியராக பெருமாப்புள்ள என்பவர் வருகிறார். அவரது கருத்துக்களால் ஈர்க்கப்பட்ட இசக்கிமாடன், சுதந்திரராஜன் எனும் பெயருடன் சமூக விடுதலைக்காகப் போராடுகிறான். மக்களின் அறியாமை, மூட நம்பிக்கைகள், பிற்போக்குப் பழக்க வழக்கங்கள், அடிமைத்தனம் ஆகியவற்றிற்கெதிராகப் போராடுகிறான். ஊர்த்தலைவரால் அவன் தாக்கப்பட்டு நோயுற்று மரணமடைகிறான். அவன் விதைத்த புரட்சிவிதைகள் மக்களிடம் முளைக்கத் தொடங்கியது. சமத்துவத்துக்கான போராட்டத்தை ஊர்மக்கள் முன்னெடுத்துச் செல்லுகின்றனர். புதிய மொட்டுக்களாகப் புதிய எண்ணங்கள் மக்களிடம் உருவாகி சமத்துவம் மலர்வதை நாவல் விவரிக்கிறது. இவ்வாறு 'புதிய மொட்டுக்கள்' நாவல் புரட்சிகரமான சமூக மாற்றத்தைக் கதையின் உள்ளடக்கமாகக் கொண்டுள்ளது.

## ஊற்றில் மலர்ந்தது:

பொன்னீலன் எழுதிய நான்கு குறுநாவல்களின் தொகுப்பாக 'ஊற்றில் மலர்ந்தது' நூல் வெளிவந்தது. 'இடம்மாறிவந்த வேர்கள்', 'திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றன,' 'உறவுகள்', 'ஊற்றில் மலர்ந்தது' ஆகிய நான்கு கதைகள் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன. வேறுபட்ட பின்னணியில் நான்கு பெண்களின் மனவோட்டங்கள் இதில் வெளிக்கொணரப்பட்டுள்ளன.

இடம் மாறி வந்த வேர்கள் நாவலில் ஒரு வேசி மற்றும் அவளது மகளின் வாழ்வு கதையாகியுள்ளது. பெண்ணை உடலாக்கப் பார்க்கப் பழகிய ஆணாதிக்க சமூகத்தை இந்நாவல் கண்டிக்கிறது. ஆணாதிக்க உலகின் போலித்தனங்களையும், பரத்தையர் ஒழுக்கத்தையும் நாவல் அம்பலப்படுத்துகிறது. இந்நாவல் காவல்துறை அதிகாரத்தை எதிர்க்கும் பெண் சந்திக்கும் சிக்கல்களைத் தங்கம் கதாப்பாத்திரம் உணர்த்துகிறது.

பொருட்பெண்டிரைச் சுற்றிவாழும் ஆண்களின் சுயநலங்கள், சுரண்டல்கள், இரக்கமின்மைகள், ஏமாற்றுக்கள் ஆகியவற்றிறை நாவல் எள்ளி நகையாடுகிறது. திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றன என்ற கதையானது பொருளாதார நிலை ஒருவரது வாழ்வை எப்படிப் பாதிக்கிறது என்பதை

விளக்குகிறது. திருமணம் எனும் அமைப்பைத் தீர்மானிக்கும் சக்தியாகச் சொர்க்கம் இல்லை, பணமே இருக்கிறது என்பதை நாவல் பேசுகிறது. ராஜம்மா எனும் தாய்க்கதாப்பாத்திரம் இந்நாவலில் முக்கியத்துவம் வாய்ந்ததாக விளங்குகிறது. பெண்ணுடலைப் பண்டமாகப் பகிர்ந்தளிக்கும் ஆணாதிக்கத் தந்திரத்தை இந்நாவல் எதிர்க்கிறது. திருமணம் எனும் சமூக அமைப்பில் நிகழும் பெண்ணுக்கெதிரான வன்முறைகளைப் படம்பிடிப்பதில் இக்குறு நாவல் கவனம் செலுத்துகிறது. சமூகம் காதலை அங்கீகரித்தால் கூட பொருளாதாரத்தில் பின்தங்கிய நபர்கள் மீதான காதலை மட்டும் ஏற்பதே இல்லை என்பதை இக்குறுநாவல் தெளிவுபடுத்துகிறது. பண்பியல் சார்ந்து பெண்மீது உருவாக்கப்படும் வதந்திகள் ஆராயப்படாமலே நம்பப்படுவதையும் இப்படைப்புச் சுட்டுகிறது. மனைவியின் பொருளாதாரத்தைத் தனது உடைமையாக மாற்றும் ஆணாதிக்கத்தின் மீது இப்பனுவல் விமர்சனம் வைக்கிறது. ராஜம்மாவின் வாழ்வும், அவளது மகள் சாந்தாவின் வாழ்வும் மேற்காட்டிய சமூகச் சிக்கல்களின் மீது கட்டியெழுப்பப்பட்டுள்ளன.

காமசுகத்துக்கும் வாழ்க்கைத் துணைக்குமான வேறுபாட்டை விளக்கும் கதை ‘உறவுகள்’ ஆகும். சுப்பிரமணியன், கன்னியம்மை என்னும் கணவன் மனைவியின் கதை இதில் பேசப்படுகிறது. கற்பு எனும் மரபு வழிப்பட்ட சமூக விழுமியத்தை இக்கதை மறுபரிசீலனை செய்கிறது. குழந்தைப் பேற்றை வழங்கும் திறனற்றவனாக வரும் சுப்பிரமணி, குழந்தைக்காக இன்னொரு ஆடவனுடன் உறவுவைத்து கருவுற்ற தன் மனைவியை வெறுக்காத கதாப்பாத்திரமாகக் காட்டப்படுகின்றான். கன்னியம்மா ஊரை விட்டுச் செல்லும் போது சுப்பிரமணியனும் உடன் வருவதாகச் சொல்லுகிறான். காமத்தை விடப் பாசம் வலிமையானது என்ற கருத்தை இக்கதை வலியுறுத்துகிறது.

மரபு வழிப்பட்ட கற்பு பற்றிய கருத்தாக்கங்களை முன்னிலைப்படுத்தாமல், மனைவியை உயிர்த்துணையாகக் கருதும், பாத்திரப்படைப்புப் புதுமையானதாக அமைந்துள்ளது.

‘ஊற்றில் மலர்ந்தது’ என்னும் கதையானது அடித்தட்டிலிருக்கும் உழைக்கும் வர்க்கப் பெண்ணின் காதல் வீழ்ச்சியைப் பேசுகிறது. பொருளாதாரத்திலும், சாதியிலும், தன்னைவிட உயர்வானவனைக் காதலிக்கும் பெண் அனுபவிக்கும், துயரங்களை இக்கதை விளக்குகிறது. ஆண்களின் காமத்திலிருந்து பிறக்கும் அழகிய சொற்களைக் காதலென்று புரிந்து கொள்ளும் பெண்களுக்கு அறிவுறுத்தும் நோக்கில் இக்கதைப் பின்னப்பட்டுள்ளது. ஆணாதிக்கச் சமூகத்தில் பெண்ணின் அழகைச் சுற்றியிருக்கும் கட்புலனாகா ஆபத்துக்கள் பற்றிய படிப்பினையை

இக்கதை வழங்குகிறது. நிலப்பிரபுத்துவ பாலியல் அளவீடுகளோடு ஒத்துச் செல்லாத சாமியடியாள் இக்கதையின் தலைமைப் பாத்திரமாக வருகிறாள். இணைவிழைச்சுணர்வில் பல்வேறு பங்காளிகள் இருக்க முடியாது என்பதில் உறுதியாக நிற்கும் பாத்திரம் அது. திருமண உறுதி வழங்கி உடலை அடையும் ஆணின் வக்கிரம் பற்றிய எச்சரிக்கையையும் இக்கதை கொடுக்கிறது. ஏமாற்றும் ஆண்களின் குறியீடாகத் தங்கையனை நாவல் காட்டுகிறது. உடைமை வர்க்கத்தின் விதிமுறைகளுக்குட்பட்ட வாழ்வின் மீதான எதிர்புணர்ச்சியைப் பதிவுசெய்யும் பாத்திரமாகச் சாமியடியாள் நிமிர்ந்து நிற்கிறாள். இக்கதைச்சிறப்பைப் பற்றி நா.வானமாமலை,

> "ஒரு உணர்ச்சி மிக்க சமூக மோதலின் சித்திரம் பழைய நீதியை எதிர்த்துப் புதிய நீதியை நிறுத்தும் உணர்ச்சிப் போராட்டத்தின் கலைவடிவம்"[10]

என்று குறிப்பிடுகிறார்.

இந்நான்கு கதைகளையும் ஆராய்ந்த நா.வானமாலை பொன்னீலனின் படைப்புலகம் பற்றிச் செறிவான நடையில் கீழ்க்காணும் கருத்தைப் பதிவு செய்கிறார்.

> "பொதுவாக, சமூக உண்மைகள், சமூக முரண்பாடுகள், சமூகப் பொதுநியதிகள் ஆகியவைகளைத் தனி மனிதர்களை உதாரணங்களாக்கி புறவாழ்க்கையில்அவர்களது வளர்ச்சியைக் காட்டி சமூகச் சித்திரங்களாக்கிக் கதை படைக்கிறார் பொன்னீலன். தனி மனிதர்களது செயல்கள் நோக்குகள் மூலமே கதைகள் வளருகின்றன. உள்ளார்ந்து செயல்படும் சமூக இயக்க விதிகள் நமது உள்ளத்தில் தெளிவாகத் தட்டுப்படுகின்றன. இவை அறிவியல் வழியில் அல்லாமல் கலைப்படிவங்களிள் இயக்கங்கள் மூலமாக உருவாக்கப்படுகின்றன"[11]

என்கிறார்.

## தேடல்:

கன்னியாகுமரி மாவட்ட நெய்தல் நிலமக்களின் வாழ்வியலைப் பதிவு செய்யும் நாவல் தேடல் ஆகும்.

சில்வருசுவும், தாசனும் மிக்கேலின் கட்டுமரத்தில் வேலை பார்க்கிறார்கள். மிக்கேலின் மகன் ரூபன் இரால் மீனை வாங்கி விற்கும் தரகு வேலை செய்கிறான். அவன் இயந்திரப் படகு ஒன்றை வாங்க ஆவல் கொள்கிறான். கட்டுமரத்திலிருந்து இயந்திரப் படகுகளுக்கு மாறும் நவீன உலகமாற்றங்களை நாவல் நுட்பமாகப் பேசுகிறது. திருமணத்துக்கு முந்தைய உடல் வேட்கையும்

அத்துமீறல்களும் வாழ்வில் வீழ்ச்சியை கொண்டு சேர்க்கும் என்பதை சில்வி கதாபாத்திரம் வழியாக ஆசிரியர் உணர்த்துகிறார். உடலுறு புணர்ச்சிக்குப்பின் தலைமறைவாகிவிடும் பாத்திரமாக ரூபன் காட்டப்படுகிறான். இயந்திரப் பெருக்கமும், பொருளாதார வளர்ச்சியும் தனிமனித வாழ்வில் உருவாக்கும் அகந்தை மனோபாவத்தையும் நெறிபிறழ் நடத்தையையும் நாவல் எடுத்துரைக்கிறது.

## புதிய தரிசனங்கள்:

பொன்னீலன் சமூகப் பார்வையோடும், அரசியல் பார்வையோடும் எழுதிய நாவல் புதிய தரிசனங்கள் ஆகும். இது 1992-ஆம் ஆண்டு வெளிவந்தது. இந்நாவலுக்கு 1994-ஆம் ஆண்டு சாகித்திய அகாதமி விருது கிடைத்தது. இந்நாவலில் பொன்னீலன் நடுநிலையோடு நின்று அரசியலை அணுகுகின்றனர். இடதுசாரி இயக்கத்தோடு அனுக்க உறவு கொண்டவர் எனினும் அவ்வியக்கம் பற்றிய விமர்சனங்களையும் எழுப்பிச் செல்லுகிறார்.

புதிய தரிசனங்கள் நாவலின் தரத்தை முன்னெடுத்துச்செல்வதில் 'எதார்த்தத்தை எழுதுதல்' எனும் போக்கு முக்கியப்பங்கு வகிக்கிறது. வாய்க்குள் நுழையாத பெயரிடப்பட்ட புதிய இசங்கள் மேலை நாட்டிலிருந்து இறக்குமதியானதால் எதார்த்தம் இறந்து போய்விடாது. எதார்த்தப்போக்கை நடுநிலை வாசகர்கள் எப்போதும் விரும்புபவர்களாகவே இருக்கிறார்கள். தோதாத்ரி புதியதரிசனங்களை எதார்த்தவாத நாவலாகவே அடையாளப் படுத்துகிறார்.

> "புதிய தரிசனங்கள் நாவல் என்று வரும் பொழுது அதில் முதன்மையாகக் கவனிக்க வேண்டிய அம்சம் அது யதார்த்தவாதத்தின் நீட்சியாகவே அமைந்துள்ளதைக் காணமுடிகிறது"[12]

என நாவலிலமைந்த யதார்த்தப் போக்கை தோதாத்ரி சுட்டிக் காட்டுகிறார். எதார்த்த வாதத்தை ஒரு புதிய சூழ்நிலைக்குப் பொருத்திப் பார்க்கும் பரிசோதனை அவசியத்தை அவர் உணர்த்துகிறார். பொதுவாக எதார்த்தவாத எழுத்து நேர்கோட்டு எழுத்தாக அமையும் பொன்னீலன் புதிய தரிசனங்களில் அத்தகைய நேர்கோட்டு முறையைப் பின்பற்றவில்லை. பல கோணங்களிலிருந்து எதார்த்த வாதத்தை இந்நாவல் பேசுகிறது.

முதலாளித்துவ சக்திகளுக்கும் தொழிலாளர் சக்திகளுக்கும் இடையேயான பேராட்டத்தை நாவல் முன்வைக்கிறது. மேல்தட்டு வர்க்கத்திலுள்ள ஆண்களின் ஒழுக்கக் குலைவை நாவல் படம்பிடிக்கிறது. உழைக்கும் சக்திகளின் எழுச்சியை பதிவு செய்வதிலும் நாவல் ஆர்வம் காட்டுகிறது. சமூக மாற்றத்தை இலட்சியமாகக் கொண்டவர்களாக உழைக்கும் வர்க்கம் சித்திரிக்கப்படுகிறது. சாதியம், மதவெறி,

ஆண்மேலாதிக்கம், மூடநம்பிக்கை, அதிகார அரசியல் ஆகிய சமூகச் சிக்கல்களை நாவல் பேசுகிறது.

பொன்னீலனின் அரசியல் பார்வையை பல்வேறு கட்சிகள் மீது அவர் வைக்கும் விமர்சனத்தின் வழியாக அறியமுடிகிறது. நாவலுக்குள் பல்வேறுபட்ட பாத்திரங்கள் இப்பணியைச் செய்கின்றன. இராகவன் கதாப்பாத்திரம் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியை விமர்சனம் செய்கிறது. ரங்கசாமி கதாப்பாத்திரம் மார்க்சிஸ்ட் கட்சியை விமர்சனம் செய்கிறது. இளஞ்சேரன் பாத்திரம் திராவிட முன்னேற்றக் கழகத்தை விமர்சிக்கிறது. தான் சார்ந்திருக்கும் இயக்கத்தோடு தொடர்புடைய கட்சிகளை விமர்சிப்பதனை ஆசிரியரின் நேர்மைக்கான சான்றாகக் கொள்ள முடிகிறது. உழைக்கும் வர்க்கத்தின் முரண்பாடுகளையும், பலவீனங்களையும் சித்தரிக்கிற இடங்களில் பொன்னீலனின் நடுநிலைமை வெளிப்படையாகவே தெரிகிறது. உழைப்பாளிகள் எல்லாரும் புனிதர்கள், முதலாளிகள் எல்லாரும் கொடூரமானவர்கள் என்ற முரண் எதிர்வை அவர் திட்டமிட்டுக் கட்டமைக்கவில்லை. அனைத்து தரப்பினர் மீதும் விமர்சனங்களை வைப்பதால் இந்நாவலை விமர்சன எதார்த்த வாத நாவலாக மதிப்பிட முடிகிறது.

தோதாத்ரி புதிய தரிசனங்கள் நாவலைப் பன்முகத் தன்மை கொண்ட யதார்த்தவாத நாவல் என்று நிறுவுகிறார். புதியதரிசனங்கள் எதார்த்தவாத நாவலா? எனும் வினாவை எழுப்புபவர்களுக்கான விடையாகத் தோதாத்ரியின் விளக்கம் அமைகிறது.

> "யதார்த்தவாதம் என்பது நேர்கோட்டுப் பாதை என்று ஒரு புரிதலை மேற்கொண்டதன் காரணமாக, ஒரு யதார்த்தவாதி பல மையங்களில் இருந்து சமூகத்தை அணுகும் பொழுது, அவனை ஒரு நெருக்கடிக்குள்ளாக்கும் முயற்சியை மேற்கொள்ளுவது தவறாகும். புதிய தரிசனங்களின் யதார்த்தவாதம் இரண்டு அம்சங்கள் கலந்தது என்று கண்டால் அதன் தன்மை யாதார்த்தவாதக் கட்டுக்கோப்பிற்குள் இருப்பதைக் காணமுடியும். இந்த நாவலின் அடிநாதமான போக்கு வர்க்கப் போராட்டம். இது ஒரு திசையில் நிகழ்கிறது. இந்த நிகழ்வின் ஊடாகப் பல சம்பவங்கள் ஆங்காங்கே சிதறல்களாக இடம் பெறுகின்றன. இந்தச் சிதறல்கள் விளிம்புகளாக இருந்த போதிலும் இவற்றின் மையம் வர்க்கப்போராட்டத்தில் இருப்பதைக் காணமுடியும். இதில் உள்ள பாத்திரங்கள், உரையாடல்கள், விமர்சனங்கள், ஆசாபாசங்கள், கலாச்சார விஷயங்கள் அனைத்தும் இந்த மையத்தில் இடம் கொண்டு உள்ளன. ஆனால் புறத்தோற்றத்தில் இவை மையத்தை விட்டு விலகி வேறு வேறு

நிகழ்ச்சிகளாக காணப்பட்டாலும் இவை அடித்தளத்தின் பிரதிபலிப்பு என்பதை மறந்து விடக்கூடாது”[13]

என்கிறார்.

நீலபத்மநாபன் பொன்னீலனின் எதார்த்தவாதத்துக்குள் கலப்பு இருப்பதாகக் குறிப்பிடுகிறார். இதனை அவர் ஒரு குறையாகக் காட்டாமல் நிறையாகவே முன்வைக்கிறார்.

“இந்நாவலின் விமர்சனப்பாங்கும் திறந்த விவாதத்தன்மையும் கொண்ட யாதர்த்தவாத அமைப்பில் கூட தொனிக்கும் ரொமாண்டிக் அம்சம் அசட்டைச் செய்யக்கூடியதல்ல. கட்சிகளின் கொள்கை விவரிப்புகள், தத்துவ விளக்கங்கள், போராட்டங்கள் கூட ஒரு ரெமாண்டிக் தன்மையுடன் நெய்யப்பட்டிருப்பதைக் காணமுடியும்”[14]

என்பது நீலபத்மநாபனின் கருத்தாகும்.

பி.பி. தம்பி புதிய தரிசனங்கள் நாவலின் உரையாடல்களைப் பராட்டுகிறார். உரையாடல்களில் இருக்கும் நாட்டார் வழக்காற்றுச் சொற்களையும், பாமரரின் நாவிலிருந்து வரும் சொற்களையும் அவர் கவனப்படுத்துகிறார். தான் வாழும் சமூகத்தின் கீழ்க்குடி மக்களின் வாழ்க்கையைப் பேசும் நாவலானது நாகரீகத்தின் உள்ளறைகளுக்குள் புகுந்து உண்மை நிலையிலுள்ள நாட்டுபுறச் சொற்களில் எழுதப்பட்டுள்ளதை அவர் உயர்வானதாக மதிப்பிடுகிறார்.

புதியதரிசனங்கள் நாவல் வழக்கமாக யதார்த்த நாவல் என அடையாளப் படுத்தப்படுகிறது. ந.முத்துமோகன் இந்நாவலின் படைப்பு முறையை ஒற்றைத்தன்மை இல்லாத யதார்த்தவாதம் என்று மதிப்பிடுகிறார்.

“இந்நாவலில் பொன்னீலனின் படைப்புமுறை, தமிழில் வலுவாக வேர்கொண்டுவிட்ட யதார்த்தவாதம் என்ற படைப்பு முறையே. ஆனால் திறந்த தன்மை கொண்ட சந்தேகப்படுகிற, விவாதத் தன்மை கொண்ட, தவிக்கிற, உரையாடல் தன்மை கொண்ட ஒரு யதார்த்தவாதம். ஒற்றைத் தன்மை இல்லாத யதார்த்தவாதம்”[15]

என்கிறார்.

புதியதரிசனங்கள் நாவலில் எந்த அணிச்சார்பையும் காணமுடியவில்லை. சனநாயகத் தன்மையில் படைக்கப்பட்ட கதாப்பாத்திரங்களின் எதிரெதிர் மனநிலை வெளிப்பாடுகளை இது பிரதிபலிக்கிறது. அதனால் இந்த நாவல் எங்கள் அணிக்குரியது என்று சொந்தம் கொண்டாட எந்த அணியும் முன்வரவில்லை. விமர்சனங்களை எத்தரப்பும் ஏற்பதில்லை என்பதை இது உறுதி செய்கிறது. ஒற்றைப்புரிதலில் மையம் கொள்ளும் நாவல்கள் சர்வாதிகாரத்தின்

எழுத்துவடிவமாக மாறிவிடும் என்பதால் பொன்னீலன் அதைத் தவிர்த்து விடுகிறார். நாவலுக்குள் பல்வேறு முரண்பட்ட குரல்களை ஒலிக்க விடுகிறார்.

புதியதரிசனங்கள் இடதுசாரி இயக்கப் பிரச்சார நாவலாக செயற்படவில்லை. இயக்கத்துக்கு உண்மையாயிருப்பதிலுள்ள ஆர்வத்தைவிட சமூகத்துக்கும் இயல்பான படைப்புக்கலைக்கும் உண்மையாக இருப்பதில் அது ஆர்வம் காட்டுகிறது. வெற்றுப் பரப்புரைகளும் கொள்கை முழக்கங்களும் படைப்பை முடக்கிப்போடும் அபாயமிருக்கிறது. எனவே பொன்னீலன் தான் சார்ந்திருக்கும் இயக்கத்தின் பார்வையே தனது பார்வையும் என்ற நிலைப்பாட்டை எடுக்கவில்லை. சித்தாந்தங்களின் தடுப்புச்சுவரில்லாத எழுத்து முறையே காட்டாற்று வெள்ளமாகப் பாயமுடியும் எனக் கருதும் பிரான்சிஸ் செயபதி,

> "பொன்னீலன் சித்தாந்தத்தின் வழியாக எழுதத் துவங்குகிறார். அவ்வழியில் இருத்தலை, சமூகத்தைப் புரிந்து கொள்ளும்பொழுது சித்தாந்தத்தை விட்டு விலகி வருவதற்குக் கொஞ்சம் கஷ்டப்படுகிறார். ஆனால் யதார்த்தத்தைப் புரிந்து கொள்ள சித்தாந்தம் பின்தங்கி விடுகிறது"[16]

என்கிறார்.

தோதாத்ரி புதிய தரிசனங்கள் நாவலை அரசியல் நாவலாகப் பார்க்கிறார். நாவலிலிருக்கும் இதிகாசத் தன்மையையும் அவர் எடுத்தியம்புகிறார். தமிழ்ச்சூழலில் அரசியலுக்கெதிரான விமர்சனங்களை முன்வைப்பது என்பது அபூர்வமானதாகவே திகழ்கிறது என்பதால் அதனைத் துணிச்சலான நடவடிக்கையாகப் பார்க்கிறார். நாவலின் பன்முகத்தன்மையைத் தோதாத்ரியின் சொற்கள் சுருக்கமாகவும் செறிவாகவும் சொல்லுகின்றன.

> "ஒரு துணிச்சலான அரசியல் விமர்சனம், சுயவிமர்ச்சனம், சமூகக் குறைகளைச்சாடல், சமூகஆய்வு ஆகிய யாவும் இணைந்த ஒரு பன்முகத் தன்மையுள்ள நாவலாக இது விளங்குகிறது. இதற்கு யதார்த்தவாதம் துணை புரிகிறது. அதன் மீது அமைக்கப்பட்ட ஒரு நிகழ்ச்சிக் கோர்வை அரசியல் நாவலாக இது விளங்குகின்றது"[17]

என்ற கூற்று நாவலைச் சமூக, அரசியல் நாவலாக அடைப்படுத்துகின்றது.

புதிய தரிசனங்கள் நாவலில் கட்சிகளின் பெயர்களோ தலைவர்களின் பெயர்களோ புனைபெயர்களுக்குள் ஒழிந்து கொள்ளவில்லை. நிகழ்ச்சிகளைக் குறியீடுகளாக மாற்றி அதற்குப் பின் ஒழிந்து கொள்ளும் கோழைத்தனமும் பொன்னீலனிடம் வெளிப்படவில்லை. நேரடியாகப் பொருள் துலங்கும் வகையில் வாசகனிடம் அரசியல் விவாதத்தைக் கொண்டு செல்லும் நாவலாக இது விளங்குகிறது.

சுதந்திரத்துக்குப் பிந்தைய அரசியலை இந்நாவல் விரிவாகப் பேசியதால் திறனாய்வாளர்களால் அதிகம் கவனிக்கப்பட்டது எனலாம்.

> "இந்த அளவில் அரசியல் சம்பவங்களை, அதன் தர்க்கங்களை, விவாதங்களை விரிவான பின்னணியில் அமைத்து இதுவரை எந்தத் தமிழ் நாவலும் எழுதப்படவில்லை. அந்த வகையில் தமிழில் இது ஒரு வித்தியாசமான நாவல்"[18]

என்ற ராஜமார்த்தாண்டனின் கூற்று பொருத்தமானதாகத் தோன்றுகிறது.

ராஜமார்த்தாண்டன் புதிய தரிசனங்களை முதல் அரசியல் நாவல் என்று குறிப்பிட, செ.யோகநாதன் இதனை இரண்டாம் அரசியல் நாவல் என்று கூறுகின்றார். அவர் கே.ஏ அப்பாஸின் 'இன்குலாப்' நாவலை அரசியல் நாவல் வரிசையில் முதலில் நிறுத்துகிறார். நாவலில் அழகும், கலையமைதியும் நிறைந்திருப்பதாகப் பெருமைப்பட்டுக் கொள்கிறார். நாவலிலமைந்த தெளிந்த நடை, மொழியைக் கையாளும் லாவகம், ஆகியவை நாவலின் சுவையான ஓட்டத்தில் முக்கியப் பங்காற்றுவதாகவும் கூறுகிறார். சாதாரண வாசகனை ஈர்க்கும் எளிமையைப் புதியதரிசனங்களின் பலமாக மதிப்பிடும் அவர் அரசியல் நாவல் என்பதையும் தாண்டி 'சமகால வரலாற்று நாவல்' என்ற வகைப்பாட்டுக்குள் அடக்குகிறார்.

> "சம்பவக் கோர்வைகளே நாவலாகப் பரிச்சயப்பட்ட சாதாரண வாசகனையும், அதன் எளிமையான படைப்பாற்றலால் இந்நாவல் வெகு எளிதில் கவர்ந்து விடுகிறது. ஒரு சமகால வரலாற்று நாவல் எப்படி அமைய வேண்டுமென்பதை இந்நாவல் ஓர் இலக்கியமாகவே செய்து காட்டியிருக்கிறது"[19]

என்பது புதியதரிசனங்கள் நாவலின் புதிய வகைப்போக்கை எடுத்துக்காட்டுகிறது.

தி.க. சிவசங்கரன் புதியதரிசனங்கள் நாவலை அரசியல் நாவல் வரிசையில் முதலாம், இரண்டாம் இடங்களில் நிறுத்தவில்லை. தமிழில் அரசியல் நாவலின் தொடக்கம் காந்திய யுகத்திலேயே உருப்பெற்று விட்டதாக அவர் கருதுகிறார். சுதந்திரத்துக்கு முன்னும் பின்னும் இத்துறைப்பட்ட நாவல்கள் எழுதப்பட்டிருப்பதை அவர் குறிப்பிடுகிறார். பொன்னீலனின் புதிய தரிசனங்களில் அரசியலைக் கடந்த ஒரு விசயம் நாவலுக்குள் தொழிற்படுவதாக தி.க.சிவசங்கரன் கூறுகின்றார்.

> "பொன்னீலனின் புதிய தரிசனங்கள் வெறும் அரசியல் நாவல் மட்டுமன்று அந்தக் காலகட்டத்துக் கிராம மக்களின் வாழ்வைச் சித்தரிக்கும் கலையழகு மிக்கச் சமுதாயச் சித்திரமும் ஆகும்"[20]

என்ற தி.சிவசங்கரனின் கூற்று நாவலில் அமைந்த கிராம வாழ்வியலில் கவனம் கொள்கிறது.

ஜெயமோகன் புதியதரிசனங்கள் பற்றிய பல்வேறு எதிர்விமர்சனங்களை எழுப்புகிறார். பௌதீகத் தன்மை கொண்ட யதார்த்தவாத நடை சலிப்பூட்டுவதாக அவர் கருதுகிறார். கதையில் வரும் உரையாடல் இயல்பானதாக அமையாமல் இயல்பாகத் தோற்றம் காட்டும் புனைவாக இருப்பதாகப் புதியக் கண்டு பிடிப்பொன்றை வழங்குகின்றார். மேலும் இந்நாவல் கலை வெற்றியைப் பெறவில்லை என்ற குற்றச்சாட்டையும் கூறுகின்றார். ஆனால் நேர்மையான அரசியல் நாவல் என்பதில் மட்டும் உடன்படுகிறார்.

> "புதிய தரிசனங்கள் ஓர் அரசியல் நாவல். அரசியலைப் பின் புலமாகவோ, துணைக்களனாகவோ அல்ல. மாறாக அடிப்படைப் பிரச்சினையாகவே கொண்டது இது"[21]

என நாவலின் அடிப்படை அரசியலில் மையங்கொள்வதைச் சுட்டுகிறார்.

ஞானி புதியதரிசனங்களை அரசியல் நாவல் என்ற கட்டத்துக்குள் அடைப்பதை எதிர்கிறார். அது தட்டையான வாசிப்புப்பார்வை என்பதை அவர் தெளிவுபடுத்துகிறார்.

> "இந்த நாவலை அரசியல் நாவல் என்று குறிப்பிடுவது கூட பன்முகப் பரிமாணமுள்ள நாவலை ஒற்றைப் பரிணாமத்தில் வாசிப்பதாகத்தான் முடியும்"[22]

என்று ஞானி எச்சரிக்கிறார்.

மலையாள எழுத்தாளரான ஷாஃபி செறுமா விலாயியும் பொன்னீலனின் கதாப்பாத்திர மொழியாடல்களைப் புகழ்கிறார். உரையாடல்களிலிருக்கும் நாட்டார் தன்மையையும் பகடியையும் அவர் சுட்டிக்காட்டுகிறார்.

> "புதிய தரிசனங்களின் சிறந்த தன்மையை நிறுவுவதில் நாவலில் இடம்பெறும் கிராமத்து உரையாடல்கள் முக்கியமானதொரு பங்கேற்கின்றன"[23]

என்கிறார்.

## காமம் செப்பாது:

பொன்னீலன் 'காமம் செப்பாது' என்ற சிறுகதைக்தொகுதியை 1996-ஆம் ஆண்டு வெளியிட்டார். இதில் இடம்பெற்றுள்ள ஆசை எனும் கதை தொலைந்து போன ஆசைகளைப் பற்றிய சிறு கதையாகும். இக்கதையில் ஆசையின் குறியீடாக வருக்கைப் பழம் காட்டப்படுகிறது.

‘மோப்பம்’ கதை குற்றவாளியைக் கண்டிபிடிக்கும் காவல்துறை உத்தியைச் சொல்லுகிறது. காவல் துறையின் அதிகாரம் சில தூய மனங்களை நோகடிக்கும் தன்மையை இக்கதை விவரிக்கிறது. இந்நூலிலுள்ள கதைகள் ஆசைகளின் பல்வேறு வடிவங்களை அனுபவங்களாக்கிக் காட்டுகின்றன. எம்.மீரான்மைதின் காமம் செப்பாது தொகுதியிலுள்ள சிறுகதைகளை ஆய்ந்து கீழ்க்காணும் முடிவுக்கு வருகிறார்.

> "அண்ணாச்சியின் எல்லா சிறுகதைகளிலும் எழுத்து முறை நம்மைப் பளிச்சென இழுத்துக் கொள்ளும் ஆற்றல் மிக்கதாகவே இருக்கிறது. இந்த ஆற்றல் மிக்க படைப்புத் திறனுக்குப் பின்னால் அண்ணாச்சியின் பார்வை தன்னையும் ஆத்ம பரிசோதனை செய்து கொள்ளத் தவறவில்லை"[24]

என்கிறார்.

காமம் செப்பாது சிறுகதைத் தொகுதியில் ஆசை, வார்த்தை, சபலம், எச்சில், காத்திருத்தல், காமம் செப்பாது, கவலை, மோப்பம், போராளி, பேய்களும், பீடங்களும், கல்யாணமும் வரும் காரும் ஏறுவோம், சாவு, கல்யாணச் சாப்பாடு, ஊக்கமது கைவிடேல், நியாயாதிபதிகள் ஆகிய சிறுகதைகள் இடம் பெற்றுள்ளன.

## நித்தியமானது:

பொன்னீலனின் ‘நித்தியமானது’ எனும் சிறுகதைத் தொகுதி 1998-ஆம் ஆண்டு வெளியானது. இச்சிறுகதைத் தொகுப்பில் மொத்தம் பதினான்கு கதைகள் இடம் பெற்றுள்ளன. இக்கதைகள் பெண்கள் வாழ்வில் சந்திக்கும் சிக்கல்களை விவரிக்கின்றன. கனிவு, இருப்பு, பிடிப்பு, கவரிமான், ஈரம் நித்தியமானது, போன்ற சிறுகதைகள் முக்கியத்துவம் வாய்ந்தவை. கர்ப்பிணிப் பெண்ணின் சிறிய ஆசைகளைக் கூட நிறைவேற்றாத கணவனைக் ‘கனிவு’ கதை காட்டுகிறது. குடும்பத்தில் பொருளாதாரச் சுதந்திரமற்ற நிலையானது பெண்ணை ஆணுக்கு அடிமையாக்கி விடுவதை இக்கதை உணர்த்துகிறது. பருப்பு கதையானது ஒரு பயண அனுபவத்தைப் பேசுகிறது. இக்கதையிலும், கர்ப்பிணிப் பெண்ணொருத்தியைச் சுற்றியே கதை சுழல்கிறது. நெரிசலான பேருந்துக்குள் கர்ப்பிணிப் பெண்ணுக்கு உட்கார இடம் கொடுப்பதில் உள்ள தடைகளை இக்கதை மிக இயல்பாகப் பேசுகிறது.

‘ஈரம்’ என்ற சிறுகதை மனிதர்களின் இதயங்களுக்குள் ஈரம் இன்னும் காய்ந்து விடவில்லை என்பதை நேர்கோணத்தில் சொல்கிறது. எந்திரத்தனமான உலகில் விரைவாய் அலைவுறும் மனிதர்களை உறவுகளோடு உரையாட அழைக்கும் கதை ‘ஃப்பூ’ ஆகும். ‘பிடிப்பு’ எனும் கதை நம்பிக்கையைக் கற்பிக்கிறது.

பொருளாதார நெருக்கடிகள் ஏற்பட்டாலும், வாழ்வின் மீதான பிடிப்பை இழந்து விடக்கூடாது என இக்கதை அறிவுறுத்துகிறது. ‘சதுரவட்டம்’ கதையானது அதிகாரத்திலிருக்கும் ஆண்களின் பாலியல் சுரண்டலையும் பெண்களின் உயர்ந்த ஒழுக்க நெறியையும் ஒரு சேரப் பேசுகிறது. ‘கவரிமான்’ கதை தற்கொலை முயற்சி பற்றிய கதையாகும். அவசரமான முடிவுகள் சிறப்பானதல்ல என்பதை இக்கதை சொல்லுகிறது.

‘கா.....தீ ’ எனும் கதை கோபத்தால் பிரிந்து செல்லும் கணவனின் செயல் ஒரு பெண்ணின் வாழ்வை எப்படி நொறுக்கிப் போடுகிறது என்பதை விளக்குகிறது. ‘எலிவளைக்குள் வெள்ளம் புகுந்த போது’ எனும் கதை முற்போக்கான பெண்களின் நடவடிக்கைகள் எத்தகைய எதிர்வினையை உருவாக்குகின்றன என்பதைச் சொல்கிறது. ஈகையின் சிறப்பைப் பேசும் கதை ‘சேர்த்துக் பெரியம்மை’ ஆகும். பழங்கால மனிதர்களிடமிருந்த ஈகைக்குணம் தற்காலத்தில் அருகி வருவதை இச்சிறுகதை உணர்த்துகிறது,

நிரந்தரமே தெய்வீகம் என்பதை ‘இதுதான் சத்தியம்’ சிறுகதையானது விரித்துரைக்கிறது. அன்பு அழிவற்றது என்பதை உணர்த்த ‘நித்தியமானது’ எனும் சிறுகதை படைக்கப்பட்டுள்ளது. முதுமைக் காலத்தில் அன்பு முதிர்ச்சியடையுமே தவிர உதிர்ந்து போகாது என்ற உண்மை இக்கதையில் பெறப்படுகிறது.

பொன்னீலனின் சிறுகதைகள் எளிமையான சொற்களில் கனமான செய்திகளைச் சொல்லுகிறது. வாழ்வின் அனுபவங்களிலிருந்து அக்கதைகளுக்கான கருக்கள் உருப்பெற்றுள்ளன. அறிவு ஜீவிகளுக்குக்கதை சொல்வதான எழுத்துத் திமிர் எதுவும் பொன்னீலன் சிறுகதைகளில் தென்படவில்லை. மாறாக, பாமரர்களுக்கும் வாழ்வின் பொருளை உணர்த்துவதாக அவை வெளிப்பட்டுள்ளன. பொன்னீலன் உருவாக்கிய கதாப்பாத்திரங்களில் மனிதர்கள் தங்கள் முகங்களைப் பார்த்துக் கொள்ள முடிகிறது. பொன்னீலனின் பாத்திரப்படைப்புச் சிறப்பைச் சாலன் வியந்தோதுகிறார்.

> “இவரது கதாபாத்திரங்களை எடுத்துக்கொண்டோமானால், மிக அசிங்கமான மனிதர்களாக இருந்தால் கூட நம்மை அவர்கள் மீது அன்பு கொள்ளும்படி செய்துவிடுவார். அவர்கள் நம் வாழ்க்கைக்கு எவ்வாறு அழகும் வலிமையும் கூட்டுகிறார்கள்? அவர்கள் அப்படி ஆனதற்கானக் காரணம் என்ன? என்பவைகளும் துலக்கிக் காட்டப்பட்டிருக்கும். அதைப் படிக்கும் பொழுது அந்த அசிங்கமானக் கதாபாத்திரங்களைத் திட்டுவதற்குப் பதிலாக நாம், நம்மையே நொந்து கொள்ளும்படி செய்துவிடுவார் பொன்னீலன்”[25] - என்று கூறுகிறார்.

## பொன்னீலன் கவிதைகள்:

வால்ட் விட்மன் உலக அளவில் புதுக்கவிதையைத் தொடங்கி வைத்தவர் ஆவார். பன்மொழிப் புலமை மிக்க பாரதி யாப்புக்குட்படாத காட்சிக் கவிதைகளை எழுதி சோதனை முயற்சி செய்து பார்த்தார். அதன் பிறகு பிச்ச மூர்த்தி தொடங்கி பல்வேறு புதுக்கவிஞர்கள் தமிழ் இலக்கியப் பரப்பில் தோன்றியுள்ளனர். அவர்களில் ஒருவர்தான் பொன்னீலன் ஆவார்.

தற்கால இலக்கியத்தை உற்று நோக்கும்போது உரைநடை இலக்கிய வகைமைகளில் முத்திரை பதித்தவர்கள் புதுக்கவிதைகளை எழுதி சாதனைபடைப்பதையும், கவிஞர்களாக அடையாளப்படுத்தபட்டவர்கள் புனைகதை முயற்சிகளை வெற்றிகரமாகச் செய்து பார்ப்பதையும் காணமுடிகிறது. இவ்விரு துறைகளிலும், சாதனை படைத்தவர்களின் பட்டியலை இட்டால் அது மிக விரிவானதாகச் செல்லும். "வாராய் கவிதையாம் மணிப்பெயர் காதலி"[26] என்று கூறிய பாரதி சின்னசங்கரன் கதையை எழுதியதனை இதன் தொடக்கமாகக் கொள்ளமுடியும். பிச்சமூர்த்தி 'புதுக்கவிதையின் தந்தை' என இலக்கிய வரலாற்றாசிரியர்களால் அழைக்கப்படுபவர். அவர் பல்வேறு சிறுகதைகளைப் படைத்துள்ளார். சி.சு.செல்லப்பா, க.நா.சுப்பிரமணியம், சுந்தரராமசாமி போன்றவர்கள் கவிதை, புனைகதை இரண்டிலும் முக்கிய ஆளுமைகளாகக் கருதப்படுகின்றனர். கண்ணதாசன், கவியரசு என்று அழைக்கப்பட்டாலும் அவருக்கு 'சாகித்திய அகாதமி' விருது நாவலுக்காகவே கொடுக்கப்பட்டது. திராவிட இயக்க எழுச்சிக் காலகட்டத்தில் கவியரங்கங்களை உயிர்த்துடிப்புடையதாக மாற்றிய கவிஞர் கருணாநிதி ஆவார். அவர் வெள்ளிக்கிழமை, தென்பாண்டிச்சிங்கம், போன்ற நாவல்களைப் படைத்துள்ளார். வானம்பாடிக் கவிஞராக அடையாளப்படுத்தப்படும் மு.மேத்தா, சிறுகதை, நாவல் ஆகிய இரண்டிலும் கால்பதித்துள்ளார். கவிப்பேரரசு எனச் சிறப்பிக்கப்படும் வைரமுத்து சிறுகதைகளையும், நாவல்களையும் எழுதியுள்ளார். நவீன இலக்கிய உலகில் லட்சுமி மணிவண்ணன், உமாமகேஸ்வரி, சல்மா, குமாரசெல்வா, ஆண்டாள் பிரியதர்சினி போன்றோர் புதுக்கவிதை, புனைகதை ஆகிய இருவடிவங்களிலும் குறிப்பிடத்தக்கப் பங்களிப்பைச் செய்துள்ளனர். பொன்னீலன் நாவல், சிறுகதை ஆகிய வகைமைகளோடு தொடர்புபடுத்திப் பார்க்கப்படுபவர். ஆனால் அவர் கவிதை படைப்பாக்கத் திறன் பெற்றிருந்ததையும் கவனிக்கவேண்டியதாகிறது.

பொன்னீலன் கவிதைகள் (1978), புல்லின் குழந்தைகள் (1998) ஆகிய கவிதை நூல்களை இவர் படைத்துள்ளார். பொதுவாகத் தமிழ்ப்புதுக்கவிதையில் இருவகை எழுத்துமுறைகளைக் காணமுடிகிறது. முதலாவது வகை தூய கலை இலக்கியம் ஆகும். தீவிர இலக்கியம், அழகியல் இலக்கியம் என்ற பிற பெயர்களில் இவ்விலக்கியங்கள் அழைக்கப்படுகின்றன. ‘கலைகலைக்காகவே’ எனும் கொள்கையில் இவ்விலக்கியங்கள் படைக்கப்படுகின்றன. மக்களுக்காக எழுதப்படாமல் பண்டிதர்களுக்காக எழுதப்படுபவை இவ்வகை இலக்கியங்கள். மற்றொரு இலக்கிய எழுத்துமுறை சமுதாய நோக்கம் கொண்டவை. தன்னம்பிக்கை ஊட்டுவது, அறத்தை நிலை நிறுத்துவது, அநீதியை எதிர்ப்பது, சமூகச் சிக்கல்களைப் பேசுவது, மாற்றத்திற்கான தீர்வுகளை முன்வைப்பது, முற்போக்குக் கொள்கைகளை முழங்குவது போன்ற குறிக்கோள்களுடன் இவ்வகைக் கவிதைகள் இயற்றப்படுகின்றன. பொன்னீலனைச் சமூகப்பார்வை கொண்ட கவிஞராக மதிப்பிட முடிகிறது.

பொன்னீலன் எழுதிய முதல் கவிதை இருளப்பபுரம் என்னும் ஊரில் சீனிவாசன் நடத்தி வந்த ‘எழுதுகோல்’ என்னும் சிற்றிதழில் வெளிவந்தது. அதனைத் தொடர்ந்து அவர் பல்வேறு கவிதைகளைப் படைத்துவந்தார். படிப்படியாக கவிதை மொழி அவருக்கு வசப்பட்டது. முதலில் பொன்னீலன் மரபுக்கவிதையின் ஆதரவாளராகவே இருந்தார். தாகூரின் மொழிப்பெயர்ப்புக் கவிதைகளைப் படித்தபின் அதன் பாதிப்புக்கு ஆட்பட்டார். அதனால், புதுக்கவிதைத்துறையில் புதிய முயற்சிகளைச் செய்துபார்த்தார். மரபிலிருந்து புதுக்கவிதைக்கு வந்த பொன்னீலன் பற்றி சு.அர.கீதா,

> “மரபில் கால்லூன்றிப் புதுக்கவிதை என்னும் கனியைப் பொன்னீலன் எட்டிப்பறிக்கின்றார்.”[27]

என்கிறார்.

இத்தொகுதியில் உள்ள ‘எப்போது வருவாய்?’, ‘நீதி’, ‘வித்தியாசம்’, ‘வேலி’ ‘நியாயம்’ போன்ற கவிதைகள் குறிப்பிடத்தக்கனவாகும். உழைப்பின் சிறப்பைப் பற்றி பேசும் போது,

> “பூமியில் ஒரு மானுடன்
> தோளில் மண்வெட்டியுடன் நின்று
> அசரீரி கொடுத்தான்
> உழைக்கப்பழகுங்கள்
> எல்லாமே சரியாய்ப்போகும்”[28]

என்று குறிப்பிடுகின்றார்.

பொன்னீலனின் கவிதை பற்றி இரவீந்திரபாரதி கீழ்க்காணும் மதிப்பீட்டை வழங்குகின்றார்.

"ஒரு புறம் பார்த்தால் மரபில் பூத்த மாணிக்கக் கவிஞராய் தென்படுகிறார். மறுபுறம் பார்த்தால் புதுக்கவிதை மணம் பூரிக்கச் சிலிர்க்கிறார். இப்படியும் சொல்லலாம்; மரபின் மணமும் புதுக்கவிதையின் குணமும் கொண்ட மானுடப்பூக்கள் இவர் கவிதைகள்"[29]

என்ற மதிப்பீடு பொருத்தமானதே. பொன்னீலனிடம் நோக்கமற்றப் பார்வைகள் எவையுமில்லை. இருண்மை என்ற உத்தி எவ்விடத்திலும் காணப்படவில்லை. அவை வாசகனைப் பார்த்து நேரடியாகப் பேசுகின்றன.

"தேசத்தை நமக்காகவும்
நம்மை தேசத்துக்காக்கவும்
மாபெரும் போராட்டம் தொடங்கிவிட்டது
உள்ளும் புறமுமிருந்து-நம்மைப்
பள்ளும் பறையுமாய் அமுக்கிவைக்கப் போராடும் கூட்டம்
இனி வேரோடு சாய்கிறது."[30]

என்ற கருத்து ஆழமானது.

## வாழ்க்கை வரலாறு:

பொன்னீலன் ப.ஜீவானந்தத்தின் வரலாற்றை 'ஜீவா என்ற ஒரு மானுடன்' என்ற நூலாகப் படைத்துள்ளார். குமரி மாவட்ட சமூக விடுதலை எழுச்சிக்கான கோட்பாடுகளை ஆன்மிக உலகிலிருந்து வழங்கிய வைகுண்டரின் வாழ்க்கையை 'வைகுண்டர் காட்டும் வாழ்க்கை நெறி ' என்ற நூலாகப் படைத்துள்ளார். குன்றக்குடி அடிகளாரின் வரலாற்றைத் 'தவத்திரு குன்றக்குடி அடிகளார் தமிழகத்தின் ஆன்மிக வழிகாட்டி' என்ற நூலில் எழுதியுள்ளார். பொன்னீலன் கல்வித்துறையில் பெற்ற அனுபவங்களை 'விடைபெறுகிறேன் ' என்ற நூலில் விவரிக்கிறார்.

## ஜீவா என்றொரு மானுடன்:

இந்திய அரசியல் தலைவர்களில் ஜீவாவுக்கென்று தனிஇடம் உள்ளது. எளிமையின் இலக்கணமாககவும், நேர்மையின் அகராதியாகவும் அடையாளப் படுத்தப்படுபவர் ஜீவா ஆவார். இடதுசாரிச் சிந்தனையாளர்களிடமிருக்கும் சமூகப்பார்வை, போர்க்குணம், எளியவாழ்வு அனைத்தும் ஒருங்கே அமைந்தவராக

வாழ்ந்து காட்டியவர் அப்பெரியவர் ஆவார். வெற்று முழக்கங்களையும், போலிக் கொள்கைகளையும் கொண்டு வாழ்ந்தவராக யாராலும் ஜீவானந்தத்தை அடையாளப்படுத்த முடியாது. சுரண்டலும், போலித்தனங்களுக்கும், மேட்டிமையுணர்வும், செல்வப்பெருக்கமும், வன்முறையும், அதிகார நிறுவல்களும் என அறியப்படும், தற்கால அரசியல் சூழல்களுக்கு நடுவே, பின்பற்றப்பட வேண்டிய ஆளுமையாகத் திகழுபவர் ஜீவானந்தம் ஆவார். ஜீவாவைப் பற்றிய புரிதல் சமூக-அரசியல் மாற்றத்திற்கான உந்துதலாக அமையும் என்ற நோக்கில் பொன்னீலன் 'ஜீவா என்றொரு மானுடன் ' என்ற கட்டுரை நூலைப்படைத்தார்.

ப.ஜீவானந்தம் 1907 முதல் 1963 வரை வாழ்ந்தவர் ஆவார். இவர் அரசியல், இயக்கம், இலக்கியம், கலை எனப் பல துறைகளில் தாக்கத்தை உருவாக்கியவர் ஆவார். 1925-இல் உருவான இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் அங்கத்தினராக இருந்து முக்கியப் பொறுப்புகளுக்கு வந்து சமூக மாற்றத்தை முன்னெடுத்துச்சென்ற போராளியாக அவரை மதிப்பிட முடிகிறது. ஜீவா காந்தியடிகளின் வருணாசிரம ஆதரவு நிலைப்பாட்டை நேரடியாகவே விமர்சித்தவர் ஆவார். ஜீவானந்தத்தின் சிறப்புகளனைத்தையும் கீழ்க்காணும் விஸ்வநாதனின் கருத்து தொகுத்துக்கூறுகிறது.

> "சாதி ஆதிக்க எதிர்ப்பு; மதங்களுக்கிடையிலான நல்லிணக்கம்; தாய் மொழிப்பற்று; கலை, இலக்கிய, பண்பாட்டு மரபுகள் பற்றிய பெருமை, பெருமித உணர்வு; சமூகப் பொருளாதார அநீதிகளை முழுமூச்சுடன் எதிர்த்து நிற்கும் போர்க்குணம்; விஞ்ஞான பார்வை; ஆக்கப் பணிகளில் ஆர்வம்; கொண்ட கொள்கைகளில் உறுதியாயிருக்கும் அதே வேளை சமூக நிகழ்வுகளும், புதிய தரிசனங்களும் ஏற்படுத்துகின்ற மாறுதல்களை ஒட்டித் தங்கள் கருத்துக்களை மறுபரிசீலனை செய்யத் தயக்கமின்மை, எல்லாவற்றிற்கும் மேலாக மனிதநேய அணுகுமுறை"[31]

ஆகிய உயர்தன்மைகள் உடையவராக ஜீவா சிறப்பிக்கப்படுகிறார்.

பொன்னீலனின் இடதுசாரி இயக்கங்களோடு உள்ள உறவு, குமரி மண் பற்றிய வரலாற்றறிவு, சமூகத்தின் மீதான அக்கறை ஆகியவை 'ஜீவா என்றொரு மானுடன்' நூல் உருவாகப் பின்னணியாக அமைகின்றன. மதவன்முறைகளும் சாதி ஒடுக்குமுறைகளும், அரசியல் சுரண்டல்களும் பெருத்துவிட்ட இக்காலத்தில் ஜீவா பற்றிய வாழ்க்கை வரலாறு நினைவுகூரத்தக்கதாக விளங்குகிறது.

## தவத்திரு குன்றக்குடி அடிகளார் தமிழகத்தின் வழிகாட்டி:

குன்றக்குடி அடிகளார் பேச்சாளராகவும், இலக்கியவாதியாகவும், சமாதானத்தூதுவராகவும், முற்போக்கு ஆன்மீகச் சிந்தனையாளராகவும் விளங்கியர் ஆவார். குன்றக்குடி அடிகளாரின் பன்முக ஆளுமையையும், அவரது சிந்தனைகள், செயல்கள், எதிர்நோக்குகள் ஆகியவற்றையும் பதிவு செய்யும் நோக்கில் பொன்னீலன் இந்நூலை எழுதியுள்ளார். சீனிவாசபிள்ளை-சொர்ணத்தம்மாள் என்னும் தம்பதியருக்கு மகனாகப் பிறந்த அரங்கநாதன், குன்றக்குடி அடிகளாராக உயர்ந்த வரலாறு இதில் நுட்பமாக நுவலப்படுகிறது. குன்றக்குடி அடிகளாரின் கல்வி வாழ்க்கை, இளமைக்காலம், சுயமரியாதை இயக்க ஈடுபாடு, தொழில் வாழ்க்கை, தருமபுர ஆதீன எழுத்தர்பணி, சிவதீட்சைப் பெறுதல்-ஆதினத்தலைவராதல் தெய்வீகப் பேரவை உருவாக்குதல், தமிழ்ப்பற்று, போராட்டங்கள் ஆகியவற்றை ஆசிரியர் இந்நூலில் தொகுத்துரைக்கிறார்.

## வைகுண்டர் காட்டும் வாழ்வும் நெறியும்:

குமரி மாவட்டத்தின் சமூக விடுதலை வரலாற்றின் முக்கிய ஆளுமைகளுள் ஒருவர் வைகுண்டர் ஆவார். சாமிதோப்பு என்ற ஊரில் பிறந்து புதிய இந்திய ஆன்மீக நெறியைத் தோற்றுவித்த பெருமைக்குரியவர் அவர். வைகுண்டரின் கொள்கைகளைப் பின்பற்றுபவர்கள் ‘அய்யாவழியினர்’ என அழைக்கப்படுகின்றனர். பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றிய இவ்வாளுமையின் வரலாற்றைப் பொன்னீலன் எளிமையான சொற்களில் பதிவு செய்துள்ளார்.

## நாட்டார் இலக்கியம்:

## அத்தாணிக்கதைகள்:

பொன்னீலன் நாட்டுப்புறக்கதைகளைத் தொகுத்து இருதொகுதிகளாக வெளியிடுட்டுள்ளார். அவை, அத்தாணிக்கதைகள்(2004), பொட்டல் கதைகள் (2007) என்பனவாகும்.

அத்தாணிக்கதைகள் நூலில் பொன்னீலன் தொகுத்த ஐம்பத்தியொரு நாட்டுப்புறக் கதைகள் இடம் பெற்றுள்ளன. இவை புதுக்கோட்டை மாவட்டத்தின் வடகிழக்கு எல்லையில் தஞ்சை மாவட்டத்தை ஒட்டி அமைந்திருக்கும் அத்தாணி என்ற கிராமத்திலிருந்து தொகுக்கப்பட்டவை. பொன்னீலன் (1983 முதல் 1988 வரை) அத்தாணியில் கல்விப்பணியாற்றிய காலத்தில் இவற்றைத் தொகுத்துள்ளார்.

இக்கதைகள் தேவி இதழில் தொடராக வெளிவந்தவை. அத்தாணி கிராமத்தின் மண்வாசனை இக்கதைகளில் வீசுவதைக் காணமுடிகிறது. இந்தக் கதைகளினூடே அவ்வட்டார மக்களின் நம்பிக்கைகள், ஆசைகள், உறவுச் சிக்கல்கள் ஆகியவற்றை அறிய முடிகிறது. மெல்லிய நகைச்சுவையும் கதைகளினூடே படர்ந்து கிடக்கிறது.

## பொட்டல்கதைகள்:

அத்தாணிக்கதைகளைத் தொடர்ந்து வெளிவந்த நூல் பொட்டல் கதைகள் ஆகும். இது 2007-இல் வெளிவந்தது. குமரி மாவட்டத்திலுள்ள பொட்டல் பகுதியில் வழக்கத்திலுள்ள நாட்டார் கதைகளின் தொகுப்பு இது. ஒவ்வொரு கதையிலும், வாழ்வியல் அனுபவங்களும், பாடங்களும் நிறைந்துள்ளன. கதைகளின் முடிவுப்பகுதிகள் அவற்றின் மொத்த அமைப்பில் முக்கியத்துவம் வாய்ந்தவையாக விளங்குகின்றன. சிறந்த கதைசொல்லியாக அறியப்படும் பொன்னீலன் பிறரிடமிருந்து கேட்டறிந்த நாட்டுப்புறக்கதைகளின் மேல் தனது எழுத்துப் புலமையையும் இணைத்துள்ளதாகத் தோன்றுகிறது. நகைச்சுவையும் திருப்பமும் இக்கதைகளில் முக்கியமான உத்திகளாக அமைந்துள்ளன. இந்நூலில் மொத்தம் ஐம்பது கதைகள் இடம் பெற்றுள்ளன.

## பிற நூற்கள்:

பொன்னீலன் எழுதிய 'புவியெங்கும் சாந்தி நிலவுக' எனும் நூல் பொன்னீலனின் பயண அனுபவம் பற்றியது ஆகும். அணு ஆயுத சோதனைகள் நிறுத்தப்படவேண்டும் எனும் நோக்கில் 'இஸ்கஸ்' அமைப்புகளின் சார்பில் பயணம் மேற்கொள்ளப்பட்டது. 10.09.1985-இல் தொடங்கி 21.10.1985 அன்று முடிவுற்ற இப்பயணம் பொன்னீலனிடம் ஏற்படுத்திய பாதிப்புகளின் விளைவாக இந்நூல் வெளிவந்தது. மனிதகுலச் சங்கிலியின் நீட்சி, தொடர்ச்சி, பிணைப்பு ஆகியவை பற்றிய வியப்பு இந்நூல் எழுதுவதற்கு அவரைத் தூண்டின எனலாம்.

> "பொன்னீலன் நாட்டின் மீதும் சுற்றுப்புறச் சூழல்மீதும் மனித சமுதாயத்தின் மீதும் பற்றுக் கொண்டவர் என்பதை அவரது பயண இலக்கியம் உணர்த்துகின்றது."[32]

என சு.அர.கீதா குறிப்பிடுகின்றார்.

திறனாய்வுத்துறைக்கும் பொன்னீலன் குறிப்பிடத் தகுந்த பங்களிப்பை வழங்கியுள்ளார். 'தற்காலத் தமிழ் இலக்கியமும், திராவிட இயக்கச் சித்தாந்தமும், முற்போக்கு இலக்கிய இயக்கங்கள் ஆகியவை பொன்னீலன் எழுதிய திறனாய்வு

நூற்களாகும். ‘தாய்மொழி வழிக்கல்வி ’ என்றநூல் கல்வியியல் சிந்தனைகளை முன்வைக்கிறது. பொன்னீலன் ‘வாழ்க்கைப்பாதை’, ‘மார்க்சிய அழகியலின் அடிப்படைகள்’, ‘வகுப்புவாத வரலாறும் ராமரின் அயோத்தியும்’, ‘சோவியத் இலக்கியத்தில் மனித மதிப்புகள்’ ஆகிய மொழிபெயர்ப்பு நூற்களையும் படைத்துள்ளார். இந்நூற்கள் பொன்னீலனின் பன்மொழிப் புலமைக்குச் சான்றுகளாக விளங்குகின்றன.

பொன்னீலன் ‘ப.ஜீவானந்தம் நூல்திரட்டு, சாதிமதங்களைப்பாரோம், அன்புள்ள’ ஆகிய தொகுப்பு நூற்களையும் வெளியிட்டுள்ளார்.

## பேச்சுக்கலை:

தொடர்பியல் திறன்களில் பேச்சுக்கலை குறிப்பிடத்தகுந்த சிறப்பைப் பெறுகிறது. அறிவுறுத்தல், மகிழ்வூட்டல், விழிப்புணர்வூட்டல், எழுச்சியூட்டல், போன்ற பணிகளைப் பேச்சுக்கலை செய்கிறது. புரட்சிகளில் மக்கட்திறனை ஒன்றிணைக்கும் வலிமையான ஆயுதமாகப் பேச்சுக்கலை செயற்பட்டிருப்பதை வரலாற்றின் வழி அறியமுடிகிறது. எனவே பேச்சாற்றலையும் படைப்பாற்றலுக்கு நிகரான கலைத் திறனாகவே கொள்ளமுடிகிறது.

எழுத்தில் இருக்கும் அதே தீவிரத் தன்மையுடன் பேச்சுலகிலும் இயங்கியவர் பொன்னீலன் ஆவார். பொன்னீலன் திராவிட இயக்கம், இடதுசாரி இயக்கம் ஆகியவற்றின் பாதிப்பினால் சிறந்த பேச்சாளராகத் திகழ்ந்தார். பொதுவுடைமை இயக்கத்தில் ஜீவாவுக்குப்பின்னால் குறிப்பிடத்தகுந்த பேச்சாளராகத் திகழ்ந்தவர் பொன்னீலன். அவரது குரல் வளமும், பாவனைகளும், உணர்ச்சி வெளிப்பாடும், உடல் மொழியும் அவரைப் பேச்சாளராக நிறுவின. மீரான்மைதீன் பொன்னீலனின் பேச்சாற்றல் பற்றிக் குறிப்பிடும் போது,

> “அண்ணாச்சியின் மேடைப் பேச்சு நம்மை மயக்கிப் போட்டு விடுகிற ஆற்றல் உடையது. குரலும் முகப்பாவனையும் ஒன்றிணைந்து வருகிற ஆற்றல் மிக்க பேச்சு, உள்ளத்திலிருந்து பீறிட்டு வருகிற உணர்ச்சி, குரலின் கம்பீரம் ஒரு பக்கம் என்றால் விசயங்களை வெளிப்படுத்துகின்ற நேர்த்தியும் லாவகமும் நம்மை ஒய்யார ஊஞ்சலில் வைத்துக் தாலாட்டி விடும். சிரிக்கின்ற முகம் நம் சிந்தையைக் கவர்ந்துவிடுவது இயல்பானதே”[33]

என்கிறார்.

பொன்னீலன் மேடையேறிப் பேசுவதற்குக் காரணமாக அமைந்தவர்கள் கு.துரைராஜ், கு.சா.சுப்பையா, ஆசிரியர் சுப்பையா ஆகியோராவர். எட்டையபுரம் பாரதி விழாக்களில் குன்றக்குடி அடிகளார், தொ.மு.சி.ரகுநாதன், பாலதண்டாயுதம், தஞ்சை ராமமூர்த்தி, ஐ.மாயாண்டி பாரதி, கே.சி.எஸ். அருணாச்சலம், எஸ்.ராமகிருஷ்ணன், தா.பாண்டியன், ஜெயகாந்தன் போன்ற அறிஞர்களுடன் இணைந்து செயல்பட்ட அனுபவங்கள் பொன்னீலனின் பேச்சாற்றலை வளப்படுத்தின. திராவிட இயக்கத்தினர் பின்பற்றிய அடுக்குத் தொடர்நடையை முற்றிலும் தவிர்த்து, பாமரமக்களுக்குப் புரியும் வண்ணம் இயல்பான மொழியில் பேசுவது அவரது போக்காக அமைந்தது. வலிந்து நகைச்சுவைகளைக் கூறி அரங்கத்தை மகிழ்விக்கும் செயற்கை முறைகள் எவற்றையும் அவரது பேச்சில் காணமுடிவதில்லை. புராணச்செய்திகள், இலக்கிய மேற்கோள்கள், நடப்பியல் நிகழ்வுகள் ஆகியவற்றைக் கலந்து கோர்வையான பேச்சை வழங்குவது பொன்னீலனின் பேச்சு முறையாக உள்ளது. இரா.காமராசு பொன்னீலனின் பேச்சு நுட்பம் பற்றிப் பேசும்போது,

> "சொல்வதைத் தெளிவாகச் சொல்லுதல், எளிமையாகச் சொல்லுதல், அழகுபடச் சொல்லுதல், அழுத்தம் படச் சொல்லுதல். கேட்போரைச் சிந்தனை வயப்படுத்தி தம் சொற்பெருக்கில் இணைத்து அழைத்துச்செல்லுதல் ஆகியவற்றால் மேடைப்பேச்சுக் கலையில் சிறப்புத் தொழில் நுட்பச் செல்வராக பொன்னீலன் திகழ்கிறார்"[34]

என்று குறிப்பிடுகிறார்.

## பொன்னீலன் பற்றிய மதிப்பீடுகள்:

நவீன இலக்கியத்தின் பல்வேறு வகைமைகளில் தனது எழுத்துப் பதிவுகளைப் பொன்னீலன் தந்துள்ளார். அவரது படைப்புக்களைத் திறனாய்வாளர்கள் உயர்வாக மதிப்பிட்டுள்ளமை பின்னர் விரிவாகச் சுட்டப்படுகின்றது. பொன்னீலனின் மொத்த ஆளுமை பற்றிய பொதுவான மதிப்பீடுகளைத் தொகுத்தாய்வது அவரது தனித்திறன் குறித்த புரிதல்களை உருவாக்குவதாக அமையும் என்பதால் அவை இங்குத் தொகுத்துரைக்கப்படுகின்றன. தமிழகத்தின் தலைசிறந்த இலக்கியப் படைப்பாளிகளில் ஒருவராகப் பொன்னீலனைக் காட்டும் தி.க.சிவசங்கரன், பொன்னீலன் எழுத்தில் அழகியல் சமூதாய அறிவியல், அறஇயல் ஆகிய மூன்றும் அடங்கியிருப்பதாக மதிப்பிடுகிறார்.

"அழகியல், சமுதாய அறிவியல், அறஇயல் ஆகிய மூன்றும் மிகப் பொருத்தமாகவும் மேன்மையாகவும் இணைந்த படைப்பாளிதான் மனிதன் தான்-பொன்னீலன் என்று சுருக்கமாகக் கூறலாம்; இவையே அவரது ஆளுமையின் சாரம். இந்த மூன்று பண்புகளையும், அவரது படைப்புகளில் மட்டுமின்றி, வாழ்விலும், பன்முக மக்கட் பணிகளிலும் நாம் காணலாம்."[35]

என்று வாழ்வுக்கும் எழுத்துக்கும் இடைவெளி இல்லாத பொன்னீலனைக் காட்டுகிறார். பொன்னீலனிடம் திண்ணிய உள்ளம், கடுமையான உழைப்பு, பொதுலட்சியம், கூட்டுப் பணியாற்றல், அர்ப்பணிப்பு உணர்வு, தன்னடக்கம், தோழமையுணர்வு, பிறர் துயர் தீர்த்தல், பிறர் நலம் பேணுதல் ஆகிய நற்பண்புகள் இருப்பதையும் தி.க. சிவசங்கரன் சொற்களால் பட்டியலிடுகிறார்."[36] இது எழுத்துக்கப்பாலுள்ள பொன்னீலன் எனும் மனிதனின் மாண்புகளை அறிவிக்கிறது.

கி.ராஜநாராயணன் பொன்னீலனின் தோற்றம் பற்றிய படிமங்களை கண் முன் நிறுத்துகிறார். நாஞ்சில் மண்ணுக்குரிய நிறம், நாஞ்சில் வட்டார மொழி ஒலிப்பு முறை, எட்டுமுழ கைத்தறி வேட்டி, காவல்துறை அதிகாரி போன்ற கிருதா, மீசை, கோணலாக்கிப் பேசும் முகம், இசைஞானம் வெளிப்படுவதற்குரிய நல்ல குரல் அமைப்பு ஆகியவை பொன்னீலனின் தோற்றப் பொலிவின் கூறுகளாகக் கி.ராஜநாராயணனால் சுட்டப்படுகின்றன.[37]

பொன்னீலன் வெற்றுக்கற்பனையால் நூற்களை இயற்றுபவரல்ல. அவரது கதாப்பாத்திரங்கள் வாழ்க்கையிலிருந்து முளைத்து வந்தவை. அவர் வாழ்க்கை நான்கு அறைகளுக்குள்ளிருந்து தேடாமல், களத்திற்குச் சென்று அணுகுகிறார். இப்பண்பைக் கைலாசமூர்த்தி சிறப்பித்துக் கூறுகின்றார்.

"இருந்த இடத்தில் இருந்தே நாவல் எழுதும் பல எழுத்தாளர்கள் இருக்கிறார்கள். களத்திற்கு நேரில் சென்று மக்களையும் பிரச்சினைகளையும் நேரில் பார்த்து எழுதும், மக்களை நேசிக்கும் எழுத்தாளராக பொன்னீலன் அண்ணாச்சி விளங்குகிறார்."[38]

என்பதில் கள ஆய்வுடன் இணைந்த பொன்னீலனின் எழுத்துமுறை காட்டப்படுகிறது.

பொன்னீலனின் எழுத்தில் நிறைந்திருக்கும் சமூக அக்கறை அவரது வாழ்விலும் மிகுந்திருப்பதாக வண்ணநிலவன் குறிப்பிடுகிறார்.

"சமூக அக்கறையைத் தமது எழுத்துக்களில் மட்டுமே காட்டுபவரில்லை, பொன்னீலன் வாழ்விலும் காட்டுபவர் என்பதற்கு 86-இல் அணு ஆயுதப்

போரை எதிர்த்து, கன்னியாகுமரியிலிருந்து சென்னை வரையிலும் நடத்தப்பட்ட பாதயாத்திரைக் குழுவுக்குத் தலைமை தாங்கியதே சாட்சி”[39]

என்று வண்ணநிலவன் கூறுகிறார். பொன்னீலன் தனது எழுத்தை எதிர்மறையாக விமர்சிப்பவர்களையும் தனது நண்பர்களாகக் கருதும் உயர் மனப்பாங்கு கொண்டவர் என்றும் கூறுகின்றார்.

நீலபத்மநாபன், பொன்னீலனின் எழுத்து மற்றும் வாழ்வு பற்றிய உயர்வான மதிப்பீடுகளைத் தருகிறார். தனது பாதையிலும், இலக்கிலும் எப்போதும் தடுமாற்றம் இல்லாத பொன்னீலனின் செயல்பாடு அவரைக் கவர்ந்துள்ளது. நிதானமும், நடப்பு அரசியல் அரங்கின் அதிகார வட இழுப்புகளைப் பற்றிய தெளிந்த ஞானமும் நீலபத்மநாபனால் பாராட்டப்படுகின்றன. பொன்னீலனின் கலைஉலகம் மனிதநேயமிக்கது என்றும் அவர் கருதுகிறார். தன்னைச் சார்ந்தவர்களை மட்டுமின்றி, தனது மாற்றுக் குழுவில் இருப்பவர்களைக் கூடக் கொண்டாடும் பொன்னீலனின் இயல்பைப் புகழுகிறார்.

"அவரவர் சாதி,கட்சி, மத, மொழி, கொள்கை ஆட்களை நேசிப்பது எளிது அதை மனிதநேயம் என்று கொண்டாடத் தேவையில்லை. முற்றிலும் மாறுபட்டவர்களையும், மேற்படி சாதி, கட்சி, இத்யாதியானவைகளை மீறிப் பாசத்துடன் பார்க்க முடிவதுதான் பொன்னீலனின் சிறப்பு”[40]

என்கிறார். இதனால் பொன்னீலனுக்கு மனிதன், கலைஞன் என்னும் இரு அடையாளங்களும் பொருந்திச் செல்வதைப் புரிந்து கொள்ளமுடிகிறது.

பொன்னீலன் எவ்வகை எழுத்தாளராக இல்லை என்பதைப் பற்றிய தனது கருத்துக்களைச் சாலன் தருகிறார். பொன்னீலன் இலக்கியத் திறமையை வைத்துக் கழைக்கூத்தாடித்தனம் செய்யவில்லை என்பது அவரது முக்கியமான மதிப்பீடு ஆகும். மனிதவாழ்க்கையோடு ஒட்டாமல் ஆகாயத்தில் நிற்கும் எழுத்துக்களை அவர் படைக்கவில்லை என்ற மற்றொரு அபிப்ராயத்தையும் தெரிவிக்கிறார். மேலும் சாலன் மனிதனின் அதீத ஆளுமைகள் பற்றிய பதிவுகளைப் பொன்னீலனிடம் காண முடியாததையும் பாராட்டுகிறார். இலக்கியத்தைப் புனிதப்படுத்தும் தெய்வீகத் தன்மை எதனையும் பொன்னீலனிடம் காணமுடியவில்லை என்றும் கூறுகின்றார். பொன்னீலன் யாராக இல்லை என்பதைத் தொகுத்துரைப்பதோடு, அவர் யாராக இருக்கிறார் என்பதையும் இறுதியில் தெளிவுபடுத்துகிறார்.

"எப்பாடுபட்டாவது இலக்கியத்தின் துணையோடு மனிதனை முன்னோக்கி இழுத்துச் செல்ல வேண்டும் என்ற எண்ணத்தில் அரும்பாடு பட்டுக் கொண்டிருப்பவர்.”[41]

எனப் பொன்னீலனை மனிதநேயப் படைப்பாளராக அடையாளப்படுத்துகிறார்.

எஸ்.விஸ்வநாதனின் பார்வையில் பொன்னீலன் பொதுவுடைமைப் படைப்பாளியாகக் காட்சியளிக்கிறார். பொன்னீலனின் கலை இலக்கியச் செயல்பாடு சமூக மாற்றத்திற்கான கருவியாக செயல்படுவதால் அவ்விமர்சகர் அவரைப் பொதுவுடைமையாளராக அடையாளப்படுத்துகிறார்.

> "சமுதாயமாற்றம், சமநீதி , சமதர்ம ஆட்சி, உலக அமைதி-இவை காணும் இலட்சிய நோக்குடன் இலக்கியம், கலை, அரசியல், இதழியல் எனப் பல்வேறு தளங்களிலும் தடம் பதித்து அறுபதிலும் இருபதாய் அயராது உழைத்து வரும் பொதுவுடைமை இயக்கப் படைப்பாளி, பேச்சாளர், போராளி பொன்னீலன்"[42]

என்ற கூற்று மிகப்பொருத்தமானதாகத் தோன்றுகிறது.

பொன்னீலன் வானமாமலையின் மாணவர் என்று அறியப்படுபவர் ஆவார். வானமாமலை நாட்டுப்புறவியல், திறனாய்வு ஆகிய துறைகளில் ஆழமான பங்களிப்பைச் செய்தவர் ஆவார். அவர் இலக்கியவாதிகளின் நிறைகளையும் குறைகளையும் துல்லியமான அளவீடுகளால் வேறுபடுத்திக்காட்டும் ஆற்றல் மிக்கவர். இத்தகு சிறப்புக்களையுடைய நா.வானமாமலையின் முன்னுரைகளோடு பொன்னீலன் 'கரிசல்', 'ஊற்றில் மலர்ந்தது', 'கொள்ளைக்காரர்கள்' ஆகிய நூற்களை வெளிக்கொணர்ந்தார். என்.டி.வானமாமலையால் கீழ்க்காணுமாறு பொன்னீலன் பாராட்டப்படுகிறார்.

> "மிகமிகச் சாதாரணமானவர். அதே சமயத்தில் மிகமிக அசாதாரணமானவரும் கூட. இப்படியும் ஒருவர் இருக்க முடியுமா முடியும் என்பதுமாத்திரமல்ல, இருக்கிறார் என்பதும் கண்முன் காணும் உண்மை அவர்தான் பொன்னீலன்"[43]

எனப் பொன்னீலன் அசாதாராண மனிதராகக் காட்டப்படுகிறார்.

மு.ராசகோபால் பொன்னீலனை மிகச்சிறந்த கல்வியியல் அறிஞர் என்று குறிப்பிடுகிறார்.பொன்னீலனின் கல்வியியல் கொள்கைகள் பின்பற்றப்பட்டால் மேம்பாடான கல்வியை மாணவர்களுக்கு வழங்கமுடியும் என்று கருதுகிறார். உடல் உழைப்பை முக்கியப்படுத்தும் கல்வி, தாய்மொழி வழிக்கல்வி, தரப்படுத்தப்பட்ட அறிவியல் கல்வி போன்றவற்றில் மையம்கொள்ளும் பொன்னீலனின் சிந்தனைகள் செயல்படுத்தப்பட வேண்டியவை என்று அவர் கருதுகிறார். எழுத்தாளர் என்ற படிமத்தால் மட்டுமே முன்னிலைப்படுத்தப்படும் பொன்னீலனைக் கல்வியியல் அறிஞராக முன்னிறுத்துவது புதுமையாகத் தோன்றுகிறது.

"எழுத்தாளர் பொன்னீலன் தலைசிறந்த கல்வி அலுவலர்களில் ஒருவராகப் போற்றி மதிக்கப்படுபவர். கல்வி உலகிற்கு நடைமுறைப்பயன் நல்கக்கூடிய பல கல்விக் கருத்துக்களை அனுபவ ரீதியில் பரிசோதித்து, உணர்ந்து கூறியுள்ளார். ஒப்பற்ற கல்வி அறிஞர்"[44]

என்ற கருத்து வழி பொன்னீலனைக் கல்வியியல் அறிஞர் என்ற கோணத்திலும் பார்க்க முடிகிறது.

தமிழ்நாவல் ஆசிரியரியர்களில் முற்போக்கு நாவல்ஆசிரியர்கள் தனித்துவமான சிறப்புடன் திகழ்கின்றனர். கி.பழனிச்சாமி, முற்போக்கு நாவலாசிரியர்களுக்குள்ளும் பொன்னீலன் உயர்ந்த தனித்தன்மைகளைப் பெற்றுள்ளதாகக் குறிப்பிடுகிறார். மானிட மகிமையில் காலூன்றி எழுதுவதையும், குறிக்கோள் தவறாமல் உள்ளடக்கத்தை அமைப்பதையும் அவர் சிறப்பித்துக் கூறுகிறார். எதிர்கால தலைமுறைகளுக்கான அடித்தளமான விதைகளைப் பொன்னீலன் விதைத்து வருவதாகவும் அவர் கூறுகின்றார். அவ்விமர்சகர் பொன்னீலனின் தனித்தன்மைகளாக இரண்டு பண்புகளைச் சுட்டுகிறார்.

"தமிழில் இடம் பதித்துள்ள முற்போக்கு நாவலாசிரியர்களில், உணர்வழுத்தம், நுட்பமான கலை உணர்வு என்ற தனித்தன்மைகளோடு குறிப்பிடத்தக்கவர் பொன்னீலன்"[45]

என்பதில் உணர்வழுத்தம், நுட்பமான கலை உணர்வு ஆகிய தன்மைகள் பொன்னீலனுக்குரியவையாகக் குறிக்கப்படுகின்றன.

பொன்னீலனின் சிறுகதைகளை மலையாளத்தில் மொழிபெயர்த்த ஷாஃபி செறுமாவிலாயி, பொன்னீலன் தமிழ் நாவல் உலகுக்குப் புதிய வழிகாட்டியவர் என்ற உயர்வான மதிப்பீட்டைத் தருகிறார். இலக்கியச்சூழலில் ஏற்படும் தடைகளைக் கவனமாக எதிர்கொண்டு எழுதி வருபவராகவும் அவரைச் சிறப்பிக்கிறார்.

"இன்றைய தமிழ் இலக்கியச்சூழலில் எழுந்துள்ள....மிரட்டல்கள், தடைகள் மிகுந்த கவனத்தோடும்....மிகுந்த பணிவுடனும்...அளவில்லா நேசத்துடனும், உறுதிமிக்க தன்னம்பிக்கைகளுடனும் குலையாத இலக்கியப்பயணம் பொன்னீலனுடையது"[46]

என்று பாராட்டுகிறார்.

பொன்னீலன் பல வடிவங்களாகப் பார்க்கப்பட்டாலும் அவரது அன்பு என்ற வடிவமே பெருமைக்குரியது எனப் பொன்னீலனின் மகளான அழகு நீலா ஜெயராம் குறிப்பிடுகிறார்.

"பொன்னீலனுக்கு அரசியல்வாதி,இலக்கியவாதி, சிறந்த பேச்சாளர், கல்வித்துறை அதிகாரி என்று பல முகங்கள் இருப்பினும் பொன்னீலன் என்றால் அன்பு, அன்பு என்றால் பொன்னீலன்-என்று கோவை ஞானி அவர்கள் அப்பாவைப் பற்றி ஒருமுறை கூறினார். நானும் அதையே கூறுகிறேன்.[47]

என்பதில் பொன்னீலனின் பிற படிமங்களை விட மனிதன் எனும் படிமம் உயர்ந்து நிற்பது சுட்டப்படுகிறது.

பொன்னீலனின் கடைசி மகளான அனிதா தந்தையின் உழைப்பையும் மனிதத் தன்மையையும் முக்கியப்படுத்துகிறார்.

"காலம் பொன் போன்றது. கடமை கண் போன்றது என்ற பழமொழியை நன்கு உணர்ந்து ஒரு நொடி கூட வீணாக்காமல் அயராது உழைக்கும் உத்தமர். மிகவும் பெருந்தன்மையாகக் குறைநிறைகளை அலசி எடுக்கும் நல்ல மனிதர்"[48]

என்கிறார். மேலும் பொன்னீலனிடம் காணப்படும் பொறுமை சனநாயகத்தன்மை, சுதந்திர உணர்வு, திறமை ஆகியவற்றைப் புகழ்கிறார்.

பொன்னீலனின் எழுத்தைப் பாராட்ட பேனாவை எடுத்த எழுத்தாளர்கள் எல்லோருமே அவரது மனிதப்பண்புகளைச் சொல்லாமல் தங்கள் ஆக்கத்தை நிறைவு செய்யவில்லை. பொன்னீலனின் மனிதநேயத்துக்கும் ஒழுக்கத்துக்கும் வழங்கப்பட்ட சிறப்பாக இதனைக் கருத முடிகிறது. பொன்னீலன் என்கிற மனிதநேயன் என்ற கட்டுரையில் க.பகவதி, கி.ஜெயகுமார் ஆகியோர் பொன்னீலனின் உயர்பண்புகளை பட்டியலிடுகின்றனர்.

"எளிமை, கனிவான பேச்சு, தமக்குத் தெரிந்ததைப் பிறருக்குப் புரியும்படி விளக்கும் தன்மை, தோழர்களின் வாழ்க்கையின் சிறுசிறு விஷயங்களில் கூட உண்மையான அக்கறை எடுத்துக்கொள்ளும் மாண்பு, படிப்பால்-பணத்தால் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்கிற பேதம்-வயது வித்தியாசம் போன்ற ஏற்றத்தாழ்வுகள் பாராமை, சாதி மதம் கடந்து மனிதனை மனிதனாக நேசிக்கும் போக்கு என்கிற பல்வேறு தளங்களில் தமது ஆளுமையை வெளிக்கொணர்ந்தவர் அண்ணாச்சி"[49]

எனப் பகவதி குறிப்பிடுகிறார்.

> பொன்னீலனின் எல்லாப்படைப்புகளிலும் உலகம் தழுவிய விரிந்த பார்வை தெளிந்த சிந்தனை, மனித நேயம், எதிர்காலம் பற்றிய நம்பிக்கை, சமூக மாற்றத்திற்கான சிந்தனைகள் ஆகியவை இடம் பெறுகின்றன."[50]

என்று கோவில்குணா மதிப்பிடுகிறார். பிறரை மதித்தல், பாராட்டுதல், உழைத்தல், உழைக்கத் தூண்டுதல் ஆகிய பண்புநலன்களைக் கொண்டவராகப் பொன்னீலன் விளங்கினார். தனக்குக் கீழ் பணியாற்றும் நபர்களை அடிமைகளாக நடத்தும் பண்பு அவருக்கு இல்லை. பணிபுரிந்த இடங்களில் நிறுவன வளர்ச்சி, பணிபுரிவோர் வளர்ச்சி, சமூக வளர்ச்சி ஆகியவற்றில் அக்கறை கொண்டவராக விளங்கினார். அவரது தொழில் வாழ்க்கை பற்றிப்பேசும் அ.ஜோ.தனராஜ்,

> "அண்ணாச்சி தனக்குக் கீழ் பணிபுரியும் நபர்களை எப்போதும் பாராட்டிப் பேசுவார். அந்தப் பாராட்டு அவர்களுக்கு நல்ல உற்சாகத்தைத் தரும். அவர்களை நன்கு உழைக்க வைப்பார் பணியாளர்களின் பலம், பலவீனம் ஆகியவற்றை மதிப்பிட்டு அவர்களை உரிய இடங்களில் பணியாற்ற வைப்பார். சிறந்த செயல் வீரர். மிகச்சிறந்த சிந்தனையாளர்"[51]

என்று குறிப்பிடுகிறார்.

சு.அர.கீதா பொன்னீலனைப் பன்முக ஆளுமை நிறைந்தவராக மதிப்பிடுகிறார். இன்றைய எழுத்துலகின் முன்னோடி எனப் புகழாரம் சூட்டுகிறார். சமூகச்சார்பு நிலைகொண்ட இலக்கியவாதியாக அவரை அடையாளப்படுத்துகிறார்.

> "அவரது படைப்புலகப் பார்வைகள் தெளிவானவை. இன்றைய சமுதாயத்தின் ஏற்றத்தாழ்வுகளையும் இழிவுகளையும் அழிவுகளையும் கண்டு ஆக்கப்பூர்வமாகச் சிந்தித்துக் குறைகளைக் கண்டறிந்து குறிப்பிடும் இயல்பு அவரது படைப்புகளில் பொருந்தியுள்ளது."[52]

என்கிறார்.

**முடிவுரை:**

இவ்வியலில் பொன்னீலனின் இளமைப்பருவம் குறித்து விரிவாகக் கூறப்பட்டுள்ளது. பொன்னீலனை எழுதத்தூண்டிய பின்புலம் ஆராயப்பட்டுள்ளது. பொன்னீலன் பெற்ற விருதுகளும், பரிசுகளும் பற்றித் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன. பொன்னீலன் எழுதிய அனைத்து நூல்களும் பட்டியலிடப்பட்டுள்ளன. பொன்னீலனின் படைப்புகளில் அமைந்துள்ள உள்ளடக்கங்கள் சுருக்கியுரைக்கப்பட்டுள்ளன. பொன்னீலன் பற்றிய திறனாய்வாளர்களின் விமர்சனங்களும் முன்வைக்கப்பட்டுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. இரா.இளங்கோவன், பெ.கணபதி சுப்பிரமணியன் முதலியோர் (ப.ஆ) மானுடப்பறவை, ப.137
2. பொன்னீலன், விடைபெறுகிறேன், ப.14.
3. மேலது, ப.14
4. இரா.இளங்கோவன், பெ.கணபதி சுப்பிரமணியன் முதலியோர் (ப.ஆ) மானுடப்பறவை, ப.15
5. மேலது, ப.156
6. மேலது, பக்.83,84
7. மேலது, பக். 56,57
8. மேலது, ப. 143
9. மேலது, ப. 148
10. மேலது, ப. 31
11. மேலது, ப. 31
12. மேலது, ப. 69
13. மேலது, ப. 14
14. மேலது, ப. 53
15. பொன்னீலன், புதியதரிசனங்கள், ப. 12
16. இரா.இளங்கோவன், பெ. கணபதி சுப்பிரமணியன் முதலியோர் (ப.ஆ), மானுடப்பறவை, ப.66
17. ஞானி,(தொ.ஆ) புதியதரிசனங்கள் கலையும் அரசியலும், ப.37
18. மேலது, ப. 48
19. மேலது, ப. 55
20. மேலது, ப. 57
21. மேலது, ப. 64
22. மேலது, ப. 67
23. இரா.இளங்கோவன், பெ. கணபதி சுப்பிரமணியன் முதலியோர் (ப.ஆ), மானுடப்பறவை, ப. 155
24. மேலது, ப. 216
25. மேலது, ப. 118
26. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப. 266

27. சு.அர.கீதா, பொன்னீலனின் படைப்பிலக்கியங்கள் ஓர்.ஆய்வு, ப.123
28. மேலது, ப. 141
29. இரவீந்திரபாரதி, நவீனதமிழ் இலக்கியம்-சிலபார்வை, பக்.21,22
30. மேலது, ப. 22.
31. இரா.இளங்கோவன், பெ. கணபதி சுப்பிரமணியன் முதலியோர் (ப.ஆ), மானுடப்பறவை, பக்.122,123
32. சு.அர.கீதா, பொன்னீலனின் படைப்பிலக்கியங்கள் ஓர்.ஆய்வு, ப. 19
33. இரா.இளங்கோவன், பெ. கணபதி சுப்பிரமணியன் முதலியோர் (ப.ஆ) மானுடப்பறவை, ப. 213
34. மேலது, ப. 220
35. மேலது, ப. 45
36. மேலது, ப. 46
37. மேலது, பக். 47,49
38. மேலது, ப. 188
39. மேலது, ப. 50
40. மேலது, ப. 53
41. மேலது, ப. 118
42. மேலது, ப. 119
43. மேலது, ப. 132
44. மேலது, ப. 133
45. மேலது, ப. 139
46. மேலது, ப. 153
47. மேலது, ப. 168
48. மேலது, ப. 176
49. மேலது, ப. 305
50. மேலது, ப. 329
51. மேலது, ப. 212
52. சு.அர.கீதா, பொன்னீலனின் படைப்பிலக்கியங்கள் ஓர்.ஆய்வு, ப. 9

# இயல் -2

# மறுபக்கம் நாவலில் சமூதாயம்

## முன்னுரை:

இலக்கிய வகைமைகளில் ஒன்றாகிய நாவல் சமுதாயத்தைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக விளங்குகிறது. வியாபார நோக்கில் எழுதப்படும் வெகுசன நாவல்களைத் தவிர்த்துவிட்டு, தமிழ் நாவல்களின் உள்ளடக்கத்தை ஆராய்ந்தால் அதில் சமுதாயச் சித்திரிப்பும் முக்கிய இடத்தைப் பிடிப்பதை அறியலாம். தமிழ் நாவல்களை ஆராய்ந்தால் புராணச் செய்திகளும், அதீதப் புனைவுகளும், விதிவிலக்காகச் சிறிய எண்ணிக்கையில் மட்டுமே காணப்படுகின்றன. வாழ்க்கையை ஒட்டிச் செல்லும் கதையம்சமும், வாழும் மனிதர்களை நகல் செய்யும் பாத்திரப் படைப்பும், இயல்பான உரையாடலும், புவியியல் அறிவுக்கெட்டும் கதைக்களமும் கொண்டனவாக நாவல்கள் வெளிவருகின்றன. அவை சமுதாய நிகழ்வுகளையும், சமுதாயச் சிக்கல்களையும், சமுதாய மாற்றங்களையும், தீர்வுகளையும் கொண்டனவாக அமைக்கப்படுகின்றன. பொன்னீலன் சமுதாயப்பார்வை மிக்கப் படைப்பாளி ஆவார். அவரது மறுபக்கம் நாவலில் சமுதாயப்பார்வை அமைந்துள்ள பாங்கினை இவ்வியல் ஆராய்கிறது.

## சமுதாயத் தோற்றம்:

மனித இனம் தோன்றியவுடனேவே சமுதாய அமைப்பு உருவாகி விடவில்லை. ஆதிமனிதன் தனிநிலை வாழ்வில் விலங்குகளோடு வாழ்ந்த காலம் இருந்தது. காலத்தின் பரிணாம வளர்ச்சியில் கூட்டு நிலை வாழ்வு தோற்றம் கொண்டது. அப்போது சமூகம் உருவானது எனலாம்.

> "ஆதி மனிதர்கள், காடுமேடுகளில் தனியாக ஆதரவற்ற விலங்குடன் தாமும் ஒரு விலங்காய் இருந்த நிலை மாறி அவர்கள் கூட்டங்கூட்டமாய் ஒன்றி ஓரிடத்தில் தங்கி வாழத்தலைப்பட்டபோதே சமூகம் உருவாயிற்று"[1]

என்ற கூற்று சமூகத் தோற்றத்தைக் கோடிட்டுக் காட்டுகிறது. கூடி வாழ்ந்த மனிதனின் சமூகக் குறியீடுகள், சின்னங்கள், நிறுவனங்கள் போன்றவையும் சமூக அமைப்புக்குள் இணைத்து ஆராயப்படுகின்றன.

> "சமூக உளவியலில் சமூகம் என்பது மக்கள் கூட்டம் என்பதனையும் அவர்களிடையே நிலவும் எண்ணற்ற தொடர்புகளையும் சமூகக் குறியீடுகள், அடையாளச் சின்னங்கள், நாட்டுப் பாடல்கள், நிறுவனங்கள் போன்றவற்றையும் குறிக்கும்."[2]

இதிலிருந்து மனிதக் குழுக்கள் தமக்குள் ஏற்படுத்திக் கொண்ட குடும்பம், திருமணம், மதம் போன்ற நிறுவனங்களும் தொடர்பியல் முறைகளும், அடையாளங்களும், கலாச்சாரக் கூறுகளும் சமூக அமைப்புக்குள் இடம் பெறுவதை அறியமுடிகிறது.

## சமுதாயம் -விளக்கம்:

விலங்குகளும், பறவைகளும் கூடி வாழ்ந்தாலும் அவற்றைச் சமுதாயம் என அறிஞர்கள் அழைப்பதில்லை. மனிதர்கள் ஓர் ஒழுங்கமைவுக்குட்பட்டுக் கூடி வாழ்வதைச் சமுதாயம் எனக் கொள்ள முடிகிறது. மொழி, பண்பாடு, கலாச்சாரம், சமூக அமைப்புகள், சமுதாய விழுமியங்கள், சட்டம், மதம் ஆகியவற்றைக் கொண்டிருக்கும் மனிதத் தொகுதி விலங்கினின்று வேறுபட்டதாக விளங்குகிறது. குடும்பம் தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம் பற்றி ஆராய்ந்த ஏங்கல்ஸ் ஒழுங்கினடிப்படையிலான மனிதத் தொகுதியைச் சமுதாயம் என வரையறுக்கின்றார்.

> "சமுதாயம் என்பது மக்கள் சேர்ந்து வாழ்வதை மட்டும் குறிப்பதன்று. தனி மனிதர்கள் ஓர் ஒழுங்கின் அடிப்படையில் சேர்ந்துள்ள அமைப்பு முறையையும் குறிக்கின்றது"[3]

என்று ஏங்கல்ஸ் குறிப்பிடுகிறார்.

மனிதன் சமூகமாக ஒன்றிணைந்ததில் ஒத்த தன்மைகளும், பொதுவான நோக்கங்களும் முக்கியப் பங்கு வகித்தன.

> "தனியாகவும் ஒரு சிலராகவும் இருந்த மனிதர்கள் தங்களுடைய ஒத்த தன்மையை உணர்ந்து அதன் காரணமாகப் பொதுவான நோக்கங்களை அடையச் சேர்ந்து முயலுகிற போது உண்டாவதுதான் சமூகம்"[4]

என்று கருதமுடிகிறது.

## சமூகம் - சமுதாயம்:

தமிழில் சமூகம் சமுதாயம் என்ற இருசொற்களும் ஒரே பொருளில் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. ஆனால் கம்யூனிட்டி என்ற சொல்லின் நேரடிப் பொருள் சமூகம் என்பதாகும். சொசைட்டி என்ற ஆங்கிலச் சொல் தமிழில் சமுதாயம் என்பதைக் குறிக்கிறது. சமூகம், சமுதாயம் என்பவற்றிற்கிடையேயுள்ள நுட்பமான வேறுபாட்டை ந.பிச்சமுத்து தெளிவுபடுத்துகிறார்.

"குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட விதிமுறைகளுடன் வாழும் சிறிய மக்கட்குழுவைக் குறிப்பிடும் கம்யூனிட்டி என்னும் சொல்லைச் 'சமூகம்' என்றும் ஒரு நாட்டில் வாழும் பல்வேறு வகைப்பட்ட சமூக மக்களை ஒட்டுமொத்தமாகக் குறிப்பிடும் சொசைட்டி என்னும் சொல்லைச் சமுதாயம் என்றும் சொல்லலாம்."[5]

மேற்காட்டிய மேற்கோளிலிருந்து சமுதாயம் என்பது பெரிய அமைப்பு என்றும், சமூகம் என்பது சமுதாயத்துக்குட்பட்ட கிளை அமைப்பு என்றும் புரிந்து கொள்ள முடிகிறது.

## சமூகவியல்:

சமூக நிறுவனங்கள் பற்றியும் மனிதத்தொகுதியின் பழக்கவழக்கங்கங்கள் குறித்தும் ஆராய்கின்ற கொள்கையே சமூகவியல் ஆகும்.

"சமூக நிறுவனங்களைப் பற்றியும் மனித மனப்பாங்கு, மனிதப் பழக்கவழக்கங்களின் முறைகள் பற்றியும் பேசுவது சமூகவியல்"[6]

என்று ஜேம்ஸ் டிஃபாரெல் சமூகவியலுக்கு விளக்கம் தருகிறார்.

தனி மனிதனோடு சமூகம் ஒன்றுபடும் இடங்களையும், வேறுபடும் இடங்களையும் கண்டறிதலின் அவசியத்தைச் சமூகவியல் புரிந்து செயல்படுகிறது. மேலும் அது சமூகத்தோடு தனி மனிதன் ஒன்று படும் இடங்களையும், மாறுபடும் இடங்களையும் கணக்கிலெடுத்துக் கொள்ளுகிறது.

"சமுதாயத்திற்கும் தனிமனிதனுக்கும் இடையேயான உறவுகளையும் முரண்பாடுகளையும் பற்றித் தெளிவாகக் கூறுவதே சமூகவியல்"[7]

என அதனை வரையறுத்துள்ளனர். சமூகவியல் என்பது ஒரு விஞ்ஞான முறையாகும். சமூகத்தின் இன்றைய நிலையை உணர்த்துவதோடு அது நின்று விடுவதில்லை. சமூகத்தின் எதிர்கால மாற்றம் பற்றிய கருத்தியல்களையும் அது தன்னகத்தே கொண்டுள்ளது.

"சமூகவியல் என்பது சமூகத்தையும் அதனோடு தொடர்புடைய மக்கள் உறவையும், அதன் விளைவுகளையும் பற்றிய அறிவியலாகும். இது சமூகத்தைப் பற்றி நாம் இதுகாறும் அறிந்திருக்கும் அனைத்தையும் தொகுத்துக் கூறும். சமூகம் இன்றுள்ள நிலையை எவ்வாறு அடைந்தது என்பதை விளக்கிக்கூறும். இது, இனி எவ்வாறு மாறும் என்பதையும் சுட்ட வல்லது. எனவே இத்துறை ஒப்பற்ற சமூக விஞ்ஞானமாக விளங்கி வருகிறது"[8]

என்பர்.

## சமுதாய அனுகுமுறை:

இலக்கியத்தை வெறும் சாராம்சமாகப் புரிந்து கொள்வது என்பது தட்டையான வாசகக் செயல்பாடு ஆகும். இலக்கியத்தில் அமைந்த சமூகப்பின்னணி, சமூகச்சூழல் ஆகியவை பற்றிய புரிதலோடு நிகழும் வாசிப்பே முழுமையானது. இதில் படைப்பு, வாசிப்பு என்பவற்றோடு திறனாய்வு என்னும் இலக்கியச் செயல்பாடும் இணைகிறது. சமூகவியல் கோட்பாடுகளை உள்வாங்கிப் படைப்பைப் பின் தொடரும் பொழுது புதிய உண்மைகளை அறிய முடியும். சமூகவியலைப் புரிந்து கொள்ளாமல், கதைச் சுருக்கத்தையும் பாத்திரங்களின் இயல்பையும் நம்பி செய்யப்படும் நாவல் பற்றிய ஆய்வுகள் வறட்சி கொண்டனவாக அமைகின்றன. ஆராய்ச்சியின் செழுமைக்குச் சமூகவியல் அணுகுமுறை கைகொடுக்கிறது.

> "ஒரு குறிப்பிட்ட இலக்கியத்தை முறையாகவும் சரியாகவும் விளங்கிக் கொள்ள வேண்டுமானால் அந்த இலக்கியத்திற்குரிய சமுதாயத்தைப் பற்றியும் அந்த இலக்கியம் தோன்றிய காலத்தில் விளங்கிய சமுதாய சூழல் பற்றியும் தெரிந்திருக்க வேண்டும். இவற்றைத் தெரிந்து கொண்டு அந்த இலக்கியத்தை ஆராயும் போது இந்த ஆராய்ச்சி செழுமை பெறுகிறது"[9]

என்பர்.

சமூகவியல் அணுகுமுறை திறனாய்வுலகில் மிகுதியாகப் பயன்படுத்தப் படுவதற்கான காரணம் அதன் பரந்த தன்மையாகும். படைப்பிலக்கியம் சிக்கல்களின் சித்திரிப்பாக அமையும் பொழுது அச்சிக்கல்களுக்கான காரணிகளையும் தீர்வுகளையும் ஆராய இவ்வணுகுமுறை பயன்படுகிறது. சமூகத்துடன் உறவும், முரண்பாடும் கொண்ட மனித இருப்பை ஆராய்வதில் சமுதாய அணுகுமுறை பெரும்பங்கு வகிக்கிறது.

> "நம்முடைய சமகால வாழ்க்கையின் சமூகச் சிக்கல்கள், தனி மனிதச் சிக்கல்கள், குடும்பச் சிக்கல்கள், அடிப்படையான பொருளாதார அடித்தளச் சிக்கல்கள், பண்பாட்டு உருவாக்கத்திற்கான காரணிகள், பின்புலம், அரசியல், அதிகார மையங்கள், மாறிவரும் அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சிக்கு ஏற்ப மாறும் மதிப்புகள் போன்றவை நம் படைப்பிலக்கியங்களில் வெளியிடப்பட்டுள்ள பாங்கை ஆராயச் சமூகவியல் கோட்பாடுகள் இன்றியமையாதன"[10]

என வேங்கடராமன் குறிப்பிடுகிறார்.

## இலக்கியமும் சமுதாயமும்:

சமுதாய அமைப்புகளில் ஒன்றாக இலக்கியம் திகழ்கிறது. இலக்கியம் சமூக உண்மைகளையே பேசி வருகிறது. இலக்கியத்தின் மொழி, வழிமுறைகள், கொள்கைகள் அனைத்தும் சமூகத்தின் தேவைக்கேற்ப உருப்பெறுகின்றன. சமுதாயப் பயன்பாடு எனும் நோக்கத்தையும் அது தன்னகத்தே கொண்டுள்ளது. இலக்கியக் கருப்பொருள்களும் சமூகச் சிக்கல்களை அடிப்படையாகக் கொண்டே உருவாக்கப்படுகின்றன. எனவே இலக்கியத்திலிருந்து சமுதாயத்தைத் தனியாகப் பிரித்துப்பார்க்க முடியாது. எனவே இலக்கியத்தைச் சமூக ஆவணம் என்று குறிக்க முடிகிறது.

> "படைப்பாசிரியரின் தனித்தன்மையைப் பொறுத்து சமூக உண்மையை ஏதோ ஓர் வடிவத்தில் இலக்கியம் பிரதிபலிப்பதால், ஒரு வகையில் அது ஒரு சமூகப் பாத்திரமும் ஆகும். வாழ்க்கை நிகழ்ச்சி விவரங்களை அப்படியே கொடுக்காமல் கற்பனையுடன் அளிப்பதால், அது சமூக வரலாற்று ஏடாக இருப்பதோடன்றி ஒரு நினைவுச் சின்னமாக, அதாவது வாழ்க்கையின் உண்மை நிலையைக் கற்பனையாற்றலுடன் கொடுக்கும் ஒன்றாகவுமிருக்கிறது."[11]

இதிலிருந்து இலக்கியத்தைச் சமூகப் பாத்திரமாகக் கருதும்பொழுது ஒரு காலகட்ட சமுதாயத்தின் போக்கை அக்கால இலக்கியத்துக்குள்ளிருந்தே அறிய முடியும் என்ற உண்மையைப் பெறமுடிகிறது.

## இலக்கியமும் சமூகவியலும்:

இலக்கியமும் சமூகவியலும் ஒன்றுக்கொன்று பிணைப்புக் கொண்டவையாக விளங்குகின்றன. தனிமனிதனுக்கும் சமூகத்துக்குமான உறவுகளையும் முரண்களையும் விவரிப்பதால் இலக்கியமானது சமூகவியலோடு அணுக்க உறவு கொண்டு விளங்குகின்றது.

> "சமூக விஞ்ஞானத் துறைகள் பலவற்றுள்ளும் இலக்கியத்துடன் மிக நெருங்கிய தொடர்புடையது சமூகவியலாகும். ஏனெனில், சமூகவியல் மனித ஒழுகலாறு சம்பந்தமானது; தனிமனிதனையும் மனித சமுதாயத்தையும் ஆராய்வதையே சமூகவியல் முக்கிய குறிக்கோளாகக் கொண்டுள்ளது."[12]

மேற்காட்டிய மேற்கோளானது இலக்கியத்துக்கும் சமூகவியலுக்குமான உறவைப் புலப்படுத்துகிறது.

**நாவலும் - சமூகமும்:**

நாவல் என்பது மனிதனின் அறிவுப்பூர்வமான நடவடிக்கைகளையும் உணர்வு சார்ந்த செயல்பாடுகளையும் விளக்கிச் செல்லும் இலக்கிய வகையாகும். உலக அனுபவங்களை கற்பனையின் பூச்சில்லாமல் இயல்பாகத் தரும் கலைவடிவமாக அது விளங்குகிறது. மனிதர்களின் உணர்ச்சிகள், போராட்டங்கள் ஆகியவற்றை நிலைக்களனாகக் கொண்டு நாவல் இலக்கியம் தோன்றுகின்றது. மனித உறவுகளை மையமிட்டே நாவலில் கருப்பொருள் அமைகின்றது. நிகழ்வுச் சூழல்களுக்கேற்ப மாற்றமடையும் மனித மனநிலையை நாவல் பிரதிபலிக்கின்றது. நாவலானது சமூகம் சார்ந்து கீழ்க்காணும் விஷயங்களைப் பிரதிபலிக்கின்றது.

> "புதினங்கள் சமூகத்தை, பண்பாட்டு வளர்ச்சியை, மக்களின் வாழ்க்கை முறைகளை, அரசியல் அமைப்புகளை மனித உறவுகளைப் பிரதிபலிக்கின்றன."[13]

மேற்காட்டிய கூற்றானது நாவலைச் சமூகத்தோடு ஒட்டிச் செல்லும் இலக்கிய வகையாகக் காட்டுகிறது. இவ்வாறு சமூகத்தைப் பதிவு செய்யும் நாவல்களைச் சமூகப் புதினங்கள் என்று வகைப்படுத்த முடிகிறது.

நாவலின் பாடுபொருளில் சமுதாயம் கலந்திருப்பதைச் சு.வேங்கடராமன் சுட்டிக் காட்டுகிறார்.

> "நம்முடைய சமகால வாழ்க்கையின் சமூகச் சிக்கல்கள், பொருளாதாரச் சிக்கல்கள், தனி மனித, குடும்பச் சிக்கல்களைச் சமூகப் பின்னணியில் படைப்பது, மாறி வரும் சமூக மதிப்புக்கள் போன்றவை புனைகதை இலக்கியத்தின் பாடுபொருளாகின்றன"[14]

எனச் சமுதாயத்தின் பல்வேறு சிக்கல்கள் மற்றும் மதிப்புகள் நாவலில் இடம் பெறுவதனை அவர் உணர்த்துகின்றார்.

சமூகத்தைப் படம் பிடித்துக்காட்டும் நாவல்கள் மிகுதியாகத் தோன்றியபோது சமுதாய நாவல்கள் என்ற வகைப்பாட்டைத் திறனாய்வுலகம் உருவாக்கியது.

> "சமுதாயத்துடன் நெருங்கிய தொடர்புகொண்டு சமுதாயத்தில் பெரும்பான்மையராக இருக்கும் சாதாரணக் குடிமக்களைக் கதைமாந்தர்களாக்கிக் கொள்பவை சமூக நாவல்கள் என்னும் வகைப்படும். நிகழ்காலச் சிக்கல்களும் வாழ்க்கைச் சீர்கேடுகளும் இலக்கியப் பொருளாக அமையப் படைக்கப்படுவனவே சமூக நாவல்கள் ஆகும்"[15]

என்பர்.

## சமுதாய நிலைப்பாடு:

கதை நிகழும் இடப்பின்னணி, குடியிருப்புகள், வாழிடச்சூழல்கள் ஆகியவற்றைச் சமுதாய நிலைப்பாடு என்று கூறலாம். நகரம், கிராமம் என்ற முரண்எதிர்வில் பொன்னீலன் கிராமத்தைச் தேர்வு செய்கிறார்.

> "கிராமம் என்பது எளிமை, அறியாமை, அப்பாவித்தனம், அமைதி, இயற்கையோடியைந்த நெறி, பழமையான மரபு என்பவற்றோடு இணைந்தே எண்ணப்படுகிறது. குறைந்த மக்கள் தொகை, சாதிக்கட்டுப்பாடு, தொழிற் சாலைகள் இன்மை, உழவுத்தொழில் என்பவை கிராமங்களை அடையாளங்காட்டுவன"[16]

என்று தி.சு.நடராசன் குறிப்பிடுகிறார்.

கிராமத்து வாழ்வியலை அங்குள்ள குடிமக்களின் மொழியில் வழங்கும் போக்கு நாவல் உலகில் காணப்படுகிறது. கிராமியப் பின்னணியில் ஒரு கதைசொல்லி தன் படைப்பைக் கொண்டுவர சில தகுதிகளைப் பெற்றிருக்க வேண்டும்.

> "கிராமிய நாவல்களைப் படைக்கும் ஒரு படைப்பாளன் அவ்வட்டார மண்ணோடு உறவு கொண்டவனாக இருக்க வேண்டும். அவ்வுறவுதான் அவ்வட்டாரப் பண்பாட்டை, மொழியை, கலாச்சாரத்தை, பழக்கவழக்கங்களை, இடப் பின்னணியை, மாந்தர்களைச் சித்திரிக்கத் துணைபுரியும்"[17]

என்பர்.

பொன்னீலன் தனது வாழிடச்சூழலை மையமாகக் கொண்டு நாவல் படைத்துள்ளமையால் அம்மண்ணின் வாசனையை நாவலில் நுகரமுடிகிறது.

> "ஒரு படைப்பாளன் எந்தப் பகுதி மக்களைப் பற்றி எழுதப்போகிறானோ அவர் வாழ்வைப் பற்றிய முழுமையான ஞானமும் அவர்களுக்கு இருக்க வேண்டும். அவர்களோடு அவன் வாழ்ந்தோ பழகியோ இருக்கவேண்டும்"[18]

என்று சு.சண்முகசுந்தரம் கூறும் வட்டாரப் படைப்பாளுமைத்திறன் பொன்னீலனுக்குப் பொருந்தி வருகிறது.

## கிராமம்:

பொன்னீலன் கிராமம் சார்ந்த பின்னணியில் கதை சொல்லும் போது அக்கிராமத்தின் புவியியல் அமைப்பை இயல்பான படிமமாகக் கண்முன் நிறுத்துகிறார். அதன் இயற்கை அமைப்பு, சுற்றுச்சூழல், குடியிருப்புகள், வாழும் முறை, சமூக அமைப்பு, பொருளியல்நிலை போன்றவற்றையும் விளக்குகின்றார்.

மறுபக்கம் நாவலின் மையக்கதை நிகழும் களம் மண்டைக்காடு எனும் கிராமம் ஆகும். மண்டைக்காடு கலவரம் பற்றிய செய்திகளைத் திரட்ட சேதுமாதவன் மண்டைக்காட்டுக்கு இரு சக்கர வாகனத்தில் வெங்கடேசனுடன் செல்லும்போது, சேதுவின் கண்களால் மண்டைக்காடு விரித்து வைக்கப்படுகிறது.

> "வெண்மேகம் உறங்கும் நீலமலைகள், மரங்கள் அடர்ந்த அடிவாரங்கள், திரடுகள், அறுவடையான வயல்வெளிகளில் மேயும் ஆட்டு மந்தைகள், செந்தாமரையும், வெண்தாமரையும் பல வண்ண அல்லிகளும் போட்டி போட்டு மலர்ந்து கிடக்கும் குளங்கள்.. பைக்கில் பின்னால் உட்காந்திருக்கிற சேதுவின் கண்கள் நிறைந்துவழிகின்றன. அந்த பூமி முழுவதுமே அவன் அம்மா முகமாக அவனுக்குள் நிறைகிறது. தென்னை மரங்களின் நெடிய நிழற்கோலங்கள் விரிந்து கிடக்கும் தார் ரோட்டில் மெதுவாகப் போய்க்கொண்டிருக்கிறது பைக்கு"[19]

என்பதில் மண்டைக்காட்டின் புவியியல் பரப்பு வருணிக்கப்படுகிறது. வழிநெடுக சாலையின் ஒரு பக்கத்தில் இந்துக் கோயில்களும் மறுபக்கத்தில் கிறித்தவத் தேவலாயங்களும் நிறைந்திருப்பது இப்பகுதியில் சொல்லப்படுகிறது. இங்குள்ள சாலைகள் தென்னஞ் சோலைகளை ஊடறுத்துச் செல்கின்றன. சாலையின் இடதுபுறம் வாய்க்கால் நீண்டு செல்கிறது. வலது பக்கம் வீடுகளும், வெற்றிலை பாக்குக் கடைகளும், தேனீர் கடைகளும், பழக்கடைகளும் நிறைந்துள்ளன. சாலையில் மக்கள் கூட்டமாகச் செல்லும் காட்சி செம்மறியாட்டுக் கூட்டம் போல உள்ளது.

ஆற்றின் தெற்குப்பக்கம் அந்தோணியார் கெபி உள்ளது. மீனவர் குடியிருப்புகளும், அப்பகுதியில் அமைந்துள்ளன. வடக்குப் பகுதியில் கடைகள் வரிசையாக அமைந்துள்ளன. சாலை முடியும் இடத்தில் மண்டைக்காட்டு அம்மன் கோயில் உள்ளது. ஊருக்குக் கிழக்குப் பக்கம் மிகப்பெரிய மாதா கோயில் அமைந்துள்ளது. தெற்குப்பக்கம் கெபியைச்சுற்றித் தெருக்கள் அகலமாக அமைக்கப்பட்டள்ளன. இருபுறமும் ஓலைக்குடிசைகளும், ஓட்டு வீடுகளும் நிறைந்துள்ளன. இடையிடையே நாகரிகமான மாளிகைகளும் உள்ளன. குடியிருப்புகள் ஒன்றையொன்று நசுக்கும் அளவுக்கு நெருக்கமாக அமைந்திருக்கின்றன. தெருவில் கருவாடுகள், விறகு, வளை போன்றவை உலர்ந்து கொண்டிருக்கின்றன. மீனவர்கள் வீட்டுமுற்றங்களில் மீன் வலைகளைப் பழுது பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். சிலர் கட்டுமரங்களைச் சீவி சரிசெய்து கொண்டிருக்கிறார்கள். ஒரு சிலர் சீட்டாடிக் கொண்டிருக்கிறார்கள். உழைப்பின் களைப்புத் தீர வேப்பமர நிழலில் உறங்குபவர்களையும் காணமுடிகிறது. மணலில்

காயப்போட்டிருக்கும் நெத்திலி மீன்களைக் காகங்கள் கொத்திக் கொண்டிருக்கின்றன. மீனுக்கு காவலிருக்கிற சிறுமிகள் வேப்பமரநிழலில் வட்டமாக உட்கார்ந்து மணற்குவியலில் வாளி விட்டு விளையாடிக் கொண்டிருக்கிறார்கள்.[20] இவ்வாறு பொன்னீலன் ஒரு கிராமத்தின் வாழ்வியலை அதன் புவியியலோடும், சமூகவியலோடும் இணைத்து எழுதுகிறார்.

**ஊர்:**

ஊர் என்பது ஒரு கூட்டம் மக்கள் குடியிருப்புக்களைக் கட்டி இணைத்து வாழும் பரந்த இடம் எனப் பொதுவாகக் கருதப்படுகிறது. கிராமியச் சூழலில் உறைவிடங்களை அமைத்து வாழும் பகுதியை மட்டும் அது குறிப்பதன்று ஊர்த்தலைவர், ஊர்க்கூட்டம் அது விதிக்கும் சட்ட திட்டங்கள், கட்டுப்பாடுகள், ஊர்க் கோயில் வழிபாடு, வரி பிரித்தல், கொண்டாட்டம் பொதுவான பொழுது போக்குகள், தெரு அமைப்பு, சாதி சார்ந்த செயல்பாடுகள் ஆகிய அனைத்தையும் அடக்கியதாக அது விளங்குகின்றது. எனவே மாவட்ட வரைபடத்திலமைந்த புவியியல் பரப்பாக மட்டும் ஊரைச் சுருக்கிவிட முடியாது.

**ஊர்த்தலைவர்:**

ஊர்த்தலைவர் எனும் பதவி இந்திய ஜனநாயக அரசியலமைப்பு முறையில் இடம் பெற்றதன்று. பஞ்சாயத்து, நகராட்சி, மாநகராட்சி, சட்டமன்றம், பாராளுமன்றம் போன்ற நிர்வாக அமைப்புகளுக்கு மட்டுமே அரசால் தேர்தல் நடத்தப்பட்டு வருகிறது. ஊர்த்தலைவர் எனும் பதவி இந்திய விடுதலைக்கு முன்னரே கிராமங்களில் தலைமுறை தலைமுறையாக இருந்து வருகிறது. ஊர் மக்கள் ஊர்த்தலைவர் முன்னிலையில் ஒன்றாகக் கூடி முக்கியமான பிரச்சினைகளில் முடிவெடிக்கும் வழக்கம் நீடித்து வருகிறது. காவல் துறை, நீதிமன்றம் ஆகியவை சட்டம் சார்ந்து மக்களுக்கு நீதியை நிலை நாட்டி வந்தாலும் கிராமங்களில் ஊர்க்கூட்டம் வழங்கும் தீர்ப்புகளே முக்கியத்துவம் வாய்ந்தவையாகக் கருதப்படுகின்றன. மறுபக்கம் நாவல் ஊர்த்தலைவர் தேர்வு பற்றியும், அவரது செயல்பாடுகள் பற்றியும் விவரிக்கிறது.

> "முன் காலங்களில் இந்தப் பகுதிகளில் ஊர்த்தலைவர் பதவி பரம் பரையானதாயிருந்தது. பரம்பரை ஊர்த்தலைவரின் ஒரே வாரிசு வக்கீலுக்குப் படித்து நெய்யாற்றின் கரையில் முன்சீப் வேலையில் சேர்ந்த பிறகு ஊர்கூடித் தேர்ந்தெடுத்த புதிய தலைவர் சாமிதுரையின் தகப்பனார் முத்தையா"[21]

என ஊர்த்தலைவர் பதவிக்குரிய தேர்வில் ஏற்பட்டுள்ள மாற்றத்தைச் நாவல் சுட்டுகிறது.

ஊர்த்தலைவர் பதவி பொதுவாக, பொருளாதார நிலையில் பின்தங்கியிருப்பவர்களுக்கு வழங்கப்படுவதில்லை. அதிகாரத்துக்கும், பொருளாதாரத்துக்குமான உறவை இது உறுதிப்படுத்துகிறது. முத்தையாவின் தந்தை நெல்வியாபாரத்தால் பெரும்பணக்காரராக இருந்ததை நாவல் சுட்டுகிறது. முத்தையாவுக்கு வரதட்சணையாக ஐம்பது ஏக்கர் தோட்டமும், ஒரு கிலோ நகையும், ஒரு காரும் கொடுக்கப்பட்டதாக நாவல் குறிப்பிடுகிறது.[22] பொருளாதார நிலையில் மேம்பட்டு விளங்கிய முத்தையாவும் அவரது காலத்துக்குப்பின் மகனான சாமிதுரையும் ஊர்த்தலைவர்களாக விளங்குகின்றனர். ஊர்த்தலைவரின் அதிகாரம் செயல்படும் களமாக ஊர்க்கோயில் அமைகின்றது. ஊர்க்கோயில் தொடர்பான ஊர்த்தலைவரின் செயல்பாடுகளை நாவல் வழி அறிய முடிகிறது.

ஊர்க்கூட்டம் கூட்டி ஊரில் தவறு செய்பவர் மீது நடவடிக்கை எடுக்கும் அதிகாரம் ஊர்த்தலைவருக்கு இருந்ததை நாவல் குறிப்பிடுகின்றது. சாந்தாயியின் மகன் மதம் பரப்பும் நோக்கில் வீட்டின் முற்றத்தில் படமொன்றை ஒளிபரப்பியதாகக் கூறப்பட்டக் குற்றச்சாட்டில் நடவடிக்கை எடுப்பதற்காக ஊர்க்கூட்டம் கூட்டுவதற்கு வலியுறுத்தப்படுகிறது. வெங்கடேசனுக்கும் ஊர்த்தலைவர் சாமிநாதனுக்குமான உரையாடல் இச்செய்தியைத் தருகிறது.

## ஊர்க்கூட்டம்:

ஊரின் கொள்கை முடிவுகளைத் தீர்மானிக்கும் இடமாக ஊர்க்கூட்டம் அமைகிறது. ஊர்த்தலைவரின் வாய்மொழி உத்தரவு ஊரின் இயக்கத்தைக் கட்டுப்படுத்தும் வலிமைவாய்ந்த நிர்வாக சக்தியாக விளங்குகிறது.

> "அனைத்து ஊர்களிலும் ஊர்ப்பொது இடம் ஒன்று உள்ளது. இவ்விடம் பெரும்பாலும் பொதுக்கோயில் முன்பாக இருக்கின்ற காலி இடமாகவே அமைகிறது. இவ்விடத்திலேயே ஊர்க்கூட்டம் நடைபெறுவது வழக்கம்"[23]

என்று முத்துராஜன் கூறுகின்றார்.

பனைவிளை கிராமத்தில் நடைபெற்ற ஊர்க் கூட்டத்தை நாவல் வாசகரின் கண்முன் நிறுத்துகிறார். மாலை நேரம் முடியும் பொழுது ஊர்க்கூட்டம் நடைபெறுகிறது. ஊர்க்கூட்டம் நடைபெறும் இடமாகக் கோயில் வளாகம் அமைகிறது. இரவு தொடங்கிவிட்டமையால் கோயிலில் மின்விளக்குகள் எரியவிடப்படுகின்றன. ஊர்மக்கள் அனைவரும் ஒன்றாகக் கூடியபின் ஊர்த்தலைவர் இரவு ஏழு மணிக்கு ஊர்க்கூட்டம் நடைபெறும் இடத்துக்கு

வருகிறார். ஊர்த்தலைவர் பட்டு வேட்டி கட்டி பட்டுத் துப்பட்டா அணிந்திருக்கிறார். கருவறையின் முன்னால் பெரிய தனக்காரர்களுக்கு என்று சற்று உயரமான தளம் அமைக்கப்பட்டுள்ளது. ஊர்த்தலைவர் அவ்விடத்தில்தான் அமருகிறார். முக்கியமானவர்கள் எல்லாரும் வந்திருக்கிறார்களா என்பதைச் சதாசிவம் கவனிக்கிறார். ஊர்த்தலைவரின் மகன் தந்தையை ஒட்டி அமர்கிறான். ஊர்த்தலைவரான சாமிதுரை வருகைதந்திருப்பவர்களைப் பரவலாக நோக்குகிறார். சாந்தாயி, வெங்கடேசன், செல்வராசு, தங்கமுத்து அனைவரும் இருப்பதைப் பார்த்து மெல்லிய அதிர்ச்சியடைகிறார். சாந்தாயி ஊர்க்கூட்டத்தில் கலந்திருப்பது பிறசமய நம்பிக்கையுள்ளவர்களும் ஊர்க்கூட்டத்தில் கலந்து கொள்ளலாம் என்பதை உறுதிசெய்கிறது. ஊர்த்தலைவர் பேசுவதற்கு முன்னால் அவர் கொடைவள்ளல் என்ற அடைமொழியுடன் பேச அழைக்கப்படுகிறார். ஊர்த்தலைவர் இரண்டு முக்கியமான செய்திகளை தனது உரையில் முன் வைக்கிறார். ஒன்று, பிறமதத் தாக்கம் மிகுந்து வருவதைப் பற்றியது. மற்றொன்று, விநாயகர் பீடம் அமைப்பதைப் பற்றியது. ஊர்த்தலைவரின் உரைக்குப்பின் விவாதம் நடைபெற அனுமதிக்கப்படுகிறது. விநாயகர் பீடம் அமைப்பதற்கு ஆதரவாக முத்தீஷ், சதாசிவம், சாமியடிமை ஆகியோர் பேசுகிறார்கள். அதற்கு எதிராகச் சாமிக்கண்ணு, செல்வராசு, மணிமுத்து, தங்கமுத்து, வெங்கடேசன் ஆகியோர் கருத்துத் தெரிவிக்கின்றனர். இறுதியில் இந்து இளைஞர் இயக்கம் திட்டமிட்டபடி கோயில் புதுப்பிக்கப்பட வேண்டும் என்று தீர்ப்பை ஊர்த்தலைவர் வழங்குகிறார்.

> "ஊர்த்தலைவர் பொறுப்பேற்றதிலிருந்து சாமிதுரையின் வாழ்க்கை பக்திமார்க்கத்துக்குத் திரும்பிவிட்டது. அவர் செய்த முதல் சீர்திருத்தம் ஊர் அம்மங்கோவிலில் அதிகாலையில் சுப்ரபாதம் வகையறா பாட்டுகள் போட ஏற்பாடு செய்தது. கோவில் கொடைதோறும் மதப் பிரசங்கத்துக்கும் ஏற்பாடு செய்து மூன்று நாள் மதியமும் மக்களுக்கு வயிறாரச் சாப்பாடு போடுவார்[24]

எனச் சாமிதுரை ஊர்த்தலைவரான பின் ஏற்பட்ட ஆன்மீக மறுமலர்ச்சி கூறப்படுகிறது.

ஊர்க்கூட்டத்தில் பெண்களுக்குப் பேசும் உரிமை இருந்தது. சாந்தாயிக்கு இழைக்கப்பட்ட தீமையை முத்து எனும் பெண் விளக்கிக் கூறுகிறாள். அது முடிந்து போன விஷயமாக இருந்தால் துணிவெளுக்கும் பணியை இவ்வூருக்காகச் செய்யப்போவதில்லை எனச் சாந்தாயியும் உறுதிபடக் கூறுகின்றாள். ஊர்த்தலைவரிடம் சாந்தாயி நீதிகேட்டபோது, ஊர்த்தலைவருக்குப் பதிலாக அவரது மகன் முத்தீஷ் பதில் சொல்லுகிறான். அதன் பின்னரும் சாந்தாயி, முத்து ஆகிய பெண்கள் போர்க்குணத்துடனேயே பேசுகின்றனர். ஊர்க்கூட்டம் அனைத்து

சாதியினருக்கும் பொதுவானதாக அமையாததையும் சாதிய மேலாதிக்கம் கொண்டிருப்பதையும் நாவல் சுட்டுகிறது.

> "ஊர்க்கூட்டத்தில் தலைவர் முன்னிலையில் இப்படிக் குரலை ஏற்றிப் பேசிவிட்டாளே! நீர்த்துளி விழுந்த தோசைக்கல் போல் சுர்....சுர்.... என்று புகைகின்றன சாதி வெறியர்களின் மனங்கள். ஒருவித அருவருப்பான அமைதி கூட்டத்தை அமுக்குகிறது"[25]

என்ற வரிகள் ஊர்க்கூட்டத்தில் இருக்கும் சாதிய மனப்பான்மையை வெளிக்காட்டுகின்றன.

பனைவிளையில் பள்ளிக்கூடம் கட்டப்பட்டபின் மதமாற்றம் அதிகரித்தமையால் அதனைத்தடுக்க ஊர்க்கூட்டம் கூட்டப்படுகிறது. அதிலெடுத்த முடிவின்படி பள்ளிக்கூடம் அடித்துத் தரைமட்டமாக்கப்படுகிறது.[26] இது ஊர்க்கூட்டமெடுக்கும் முடிவின் வலிமையை உணர்த்துகிறது.

## சமுதாய நிறுவனங்கள்:

குடும்பம், திருமணம், அரசு. சட்டம், மதம், சாதி போன்ற பல்வேறு நிறுவனங்கள் சமுதாயத்தில் செயல்படுகின்றன. பொன்னீலன் மிக அதிகமாக மதம், சாதி ஆகிய நிறுவனங்கள் பற்றிப் பேசுவதால் அவை ஆய்வுக்குட்படுத்தப்படுகின்றன.

## மதம்:

மறுபக்கம் நாவல் சமயச் சண்டை எனும் பொருண்மையில் இயங்குவதால் அதில் சமய வாழ்க்கை பற்றிய சித்திரிப்புகள் இன்றியமையாதனவாக ஆகிவிடுகின்றன. இந்து. கிறித்தவ, இசுலாமிய சமயங்களை இங்குள்ள மக்கள் பின்பற்றுவதால் அம்மதத்தின் பிரதிநிதிகள் நாவலில் முக்கியப் பங்காற்றுகின்றனர். இந்து சமயக் கடவுள்கள், நம்பிக்கைகள், வழிபாட்டு மரபுகள், நாட்டார் தெய்வங்கள், விழாக்கள், சடங்குகள், கலைகள் என அத்தனை அம்சங்களையும் வெளிப்படுத்துவதாக இந்நாவல் அமைந்துள்ளது. இந்து சமயப் பாத்திரங்கள் நாவலில் மிகுதியாக உள்ளனர். அதற்கடுத்த நிலையில் கிறித்தவ அடையாளங்களுடன் வரும் பாத்திரங்கள் முக்கியத்துவம் பெறுகின்றனர். இவ்விரு சமயத்தைச் சார்ந்த பாத்திரங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இசுலாமியக் கதாப்பாத்திரங்கள் மிகக் குறைவானவர்களாகவே உள்ளனர்.

## இந்து சமயம்:

இந்து சமயத்தைப் பின்பற்றும் பாத்திரங்கள் நாவலில் எண்ணிக்கையளவில் மிகுதியாகக் காணப்படுகின்றன. சைவம், வைணவம், சிறுதெய்வவழிவாடு, வீரர்வழிபாடு, மூதாதையர் வழிபாடு, அய்யாவழி மரபு என இந்து சமயத்தின் பன்முகத்தன்மை நாவலில் வெளிப்பட்டுள்ளது. வைதீகத்தின் வரவும், பிராமணியத்தின் தாக்கமும் மண்ணுக்கான நாட்டார் வழிபாட்டு மரபுகளை மாற்றியமைப்பது குறித்த விவாதங்கள் நாவலில் எழுப்பப்பட்டள்ளன. இந்து சமயத்தில் இருக்கும் உள் முரண்கள் பற்றியும் நாவலில் பேசப்பட்டள்ளது. அய்யாவழியும், கிறித்தவமும் வந்தபின் இந்துக்களிடம் நிகழ்ந்த மாற்றங்கள், அதிர்வுகள், எதிர்வினைகள் பற்றியும் நாவல் பேசுகிறது. நாவலின் நாயகனான சேது இந்து சமயத்தில் ஆழ்ந்த பிடிப்புடையவனாகத் திகழ்கிறான். இந்து சமயம் மட்டுமே பின்பற்றப்படவேண்டும் என்ற சிந்தனைப் போக்குடையவனாக முத்தீஷ் வருகிறான். வெங்கடேசன் சிறுவயதில் அம்மன் கோயிலோடு பிணைப்புடையவராக வாழ்ந்தாலும், பிற்காலத்தில் தொலைவில் நிற்பவராக மாற்றமடைகிறார். இவர் வைதீகத்தின் வரவுக்கெதிரான மனோபாவம் கொண்டவராக விளங்குகிறார். இந்துக்களின் உரிமைகளை முன்னிறுத்தும் இயக்கங்களைப் பற்றிய செய்திகளையும் பொன்னீலன் தருகிறார். கோயில்களின் அமைப்பு, சடங்குகள், நம்பிக்கைகள், கோயில்களோடு இணைக்கப்பட்ட ஆன்மீக வாழ்க்கை, கொண்டாட்டங்கள் என இந்து சமயம் நாவலில் நெடுக ஆட்சி செலுத்துகிறது. நாட்டுப்புறக் கோயில்களில் பிள்ளையார் வழிபாட்டு முறைகள் புகுத்தப்படுவதற்கு எதிர்ப்புத் தெரிவிப்பவர்களாக செல்வராசு, மணிமுத்து போன்றோர் இடம் பெறுகின்றனர்.

## கிறித்தவம்:

இந்தியாவில் கிறித்தவம் கி.பி முதலாம் நூற்றாண்டில் காலடி எடுத்து வைத்தது. தோமா, கிறிஸ்துவின் நற்செய்தியைப் பரப்ப இந்தியாவுக்கு வந்ததாகக் கருதப்படுகிறது. அப்போதே கிறித்தவத்துக்கான மூலவிதைகள் இங்கு விதைக்கப்பட்டு விட்டன. ஆயினும் ஆயிரத்து ஐநூறு ஆண்டுகளாக எண்ணிக்கையளவில் கிறித்தவம் பெரிய மாற்றங்களை உருவாக்கவில்லை. பதினாறாம் நூற்றாண்டில் போர்த்துக்கீசியர்கள், டச்சுக்காரர்கள், ஆங்கிலேயர்கள் ஆகியோர் இந்தியாவுக்கு வந்து அரசமைப்பில் ஆதிக்கம் செலுத்தத் தொடங்கியபின் கிறித்தவம் இங்குக் காலூன்றத் தொடங்கியது. மதம் பரப்பும்

நோக்கில் மேனாட்டுக் கிறித்தவ அருட்தொண்டர்களால் கிறித்தவம் பரவத்தொடங்கியது.

கத்தோலிக்கம், புராட்டஸ்தந்து ஆகிய முக்கியமான இரு கிறித்தவ உட்பிரிவுகளும் ஆங்காங்கே நிறுவனப்படுத்தப்பட்டன. புராட்டஸ்தந்து எனும் சீர்திருத்தத் திருச்சபையிலிருந்த சனநாயகத்தன்மையால் அதற்குள் பல்வேறு புதிய உட்பிரிவுகள் உருவாகத் தொடங்கின. சி.எஸ்.ஐ, சி.என்.ஐ, இரட்சண்ய சேனை, எல்.எம்.எஸ், லுத்தரன் மிஷன், டி.இ.எல்.சி, பெந்தேகோஸ்தே, அசம்ப்ளிஸ் ஆப் காட் உள்ளிட்ட பல்வேறு திருச்சபைப் பிரிவுகள் புராட்டஸ்தந்துக்குள் தோன்றி வளரலாயின. இப்பிரிவுகள் அனைத்திற்கும் சிற்சில கொள்கைகளில் வேறுபாடு இருந்தனவே தவிர, அவையனைத்திற்கும் வழிபடு கடவுளாகக் கிறிஸ்துவே இருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

## கத்தோலிக்கக் கிறித்தவம்:

கத்தோலிக்க கிறித்தவம் பற்றிய செய்திகளை நாவலில் காணமுடிகிறது. சவேரியாரின் வாழ்வில் நடந்த சில வரலாற்றுக் குறிப்புகளைப் பொன்னீலன் எடுத்துரைக்கிறார். பள்ளம் துறை புனித மத்தேயு ஆலயம் உள்ளிட்ட கத்தோலிக்க தேவாலயங்கள் பற்றியும் பேசுகிறார். மண்டைக்காட்டுக் கலவரம் பற்றிய கதை சொல்லிகளில் அலெக்ஸ், கிறிஸ்துதாஸ், கென்னடி, அருள், செபாஸ்டின் போன்றோர் கத்தோலிக்கர்களாவர். கத்தோலிக்கர்களின் குருசடி பற்றிய குறிப்புக்களையும் அவர் தருகின்றார்.

## சீர்திருத்தத் திருச்சபை:

ரிங்கல் தௌபேயின் வரவுக்குப்பின்னர் குமரி மண்ணில் சீர்திருத்தத் திருச்சபை நிறுவனப்படுத்தப்பட்டது. பொன்னீலன் ரிங்கல் தௌபே, மீட் அய்யர், காக்ஸ் அய்யர், மால்ட் அய்யர் போன்ற மேனாட்டாரின் சமயப்பணி சமூகப்பணி ஆகியவற்றை எடுத்துக்காட்டுகிறார். ரிங்கல்தௌபே ஆரம்பித்த ஏழு திருச்சபைகள் பற்றியும் குறிப்பிடுகின்றார். குமரி மாவட்டத்தின் முதல் கிறித்தவரான வேதமாணிக்கம் வாழ்வில் நடந்த நிகழ்வுகளையும் சுருக்கி உரைக்கிறார். பெந்தேகோஸ்தே பற்றிப் பல இடங்களில் பேசுகிறார்.

தீவிரமான கிறித்தவ ஆன்மீகக் கொள்கைகளைக் கொண்ட சபைப் பிரிவு பெந்தேகோஸ்தே ஆகும். இத்திருச்சபை பரிசுத்த ஆவி, ஆவியின் வரங்கள், மூழ்கும் திருமுழுக்கு, மீட்பு, அருட்பொழிவு அந்நிய பாஷை பேசுதல், நகையணியாமை போன்ற கொள்கைகளை முக்கியமாகத் தன்னகத்தே

கொண்டுள்ளது. வானுயர்ந்த கோபுரங்கள், கட்டட வேலைப்பாடு நிறைந்த தேவாலயம், ஆலய மணி போன்ற எவ்வித புற அடையாளங்களும் இல்லாமல் சாதாரண ஒரு வீட்டையே ஜெபவீடாக ஆக்கி இறைவனை வழிபடுவதால் இத்திருச்சபைகள் கிராமங்களில் பெருகின. அற்புதங்கள், நோய்களினின்று விடுதலை போன்ற வளமை இறையியல் கோட்பாடுகள் மக்களை எளிதில் கவருகின்றன. எனவே, வேற்று வழிபாட்டு முறைகளைச் சார்ந்தவர்கள் மட்டுமின்றி கிறித்தவ பிற உட்பிரிவுகளைச் சார்ந்தவர்களும் பெந்தேகோஸ்தே திருச்சபைகளோடு ஆன்மீக நெருக்கம் கொண்டிருக்கின்றனர். சாதி வேறுபாடின்மை, குழுச்சண்டைகளின்மை போன்றவையும் பெந்தேகோஸ்தே திருச்சபை மீது ஈர்ப்பை உருவாக்குகின்றன.

மறுபக்கம் நாவலில் குமரி மாவட்டத்தில் அதிக தாக்கம் செலுத்தி வரும் பெந்தேகோஸ்து பற்றிய விவரிப்புகள் உள்ளன. இந்நாவலில் துணிவெளுக்கும் சாந்தாயியின் மூத்த மகன் பெந்தேகோஸ்தே பிரிவைத் தழுவியபின் ஏற்பட்ட எதிர்வினைகள் சொல்லப்படுகின்றன.

> "அண்ணா என் மூத்த மவன் பெந்தையகோஸ்துல சேர்ந்திட்டான்ல சுருங்கிப்போன இமைகளுக்குள்ளே கலங்கி நிற்கும் கண்களால் வெங்கடேசனை மான் போலப் பார்க்கிறார் சாந்தாயி. அதில அவன் பாஸ்டராட்டு இருக்கான்"[27]

எனச் சாந்தாயி வெங்கடேசனிடம் குறிப்பிடுகிறார்.

இதில் துணி வெளுக்கும் சமூகப்பிரிவைச் சார்ந்த சாந்தாயி மகன் பெந்தேகோஸ்து திருச்சபையில் தன்னை இணைத்துக் கொள்வதோடு அங்குப் போதகராக உயர்வு பெறுவதும் சுட்டப்படுகிறது. பெந்தேகோஸ்தேகாரர்கள் வெள்ளை வேட்டியும், வட்டக் கழுத்துஜிப்பாவும் அணிந்து பைபிளைக் கையில் கொண்டு பிற சமய வீடுகளில் அனுமதியின்றியே ஜெபம் செய்வதாகச் சுப்பையன் கூறுகின்றார்.

## இசுலாமியர்கள்:

நாவலில் இசுலாமியர்கள் பற்றிய சித்திரிப்பு குறைவான அளவில் காணப்படுகிறது. அழுத்தமான பாத்திரங்களில் இசுலாத்தைச் சார்ந்த யாரையும் காணமுடியவில்லை. இசுலாமியர்கள் பற்றிய பொதுவான கருத்துக்கள் ஊடகங்கள் மற்றும் மதவாத அரசியலாரின் கருத்துக்களை ஒட்டிச்செல்கின்றன. மண்டைக்காட்டை ஒட்டிக் கடைவைத்து வாழும் இசுலாமியர் ஒருவர் நாவலில் வருகிறார். பள்ளிவாசலும், தொழுகையும் காட்டப்படுகின்றன. சாய்புமார் தெரு

என்று ஒன்று உள்ளது. இசுலாமியர்களிடம் பிறசாதியினரை ஏற்றுக்கொள்ளாத மனோபாவம் இருப்பதாக நாவலில் நாஞ்சில் மைந்தன் பாத்திரம் குறிப்பிடுகிறது. பள்ளிவாசல் தெருவில் முற்காலத்தில் பிற வகுப்பைச் சார்ந்தவர்கள் செருப்புப் போட்டுச் செல்லமுடியாத நிலை இருந்ததாக அப்பாத்திரம் கூறுகிறது. ஆரல்வாய் மொழியில் ஒரு இசுலாமியர் வீட்டில் வாடகைக்கு இருந்தபோது, அவ்வீட்டின் உரிமையாளான் இசுலாமியப் பெண்ணுக்கு நாஞ்சில் மைந்தனின் மனைவி முந்திரிக்கொத்து கொடுத்த போது வாங்க மறுத்து விடுகிறார். ஆனால் ஈத்தா மொழியில் இசுலாமியரும் பிற வகுப்பினரும் சொந்தம் சொல்லிக் கூப்பிடும் அளவுக்கு நெருக்கமாக வாழுகின்றனர். சூரங்குடியில் நாட்டு விடுதலைக்கு முன்னிருந்தே, ஜவஹர் கிராம அபிவிருத்தி சங்கம் என்ற அமைப்பு செயல்பட்டு வருகிறது. அதிலுள்ள உறுப்பினர்களான அசன் கண்ணு, சையது முகமது போன்றவர்கள் பிற சமூகத்தாரோடு நல்லிணக்கம் கொண்டுள்ளனர்.

அப்துல்கலாம் எனும் ஆசிரியரும் அவரது மனைவியும் ஆசிரியப்பணி செய்து வருகின்றனர். அவர்களது வீடும் கலவரத்தோடு இடித்து நொறுக்கப்படுகிறது. ஈத்தாமொழியில் துணிக்கடை வைத்திருக்கும் சாகுல் அமீது என்பவரின் கடை தீக்கிரையாக்கப்படுகிறது. அஷ்ரப் என்பவரது உணவு விடுதியும் எரியூட்டப்படுகிறது.

## சாதி:

இந்தியாவில் மனுதர்மம் சாதிக்கோட்பாட்டை உருவாக்கியது. அதன் பின்னர் சாதிகள் பலவாறாய்ப் பெருகிவிட்டன. இந்தியாவில் வாழும் மனிதனை சகமனிதன் சாதிய அடையாளத்தோடு பார்க்கும் நிலையும் உருவாயிற்று. சாதிகளுக்கென தொழில்களும் உருவாக்கப்பட்டன. விஞ்ஞான வளர்ச்சிக்குப் பின் தொழில் சார்ந்த கட்டம் கட்டுதல் மாறத்தொடங்கியது. ஆயினும் ஒவ்வொரு சாதிக்கும் உரிய சமூக மரியாதை பொதுப்புத்தியில் அப்படியே உறைந்து கிடக்கிறது.

> "சாதி என்பதற்குத் தற்காலத் தமிழ்ப் பேரகராதி குலம், மரபு, இனம் என்று பொருள்தருகிறது. குலம் என்பது சாதி, கூட்டம், இனம், குடி எனவும் இனம் என்பதற்குக் குலம் துணையாகச் சேரும் கூட்டம், சம்பந்தம் சுற்றம் எனவும் பொருள்கூறுகிறது"[28]

இந்திய சமுதாய அமைப்பு என்பது சாதியக் குழுக்களால் கட்டமைக்கப்பட்டுள்ளது. பொன்னீலன் குமரிமாவட்டத்து சாதிகளைப் பற்றி நாவலில் பேசுகிறார்.

**நாடார்:**

மறுபக்கம் நாவலில் பெரும்பான்மையான கதாப்பாத்திரங்கள் நாடார் கதாப்பாத்திரங்களாக உள்ளனர்.

> "நாடார் என்பது இடுகுறிப்பெயரல்ல காரணப் பெயர். நாடாண்டவர், நாட்டார், நாட்டான் என்ற சொற்களின் இறுதியில் உள்ள அர், ஆர், ஆன் என்ற இடைச்சொற்கள் விகுதிகளைச் சேர்ந்திருப்பதால் உடையவன் என்னும் பொருள் பெறுகிறது"[29]

என்று முத்து நாடார் கூறுகின்றார்.

நாடார்களின் வாழ்வு பனைமரத்தைச் சார்ந்த உலகமாய் அமைகிறது. மேலடுக்கில் இருக்கும் சாதிப்பிரிவினரின் ஒடுக்குதல்களுக்கெதிராகப் போராடி நிமிர்ந்து நிற்கும் இனமாக இது காட்டப்படுகிறது.

மறுபக்கம் நாவலில் நாடார் சமுதாயம் சார்ந்த கதாப்பாத்திரங்கள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. இதில் புனைவாக உருவாக்கப்பட்டவர்களும், வரலாற்றுப் பாத்திரங்களும் அடங்குகின்றனர். மண்டைக்காடு பகுதியில் பெரும்பான்மைச் சாதியாக நாடார்கள் இருப்பதாக நாவல் குறிப்பிடுகிறது.

> "ஐயா நாடார்களும் மீனவர்களும் அடிக்கடி சண்டை போடுவாவ. அப்புறம் ஒண்ணு சேர்ந்திடுவாவ" [30]

என நாடார்களுக்கும் மீனவர்களுக்குமான உறவும் முரணும் சுட்டப்படுகின்றது. நாடார்களில் இந்து சமயத்தைப் பின்பற்றுபவர்களும், கிறித்தவ சமயத்தைப் பின்பற்றுபவர்களும் பாத்திரங்களாக்கப் பட்டுள்ளனர். நாடார்களின் உணவு, பழக்க வழக்கங்கள், உடை, மொழியாடல்கள், நம்பிக்கைகள் ஆகியவற்றை நாவல் கதையோட்டத்தின் நடுவே மறைமுகமாகப் பேசுகின்றது.

நாடார் சமூகத்தைச் சார்ந்தவர்கள் விரும்பி உண்ணும் பிட்டு, மோதகம், பதநீர், கூப்பனி, கருப்பட்டி, மீன் பற்றிய செய்திகளும் நாவலில் விரவித்தரப்பட்டுள்ளன. பழங்காலத்தில் நாடார்கள் பனையேறும் தொழில் செய்தனர். கல்வி மறுமலர்ச்சிக்குப்பின் பனையேறும் தொழில் அருகிவிட்டது. ஆயினும் பனை சார்ந்த பொருட்கள் அவர்களது வீடுகளில் இருப்பதை நாவலாசிரியர் காட்டுகிறார். கருப்பட்டி காப்பி அவர்களது முக்கியமான திரவ உணவாகும். கூப்பனியை விருந்தினர்களுக்கு வழங்கும் வழக்கமும் அவர்களிடம் இருந்துள்ளது.

> "பழைய காலங்கள்ல எங்க வீடுகள்ல இது மாதிரிப் பண்டங்கதான் இருக்கும்! இப்ப பனை ஏத்து அழிஞ்சி வாறதினால இதுவும் அரிதாப் போச்சி . சாப்பிடுங்க... உடம்புக்கு ரெம்ப நல்லது"[31]

என்ற வைகுண்ட பெருமாளின் கூற்று அவர்களது உணவுப் பழக்கம் பற்றிக் குறிப்பிடுகிறது.

> "ஒரு காலத்தில எங்க சாதிக்கி மொத்த ஆகாரமே பயினியும், அதில இருந்து உண்டாக்கப்பட்ட பண்டங்களுந்தான். அதோட, மீனும் பயறு வகைகளும் சேரும் அரிசி எங்கது எப்பாவது ஆடிக்கி ஆவணிக்கித்தான்"[32]

என்று அப்பெண் கூறுகின்றாள். பனைத்தொழில் காப்பாற்றப்பட அரசாங்கம் உதவி செய்ய வேண்டும் என்ற கோரிக்கை வைகுண்டப் பெருமாள் வழி முன் வைக்கப்படுகிறது.

## மீனவர்கள்:

மறுபக்கம் நாவலில் மீனவச் சமூகம் பற்றிய செய்திகள் மிகுந்துள்ளன. மண்டைக்காட்டில் சேதுமாதவனைச் சந்திக்கும் அலெக்ஸ், ஜார்ஜ் ஆகியோர் மீனவ இளைஞர்களாவர். மீனவர்கள் அன்போடு பழகும் இயல்புடையவர்களாவர். அவர்கள் கத்தோலிக்க கிறித்தவ சமயத்தைப் பின் பற்றுகின்றனர். பெரிய மாதா கோயில்களைத் தவிர சிறிய கெபிகளையும் வழிபாட்டுத் தலங்களாக இம்மக்கள் உருவாக்கியுள்ளனர். அந்தோணியார் கெபி அத்தகைய சிற்றாலயங்களில் ஒன்றாகும். கெபியைத் தாண்டி அமைந்துள்ள ஓலை வீடுகளும் ஓட்டு வீடுகளும் இவர்களது உறைவிடங்களாகும். வீடுகள் மாதா கோயிலுக்குச் சொந்தமான நிலத்தில் கட்டப்பட்டுள்ளன. அதற்கான காரணத்தை நாவல் சொல்லுகின்றது.

> "ஒரு பக்கம் கடலு, மறுபக்கம் உள்நாட்டுக்காரனுகளுக்க பட்டா பூமி, ரெண்டும் நெருக்குற நெருக்குதலுக்கிடையில வீடு வைக்க நாங்க எங்க போவோம்? வசதியுள்ளவன் டவுன்ல பூமி வாங்கி வீடு கட்டுக்கிறான். கடல நம்பி வாழுற மீனவனுக்கு வேற போக்கடி? இந்த பூமி கூட எங்க சர்ச்சுக்குத்தான் சொந்தமே ஒழிய எங்களுக்கில்ல"[33]

எனப் பொருளாதார வசதிக் குறைவால் கடலைச் சுற்றிக் குடியிருப்பு அமைத்து வாழும் மீனவர்களின் நிலை காட்டப்படுகிறது.

நெய்தல் நில மக்களில் அரையர் என்றொரு சமூகத்தினர் வாழுகிறார்கள். இவர்கள் இப்பொழுது முக்குவர் என்ற பெயரால் அழைக்கப்படுகின்றனர். இவர்கள் வாழும் பகுதியில் புழுக்கையர் என்ற பிரிவினரும் வாழுகின்றனர். இப்பிரிவைச் சார்ந்த மணமகனும், மணமகளும் தரையில் உட்கார்ந்துதான் தாலி கட்டுவார்கள். பரவர் சமூகத்தவரும் நெய்தல் நிலத்தில் வாழுகின்றனர். புழுக்கையர்கள் கரைமடிவிடுவார்கள். முக்குவர்கள் தூண்டில் போட்டு மீன் பிடிப்பார்கள், இரு

சமூகத்தினரிடையே கொடுக்கல் வாங்கல் இல்லை என்ற செய்தியை நாவல் வழியாக அறியமுடிகிறது.

## நம்பூதிரி:

கேரளாவை ஒட்டிக் குமரி மாவட்டம் அமைந்துள்ளமையால் கேரளத்திலுள்ள சில சாதியினரை இங்கும் காணமுடிகிறது. இதற்கு எடுத்துக்காட்டாக நம்பூதிரி, நாயர் போன்ற சாதிகளைக் குறிப்பிடமுடியும். காட்டாலை, வேளிமலை, பெருஞ்சிலம்பு, பண்ணிப்பொத்தை, முயல்விளை ஆகிய மலைப்பகுதியின் உடைமையாளராகப் பொன்னுத்திருமேனி என்னும் நம்பூதிரியை நாவல் காட்டுகிறது. இவரது நிலத்தைப் பாட்டம் எடுத்து பிற்படுத்தப்பட்ட, ஒடுக்கப்பட்ட சமூகத்தைச் சார்ந்தவர்கள் விவசாயம் செய்து வந்ததையும், நாவல் குறிப்பிடுகிறது. உச்சவரம்பு சட்டம் நடைமுறைக்கு வந்ததும் அந்த நம்பூதிரி நிலத்தைப் பயிர்செய்தவர்களுக்கு மிகக் குறைந்த விலையில் கொடுத்ததையும் நாவல் விளக்குகிறது.

## நாயர்கள்:

கேரளாவோடு குமரி மாவட்டம் இணைந்திருந்த காலகட்டத்தில் நாயர்கள் ஆதிக்கச் சாதியினராய்த் திகழ்ந்தனர். ஓரங்கட்டப்பட்ட சமூகத்தினர் நாயர்களை எசமான் என்றுதான் கூப்பிடவேண்டும். சொத்துக்கள் கைமாறியபின் அவர்களது ஆதிக்கம் குறைந்தது. பிற்காலத்தில் நாயர்கள், செக்காலர்கள், நாடார்கள், சாம்பவர்கள் அனைவரும் ஒரே பகுதியில் சேர்ந்து வாழும் நிலை உருவானது. நாவலில் ரமேசன் நாயர் மனிதாபிமானமிக்க உயர்ந்த மனிதராகக் காட்டப்படுகிறார். மனோகரனின் தந்தை சாதிவெறி மிக்கவராகச் சித்திரிக்கப்படுகிறார். வேலாயுதன் நாயர் மகனும் கிறிஸ்துதாஸ் நாடார் மகனும் காதலித்துப் பெற்றோர் சம்மதத்துடன் திருமணம் செய்து கொள்ளுகின்றனர். கம்யூனிஸ்ட் என்ற இயக்கம் சார்ந்த ஈடுபாடு சாதி மத பேதங்களைத் தகர்த்து அக்குடும்பங்களை ஒன்றாக்குகிறது. நாவலில் மன்னத்து பத்மநாபன் என்னும் நாயர் சமூக வரலாற்றுக் கதாபாத்திரம் படைக்கப்பட்டள்ளது. அவரது தலைமையில் இந்து மண்டலம் எனும் அமைப்பு இயங்கியதாகக் குறிப்பிடப்படுகிறது.

## குறுப்பு:

குறுப்பு எனும் சமூகத்தினரையும் இம்மாவட்டத்தில் காணமுடிகிறது. இவர்கள் ஆயர் வம்சத்தைச் சார்ந்தவர்கள். முற்காலத்தில் துவாரகையில் இருந்து வந்தவர்கள் எனக் கருதப்படுகிறது. கிருஷ்ணனுக்குச் சொந்தக்காரர்கள் என்ற நம்பிக்கையும் இங்கு உள்ளது.

> "சார் குறுப்புமார் இங்க சிறுபான்மை கொஞ்சம் மலையாளச் சார்பு. அதுதான் முக்கிய விசயம் பொதுவாட்டே அவிய நாயர்மாரோடே சேர்ந்து நிப்பாவ"[34]

எனக் குறுப்புகள் பற்றி கூறப்பட்டுள்ளது.

## கம்மாளர்:

கம்மாளர் எனும் சமூகம் பற்றிய செய்திகள் குறைவாகச் சொல்லப்பட்டுள்ளன. சிதம்பரம் தான் பிறந்த கம்மாளர் சமூகம் வரலாற்றில் முதுகெலும்பு முறிக்கப்பட்ட இனம் என்று வருத்தப்படுகிறார். மறவன் பாட்டுப் பாடிய பாரதி, கம்மாளன் பாட்டுப் பாடாதது குறித்தும் அவர் கேள்வி எழுப்புகிறார். நாகரிக வளர்ச்சிக்கு அடிப்படையாக இருந்த சமூகம் கம்மாளர் சமூகம் என்றும் அவர் குறிப்பிடுகிறார்.

> "சார் உலகத்துக் கருவிகளையும் பொருட்களையும் படைச்ச தொழில் நுட்ப விஞ்ஞானியும் தொழில் மேதையும் யாரு? இவன் தானே!" [35]

எனக் கம்மாளர்கள் விஞ்ஞான வளர்ச்சிக்கு ஆற்றிய பணிகளைச் சுட்டுகிறார். அணைகட்டுதல், தேர்செய்தல், கப்பல் உருவாக்குதல் ஆகிய அனைத்திலும் கம்மாளர்களின் படைப்பு, பங்களிப்பு முக்கியமானது என்றும் உரைக்கின்றார். குமரி மாவட்ட சமூகங்களில் ஒன்றாகத் திகழும் கம்மாளர்கள் பற்றிய பதிவுகள் இன்னும் மிகுதியாக வர வேண்டும் என்ற கோருதலை இப்பாத்திரம் முன்வைக்கிறது.

## தொழில் வாழ்க்கை:

சமுதாயத்தைப் படம் பிடித்துக்காட்டும் நாவல்கள் கதை நிகழும் களத்திலுள்ள மக்களின் தொழில்சார்ந்த வாழ்க்கையை விளக்கத் தவறுவதில்லை. ஏனெனில் மனிதனின் பொருளாதார நிலையை உணர்த்துவதில் தொழிலும், அதனால் கிடைக்கும் வருமானமும் முக்கியப் பங்கு வகிக்கின்றன. தனிமனிதனுக்குச் சமூகம் வழங்கியுள்ள சமூக மரியாதை அவனது தொழில்

வயப்பட்டதாய் அமைவதால் தொழில் சார்ந்த வாழ்வை நாவலாசிரியர்கள் பதிவு செய்கின்றனர்.

மறுபக்கம் நாவலில் சாந்தாயி துணிவெளுக்கும் தொழில் செய்பவளாகக் காட்டப்படுகிறாள். அவளது விரல்கள் துவைத்துத் துவைத்து வெளுத்துப்போன விரல்களாகக் காட்டப்படுகின்றன.

நாவலில் வரும் பலவேசம் என்பவர் பனைத்தொழிலை விட்டு, ஓலைக்கடவத்தில் மாம்பழம் விற்று வாழ்க்கை நடத்துகிறார். பின்னர் நெல் வியாபாரத்தில் ஈடுபட்டு அதிகப் பொருளீட்டுகிறார். கருப்பட்டி வியாபாரம் பற்றிய செய்தியும் நாவலில் இடம் பெறுகிறது. துலாத்துக்கு மூணுசக்கரம் தருவதாகக் கருப்பட்டி வாங்க வரும் வியாபாரிகள் கூறுகின்றனர். கருப்பட்டியைப் பிரம்மசக்தி ஒரு வியாபாரிக்கு விற்கும் காட்சி இயல்பான ஓவியமாக நிற்கிறது.

> "ஓலைப் பாயை முற்றத்தில் விரித்து, அதில் பிரம்ம சக்தி கருப்பட்டியைக் குவிக்க ஒரு கருப்பட்டியையெடுத்து முகர்ந்து பார்ப்பார் வியாபாரி. மொத்தத்தையும் நிறுத்து முடித்துவிட்டு, முழு நீளப் பக்கறையை இடுப்பிலிருந்து உருவி அவிழ்த்து, உள்ளே கையை விட்டு பிரிட்டிஷ் ரூபாய்களை அவர் எண்ணிக் கொடுக்கையில் பிரம்மசக்திக்கு உடம்பெல்லாம் சந்தோஷ நெருப்பு பரவும்"[36]

என்று நாவல் குறிப்பிடுகிறது.

கோயில் கொடை விழாவில் விற்பனை செய்பவர்களின் பட்டியலை நாவல் வழங்குகிறது. மிட்டாய்கள், சர்பத், வளையல், வேட்டி, சேலை, பொம்மை, ஐஸ், ஆகியவை அங்கு விற்பனை செய்யப்படுகின்றன. இவற்றை வெறும் பெயர்ப்பட்டியலாக வெளியிடாமல் காட்சியனுபவமாக வாசகர் கண்முன் பொன்னீலன் நிறுத்துகிறார். பொம்மை மிட்டாய்க்காரரின் விற்பனை கீழ்க்காணுமாறு காட்சிப்படுத்தப்படுகிறது.

> "பொம்மை மிட்டாய்காரர் தன் மூங்கில் கழியில் செக்கச் செவேரென்று கையகலத்தில் சவ்வு மாதிரிப் பெரிதாக எதையோ சுற்றி வைத்திருப்பார். கொடுக்கிற காசுக்குத் தக்க அதிலிருந்து கொஞ்சம் இழுத்துப் பிய்த்து, காக்காய், மயில், குதிரை, மாடு என்ற வெவ்வேறு ரூபங்களில் மிட்டாய் பொம்மை செய்து தருவார். வாங்கி வாயில் போட்டுச் சுவைத்து, சிவப்புச் சிவப்பாக மோழுகிறதை ஒருத்தருக்கொருத்தர் காட்டிப் பெருமைப்படுவார்கள்"[37]

எனப் பொம்மை மிட்டாய் விற்பனை காட்டப்படுகிறது. விற்பனை செய்பவர்கள் மக்களிடம் கூவி விற்பனை செய்யும் சத்தங்களையும் ஆசிரியர் இயல்பாக

வெளிப்படுத்தியுள்ளார். ஐஸ் விற்பவர் ஐஸ்டப்பா மூடியை உடுக்குப் போல டகு டகு என்று அடித்தபடி சைக்கிளை உருட்டிச் சென்று தெருவில் விற்பனை செய்வதும் காட்டப்படுகிறது.

மண்டைக்காடு கோயிலைச் சுற்றி வளையல் கடை, பொரிக்கடை, பேரீச்சம் பழக்கடை, அவித்த வாத்து முட்டைக்கடை ஆகிய கடைகள் அமைந்திருக்கின்றன. அதனை அடுத்து அமைந்திருக்கும் கருப்பட்டிக் கடைகளில் விற்கப்படும் கருப்பட்டியின் வகைகளைப் பொன்னீலன் தொகுத்துரைக்கிறார். சில்லுக் கருப்பட்டி, வெள்ளைக் கருப்பட்டி, கருப்புக் கருப்பட்டி, சுக்குக் கருப்பட்டி, ஏலக்கருப்பட்டி எனப் பல்வகைக் கருப்பட்டிகள் விற்கப்படுவதை அவர் தொகுத்துரைக்கிறார். பனையேறும் தொழில்பற்றி நாவல் விரிவாகப் பேசுகிறது. பொன்னணைஞ்சான் பனையேறும் தொழிலாளியாக அறிமுகப்படுத்தப்படுகிறார். பனையேறும் தொழிலுடன் ஒத்துச் செல்லும் அவரது தோற்றம் வருணிக்கப்படுகிறது.

> "ஆறடி உயரம், மேல் நோக்கின மீசை, எடுப்பான தலைப்பாகை, அதன் மேலே தளைநார்க்கிரீடம், பனையில் உரசி உரசி காழ்ப்பேறிப்போன விரிந்த நெஞ்சு, ஒடுங்கின வயிறு, தாறுபாய்ச்சிக்கட்டின இடுப்பில் பச்சை பெல்ட், ஒரு பக்கத்தில் அரிவாள்பெட்டி, நீண்ட கையில் மாலைப் பதனி நிறைந்த கலயம், இறுகித் திரண்ட நீண்ட கால்கள், பொன்னனைஞ்சான் நிற்கும் தோரணை சேதுவை அதிசயப்படுத்துகிறது"[38]

எனப் பனையேறும் தொழில் செய்பவரின் தோற்றம் காட்சிப்படுத்தப்படுகிறது. கிளிமூக்கு மாங்காய் பறித்து உடைத்துப் பதனீருக்குள் போடுதல், நுங்கு குலை அறுத்தல், நுங்குகளைச் சீவி கலயத்தில் போடுதல், பனைஓலையில் வால்பட்டை செய்து அதில் பதனீர் ஊற்றிக் கொடுத்தல் என அவரது தொழில்சார்ந்த செயல்கள் விவரிக்கப்படுகின்றன. தற்காலத்தில் பனையும் பனையேற்றுத் தொழிலும் அருகி வருவதை நாவல் விளக்குகிறது.

நெய்தல் நிலமக்கள் மீன்பிடித்தல், மீன் விற்றல் போன்ற நிலம் சார்ந்த தொழில்களைச் செய்கின்றனர். "ஏ ஆத்தா நல்ல மீனிரிக்கி சீக்கிரம் வாருங்க"[39] என்ற அழைப்பு மீன் விற்கும் பெண்ணுடையது. குமரி மாவட்டத்தில் மீன் சந்தைகள் ஆங்காங்கே காணப்பட்டாலும் வீடு வீடாகச் சென்று மீனைக் கூவி விற்கும் மீனவப் பெண்களை மிகுதியாகக் காணமுடிகிறது. பிற சமுதாயப் பெண்கள் மீன் விற்கும் தொழிலில் ஈடுபடுவது என்பது மிகக் குறைவாகக் காணப்படுகிறது.

**உணவு:**

குமரி மாவட்டங்களில் பெரும்பான்மையினர் காலையில் பிட்டு சாப்பிடும் வழக்கமுடையவர்கள். பிட்டுடன் வாழைப்பழத்தைப் பிசைந்து உண்ணுதல் சர்க்கரை போட்டு உண்ணுதல், அவித்த பயிறை உண்ணுதல், மீன்குழப்பு ஊற்றி உண்ணுதல் போன்றவை இங்குள்ள உணவுப் பழக்கங்களாக அமைகின்றன. பிட்டு இங்குப் 'புட்டு' என்ற பெயரில் அழைக்கப்படுகிறது. 'கன்னியாகுமரி புட்டு மாதிரி முழிக்காதே' என்ற சொலவடை பிற மாவட்டங்களில் பயன்படுத்தப்படுகிறது. காலையில் பிட்டு விற்பனை செய்யும் உணவகங்களையும் இங்குக் காணமுடிகிறது. பிற மாவட்டத்தைச் சார்ந்த மக்கள் விருந்துக்காகக் குமரி மாவட்டத்துக்கு வந்தால் அவர்களுக்குக் காலை உணவாகப் பிட்டுப் பரிமாறும் போது அவர்கள் ஆர்வத்துடன் அதனை உண்ணுவதில்லை. இதனைப் பொன்னீலன் தன் நாவலில் எடுத்துக் காட்டுகிறார். சேது மாதவன் புதுக்கோட்டையைச் சார்ந்தவன். அவன் மண்டைக்காடு கலவரம் தொடர்பாக ஆய்வு செய்ய வெங்கடேசன் வீட்டுக்கு விருந்தினராக வந்த போது காலை உணவாகப் பிட்டு வழங்கப்படுகையில் அவன் அதிருப்தி அடைகிறான்.

> "காலை உணவு சேதுவை பயமுறுத்துகிறது. குழாய்ப்புட்டு, அவித்த பயிறு, முந்திரிப் பருப்பு, பப்படம், வாழைப்பழம் எல்லாமே மேசை மேலே தனித்தனித்தட்டுகளில் வைக்கப்பட்டிருக்கின்றன. மலைத்துப் போய் வெங்கடேசனைப் பார்க்கிறான். அவனுக்கு எதுவும் பிடிக்கவில்லை. குறிப்பாக சிவப்பரிசி புட்டுமாவு அவனுக்குப் பிடிக்கவில்லை.... இது அவன் ஊர்ப்பக்கம் வயல்வேலைகளுக்குப் போகும் ஏழைகள் சாப்பிடுவது. இதைச் சாப்பிடுவதா என மனசுக்குள் ஒருவித அருவருப்பு அடைகிறான். ஆனாலும் விருந்துக்கு வந்த இடத்தில் பல்லைக் கடித்துக் கொண்டு சாப்பிடத் தொடங்குகிறான்[40]

குமரி மாவட்டத்தாருக்கு இதமான காலை உணவான பிட்டு, பிற மாவட்டத்தாருக்குப் பயமுறுத்துகிற உணவாக இருப்பது வேறுபடுத்திக் காட்டப்படுகிறது.

அவித்த கிழங்கு, மீன் ஆகியவற்றைச் சேர்த்து உண்ணும் குமரி மாவட்ட உணவுப் பழக்கம் பற்றியும் நாவல் குறிப்பிடுகிறது.[41] கோழிக்குழம்பும் சாமை அரிசிச் சோறும் சமைத்து சாமிக்கு வழங்கப்படுவது பற்றி நாவல் சுருக்கியுரைக்கிறது.[42] பெரும்பயிறு, சிறுபயிறு, ஆகியவற்றைச் அவித்து சாப்பிடும் பழக்கம் பற்றியும் நாவல் சொல்லுகிறது. பயிறை அவித்து, அதன் மேல் தேங்காயைத் துருவிப் போடுவதை அறியமுடிகிறது. சாளைமீன், கருப்பட்டி பயிறு

ஆகியவற்றை இணைத்து உண்ணும் வித்யாசமான உணவுப் பழக்கத்தை மூர்த்தி கதாபாத்திரத்தின் மூலம் தெரிந்து கொள்ள முடிகிறது.

> "மூர்த்தியார் நல்ல சாப்பாட்டாளி பெரிய தளுவையில் பெரும் பயிறோ, சிறுபயிறோ அவித்துக் குவித்து வைக்க வேண்டும். முழுத் தேங்காயைத் துருவி அதன் மேல் தூவி, ஐம்பது சாளை மீன் சுட்டுச் செதில் சுரண்டி தட்டுப் பெட்டியில் வைத்து விட வேண்டும், பரணியில் கிடக்கிற வெட்டைக் கருப்பட்டி ஒன்றை உடைத்து, அதையும் பக்கத்தில் வைக்க வேண்டும் அவித்த பயிறில் ஒரு சிறங்கை அள்ளி வாயில் போடுவார் மூர்த்தியார். கருப்பட்டியில் ஒரு கடி கடிப்பார். சாளையை வாயில் போட்டு முள்ளை உருவிப் பூனைக்குப் போடுவார். மொத்தத்தையும் அனுபவித்துச் சாப்பிட ஒன்றரை நாழிகை ஆகும்"[43]

என நாவல் குறிப்பிடுகிறது.

சந்தையருகே சாலையோரக் கடைகளில் விற்கப்படும் உணவு வகைகளும் விவரிக்கப்பட்டுள்ளன. அவித்த கிழங்கு வகைகள், பணியாரம், முறுக்கு, நுங்குச்சுளை, சீவி அவித்த பனம்பழம், மாம்பழம், கொல்லாம்பழம், வறுத்த புளியங்கொட்டை ஆகிய உணவு வகைகள் அங்கு விற்கப்படுகின்றன. சிறுவர்களுக்கு விருப்பமான உணவுப்பொருட்களாக அவை குறிக்கப்படுகின்றன.[44]

விருந்தோம்புதலில் உணவு பரிமாறப்படுவதை நாவல் பேசுகிறது. விருந்தோம்பல் என்பது தமிழர்களின் தனிப்பெரும் பண்பாட்டுக் கூறாகக் கருதப்படுகிறது. வீட்டுக்கு வந்தவர்களிடம் அன்புணர்வை வெளிப்படுத்தும் தொடர்பியலாக விருந்தோம்புதல் விளங்குகிறது. திருவள்ளுவர், விருந்தின் முக்கியத்துவம் பற்றிப் பேசுவது இங்கு நினையத்தக்கது.

> "இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி
> வேளாண்மை செய்தல் பொருட்டு"[45]

என்பது குறளாகும். பொன்னீலன் குமரி மாவட்ட மக்களிடம் காணப்படும் விருந்தோம்பல் பண்பைக் கதையினூடே எடுத்துக் காட்டுகிறார். ஊர்த்தலைவரான சாமிதுரையின் மகள் வைஷ்ணவியிடம் இவ்விருந்தோம்பல் பண்பு சிறந்து விளங்குகிறது. அவள் விருந்தினருக்கு மோதகமும், முறுக்கும் கொடுக்கிறாள்.

வைகுண்டப் பெருமாள் வீட்டிலும் விருந்துபசரிக்கும் பணியை அவரது மனைவி செய்கிறார். விருந்தினனாக வந்த சேதுமாதவனுக்குக் கூப்பனியை வழங்குகிறார்.

"இதுதான் தம்பி கூப்பனி, வெற்றிலைக் காவி படிந்த ஈறு தெரியச் சிரிக்கிறார் அந்த அம்மா பயினியக் குறுகக் காய்ச்சி பாகு பருவத்தில் இறக்கி அண்டிப் பருப்பும் சிறு பயித்தம் பருப்பும் போட்டு, ஆறு மாசம் ஊறவச்சது..."[46]

எனக் கூப்பனி உருவான பின்புலத்தை விளக்குகிறார்.

ராசாமணி வீட்டில் சேது மாதவனுக்கு உன்னியப்பமும் வறுத்த முந்திரிப்பருப்பும் விருந்தில் வழங்கப்படுகிறன.[47] வில்லுக்குறி சுப்பையன் வீட்டில் ஒரு அழகிய பெண் விருந்தினருக்குக் காரசேவும், தண்ணீரும் கொடுக்கிறாள்.[48]

மாதவனின் மனைவி விருந்தினருக்கு ஏற்றம் பழ அப்பமும், மிக்சரும் வழங்குகிறாள்.[49] மாதவன் வீட்டில் சேதுவுக்கு மதிய உணவாக எரிசேரியும் புளிசேரியும் வழங்கப்படுகின்றன.[50] வைஷ்ணவி விருந்தோம்பலில் விருந்தினருக்கு மோதகமும் முறுக்கும் கொடுக்கிறாள்.[51]

முத்து வீட்டுக்கு சேது மாதவன் சென்ற போது அங்கும் விருந்தோம்பலைக் காணமுடிகிறது. என்பதில் பெற்றோர் விருந்துபசரிக்கும் பண்பைக் குழந்தைகளுக்குக் கற்பிப்பதை ஆசிரியர் எடுத்துக்காட்டுகிறார்.

"ஒரு கையில் சாயா நிறைந்த கண்ணாடித் தம்ளரும், மறுகையில் தட்டில் இரண்டு முறுக்குமாக உள்ளே வருகிறாள். அம்மா குடுத்தனுப்பினா, சாப்பிடணுமாம். இரண்டையும் மேசையில் வைத்துவிட்டு மின்னலாக மறைந்து போகிறாள் சிறுமி"[52]

மீனவர்களுடைய விருந்தோம்பல் பண்பையும் நாவல் பேசுகிறது. அலெக்ஸ் வீட்டுக்குச் சேது மாதவனும் வெங்கடேசனும் சென்றபோது இவ்விருந்தோம்பல் காட்சி இடம் பெறுகிறது. விருந்தினருக்கு நான்கு பீங்கான் தட்டுகளில் வறுத்த மீன் துண்டுகளும் ஏற்றங்காய் வறுவலும் வழங்கப்படுகின்றன. வந்த விருந்தினருக்கு அலெக்சின் மனைவி ஏஞ்சலின் அவ்வுணவை வழங்குகிறாள். வயதான ஒருபெண் தேனீர் வழங்குகிறாள்.[53] பெண்களின் விருந்தோம்பல் பண்பை இது புலப்படுத்துகிறது.

## சமுதாயச் சிக்கல்கள்:

எல்லாப் படைப்பாளிகளும் சமூகத்தின் வெவ்வேறு உண்மைகளையே தத்தம் படைப்புகளில் பதிவு செய்து வருகின்றனர். 'கலைகலைக்காகவே' எனும் கோட்பாட்டைப் பின்பற்றுபவர்கள், 'இலக்கியம் சமூகப்பயன்பாட்டுக்காகவே' என்ற கொள்கையோடு ஒவ்வாமை உடையவர்களைப் போலக் காட்டிக் கொண்டாலும் அவர்களது படைப்பில், சமுதாயத்தின் விதிவிலக்குகளையும், பிறழ்வுகளையும்,

அதீத ஆளுமைகளையுமே காட்டுகின்றனர். சமுதாயத்தின் அருவருப்பான பகுதிகளை எழுத்தில் வடித்துக்காட்டுவது என்பது சமூகத்துக்குச் செய்யும் துரோகம் ஆகமுடியாது. அதுவும் சமூகத்தின் ஒரு பகுதியே என்ற புரிதலுடன் சமூகவியல் அணுகுமுறையைப் பின்பற்ற வேண்டியுள்ளது. எனவே எல்லா நாவல்களும் ஏதோ ஒரு வகையில் சமூக நாவல்களே என்ற முடிவுக்கு வரமுடிகிறது. நாவலாசிரியன் வாசகனை மகிழ்வூட்ட எண்ணினாலும், வாசகனுக்கு அறிவுறுத்த எண்ணினாலும் சமூகச்சிக்கல்களின் சித்திரிப்பு வழியாகவே தனது நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளுகிறான். அதனால் சமூகச் சிக்கல்கள் புதினத்தின் மையமாகி விடுகின்றன.

> "சமூக எண்ணத்துடன் படைப்பினைப் படைத்து அதன்மூலம் படிப்பவரை அறிவுறுத்தவோ. மகிழ்வுறுத்தவோ விழையும் புதினப் படைப்பாளன் உடன்காலச் சமூகச் சிக்கல்களையே தன் படைப்புக்குக் கருத்தாகக் கொள்ளுகின்றான்"[54]

என்ற கருத்து நோக்கத்தக்கது.

சமுதாயச் சிக்கல்கள் என்பவை நுகர்வுக் கலாச்சாரமும், மக்கட்தொகைப் பெருக்கமும் வந்தபின் தோன்றியதன்று, அவை சமூகக் குழுக்கள் ஒன்றிணைந்து சமுதாய அமைப்பு நிலைபெற்ற காலத்திலேயே உருக்கொண்டு விட்டன. இக்கருத்தை

> "மனிதன் கூடிவாழத் தொடங்கி என்று சமுதாயத்தைத் தோற்றுவித்தானோ அன்றே சமுதாயச் சிக்கல்களும் தோன்றிவிட்டன."[55]

என்ற கூற்று உறுதி செய்கிறது.

எல்லாக் காலத்துக்கும் பொருந்திச்செல்லும் சமூகச்சிக்கல்களையும் சமூகமாற்றத்திற்கேற்ப தோன்றும் சமூகச் சிக்கல்களையும் காணமுடிகிறது. இடம் சார்ந்து, இனம் சார்ந்து, மதம் சார்ந்து வேறுபடும் சமூகச் சிக்கல்களும் உள்ளன. சமூகத்தின் சிக்கல்களுக்கெதிரான இயக்கமாக முற்போக்குவாதம் எல்லா காலகட்டங்களிலும் வெவ்வேறு வடிவங்களில் செயல்பட்டு வருகிறது. ஆன்மீகவாதிகள். தத்துவவாதிகள், படைப்பாளிகள் ஆகியோர் சமூக அக்கறையோடு சிக்கல்களுக்கான தீர்வுகளை முன்வைத்து வருகின்றனர். ஆனாலும் சிக்கல்கள் முற்றுப்பெற்றதாகக் கூறிவிடமுடியாது. புதுப்புதுச் சிக்கல்கள் காலத்தின் வளர்ச்சிப்பாதையில் நுழைந்து கொண்டேதான் இருக்கின்றன. முற்போக்குவாதிகளின் தீர்வு நோக்கிய தேடலைக் கீழ்க்காணும் கூற்று பதிவுசெய்கிறது.

"மனித சமுதாயத்தின் நாகரீகக் கூறுகள் தோன்றிய காலத்திலிருந்து சிக்கல்களும் இருந்து கொண்டே வருகின்றன. மனித சமுதாயம் வளர்ச்சியடைந்து கொண்டு வருகின்ற பல்வேறு கால கட்டங்களில் சில சிக்கல்களுக்குத் தீர்வு காண்கின்ற அதே வேளையில் புதிய சிக்கல்களும் தோன்றிக் கொண்டு வருகின்றன. ஒவ்வொரு காலகட்டத்திலும் நிலவிய சமுதாயச் சிக்கல்களுக்குத் தீர்வு காண முற்போக்காளர்கள் முயன்று வந்திருத்தல் போலவே இருபதாம் நூற்றாண்டிலும் முயன்றுள்ளனர்"[56]

இது இருபதாம் நூற்றாண்டு படைப்பாளர்களுக்கு மட்டும் பொருந்துகிற கருத்து அன்று. இது அனைத்து நூற்றாண்டுகளுக்கும் பொருந்தும் கருத்து ஆகும்.

## சாதி:

சமூகச்சிக்கலில் சாதிமோதல்கள் முதன்மையான இடத்தைப் பெறுகின்றன.

"சாதி என்பது ஓர் அமைப்புமுறை, இந்த அமைப்பில் ஓர் ஆண், பெண் எந்த ஒரு குறிப்பிட்ட குழுவில் பிறந்தனரோ அக்குழுவின் மூலமாக அவர்களுக்குச் சமூகப்பிரதிநிதித்துவம் வழங்கப்படுகிறது. சமூகப்படிநிலை வரிசையில் ஒவ்வொரு குழுவுக்கும் குறிப்பிட்ட அந்தஸ்து வழங்கப்பட்டுள்ளது. இக்குழுவிற்கென ஒத்துக்கொள்ளப்பட்ட குறிப்பான தொழில் அல்லது தொழில்கள் உள்ளன. அக்குழுவிற்குள் மட்டுமே ஒருவன் திருமணம் செய்து கொள்ள முடியும்"[57]

எனக் கெய்ல் ஓம் வெட் குறிப்பிடுகிறார்.

இந்திய சமூக அமைப்பில் சாதிக்கு முக்கிய இடமுள்ளது. படித்தவர்கள் படிக்காதவர்கள் என அனைத்துத் தரப்பு மக்களிடமும் சாதி பற்றிய சிந்தனைகள் இடம் பெற்றுள்ளன. தனி மனிதனை அடையாளம் காட்ட சாதி ஒரு வழிமுறையாகக் காணப்படுகிறது. இந்திய சமுதாயத்தில் மொழி சார்ந்த அடையாளப்படுத்தல்களைவிட சாதி சார்ந்த அடையாளப்படுத்தல்களே முக்கியமானதாக உள்ளன. இங்கு சாதி என்பது வெறும் பகுப்பாகக் கருதப்படாமல் மேலாதிக்கத்தின் அனுமதிச்சீட்டாகக் கொள்ளப்படுகிறது. ஒடுக்கு முறை மனோபாவத்திற்கு சாதி அமைப்பு வடிகாலாக அமைகிறது. வேங்கடராமன் சாதி அமைப்பிலிருக்கும் மேலாதிக்கத் தன்மையையும் ஒடுக்குமுறைச் சிக்கல்களையும் சுட்டுகிறார்.

"இந்திய சமூகக் கட்டமைப்பில் சாதி அடிப்படை மேலாதிக்கம் செலுத்துகிறது. ஏறுமுக வரிசையில் உள்ள மேற்சாதியினர் கீழுள்ள சாதியினரை ஒடுக்கி ஆதிக்கம் செலுத்துவதும் காலங்காலமாக உள்ளது"[58] என்பர்.

இந்தியச் சமூகத்தில் தான் அங்கம் வகுக்க வேண்டிய சாதியைத் தேர்வு செய்யும் உரிமை தனிமனிதனுக்கு இல்லை. எந்தச் சாதியமைப்பில் ஒரு தனி மனிதன் பிறந்தானோ அதே சாதிப்பிரிவில்தான் அவன் இறக்கும் வரை நீடிக்கும் நிலை உள்ளது. ஊர், வட்டாரம், மொழி, மாநிலம், நாடு,கட்சி, வேலை, மதம் என அனைத்தையும் மாற்றிக்கொண்டு, தான் விரும்பியதைத் தேர்வு செய்து வாழும் உரிமை உடைய மனிதனுக்குச் சாதி விட்டு சாதிமாறும் உரிமை வழங்கப்படவில்லை. பச்சிளம் குழந்தைக்குச் சாதிச் சான்றிதழைக் கொடுத்து சாதிப்பிரிவின் அடிப்படையில் பள்ளியில் சேர்க்கும் கொடுமை இந்தியச் சமூகத்தில் குற்றவுணர்ச்சி இல்லாமலே செய்யப்பட்டு வருகிறது. மாற்றுச் சாதியினரை வாழ்க்கைத் துணையாகக் கொள்ளும் உரிமையை அரசாங்கம் வழங்கினாலும் சமூகம் அதனை எதிர்த்தே வருகிறது. இவ்வாறு ஒரு சாதியில் பிறந்த ஒரு தனி மனிதன் சாதிக்கு வெளியே மணம் முடிப்பதில் இருக்கும் தடையைப்பற்றி கேட்கர் என்ற சமூகவியல் அறிஞர் ஆய்ந்துள்ளார்.

> “சாதி என்பது இரண்டு தனிப்பண்புகளைக் கொண்ட ஒரு சமூகக் குழு. ஒன்று சாதியின் உறுப்பினராகும் தகுதி, அந்தச் சாதியில் பிறந்தவருக்கும் பிறக்க இருக்கின்றவருக்கும் மட்டுமே வரையறுக்கப்பட்டள்ளது. இரண்டாவது, ஒரு சாதியின் உறுப்பினர்கள் அந்தச் சாதிக்கு வெளியே திருமணம் செய்ய முடியாதவாறு சமூகக் கட்டுப்பாடுகளால் பிணைக்கப்பட்டுள்ளனர்”[59]

என்று சாதிக்கு வரைவிலக்கணம் வகுத்துள்ளார் கேட்கர் என்ற சமூகவியலறிஞர்.

தொடக்க காலத்தில் சாதிப்பாட்டை உருவாக்கியதில் தொழில் முக்கியப்பங்கு வகித்தது. புரோகிதம் செய்தல், வணிகம் செய்தல், துணி வெளுத்தல், பனையேறுதல், வேளாண்மை செய்தல், செருப்புத் தைத்தல், ஜோதிடம் சொல்லுதல் உள்ளிட்ட பல்வேறு தொழில்களும் பல்வேறு சாதி அடையாளங்களை உருவாக்கியுள்ளன. தொழில்களிலமைந்த வேறுபாடு சாதியடையாளத்தைத் தோற்றுவித்து.

> “மிகச் சொற்பமான சுய தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கேற்ப அமைந்திருந்ததே கிராமிய சமுதாய அமைப்பு முறை. இச்சமுதாயம், தன் உற்பத்தியைக் கொண்டு சென்று வெளி நாடுகளில் வணிகம் செய்து தனக்குத் தேவையான தங்கம் முதலான பொருள்களை இறக்குமதி செய்தது. வெளிநாட்டிலிருந்து உணவு, உடை ஆகியவற்றை இறக்குமதி செய்யும் அவசியமேற்படவில்லை. எனவே இச்சமுதாய அமைப்பு,

ஆரம்பகாலத் தொழில்களில் ஈடுபட்டவர்களைச் சாதிகளாக மாற்றி வேற்றுமையை உருவாக்கியது,"[60]

எனக் கருதமுடிகிறது.

சாதி என்பது வெறும் பிரிவாக மட்டும் அமையாமல் அது தீண்டாமை எனும் சமுதாயக் கொடுமைக்கு வழிவகுப்பதாக நிலை பெற்றிருக்கிறது. ஒடுக்குபவன், ஒடுக்கப்படுபவன் என்னும் பிரிவினை உருவாகச் சாதி காரணமாக அமைந்து விடுகிறது. சாதிப்பெயரை இழிவான பெயரில் ஆளுவது, வயது முதிர்ந்தவர்களை ஒருமையில் அழைப்பது, சேரிப்புறத்திற்கு ஓரம் கட்டுவது, அடிமைப்பணியில் ஈடுபடுத்துவது, இழிந்த வேலைகளைச் செய்ய வைப்பது தொட்டாலே தீட்டு என்ற கொள்கையைப் பேசுவது, செருப்புப் போட தடை விதிப்பது, உரிமைகளை நிராகரிப்பது எனத் தீண்டாமை பல்வேறு வடிவங்களில் செயல்பட்டு வருகிறது. சாதி அமைப்புதான் இத்தகைய ஒடுக்கு முறைகளுக்கான ஊடகமாகச் செயல்பட்டு வருகிறது.

"சமுதாயத்தில் சாதி எனப்படுவது வரையறைகளை உருவாக்கும் முக்கியக் கூறாகக் காணப்படுகிறது. இச்சாதிப்பாகுபாடு எல்லா நிலையிலும் தனது ஆதிக்கத்தைச் செலுத்திக் கொண்டிருக்கிறது என்பது கசப்பான உண்மையாகிறது. இவ்வகையில் ஒரு சாராரைத் தீண்டத்தகாதவர்கள் என்று கூறி ஒதுக்கிடும் சமுதாயக் கொடுமை இன்றும் மாறியபாடில்லை"[61]

என்ற வருத்தம் அறிஞர்களிடையே இருந்து வருகிறது. எனவே இலக்கியவாதிகளும், மானுடவியல் அறிஞர்களும் சாதியப் பயங்கரவாதத்துக்கு முடிவுகட்டும் கருத்துக்களைப் பரப்புரை செய்கின்றனர். ஒரு குறிப்பிட்ட பிரிவின் நன்மைக்காக உருவாக்கப்பட்ட சாதி அமைப்பு நீடித்தால் எதிர்கால இந்தியச் சமூகம் பாழ்பட்டுப் போகும் என்று அவர்கள் எச்சரிக்கின்றனர்.

"சமுதாய ஆதாயம் தேடி வேத காலத்தில் பிராமணர்கள் ஏற்படுத்திய சாதிமுறை, இன்றைய சூழலில் ஏற்படுத்தும் விளைவுகளை உரிய முறையில் அணுகாவிட்டால் சாதி என்னும் மாயக் கருத்தே இந்தியாவின் மிகக் கொடிய நம்பிக்கையாகிக் கடும் விளைவுகள் ஏற்படும் "[62]

என்ற மானிடவியல் அறிஞர் ஆஸ்லிமாண்டகு கூறுகின்றார். இதிலிருந்து சாதிப்பாகுபாடு மறுபரிசீலனை செய்ய வேண்டியது என்பதைப் புரிந்து கொள்ள முடிகிறது.

சாதியம் ஒடுக்கப்பட்ட மக்களைப் பொது நீரோட்டத்திலிருந்து விலக்கி வைக்கிறது. ஒடுக்கப்பட்ட மக்களுக்கென்று தனிச்சேரிகள் ஒதுக்கப்படுவதன் பின்னணியிலும் சாதியின் நுண் அரசியல் செயல்படுகிறது. தனிக்குவளை, தனிப் பாத்திரம் போன்றவையும் அவர்களைத் தனிமைப்படுத்த உருவாக்கப்பட்ட செயல்திட்டங்களாகும். பொதுக் கிணறும், பொதுக்குளமும் தாழ்த்தப்பட்டவர்களிடமிருந்து தொலைவில் நிறுத்தப்படுகின்றன. அவர்களது புழங்கு வெளி மேலாதிக்கச் சாதியினரால் தீர்மானிக்கப்படுகின்றன. விலங்குகளுக்கு இருக்கும் உரிமைகள் கூட இவர்களுக்கு இருப்பதில்லை.

> "ஆடும் மாடும் பன்றியும் தன்னிச்சையாகத் திரியும் தெருக்களில் தம்மையொத்த மனிதன் நடக்கக்கூடாது. பொதுக்கிணற்றில் நீர் எடுக்கக்கூடாது பொதுக்குளத்தில் குளிக்கக்கூடாது"[63]

என்ற தடைகள் உள்ளன.

தமிழ்ச் சமூகம் என்பது சாதி அடையாளத்தை வெளிப்படையாகக் கொண்டியங்கும் மக்கட்தொகுதி ஆகும். ஒவ்வொரு தனிமனிதனும் ஏதோ ஒரு விதத்தில் சாதியோடு பிணைக்கப்பட்டிருக்கிறான்.

> "இந்த அமைப்பில் உயர்ந்த குல, குடி, சாதி, இன அடையாளம் பெற்ற தமிழ்க்குடும்பம் ஒவ்வொன்றும் 2000 ஆண்டுகளாக ஆணாதிக்கத்தையும் ஆதிக்க சாதிவெறி பாசிசத்தையும் உற்பத்தி செய்யும் பட்டறைகளாகவும் பாசறைகளாகவும் இருந்து வருகின்றன"[64]

என்பதில் மாலதிமைத்ரி சாதி பற்றிய கற்பித்தல்கள் குடும்பத்திலிருந்து தொடங்குவதைச் சுட்டுகிறார். மேலடுக்கிலுள்ள சாதியினர் தமது அதிகாரத்தை நிறுவும் களமாகச் சாதி அமைப்பு உள்ளது. மேல்கீழ் என்னும் முரண்எதிர்வை சமூக அமைப்பில் நிலை நாட்டும் வக்கிர எண்ணத்தின் வெளிப்பாடாகவும் சாதி அமைகிறது.

> "தன்னை உயர்ந்தது என்று ஏற்காமல் கீழ்ப்பணிய மறுத்து அதற்குச் சேவகம் செய்ய மறுக்கும் கொத்தடிமையாக இருக்க மறுக்கும் யாரையும் கொன்று இரத்தம் குடிப்பேன் என்கிறது சாதிவெறி"[65]

என ஆதிக்கசாதியினரின் வன்மத்தை மாலதி மைத்ரி சுட்டுகிறார். பொன்னீலன் சாதியின் குரூர முகத்தை அம்பலப்படுத்துகிறார்.

## தனிமனிதனைச் சாதி அடையாளத்தோடு நோக்குதல்:

மனிதன் தன் சக மனிதனைச் சாதிய அடையாளத்தோடு பார்க்க விழைவதைப் பொன்னீலன் எடுத்துக் காட்டுகிறார். சாதியம் என்பது வன்முறையாக வெளிப்படும்போது புறக்கண்களுக்குப் புலனாகிறது. ஆனால் அருகில் உட்கார்பவனையும், வாழ்பவனையும், பணிசெய்பவனையும் சாதி அடையாளத்தோடு பார்க்கும் பார்வையும் மனநிலையும் கட்புலனாகா அநீதிகளாகும். சகமனிதன் தனது சாதியாக இருந்தால் உறவு வைத்துக் கொள்வதும், வேறு சாதியாக இருந்தால் மேலோட்டமாகப் பழகுவதும் சாதி வன்முறையின் மெல்லிய வடிவங்களே ஆகும். மறுபக்கம் நாவலில் வைகுண்டப் பெருமாளைப் பார்க்க வெங்கடேசனும் சேது மாதவனும் சென்ற போது வைகுண்டப்பெருமாள் சாதி அடையாளங்களை அறியும் தன் ஆவலை வெளிப்படுத்துகிறார். மண்டைக்காடு கலவரம் பற்றிய செய்திகளைத் தெரிந்து கொள்ள வந்த சேதுமாதவனின் சாதியை அவர் வெங்கடேசனிடம் கேட்டறிய முயலுகிறார்.

"தம்பி என்ன சாதி என்ன மதம் ஒண்ணுந்தெரியாமல் பேசச் சொல்லிதியளே"

"நம்ம ஆளுதான்" அவருக்கு நம்பிக்கையூட்டுகிற வகையில் பொய் சொல்லுகிறார் வெங்கடேசன் "சும்மா வெளிப்படையாய் பேசலாம்"

"கூட வந்த பையனுவ?"

"அவனுக கடப்புறத்துப் பையங்க, ரெண்டு பேருமே எனக்கு தம்பிக... மனந்திறந்து நீங்க என்ன வேணுமானாலும் பேசலாம். என்னய நம்புங்க.."[66]

என்பதில் வெங்கடேசன் சேது மாதவனை நம்ம ஆளுதான் என்று பொய்யாக அடையாளப்படுத்துவதற்குக் காரணம் ஒரே சாதியினருக்கிடையேயான தொடர்பியல் வெளிப்படைத் தன்மைமிக்கதாக இருக்கும் என்பதுதான்.

### பழகுவதில் உள்ள தடை:

கழிப்பறையைத் தூய்மை செய்பவர்கள் வீட்டில் உணவு உண்ண அருவருப்படையும் சாதிமனமும் நாவலில் சுட்டப்படுகிறது. அப்பணியை செய்பவர்களோடு எவ்வளவுதான் பழகினாலும் அவர்களது வீட்டில் தயாரிக்கப்படும் உணவை உண்ணுவதில் உள்ள மனத்தடையை சேதுவின் சித்தி கதாப்பாத்திரம் விளக்குகிறது.

"என்னதான் படிச்சாலும், என் கூடவே வேல பார்த்தாலுங்கூட, எங்க வீட்ல சாப்பிட அருவருப்படையிறவங்க பலர நான் பார்த்திருக்கேன்... அதுதான்... ஒரு பழமாவது.... இவ்வளவுஞ் சொல்லுவதற்குள் சித்தியின் கண் கலங்கி, உதடு கோணுகிறது. "நாங்க எவ்வளவு நல்லா வாழ்ந்தாலும், எங்களப் பற்றி மற்றவங்க மனசில இருக்கிற அழுக்க எங்களால கழுவ முடியல்லியே"[67]

என்பதில் கழிப்பறையைக் கூட கழுவி சுத்தமாக்க முடிகிறது; மனதிலுள்ள சாதி அழுக்கைக் கழுவி சுத்தமாக்க முடிவதில்லை எனும் கருத்துப் புலப்படுத்தப்படுகிறது.

## வழிபாட்டுரிமையை மறுத்தல்:

சமூகத்தில் மட்டுமின்றி சமயங்களிலும் சாதியம் தலைவிரித்தாடுவதற்காகப் பொன்னீலன் வருத்தம் அடைகிறார். மண்டைக்காட்டம்மையை வழிபட மட்டுமே அனைத்துச் சாதியினருக்கும் உரிமை இருந்ததாகவும், பிற கோயில்களில் ஒடுக்கப்பட்டோர் அனுமதிக்கப்படவில்லை என்றும் கூறுகின்றார்.

"மண்டைக்காட்டுக் கொடை அவர் உயிரையே வறுத்தெடுத்திருந்தது. தென் முனையில் ஒடுக்கப்பட்ட மக்களுக்கு மறுக்கப்படாத பொதுக்கோயில் அது ஒன்று தானே... சாணார், அரையர், ஈழவர், பள்ளர், பறையர், புலையர், இவர்களும் உயர்சாதியினரோடு சேர்ந்து இங்கு மட்டும்தானே அம்மையை வழிபடலாம்"[68]

எனத் தாழ்த்தப்பட்ட பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கு ஆதிக்க சக்தியினர் வழிபாட்டுரிமையைக் கூட வழங்காததை விவரிக்கிறார்.

## சமயத்துக்குள் வேறுபாட்டை உருவாக்குதல்:

கோயில்களில் சட்டையைக் கழற்றி உள்ளே செல்லும் பக்தி அடையாளத்துக்குப் பின்னால் மறைந்திருக்கும் சாதி அரசியலைப் பொன்னீலன் வெளிக்கொணர்கிறார். கிராமக்கோயில்களில் சட்டையைக் கழற்றி உள்ளே நுழையும் நிலை இன்னும் ஏற்படாமைக்காகப் பெருமிதம் கொள்கிறார்.

"நல்ல காலம்... சட்டையைக் கழற்ற வேண்டும் என்ற நிபந்தனை இன்னும் இங்கே நுழையவில்லை. "ஏன் சார், உங்க நாட்டுக் கோயில்கள்ல சட்டையைக் கழட்டச் சொல்லுறாங்க?" அம்மன் கோயிலை ஆவலோடு பார்த்தபடி கேட்கிறான் சேது. "உடம்புதானே சாதி அடையாளத்தக் காட்டிக் கொடுக்கும்" புன்னகைக்கிறார் வெங்கடேசன்"[69]

எனச் சட்டையைக் கழற்றுவதன் மூலம் வெளிப்படும் பூணூலும், சாதியும் பற்றிய உணர்வை மறைமுகமாக எழுப்புகிறார்.

## திருமணத்தடை:

சாதி என்பது அகமணமுறையைக் கொண்ட ஓர் அமைப்பாகக் கருதப்படுகிறது.

"சாதி என்பது சமுதாய அமைப்பில் இயங்கும் ஒரு தனிப்பட்ட குழுவைக் குறிக்கும். இக்குழுவில் இடம் பெறும் தகுதி பிறப்பால் அமைகிறது. ஒரு சாதியில் பிறந்தவர் வேறு சாதிக்கு மாற இயலாது. ஒன்றுக்கு மேற்பட்ட சாதியைச் சேர்ந்தவர் என்று கூறிக் கொள்ளவும் இயலாது. அவ்வாறே ஒரு சாதியினர் வேற்றுச் சாதியினரை மணந்து கொள்ளுதலும் இயலாது. எனவே சாதி என்பது அகமணமுறையைக் கொண்ட ஓர் அமைப்பாகும்".[70]

இவ்வாறு அகமண முறையை மீறிச் செல்வது என்பது ஒரு சமூகக் குற்றமாகக் கருதப்படுகிறது. சாதி அமைப்பைத் தாண்டி மணஉறவை ஏற்படுத்திக்கொள்வது சமூக ஒழுங்கைக் குலைக்கும் நடவடிக்கையாகப் பார்க்கப்படுகிறது.

இந்தியச் சமூக அமைப்பில் இருவேறு சாதியினர் திருமணம் செய்வது இயலாத காரியமாகும். விதிவிலக்காகச் சாதிதாண்டிய திருமணங்கள் நிகழ்ந்தாலும் அவை சமூக நெருக்கடிகளுக்கு உள்ளாகின்றன என்கிறார் பக்தவத்சலபாரதி.

"இந்தியச் சூழலில் குறிப்பிட வேண்டுமானால் சாதி என்பது ஓர் அகமணக் குழுவாகும். ஒரு சாதியைச் சேர்ந்தவர்கள் அவர்தம் சாதிக்குள் மட்டும் தான் திருமணம் செய்து கொள்ளுகின்றனர். வேற்றுச் சாதியினரோடு பெரும்பாலும் திருமணம் செய்து கொள்வதில்லை. இந்நிலையில் அமையும் திருமணமே அகமணம் எனக் கூறப்படும்"[71]

என அகமணமுறையை விளக்குகிறார்.

மீட் அய்யர் தனது இரண்டாம் மனைவியை இழந்த பின் ஐந்தாண்டுகள் கழித்து ஒரு இந்தியப் பெண்ணைத் திருமணம் செய்கிறார். இதனைக் கோயில் விளையைச் சார்ந்த கிறித்தவர்கள் விமர்சிக்கிறார்கள். வெள்ளைக்காரர் ஒருவர் இந்தியப் பெண்ணைத் திருமணம் செய்ததற்காகவோ, மூன்றாம் திருமணம் செய்ததற்காகவோ அவர்கள் மீட் அய்யரை விமர்சிக்கவில்லை. அவர் லூயிஸ் என்னும் தாழ்த்தப்பட்ட பெண்ணைத் திருமணம் செய்ததை அவர்களால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. விவிலியத்தில் குறிப்பிடப்படாத சாதி கிறித்தவர்களுக்குள் நிறைந்திருப்பதை இது உணர்த்துகிறது.[72]

காதலைத் தீர்மானிப்பதிலும் சாதியம் மறைமுகப் பங்களிப்பை நல்குகிறது. சாதி அடையாளம் தெரியாத காலத்தில் காதலைத் தொடங்கி, சாதி அடையாளம் தெரிந்தபின் காதலை முறிக்கும் காதலர்கள் இருப்பதனை மறுபக்கம் நூல் அடையாளப்படுத்துகிறது.

சேது மாதவனின் தந்தையும் தாயும் வேறு வேறு சாதிப்பிரிவைச் சார்ந்தவர்கள். சாதிக்கலப்பில் பிறந்தவன் சேது மாதவன் என்ற உண்மை தெரிந்தபோது, அவனது காதலி மஞ்சுளா அவனை நிராகரித்து விட்ட நிகழ்வு கதையாக்கமாகி உள்ளது.[73]

## தொழிலிடங்களில் சமத்துவத்தை அழித்தல்:

படித்தவர்களிடம் இருக்கும் சாதியுணர்வை நாவலாசிரியர் பல இடங்களில் அம்பலப்படுத்துகிறார். சங்கரன் ஆசிரியப் பயிற்சி முடித்து செங்கோட்டைத் தாலுகாவில் சாம்பவர் வடகரை என்னுமிடத்தில் ஆசிரியராகப் பணியில் சேர்கிறான். அப்பள்ளியில் அனைத்து ஆசிரியர்களும் பிராமண வகுப்பைச் சார்ந்தவர்கள். சங்கரன், நாடார் வகுப்பைச் சார்ந்தவன். அவனிடம் பிற ஆசிரியர்கள் சாதியுணர்வு காரணமாகப் பேசுவதில்லை. வேறு சாதியைச் சார்ந்தவர்கள் பிராமணக் குழந்தைகளுக்கு ஆசிரியராக இருக்க முடியாது என ஊர்மக்கள் கூறுகின்றனர். சங்கரனை வேலை செய்யவிடமாட்டோம் என்ற குரல் ஓங்கி ஒலிக்கிறது.[74] சங்கரனுக்கு இழைக்கப்பட்ட அநீதி கற்றவர்களிடமுள்ள சாதிவெறியின் வெளிப்படாகும்.

## இட ஒதுக்கீட்டை இழிவுபடுத்துதல்:

சாதியத் திமிர் எப்போதும் இட ஒதுக்கீட்டுக்கெதிரான கருத்தியல்களை பரப்பும் என்ற உண்மையையும் நாவல் தருகிறது. சேதுமாதவன் இட ஒதுக்கீட்டை இழிவுபடுத்திப் பேசுகிறான்.

> "ஜனநாயகம் என்கிற போர்வையில் இந்த மாதிரி மாடு மேய்க்கக்கூட லாயக்கில்லாத கழுதைகளையெல்லாம் பள்ளிக் கூடத்தில் சேர்த்து, சர்ட்டிபிகேட் கொடுத்து, கோட்டாமுறையில் நாற்காலியுங் கொடுத்து, நாட்டக் கெடுத்துக்கிட்டிருக்குதே இந்த முட்டாள் அரசாங்கம், அந்தக் கடுப்பில சட்டுன்னு ரெண்டு வார்த்தை விட்டுட்டேன், அவ்வளவுதான், அங்குள்ள தலித்து வாத்தியானுக அத்தன பேருஞ் சேர்ந்துக்கிட்டானுக. பிரச்சினைய ஊதிப் பெருக்கி புகார் சி.இ.ஓ.வர போயிட்டுது. கடைசியில

அந்தக் குரங்குப் பயல்கிட்டவே நான் மன்னிப்புக் கேட்க வேண்டியதாப் போச்சி! "[75]

என்ற கருத்து ஆசிரியர் பணிசெய்யும் சேதுமாதவனிடமிருந்து வருவது கற்றவர்களிடமுள்ள சாதியுணர்வைக் காட்டுகிறது.

## ஓரங்கட்டுதல்:

பிற்படுத்தப்பட்ட மற்றும் ஒடுக்கப்பட்ட சாதியினை அவமதிக்கும் நடத்தை விதிமுறைகளை இன்னும் ஆங்காங்கே காணமுடிகிறது. சுதந்திரம் அடைவதற்கு முந்தைய காலகட்டத்தில் இவ்வித முறைகள் மிகக்கடுமையானதாக இருந்தன. உயர்ந்த சாதி எனச் சொல்லிக் கொள்பவனைக் கண்டால் கீழ்ச்சாதி என்ற பெயரில் அடிமைப்படுத்தப்பட்டவன் எழுந்து நிற்கவேண்டும். தலையில் முண்டாசு கட்டக் கூடாது. ஆதிக்கச் சாதியினர் இருக்குமிடத்தில் செருப்பணிந்து செல்லக்கூடாது. ஆதிக்கச் சிறுவர்களை ஒருமையிலோ, பெயர்ச்சொல்லியோ அழைக்கக்கூடாது. வேட்டியை மடித்துக் கட்டக்கூடாது. அவர்களுக்குச் சமமாக உட்காரக் கூடாது என்பன போன்ற மரியாதை சார்ந்த நடத்தை விதிமுறைகள் எழுதப்படாமலே சமூகத்தில் நின்று நிலவுகின்றன. நாவலில் பெருமாள் நாடார் எனும் கதாப்பாத்திரம் ஆதிக்க சக்திகளின் நடத்தை விதிமுறைகளை மீறியதால் வன்முறைக்காளாகின்றார். சுசீந்திரம் கோயிலிருந்து சர்க்யூட் கோர்ட்டில் அவர் கால்மேல் கால் போட்டு உட்கார்கிறார். ஆதிக்க சாதியைச் சார்ந்த வக்கீல்கள் அவரை எழுந்து நிற்கச் சொல்லுகிறார்கள். இது வீடு இல்லை என்றும் நீதிமன்றம் என்றும் பெருமாள் நாடார் கூறி எதிர்த்து நிற்கிறார். வெள்ளைக்கார நீதிபதியும் நீதிமன்றத்துக்குள் அனைவரும் சமம் என அறிவிக்கிறார். வழக்கில் பெருமாள் நாடார் பக்கம் வெற்றி கிடைக்கிறது. நீதிமன்ற வாசலிலேயே அவர் ஆதிக்கச் சாதியினரால் தாக்கப்படுகிறார்.[76] சாதீயம் கற்பித்த மரியாதை சார்ந்த உடல்மொழிகள் மீறப்பட்டால் ஏற்படும் விளைவுகளை இக்கதைப்பகுதி உணர்த்துகிறது.

## சுயமரியாதையை அழித்தல்:

சாதிக்கட்டுமானம் மேலடுக்கிலிருக்கும் ஆதிக்கச் சாதியினருக்குச் சமூக மரியாதையையும் அடித்தட்டில் இருக்கும் தாழ்த்தப்பட்ட சமூகங்களுக்கு அவமானத்தையும் வழங்குவதை நாவல் நுட்பமாக உணர்த்துகிறது. மலையாளிகளின் ஆதிக்கத்தில் குமரி மாவட்டம் இருந்தபோது நம்பூதிரிகளும் நாயர்களும் சமூகத்தின் மேலடுக்கில் இருந்தனர். நிலங்கள் பெரும்பான்மையும்

அவர்களது கையில் இருந்தன. அப்போது சமூகத்தில் ஓரங்கட்டப்பட்டிருந்த சாதியினர் தங்கள் சுயமரியாதையை இழந்து ஆதிக்க சாதியினரை வழிபடும் நிலை இருந்தது. பாட்டப்பணம் செலுத்த ஒடுக்கப்பட்ட சாதியினர் பொன்னுத்திருமேனி நம்பூதிரி வீட்டுக்குச் செல்லும் போது சுயமரியாதையை இழக்கும் நிலை ஏற்பட்டதை நாவல் விளக்குகிறது.

> "அப்றம், திருமேனி காட்சி கொடுப்பாரு. இவன் கொண்டு போன சாதனங்கள ரொம்ப தூரத்துக்கப்பால தரையில வச்சி நெடுஞ்சாண் கிடையாக் கும்பிட்டு விழுவான். திருமேனி தன் பக்கத்தில ஒரு நாயர் கணக்குப் பிள்ளைய வச்சிருப்பாரு., கணக்குப் பிள்ள கணக்கச் சொல்லுவார். இவன் எந்திரிச்சி, கைகட்டி வாய் பொத்திக் கூனிக் குறுகி நின்னு, பாட்டப் பணத்தையும் சாமான்களையும் ஒப்படைச்சிட்டுத் திரும்புவான்"[77]

இதில் ஓரங்கட்டப்பட்ட சமூகத்தினர் மேலாதிக்கச் சாதியினரிடம் பயபக்தியோடு நடந்து கொள்ளும் முறை விவரிக்கப்பட்டுள்ளது. நம்பூதரிகளைப் போல நாயர்களும் மேலடுக்கில் இருந்த சாதியினராவர். அவர்களும் அடித்தட்டு மக்களின் சுயமரியாதையை அழிப்பதில் கவனம் செலுத்தினர்.

> "ஒரு காலத்தில எங்க மக்களெல்லாம் நாயர்கள் வாழக்கூடிய பகுதிகளுக்குப் போனா, அவங்கள எஜமான் என்றுதான் கூப்பிடணும்; தலையில கட்டின கட்டை, அல்லது தோள்ல போட்ட துண்டை எடுத்து முழங்கையில தொங்கப் போட்டுக்கிடுவாங்க அல்லது இடுப்பில கட்டுக்கிடுவாங்க. நாயர் குடும்பங்கள்ல உள்ள சின்னப் பையன் கூட எங்களப் பேர் சொல்லித்தான் கூப்பிடுவான். எங்க பெரியவங்க அந்த சின்னப் பிள்ளைகள எஜமான் என்றுதான் கூப்பிடணும். இப்படித்தான் அன்னக்கி இருந்தது"[78]

எனச் சாதி வெறியின் கொடூரம் சித்திரிக்கப்படுகிறது.

## மேலாதிக்கம் செய்தல்:

வெங்கடேசனின் தந்தையார் படித்து முடித்துத் திருவனந்தபுரம் தலைமைச் செயலகத்தில் வேலை பார்த்தபோது அங்குச் சாதிக் கொடுமைக்கு ஆளாகிறார். அவருக்குக் கீழே பணிபுரியும் ஒரு சேவகனிடம் மதிய உணவுக்குக் கருப்பட்டி வாங்கி வரும்படிச் சொன்னபோது அவன் அவரது சாதியின் தொழிலைச் சொல்லி அவமானப்படுத்துகிறான். அவனைச் 'சாதிவெறிபிடித்த நாய்' என்ற

சொற்றொடரால் நாவலாசிரியர் குறிக்கின்றார். அவனது சாதி வெறி வாசகம் கீழே தரப்படுகிறது.

> "சார் எந்தக் கடையிலும் இப்போ கருப்பட்டி கிட்டாது. ஏனெங்கில் சாணாப் பயயெல்லாம் பனை ஏற்றை விட்டுவிட்டு சர்க்கார் சோலிக்கு வந்துட்டான்" [79]

என்று கூறிய போது வெங்கடேசனின் தந்தை அவனது கன்னத்தில் அறைந்து விடுகிறார். பின் உயிருக்குப் பயந்து வேலையை விட்டு விட்டு வந்துவிடுகிறார். இது படித்து வேலை செய்பவர்களிடம் கூட சாதியுணர்வு இருப்பதைப் புலப்படுத்துகிறது.

வேற்று சாதிக்காரர்களின் மாடு கூட தனது நிலம் வழியே செல்லக்கூடாது எனக் கருதும் ஒரு சாதியுணர்வு மிக்கப் பாத்திரம் நாவலில் இடம் பெற்றுள்ளது. அகஸ்தியலிங்கம் எனும் பாத்திரமே அச்சாதியுணர்வு மிக்கப் பாத்திரமாகும். பாக்கியமணி அவரது வயலில் மரமடிப்பதைத் தடுத்து நிறுத்த முயலும் அகஸ்த்தியலிங்கம், உயர்சாதிக்காரரின் வயல் வழியாகப் பாக்கியமணியின் மாட்டை ஓட்டி வந்தது தவறு என்று குறிப்பிடுகிறார்.[80]

ஒடுக்கப்பட்டுக் கிடக்கும் இனம் படிப்படியாக உயர்ந்து வருவதைப் பார்த்து மேல் சாதி அதிகாரிகள் பொறாமை அடைவது குறித்தும் நாவல் பேசுகிறது. இவ்வினத்தார் பாறை இடுக்குகளில் ஓந்தியைப் போல் ஒடுங்கிக் கிடந்ததாகவும், இப்போது மகாராணியைப் போல் திமிராக நடப்பதாகவும் அதிகாரியின் எண்ணவோட்டம் அமைகிறது. அதிகாரிகளின் நிழலைப் பார்த்தாலே பயப்படும் ஒரு சமூகம் பின்னர் அச்சமற்று வாழ்வதை அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. பெட்டைக் கோழியைப் போல் பணிந்து குனிந்த அவ்வினம் பற்றிய பழைய நினைவுகள் அவரைக் குடைகிறது. மார்பை மூடி, உடம்பை மூடி, இறைவனை வழிபடச் செல்லும் அவ்வினத்தார் மீது அவருக்குக் கோபம் மிகுகிறது.

> "பனைமட்டை சுமந்துக்கிட்டுத் திரிஞ்ச கருக்கு மட்டை நாயிகளெல்லாம் இப்ப புத்தகங்களைச் சுமந்துகிட்டு பள்ளிக்கூடம் போகுது. அவங்க அஞ்சி வருசம் படிச்சா அகில உலகத்திலயும் அதுகளுக்கு வேலை"[81]

என்ற அதிகாரியின் எண்ணம் சாதிய வெறியிலிருந்து முளைத்தது ஆகும்.

## தீட்டு என ஒதுக்குதல்:

தீண்டாமை ஒரு பாவச்செயல் எனப் பரப்புரை செய்யப்பட்டாலும், அது சமுதாயத்தை விட்டு அகன்றபாடில்லை.

> "சில சமுதாயங்களில் பெரும்பான்மை மக்கள் தொகை கொண்ட தேசிய மக்களினம் தவிர ஒன்று அல்லது இரண்டு மரபுவழி இனத்தவர் அவர்கள் செய்யும் தொழில்களால் தீண்டத்தகாதவர்களாகக் கருதப்படுகின்றனர்.

அவர்கள் பெரும்பாலும் சக்கிலித் தொழில் கருமான் தொழில் போன்ற தொழில்களைச் செய்பவர்களாக உள்ளனர்"[82]

என்று பக்தவச்சல பாரதி குறிப்பிடுகிறார்.

கழிப்பறை கழுவும் தொழிலைச் செய்பவர்கள் சமூகத்தால் அவமதிக்கப்படுவதையும் நாவல் கவனப்படுத்துகிறது. இப்பணியைச் செய்பவர்களுக்குக் குடிக்க குவளையில் நீர் கொடுக்கப்படாததையும், கையால் மொண்டு தண்ணீர் குடிக்க வைக்கப்படுவதையும் நாவல் கவலையுடன் பதிவு செய்கிறது. ஊர்த்தலைவர் வீட்டில் குருசாமி கழிப்பறை கழுவியபின் கூலி மறுக்கப்படுகிறது. அவரது பிறப்பு பற்றிய வசைமொழிகள் உதிர்க்கப்படுகின்றன. முத்து வீட்டில் குருசாமி குடித்த அதே குவளையில் நீர்பருகியதை நினைக்கும் சேதுமாதவனுக்கு அருவருப்பு மேலிடுகிறது. பிறரது கழிப்பறை கழுவும் பணியைத் தியாக உணர்வுடன் செய்பவர்களை அநாகரீகமாக நடத்தும் சமூக எதார்த்தத்தை இச்செய்திகள் உணர்த்துகின்றன.

குருசாமிக்கு நாற்காலி போட்டு, தான் சாப்பிடும் அதே தட்டைக் கொடுத்து உண்ண வைக்கும் முத்துவின் செயலையும் சேது மாதவனால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. சேது மாதவனை விட பத்து வயது அதிகமான குருசாமியை அவன் ஒருமையில் அழைப்பதைத் தவறு என முத்து சுட்டிக் காட்டியபோது அவனது சாதிப்புத்தி வெளிப்படுகிறது.

"ஏன் கக்கூஸ் கழுவுறவனையும் அய்யா- சாமின்னு கும்பிடணுமோ? சேது குரலில் ஏளனம் தெறிக்கிறது.

"சொறி நாயைக் குளிப்பாட்டி நடுவீட்ல போட்டாலும் அது குப்பையில போய்த்தான் புரளும். அது போலத்தான் இந்தக் கீழ்ச்சாதிகளும்"[83]

எனக் குருசாமியின் சாதியைச் சேதுமாதவன் இழிவுப்படுத்திப் பேசுகிறான். அவன் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த ஒரு மாணவனைக் 'கரும்பிசாசு' என உருவகப்படுத்தி பேசுகிறான்.[84]

ஒடுக்கப்பட்ட சாதியினரைத் தீட்டாகக் கருதும் ஆதிக்கச் சாதியினரின் அநீதிகளையும் நாவல் இயம்புகிறது. காட்டில் வாழும் வனச்சாதிப்பிரிவைச் சார்ந்தவர்கள் மேலாதிக்கச் சாதியினரின் கண்ணில் படாமல் வாழவேண்டும் என்ற சமூக ஒழுங்கின் ஒழுங்கீனத்தையும் அது சொல்லுகின்றது. வனச்சாதிச் சிறுவன் ஆதிக்கச் சாதியினரைக் கண்டால் காட்டில் ஒளிந்து கொள்வது பற்றிய ஐயத்தை மகன் எழுப்பியபோது ஒரு தந்தையின் பதில் கீழ்க்காணுமாறு அமைகிறது.

"அவன் ரொம்ப ரொம்பக் கீழான சாதிப்பிறவி, மகனே நம்மைப் போன்ற உயர்சாதியினர் அவனைக் கண்ணால்ப் பார்த்தாலே தீட்டு, நாம் அருகே வருகிறோம் என்பதைக் கைதட்டி அவனுக்கு அறிவித்தால், மரத்தின் பின்னோ, அல்லது ஆற்றிலோ, குளத்திலோ, ஒளிந்து கொள்வான். அப்படித் தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்காக அவன் இப்படிக் கத்துகிறான்"[85]

என்பதில் சாதியின் கோரமுகம் காட்டப்படுகிறது. உயர் சாதியினரின் கண்ணில் வனச் சாதியினர் பட்டால் அவர்களை மேலாதிக்கச் சாதியினர் வெட்டிக் கொன்று விடுவார்கள் என்று நாவல் கூறும் செய்தி அதிர்ச்சியூட்டுவதாக அமைகிறது.

மேலாதிக்கச் சாதியினரைக் கண்டால் புலையர்கள் அறுபத்தி நான்கு அடிக்கு அப்பால் விலகி நிற்க வேண்டும், அப்படி நிற்காவிட்டால் சவுக்கடி விழும் என்ற வரலாற்றுண்மையை நாவல் எடுத்தியம்புகிறது.[86] புலையர்கள் மேலாதிக்கச் சாதியினர் வீட்டில் அடிமைகளாக இருந்ததாகவும், அடிமையின் மனைவி, பிள்ளைகளை விற்கும் உரிமை எஜமானுக்கு இருந்ததாகவும் நாவல் குறிப்பிடுகிறது.

## மதப்பிரிவினை:

மதச்சண்டையின் பின்னணியில் மதத்தலைவர்கள் இருப்பதை மறுபக்கம் நாவல் நுட்பமாகப் புலப்படுத்துகிறது. கிறிஸ்து ஓரிடத்தில் கூட பிறமதக்கருத்துக்களையோ, பிற கடவுளரையோ குறைவாகப் பேசவில்லை. ஆனால் அவரைப் பின்பற்றுவதாகச் சொல்லிக் கொள்ளும் கிறித்தவத் தலைவர்கள் பிறமத்தினரை இழிவுபடுத்துவது என்பது பிறமதத்தினருக்கு எதிரானது மட்டுமன்று, கிறிஸ்துவுக்கும் எதிரானது. இதனை உணராத போலிக்கிறித்தவர்கள் நாவலில் அடையாளப்படுத்தப்படுகின்றனர். சொந்த இலாபங்களுக்காகப் பொதுமக்களைத் தூண்டி விடும் போக்கை ஜார்ஜ் கண்டிக்கிறான்.

"இதுகள இந்தப் பக்கம் ஏற்பாடு பண்ணுனவிய ஒண்ணு ரெண்டு சாமியார்க. ஒருத்தர் இப்ப எங்க சபையில் இருந்தே வெளியேறி, ஒரு பெரிய நிறுவனம் நடத்திக்கிட்டிருக்கார். சாமியார் உடுப்பக் கழற்றி எறிஞ்சி, கல்யாணமும் பண்ணிக்கிட்டு, நல்லா இருக்காரு. ஏகப்பட்ட வெளிநாட்டுப் பணம். இன்னொரு ஃபாதர் அமெரிக்காவில் குடியேறி சொகுசா வாழுறாரு. மத்தவங்க பலருக்கும் கோடி கோடியா பணம் வந்தது. இந்தப் பணத்துக்காக வேண்டி இவங்க பண்ணின அநியாயங்கள் தூண்டி விட்ட கொலை பாதகங்கள்-இதுகளும் கலவரத்துக்குக் காரணம்"[87]

என்பதில் மதக் கலவரத்தைத் தூண்டும் சில கிறித்தவப் பாதிரியார்களின் அரசியல் வெளிக்கொணரப்பட்டுள்ளது.

பிற மதத்தவரின் அடையாளக் குறியீடுகளை அழிப்பது மதவெறியின் செயல்முறைகளில் ஒன்றாகும். குமரி மாவட்டத்திலமைந்த ஒரு பள்ளி ஆண்டுவிழாவில் புகைப்படம் எடுக்கும்போது இந்து மாணவர்களின் நெற்றியிலிருந்த நாமங்கள் அழிக்கப்படுகின்றன. கிறித்தவ நிர்வாகத்துக்குட்பட்ட பள்ளியில் இத்தகைய நடவடிக்கைகள் இருக்கத்தான் செய்யுமென அதனை அங்குள்ள ஆசிரியர்கள் நியாயப்படுத்திப் பேசுகின்றனர்.[88] பிறமதக் குறியீடுகளை அழிப்பது மனிதர்களின் மனதைப் புண்படுத்தும் அநாகரீகச் செயல் என்ற புரிதலை நாவல் மறைமுகமாகத் தருகிறது.

**வறுமை:**

சமநிலையற்றச் சமூக அமைப்பில் வறுமை எனும் சிக்கலுக்கு முக்கிய இடமுண்டு, செல்வம் சிலரிடம் மட்டுமே குவிவதால் அதன் மறுபுறம் வறுமை உருவாகிறது. பொதுவுடைமைமுறை பின்பற்றப்படாத சமூகங்களில் வறுமை எனும் சிக்கல் சோகமான காட்சியாய் விரிந்து கிடக்கிறது. தேவைக்குப் போக மிஞ்சிய தனி நபர்களின் சேமிப்பு, பணமுதலைகளை உருவாக்குகின்றது. உடைமைச் சமூகத்தில் பொருளடிப்படையிலேயே சமூக மரியாதை அமைகிறது. செல்வம் வைத்திருப்பவன் ஆண்டானாகவும் வறுமையில் வாடுபவன் ஏதோ ஒரு வகையில் அடிமையாகவும் வாழும் முரண்எதிர்விலேயே இச்சமூகம் இயங்கிக் கொண்டிருக்கிறது. வறுமையை ஒழிப்பது பற்றிய சிந்தனை வள்ளுவர் காலத்திலேயே வலுப்பெற்று விடுகிறது.

"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டும் எனின்
பரந்து கெடுக உலகியற்றியான்"[89]

என வள்ளுவர் கூறுகின்றார்.

"வண்மை இல்லை ஓர்
வறுமை இன்மையால்"[90]

என்பது கம்பனின் இலட்சியக் கனவாகும்.

"தனியொருவனுக் குணவிலை யெனின்
ஜகத்தினை அழித்திடுவோம்"[91]

என்பது பாரதியின் ஆவேசக்குரலாகும். மார்க்சியத்தின் வரவுக்குப்பின் மேடுபள்ளம் நிறைந்த முரண்பட்ட சமூக அமைப்பை மாற்றும் சிந்தனைகள் படைப்புகளில் இடம் பெறத் தொடங்கின. பொதுவுடமை இயக்கம் சார்ந்து எழுதுவோரும் முற்போக்குவாதிகளும் சமநிலைச் சமுதாயத்தை உருவாக்க தமது சிந்தனைப் பங்களிப்பை நல்கி வருகின்றனர். பொதுவுடைமை இயக்கத்தின் மீது

பிடிப்புடைய பொன்னீலன் வறுமை பற்றிய சித்திரிப்புகளைத் தனது அனைத்து நாவல்களிலும் தந்து விடுகிறார்.

மறுபக்கம் நாவலில் வரும் புலையரான சாத்தனின் வறுமை சோகமான சித்திரமாகச் சிந்திக்கிடக்கிறது. சாத்தன் குமரி மாவட்டத்தில் அடிமைமுறை நிலவிய காலகட்டத்தின் பிரதிநிதியாவான். அவனும், அவனது மனைவியும், மூன்று பிள்ளைகளும் ஒரு எசமானிடம் அடிமைகளாக இருந்து வருகின்றனர். எசமான் சாத்தனின் மனைவியையும், மூன்று பிள்ளைகளையும் அடிமைகளை விற்கும் சந்தையில் விற்றுவிடுகிறான். உறவுகளை இழந்த சாத்தன் எசமானின் வயலில் வேலை செய்து வருகிறான். உழைப்புக்கேற்ற ஊதியமோ உணவோ வழங்கப்படாததால்அவன் பசியில் வாடுகிறான்.

> "புலையர் சாத்தனின் கைகள் தடுமாறின நேற்று மாலையே அவர் எதுவும் சாப்பிடவில்லை. வயிற்றைக் கட்டியது பசிமயக்கம்"[92]

என அவனது பசி வாசகர் கண்முன் நிறுத்தப்படுகிறது. எசமானியம்மா வயல் வரப்புக் குழியில் ஊற்றிய கஞ்சியைக் காக்கைகளோடு போட்டி போட்டுக் குடிக்கும் அவனது வாழ்வு வறுமைக்கான எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

மாணவப்பருவத்தில் அனுபவிக்கும் வறுமை பற்றி அறிய சங்கரன் கதாப்பாத்திரம் உதவுகிறது. மதிய உணவு பற்றிய தலைமை ஆசிரியரின் வினாவுக்கு "தண்ணியக் குடிச்சி சமாளிப்பேன். பசி எங்களுக்குப் பழக்கந்தான்" என்று பதிலளிக்கும் சங்கரன் போன்றோரை இந்தியப் பள்ளிக் கூடங்களில் மிக எளிதாகச் சந்திக்க முடியும்.

**ஊழியம்:**

குமரி மாவட்டத்தில் வாழ்ந்த ஒடுக்கப்பட்ட மக்கள் மீது திணிக்கப்பட்ட சமூக அநீதிகளில் ஒன்று "ஊழியம்' ஆகும். இது ஒடுக்கப்பட்ட சமூகம் பொருளாதாரத்தில் மேம்பட்டு விடக்கூடாது என்பதற்காக மேல்சாதி அதிகாரவர்க்கம் செய்த சதியாகும். பொருளாதாரத்தில் மேம்பாடு அடையாத சமூகப் பிரிவுகள் சுயமரியாதை கோருவதில்லை என மேட்டுக்குடி சமுதாயத்தினர் புரிந்துவைத்திருந்தனர். ஊதியமில்லாத உடலுழைப்பே ஊழியம் ஆகும்.

> "கீழ்ச்சாதியினர் அரசுக்கும் உயர்சாதியினருக்கும் வேலைசெய்து கொடுத்து அதற்குரிய கூலியைப் பெறாமல் இருப்பது ஊழியம் எனப்பட்டது."[93]

மேற்குறிப்பிட ஊழிய முறையினால் பெரிதும் பாதிக்கப்பட்டவர்கள் நாடார் மற்றும் ஈழவர் சமூக மக்களேயாவர்.

ஊழியம் செய்ய வேண்டியவர்கள் ஈடுபடுத்தப்பட்ட வேலைகள், குறித்து ஐவிபீட்டர் தனது 'சமயத்தொண்டர்களும் சமுதாய மறுமலர்ச்சியும்' நூலில் எழுதியுள்ளார். அவர்,

> "திருவிதாங்கூர் தாழ்த்தப்பட்டவர்கள், மன்னர் நாட்டைச் சுற்றிப் பார்க்கச் செல்லும் நேரங்களிலும், அரண்மனையில் விழாக்கள் நடைபெறும் காலங்களிலும் ஊதியமின்றி வேலை செய்ய வேண்டும். உப்பைத் தயாரிக்கும் இடங்களிலிருந்து உப்பை விற்பனைக் கூடங்களுக்குச் சுமந்து செல்லுதல், அரசாங்கப் பண்டகசாலைகளைப் பாதுகாத்தல் முதலிய வேலைகளுக்கும் அவர்கள் பயன்படுத்தப்பட்டனர். காடுகளிலிருந்து கொண்டுவருகிற மரத்தடிகளைப் பாதுக்காத்து வைக்கிற இடங்களைக் காவல் காக்கவும் யானைகளைப் பிடிக்கும் குழிகள் வெட்டிப் போடப்பட்ட காடுகளைக் காவல் காக்கவும், அவர்களைக் கட்டாயப்படுத்திப் பிடித்துக் கொண்டு சென்றனர்"[94]

என்று கூறுகின்றார்.

மலையாள ஆதிக்க சமூகத்தினர் அதிகாரம் செலுத்திய காலத்தில் குமரி மாவட்ட நாடார்கள், மேல்சாதியினருக்கு எந்த ஊதியமும் இல்லாமல் வேலை செய்ய வேண்டிய கொத்தடிமை முறை நிலவியது.

> "நாடார் சமூகத்தைச் சார்ந்த ஆண்களும், பெண்களும், குழந்தைகளும், மேட்டுக்குடியினருக்கு ஊதியமில்லாது, அவர்கள் ஆணையிடுகின்ற வேலைகள் அனைத்தையும் மறுத்துரைக்காமல், வீட்டுப் பணிகள் மற்றும் தோட்டப்பணிகளைச் செய்ய வேண்டும். இந்தப் பணிக்கு ஊதியம் கொடுக்கப்படமாட்டாது. மத்தியானம் ஒரு வேளை கஞ்சி கொடுப்பார்கள்"[95]

என அடித்தட்டு சமூகத்தினர் ஊழியம் செய்த செய்தி குறிக்கப்பட்டுள்ளது.

நில உடைமையாளர்களுக்கும், ஊர்த்தலைவர்களுக்கும், அதிகார வர்க்கத்துக்கும் கூலி பெறாமல் வேலை செய்யும் கடமை கீழ்த்தட்டு சாதியினர் மீது திணிக்கப்பட்டது. கோயில்களுக்கு எண்ணெய் வழங்கும் ஊழியம், விளக்குத்திரி கொடுக்கும் ஊழியம், தீவெட்டிப் பிடிக்கும் ஊழியம், அரசாங்க அதிகாரிகளுக்கு எழுத பனைஓலை வழங்கும் ஊழியம், உப்புச் சுமந்து கொடுக்கும் ஊழியம், உள்ளிட்ட பல்வேறு ஊழியங்களை அவர்கள் செய்ய வேண்டியதாயிற்று.

## அடிமைமுறை:

மீட் அய்யரின் மனைவி உருவாக்கிய உண்டுறைப்பள்ளியில், மீட் அய்யர் ஒரு அடிமைக்குழந்தையைச் சேர்த்த அன்று, அனாதைக் குழந்தைகளைத் தவிர அனைத்துக் குழந்தைகளும் விடுதியை விட்டே ஓடிவிடுவது அடிமைகளின் அன்றைய நிலையைக் விளக்குகிறது. அடிமைகளை விற்பதற்கென்று இரணியல் அருகே தனிச் சந்தை இருந்தது. அவர்களை விற்பதற்குத் துணைசெய்யும் தரகர்கள் இருந்தனர். தன்னிடம் அடிமைகளாய் இருப்பவர்களை விற்கும் உரிமை எசமானுக்கு இருந்தது. விற்கும் பொழுது அடிமைகளின் தலைகள் துணியால் மூடப்பட்டிருந்தன. ஆண், பெண் இருபாலினத்திலும் அடிமைகள் இருந்தார்கள்.

அடிமையான ஆண் பதினான்கு பணத்துக்கும், பெண் எட்டுப் பணத்துக்கும் சிறுபெண் பதினாறு பணத்துக்கும் பேரம் பேசப்படுகின்றனர். இறுதியாக அச்சிறுபெண் பன்னிரண்டு பணத்துக்கு விற்கப்படுகிறாள். அடிமை என்பதை உறுதிப்படுத்த ஓலைகள் எழுதப்பட்டன. அடிமைச் சந்தையில் அடிமைகளை விற்கும் சப்தம் கூச்சலைப் போல இருந்தது. சாத்தனின் மனைவி கீழ்க்காணும் அறிமுகத்துடன் பேரம் பேசப்படுகிறாள்.

> "இதோ பக்கத்தில் நிற்கிறதே, இது அதனுடைய இளம் மனைவி; பத்தொன்பதே வயது. வயல் உழைப்பு, தொழுவில் உழைப்பு, மற்றும் எல்லா உழைப்புக்கும் மகிழ்ச்சியோடு முன்வரும். இப்படிப்பட்ட இறுகித்திரண்ட வடிவான உடம்பை எங்கும் காணமுடியாது"[96]

என அடிமையின் தகுதிகளையும் சிறப்புகளையும் சொல்லி வியாபாரம் செய்வதைக் காணமுடிகிறது.

## வன்முறை:

இன்றைய இளைய தலைமுறை சிக்கல்களுக்கான தீர்வாக வன்முறையைக் கையிலெடுத்துக் கொள்கிறது. எதிரணியிலிருப்பவரைக் கருத்தில் எதிர்கொள்ளும் போக்குக் குறைந்து வருகிறது. காந்தி வலியுறுத்திய அகிம்சை பற்றிய உணர்வு மிகக் குறைந்து வருகிறது. சமயங்கள் அன்பை வலியுறுத்தினாலும் ஊடகங்கள் வன்முறையை இளைஞர்களின் இதயங்களில் பதித்துவிடுகின்றன. பிரச்சினைகளுக்குப் பேசித் தீர்வுகாணுதல் என்ற போக்கு மறைந்து வருகிறது. திட்டுதல், மிரட்டுதல், அடித்தல், மிதித்தல், குத்துதல், வெட்டுதல், ஆயுதங்களால் தாக்குதல், எரியூட்டுதல், கொலை செய்தல் என வன்முறையானது பல்வேறு வடிவங்களில் செயல்படுகிறது. மறுபக்கம் நாவலில் சாந்தாயின் மூத்தமகன் மன்னிப்பு எனும் அடிக்கருத்துடைய ஒளிப்பேழையை அவனது வீட்டு முற்றத்தில்

வைத்து இயக்கியபோது அவ்வூர் இளைஞர்கள் அவனுக்கெதிராகத் திரளுகின்றனர். சாந்தாயி வீட்டுக்குள் அத்துமீறி நுழைகின்றனர் அவளது மூத்தமகனைத் தாக்குகின்றனர். சாந்தாயியின் கணவன், இரண்டாவது மகன் ஆகியோரையும் தாக்குகின்றனர். இக்காட்சி நாவலில் சாந்தாயியின் குரலாக ஒலிக்கிறது.

> "அதுதான்யா எங்களுக்குந் தெரியல்ல. படம் முடிஞ்சி, என் மவன் டி.வி யையும், டெக்கையும் உள்ளே கொண்டு வைக்கிற நேரம், விடத்தரத்துப் பயலுவ அஞ்சாறு பேரு எங்க கைசாலைய எட்டிச் சாடி, பிலு பிலு-ன்னு எங்க முத்தத்துக்குள்ள குதிச்சானுவ. ஏன் எதுக்குன்னு கேக்கவே இல்லண்ணா என் மவனத் தூக்கிப் போட்டு அடி அடின்னு அடிக்கியானுவ எங்க வீட்டுக்காரரக் கீழ தள்ளி, வவுத்துலயும் நெஞ்சிலயும் சமுட்டுறானுவ... எங்க ரெண்டாம் பய இஞ்சினியரா இருக்கானில்ல, அவனுக்குஞ் சரியான அடி. நாங்க எல்லாரும் அலறியடிச்சி வீட்டுக்குள்ள போயிக் கதவச் சாத்திக்கிட்டோம்.. அடின்னா நீசத்தனமான அடி, ஆண்டவனுக்கு ஏக்காதண்ணா"[97]

என்று அவ்வன்முறையை அழுகையினூடே பதிவு செய்கிறாள். ஆசிரியர் குரலாக அன்றைய வன்முறை பிறிதோரிடத்தில் பதிவு செய்யப்படுகிறது.

வன்முறையில் ஆயுதங்கள் பெறுமிடம் முக்கியமானது. கலவரத்தில் ஈடுபடுபவர்களிடம் வெட்டுக்கத்தி, கோடாலி, தீப்பந்தம் ஆகிய ஆயுதங்கள் இருந்ததாகக் கதையில் கூறப்படுகிறது.[98] கல்லெறிதல், எரியூட்டல், தென்னை மரங்களை அழித்தல், கொள்ளையடித்தல், கோயில்களை உடைத்தல், கடவுள் சிலைகளை ஒழித்தல், கோயில் தேரை எரித்தல் ஆகிய வன்முறைகள் திரும்பத்திரும்ப நாவலில் வருகின்றன. மண்ணெண்ணையும், பெட்ரோலும் எதிரிகளின் வீடுகளை அழிப்பதில் முக்கியப் பங்காற்றுகின்றன. நூலகம் கூட தீக்கிரையாக்கப்படுகிறது.

## காதலுக்கெதிரான வன்முறை:

காதல் என்பது அகம் சார்ந்த அன்பாகக் கருதப்பட்டாலும் சமூகம் அதனைக் கோபத்துடனேயே எதிர் கொள்ளுகிறது. இருவேறுபட்ட சமூகத்தைச் சார்ந்த தலைவன் தலைவியரின் காதலால் சாதிக் கலவரங்கள் வெடிப்பதையும் காணமுடிகிறது. பெண்ணோடு களவு வாழ்க்கை மேற்கொள்ளும் தலைவனை மிகப் பெருங்குற்றவாளியாகவே சமூகம் எதிர்கொள்ளுகிறது. அத்தலைவனுக்கெதிராக வன்முறைகள் நிகழ்த்தப்பட்டால், அவற்றை நியாயப்படுத்தும் போக்கையும்

காணமுடிகிறது. காதலர்கள் வீட்டுக்கு வெளியே சமூகத்தால் வன்முறைக்கு ஆட்படுவது ஒருபுறமிருக்க, அவர்கள் வீட்டுக்குள்ளேயே துன்புறுத்தப்படும் கொடூரங்களும் தொடர்கின்றன.

பொன்னீலன் துணிவெளுக்கும் தொழிலைச் செய்யும் சாந்தாயியின் இரண்டாம் மகனுக்கும், அவ்வூர்த்தலைவர் சாமிதுரையின் மகளுக்கும் இடையேயான காதலை மேலோட்டமாகக் காட்டுகிறார். ஊர்த்தலைவரின் மகளான வைஷ்ணவிக்கும், சாந்தாயின் இரண்டாம் மகனுக்கும் காதல் உருவாகும் களமாகக் கல்விச்சாலை காட்டப்படுகிறது. இருவரும் பொறியியல் பயிலும் காலத்தில் அவ்வுறவு மலர்ந்ததாகச் செல்லப்படுகிறது. ஊர்த்தலைவரின் மகனான முத்தீசு அக்காதலுக்கெதிராக வைஷ்ணவியை அடித்துத் துன்புறுத்துவதாகக் கூறப்படுகிறது.

> "மொத மொத பயல இஞ்சினியரிங் காலேசில சேக்கக் கூட்டிட்டுப் போயிருக்கோம். தலைவரும் தன் மக வைஷ்ணவியக் கூட்டிட்டு வந்திருக்காரு. அப்பவே அந்த முத்தீசு மூஞ்சி ஒரு மாதிரிப் போச்சி..... எங்க பய நல்லாப் படிப்பான். அதென்ன சந்தேகங் கேக்க வைஷ்ணவி எங்க வீட்டுக்கு வரும்.... தலைவர் அதப் பெரிசா எடுக்கல்ல; மகன் முத்தீசுதான் அவள அடிச்சிருக்கான். அப்படி எங்களுக்குள்ள பகை வளந்து போச்சு அண்ணா"[99]

என்று சாந்தாயி கூறுவதிலிருந்து காதலுக்கெதிரான வன்முறை நிகழும் களமாக வீடு அல்லது குடும்பம் அமைவதை அறிய முடிகிறது.

சாமிநாதனின் மகன் முத்திசு சாதி மீறிய திருமணங்களுக்கு எதிரான கருத்துடையவனாகக் காட்டப்படுகிறான்.

> "சாதி மீறிக் காதல் கல்யாணம் நடக்கணும்னு மைக்குல முழங்குறான். நினைச்சாலே ரெத்தம் கொதிக்கி"[100]

என வெங்கடேசனிடம் கூறுவதிலிருந்து கலப்புத் திருமணத்துக்கெதிரான முத்தீசின் மனப்பான்மை வெளிப்படுகிறது. இம்மனப்பான்மையே தன் தங்கையிடம் வன்முறையில் ஈடுபடும்படி அவனைத் தூண்டுகிறது.

## அதிகார வன்முறை:

நாடு விடுதலை அடைந்த தொடக்ககாலகட்டத்தில் பனைத்தொழில் செய்பவர்களுக்கெதிராக அதிகார வன்முறைகள் ஏவப்பட்டதாக நாவலாசிரியர் குறிப்பிடுகின்றார். மதுவிலக்கு எனும் பெயரில் பனைத்தொழிலாளர்கள் தாக்குதலுக்குட்படுத்தப்பட்டதாக அவர் கூறுகின்றார். 'கொடுமைகள்' என்ற

சொல்லால் கேரள அரசின் அவ்வதிகார வன்முறையைச் சுட்டுகிறார். காவல்துறையில் ஆதிக்கச்சாதியினர் மிகுந்திருந்தனர் என்றும், அவர்கள் காவல்துறை வாகனத்தைத் திறந்து இறங்கும்போது ஊர்நடுங்கும் என்றும் அவர் சொல்லுகின்றார். 'கொலைமிருகங்கள்' 'காக்கிமிருகப்படை' என்ற வெங்கடேசன் கதாப்பாத்திரத்தின் சொல்லாட்சிகள் மிகையாகக் தோன்றினாலும் அவர்களது அதிகார வன்முறை பற்றிய விவரிப்பு எதார்த்தமானதாகவே தோன்றுகிறது.

"தெருத் தெருவாக அவர்கள் ஓடுவார்கள் பனை ஏறியா? பிடி எலும்பை ஒடி, மண்டைய உடை, அப்புறந்தான் கேள்வி, பனையில கள்ளு கட்டியிருக்கிறியாடா? அய்யோ, அடிபட்டு நெஞ்செலும்பு முறிந்து அலறி அலறிச் செத்த அப்பாவி மக்கள் எத்தனை பேர்"[101]

என அதிகார வன்முறையின் பயங்கரம் சொல்லப்படுகிறது.

## வரிச்சுமை:

திருவிதாங்கூர் மன்னர்கள் தமிழ் மக்கள் மீது வரிகளைச் சுமத்தியதனை வரலாற்றிலிருந்து அறிய முடிகிறது.

"நாட்டு விரிவாக்கத்தால் உருவான நிதி நெருக்கடியை நிவர்த்தி செய்வதற்கென முதன்முதலாக இத்தமிழ் மக்கள் மீது தலைவரி என்ற ஆட்கொல்லி வரியைச் சுமத்தினார் மார்த்தாண்ட வர்மா. இவருக்குப் பிறகு பதவிக்கு வந்த மன்னர் ராம வர்மா காலத்திலும் யுத்தவரியும் சொத்துவரியும் மக்கள் மீது மீண்டும் திணிக்கப்பட்டன"[102]

என வரலாற்றாய்வாளார்கள் குறிப்பிடுகின்றனர்.

இவ்வாறு சுமார் நூற்றுப்பத்து வரிகள் விதிக்கப்பட்டிருந்ததாக சுகுமாறன் குறிப்பிடுகின்றார்.[103]

மலையாள ஆதிக்க அரசு தமிழ்ச்சமூகம் மீது வரியைத் திணித்ததற்கு வரலாற்றுக் காரணம் ஒன்று இருந்தது.

"நாட்டு விரிவாக்கத்தால் உருவான நிதி நெருக்கடியை நிவர்த்தி செய்வதற்கென முதல் முதலாக இத்தமிழ் மக்கள் மீது தலைவரி என்ற ஆட்கொல்லி வரியைச் சுமத்தினார் மார்த்தாண்டவர்மா"[104]

திருவிதாங்கூரில் வரிஇல்லாத நிகழ்ச்சிகள் என்று எதுவும் இல்லை என்ற கொடியநிலையே தொடர்ந்தது.

ஒடுக்கப்பட்ட மக்களின் தலையில் வரிச்சுமை ஏற்றப்பட்டதை சாந்தினி மே.தாசும் சுட்டிக் காட்டுகிறார்.

"கீழ்ச்சாதியினர் என்று ஒதுக்கப்பட்ட, சலுகைகள் அற்ற சாதியினர் வேறு வழியில் சுரண்டப்பட்டனர். தீண்டத்தகாதவர்கள் என்று முத்திரை குத்தப்பட்ட இவர்களது சமூக, பொருளாதார, அரசியல் உரிமைகள் அனைத்தும் பறிக்கப்பட்டிருந்தன. நாட்டின் வரிப்பளு முழுமையும் இவர்களது தலையில் சுமத்தப்பட்டிருந்தது"[105]

என்பதில் ஒடுக்கப்பட்டவர்கள் வரிப்பளுவைச் சுமக்கும் சுமைதாங்கியாக உருமாற்றப்பட்டமை இயம்பப்படுகிறது.

தலைவரி, முலைவரி, தொழில்வரி, மரவரி, தரைவரி எனப் பல்வேறு வரிகள் பொதுமக்கள் மீது சுமத்தப்பட்டன. இறந்துபோனவர்களுக்குக் கூட வரிகள் விதிக்கப்பட்டிருந்ததை நாவல் எடுத்துக் கூறுகிறது. பிரம்ம சக்தியின் இரண்டரை இணை ஏர் நிலத்துக்கும், அதில் நிற்கும் மரங்களுக்கும் வரி விதிக்கப்படுகிறது. காணப்பயிருக்குத் தனி வரியும், பிற பயிர்களுக்குத் தனி வரியும் விதிக்கப்படுகின்றன. பிரம்மசக்தியின் வருமானத்தைவிட ஒன்றரை மடங்கு வரி விதிக்கப்படுகிறது. ஏழை மக்கள் மேல் சுமத்தப்படும், இவ்வரிகள் இந்நிலம்வாழ் மக்களைப் புலம்பெயர்ந்து செல்லும் அளவுக்குத் துன்புறுத்தியமையை அறியமுடிகிறது. வெள்ளையர் ஆட்சியின் போது திருவிதாங்கோடு மன்னர் மூலம் விதிக்கப்பட்ட வரிகளை பிரம்ம சக்தி பட்டியலிட்டுப் பேசுகிறார்.

"கேட்டியளா, நமக்கு இந்த ஆண்டு வரி போட்டிருக்கத! பேதியில போன ஒங்க அய்யாவுக்கும், அண்ணன் மாருக்குந் தலைவரி போட்டிருக்கு; மாமா செத்து இது முப்பதாமாண்டு, இன்னும் செத்தார் கணக்கில அவியளக் கொண்டு வரல்லியாம். அப்றம், நம்ம விளைக்குள்ள நிக்குவே.... நூத்தியெட்டுப் பனைக்கும் வரி போட்டிருக்கு. ஏறும் பனை நாப்பத்தி ரெண்டுதானே என்னேன் ஊர் நாடான் கிட்ட. இல்லை, எல்லாப் பனைக்கும் போடச் சொல்லி மேலிடத்து உத்தரவு என்கியான் நாசமாப் போன ஓட்டக்காரன். பீலி மாறாத படலிக்கும் வரி விதிச்சிருக்கு, அப்றம் புது அருவா, ஒண்ணு அடிச்சியளே அதுக்கு வரி. போன ஆண்டு வாங்கின குடுவைக்குத் திரும்பவும் வரி, நம்ம விடிலிக்கு வரி ஏன்னா புது ஓலை மேஞ்சிருக்காம்... ஆக மொத்தம் அறுபத்தி ஏழே முக்காப் பணம் வரி அவன் தலையில இடிவிழ. போன மழையில நாம புதுசா நட்டுப் பிடிச்சமே மாங்கண்ணும் பிலாக்கண்ணும், கொண்ட கூட கட்டல்ல, அதுவளுக்கும் வரி விதிச்சிருக்கான்....."[106]

திருவிதாங்கூரிலுள்ள மக்கள் தலையில் வளரும் முடிக்காகவும் வரிகட்ட வேண்டியிருந்தது. பெண்களின் மார்பகங்களுக்கும் வரிசெலுத்தும் நிலையிருந்தது. பதினாறு வயது முதல் முப்பத்தைந்து வயது வரையுள்ள இளம் பெண்கள் இவ்வரியைக் கட்டும்படி நிர்பந்திக்கப்பட்டனர். இவ்வரிக்கு எதிர்ப்பு தெரிவித்த பெண்ணின் புரட்சிகரச் செயல்பாடு வரலாற்றில் பதிவாகியுள்ளது.

> "இவ்வரிக்கு எதிர்ப்புத் தெரிவித்து வரி வசூலிக்கின்ற அதிகாரிகளின் தொல்லைகளைத் தாங்காத சேர்த்தலை என்ற வட்டத்திலுள்ள ஈழவப் பெண்மணி ஒருத்தி தன்னுடைய இருமுலைகளையும் அறுத்து வாழை இலையில் வைத்து வரி வசூலிக்கும் அதிகாரியிடம் கொடுத்தாள்"[107]

என ஐசக் அருள்தாஸ் குறிப்பிடுகிறார். வரி செலுத்த முடியாத பெண் தனது மார்பை அறுத்த நிகழ்வை முகிலை இராசபாண்டியனும் சுட்டுகிறார்.

> "தலை, இறை, வேலை படிவு, தாலி இறை முதலான வரிகளை இந்தத் தாழ்த்தப்பட்டவர்கள் அரசுக்குச் செலுத்த வேண்டும். முகத்தில் மீசை வளர்ந்தவுடன் ஆணும், மார்பு வளர்ந்தவுடன் பெண்ணும் தலைவரி கட்ட வேண்டும். வரி செலுத்த முடியாத ஒரு பெண் தனது மார்பையே அறுத்துள்ளாள்"[108]

என்கிறார்.

நாவலில், வடதிருவிதாங்கூரைச் சார்ந்த நாங்கேலி எனும் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த பெண் ஆற்றில் குளித்து முடித்தபின் ஆதிக்கச் சாதிப்பெண்களைப் போல மேலாடை அணியும் ஆர்வத்தில் மேலாடை உடுத்தி வீதி வழியே நடந்து வீட்டுக்கு வருகிறாள். இதைக் கவனித்த அதிகாரிகள் அவளுக்கு முலைவரி விதிக்கின்றனர். அவள் மேலாடை அணிந்தமைக்காக அவளது தந்தை அதிகாரியின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டும் மன்னிப்பு வழங்கப்படவில்லை. நாங்கேலி வீட்டுக்குள் சென்று தன் மார்பகத்தை அறுத்து வாழைஇலையில் வைத்து அதிகாரியிடம் வழங்குகிறாள்.[109] மேற்காட்டிய நிகழ்வு மேலாடை அணிய விடாத ஆதிக்கச் சாதியின் பாலியல் வக்கிரத்தை வெளிப்படுத்துகிறது. மேலாதிக்க சாதியினரின் இச்சைக்கும் கண்காணிப்புக்கும் உட்பட்டதே தாழ்த்தப்பட்ட பெண்ணுடல் என்ற மனநிலையில் அதிகாரத்தின் பங்களிப்பும் உள்ளது என்பது கவனிக்கத்தக்கது.

## இயற்கையை அழித்தல்:

இந்நூற்றாண்டில் இயற்கையைப் பாதுகாக்க வேண்டும் என்ற குரல் இயற்கை ஆர்வலர்களிடமிருந்து மிகுதியாக ஒலித்துவருகிறது. ஆறு, குளம், அருவி, ஏரி, கால்வாய், ஓடை என அனைத்து நீர் நிலைகளும் காக்கப்படவேண்டியதன் அவசியத்தை அவர்கள் வலியுறுத்தி வருகின்றனர். குளங்களை அழிப்பது இயற்கையின் எதிர்காலத்தை அழிப்பது என அவர்கள் கருதுகின்றனர்.

குமரி மாவட்டம் நீர்வளம் நிறைந்த மாவட்டமாகக் கருதப்படுகிறது. கடல், மலை, வயல், காடு ஆகிய நான்கு நிலங்களும் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன. இங்குள்ள குளங்களில் தாமரைமலர்கள் நிறைந்து கிடப்பது இயற்கையழகுக்கு மேலும் அழகு சேர்க்கிறது.

> "செந்தாமரையும், வெண்தாமரையும், பல வண்ண அல்லிகளும் போட்டி போட்டு மலர்ந்து கிடக்கும் குளங்கள்"[110]

என்ற இடவருணனையால் இது சிறப்பிக்கப்படுகிறது. தாமரைக்குளங்கள் நிறைந்த மாவட்டத்தை வேறு எங்கும் காணமுடியாது என்று சேதுமாதவன் கருதுகிறான். இம்மாவட்டத்தில் உள்ள குளங்கள் படிப்படியாக அழிவுற்று வருவதை நாவல் எச்சரிப்பின் செய்தியாக தருகிறது.

> "அம்பது வருசத்துக்கு முன்னால ரெண்டாயிரத்தஞ்நூறு குளம் இந்த மாவட்டத்தில இருந்தது. இப்ப அது ஆயிரத்தி அஞ்நூறாச் சுருங்கிப் போச்சி..... நாகர்கோயில் நகருக்குள்ளேயே ஏழு குளங்கள மூடி பஸ் ஸ்டாண்டாக்கிப் போட்டுது அரசாங்கம். இப்படியே போனா.... இன்னும் பத்து வருசத்தில இங்க குளங்களும் இருக்காது..... நிலத்தடி நீரும் இருக்காது"[111]

என குளங்கள் அழிக்கப்படுவதால் நேரும் ஆபத்து உணர்த்தப்படுகிறது.

கட்டடங்கள் உருவாவதற்காகப் பலி கொடுக்கப்படும் மலைகள் பற்றிய செய்தியையும் நாவல் பேசுகிறது கற்களை உருவாக்கும் நோக்கில் மலைகள் பொடிகளாகத் தகர்க்கப்பட்டால் எதிர்காலத்தில் மலைகளே இருக்காது என்றும் நாவல் எச்சரிக்கிறது. குளங்களை அழித்தல், மலைகளைத் தகர்த்தல், ஆற்றிலிருந்து மணல் வாருதல் ஆகியவை சாதாரண நிகழ்வுகளல்ல. இது பூமியின் சமநிலையைக் குலைப்பதோடு பூமியதிர்ச்சி, ஆழிப்பேரலை போன்ற இயற்கைப் பேரழிவுகளை உருவாக்கக் கூடியவை என்ற சுற்றுச்சூழல் சிந்தனை இங்குப் பொருத்திப் பார்க்கத்தக்கது.

**ஓசை மாசுபாடு:**

மாசுபடுதல் என்ற சொல் நிலம், நீர்நிலை, காற்று ஆகியவை மாசுபடுவதை நினைவூட்டுகிறது. ஆனால் பிளாஸ்டிக் குப்பைகளைவிட சத்தக் குப்பைகள் மிகப் பயங்கரமானவை என்பதை இன்று சமூக ஆர்வலர்கள் உணர்த்தி வருகின்றனர். விஞ்ஞான வளர்ச்சியால் உருவாக்கப்பட்டுள்ள ஒலிபெருக்கிக் கருவிகளை ஆக்கப்பூர்வமாகப் பயன்படுத்த இச்சமூகம் இன்னும் பழகவில்லை. காது குத்து முதல் திருமணம் வரையிலான அத்தனை குடும்ப நிகழ்ச்சிகளிலும் ஒலிபெருக்கிகளை முழக்கி ஊரிலிருக்கும் பிறரது காதுகளைத் துன்புறுத்தும் நிகழ்வுகள் தொடர்கின்றன. அரசியல் கூட்டங்களில் பல கிலோமீட்டர் தொலைவுக்கு ஒலிபெருக்கி கட்டும் வழக்கமும் நிலைத்துவிட்டது. பிறரது உணர்வுகளைப் புண்படுத்தாத முழக்கங்கள் காதுக்கு நெருடலாக அமைந்தாலும் அவை பொறுத்துக்கொள்ளப்படுகின்றன.

ஆன்மீகம் சார்ந்த நிகழ்ச்சிகளில் எழுப்பப்படும் ஓசைகள் அனைவருக்கும் பொதுவானவையல்ல; அவை குறிப்பிட்ட ஒரு பிரிவினருக்கு மட்டுமே சொந்தமானவை; எனது கடவுளே உயர்ந்தவன், எனது கொள்கையே உண்மையானது என்ற கருத்துக்கள் பிற நம்பிக்கையாளர்களிடம் கோபத்தை எழுப்புவது இயல்பானதே. இந்தியச் சுதந்திரத்தை ஒலிபெருக்கி முழக்கங்கள் வழியாக வீணடிப்பது பெரிய சமுதாயச் சிக்கலாகவே தோற்றமளிக்கிறது. பிரிவினைகள் மற்றும் கலவரங்களின் தோற்றுவாயாக ஒலிபெருக்கி முழக்கங்கள் அமைகின்றன. சுற்றுசூழல் தூய்மை பற்றிப் பேசும் சமூக ஆர்வலர்கள் ஓசைமாசுபாட்டை எதிர்கின்றனர். பொன்னீலனின் மறுபக்கம் நாவல் கலவரங்களின் கருவறையாக ஓசை மாசுபாடு அமைவதை உணர்த்துகிறது. மேரிமாதாவைப்பற்றி ஒலிபெருக்கியில் தரக்குறைவாகப் பேசுவது கலவர வித்தாக அமைவதை ஓரிடத்தில் அவர் சுட்டிக்காட்டுகிறார்.[112]

ஓசை மாசுபாட்டை உருவாக்கும் அனைத்துத் தரப்பினரையும் நாவல் விமர்சிக்கிறது. பெந்தேகோஸ்தே பிரிவைச் சார்ந்தவர்களின் ஓசைமாசுபாடு பற்றிய பகுதி அதற்குச் சான்றாக விளங்குகிறது. பிறசமயத் தாக்குதல்களைக் கொண்ட ஒலி முழக்கங்கள் பிரிவினைக்கும் வன்முறைக்கும் மூலங்களாக அமைவதை நாவலில் வரும் அலெக்சின் கூற்று நிறுவுகிறது.

"சமீப காலங்கள்ல, கடக்கரைகள்லயும் பெந்தையகோஸ்துக் கிறிஸ்தவம் பரவி வருது. பெந்தையகோஸ்த் கூட்டங்கள்ல அவனுவ என்ன செய்யிறானுவ? இந்துச் சாமிகளப் பேய் பிசாசுன்னு கேலி செய்யிறானுவ.

மைக்கு வச்சி அவன் பேசுறது ஊரெல்லாம் கேக்கும். கேட்டுக்கிட்டிருக்கக்கூடிய இந்து என்ன நினைப்பான்? பாத்தியா, பாத்தியா நம்ம சாமிகளப் பேயிங்கான் கிறிஸ்துவன். பேசினவன மட்டுமா அவன் வெறுப்பான், எல்லாக் கிறிஸ்துவனையும் தான் வெறுப்பான். இதுதான் இந்தப் பக்கம் நடந்தது"[113]

எனக் கிறித்தவர்களின் ஒலிபெருக்கி வழியான கருத்தியல் தாக்குதல் பதிவு செய்யப்படுகிறது. ஒலிபெருக்கிக் குழாய்கள் வழியாகப் பெரும் ஓசைகள் பிறமதத்தவருக்குக் கேட்கும்படி எழுப்பப்படுவதும் மதக் கலவரத்துக்கான காரணம் என நுவலப்படுகிறது. பல் சமயச் சூழலில் ஒரு சமயத்தவர் விழாக் கொண்டாடும் போது மறு சமயத்தவர் அமைதிகாக்கும் மதசகிப்புத் தன்மை அற்றுப்போனால் இறுதியில் வன்முறையே மிஞ்சும் என்ற பாடத்தை நாவல் தருகிறது.

"மண்டக்காட்டு திருவிழாக் காலங்கள்ல குருசடியையும் சீரியலெல்லாம் போட்டு அலங்காரம் பண்ணுவாவ. நிறைய காணிக்கை பிரியும்; ஆனா அந்த வருசம் தென்ன மரந்தோறும் வடக்க பாக்க குழாய் கட்டி, ஜெபம் படிச்சாவ. இதெல்லாம் தேவையா?"[114]

இது ஒலிவன்முறைக்கெதிராக எழுப்பப்படும் வினாவாகும். அலெக்சின் கீழ்க்காணும் கூற்று மேற்காட்டிய கருத்தை வெளிப்படையாக அறிவிக்கிறது.

"இந்த ஸ்பீக்கர் இருக்கே, கிராமப் புறங்கள்ல பெரும்பான்மையான சண்டை உண்டாக்குறது இந்த இழவுதான்"[115]

என்று அலெக்ஸ் கருத்துரைக்கிறான் குரலும் குரலும் மோதிச் சூடேறுது என்ற நாவலின் வரி ஒலி வன்முறையைத் துல்லியமாகச் சொல்லுகிறது.

## பெண்கள் சிக்கல்கள்:

தாய்வழிச் சமூகத்தில் பெண் அனைத்து உரிமைகளையும் பெற்று வாழ்ந்தாள். தந்தை வழிச் சமூக அமைப்பு நிலை பெற்றபின் அவளது உரிமைகள் பறிக்கப்பட்டன. ஆண் உலகையே வீடாகக் கொண்டு வாழ, பெண்ணோ வீட்டையே உலகமாக நினைத்து வாழும் நிலைக்குத் தள்ளப்பட்டாள். ஆணைச் சார்ந்து வாழும் உயிரியாக அவள் வார்த்தெடுக்கப்பட்டாள்.

"நுகர் பொருளாகவும், பிள்ளை பெற்றுத்தரும் இயந்திரமாகவும் கருதப்பட்டாள். தியாகத்தின் இருப்பிடம், பொறுமையின் பிறப்பிடம் என்றெல்லாம் ஏராளமான அணிமொழிகளைச் சூட்டி சமுதாயம் கொடுத்திருந்த கருத்துப் படிமத்திலிருந்து அவள் அசைந்து விடாதபடி மிகக் கவனமாகப் பாதுகாக்கப்பட்டாள்".[116]

இவ்வாறு பெண்களை ஒடுக்கும் ஆணாதிகாரத்துக்கெதிராக நவீன இலக்கியம் குரல் கொடுத்தது. பொன்னீலன் மறுபக்கம் நாவலில் பெண்களின் சிக்கல்களை விளக்கியுள்ளார்.

## பெண் அடிமைத்தனம்:

மறுபக்கம் நாவலின் நாயகனான சேதுமாதவன் பிற்போக்குத் தனங்களின் மொத்தவுருவமாக விளங்குகிறான். மதப்பழமைவாதம், சாதி வேறுபாட்டுணர்வு ஆகிய பிற்போக்குப் பண்புகளோடு பெண்களுக்கெதிரான மனநிலையும் கொண்டவனாக வாழுகிறான். முத்துவின் வீட்டில் தங்கியிருந்த போது அவளது நூலகத்திலிந்த பெரியாரையும் மார்க்சையும் பார்த்துவிட்டு அதிர்ச்சியடைகிறான். தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்தவரான குருசாமியை அண்ணா என்றழைப்பதையும் எதிர்க்கிறான்.

"கடவுளே, கடவுளே ஒரு பொட்டச்சி வீட்ல இப்படிப்பட்ட புஸ்தகங்களா? இவ எப்படி ஆம்பளைக்கிக் கட்டுப்பட்டுக் குடும்பம் நடத்துவா?" [117]

எனப் பெண்களின் வாசிப்பைக் கூடக் கொச்சைப்படுத்துகிறான். வள்ளியூர் நகரப் பஞ்சாயத்து உறுப்பினரான நிஷாவின் தைரியமான போராட்டம் பற்றிய செய்தியைக் கேள்விப்பட்டு திகைத்து நிற்கிறான். பெண்களின் வளர்ச்சியில் பொறாமைப்படுகிறான். இப்படியே பெண்கள் வளர்ந்து விட்டால் ஆண்கள் பின் தங்கி விடுவதாகவும் எண்ணுகிறான். முத்து தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்தவரான குருசாமியை அண்ணா என்றழைப்பதையும் எதிர்க்கிறான்.

"பெண் கீழான பிறவி"[118] என்ற மேற்கோளை உண்மையென எண்ணுகிறான். பெண்களுக்கு அனுபவம் போதாது என முத்துவிடம் மொழியாடுகிறான். மே தினமன்று சிவப்பு ஆடை அணிந்து முத்து வீட்டில் பெண்கள் கூடியபோது "திரியுறாளுக" என முணுமுணுக்கிறான்.[119] மேலும், மேதினக் கூட்டத்தில் பெண்கள் இறுக்கமான ஆடை அணியக்கூடாது என்றும், பெண்களுக்கு அடக்கம் தான் முக்கியம் என்றும் குறிப்பிடுகிறான். பெண்கள் இறுக்கமாக ஆடையணிந்தால் ஆண்களைச் சபலப்படுத்தும் என்றும் கூறுகின்றான்.[120]

## மேலாடை அணியும் உரிமையின்மை:

குமரி மாவட்டத்தில் பெண்கள் மேலாடை அணிவதற்கு இருந்த தடையை கலாச்சாரத்தின் அழுக்கு என்று குறிப்பிடலாம். பிற்படுத்தப்பட்ட மற்றும் தாழ்த்தப்பட்ட வகுப்புக்களைச் சார்ந்த பெண்கள் பொது இடங்களில் மேலாடை

அணியமுடியாத நிலை இருந்தது. சந்தைவாசலில் நிற்கும் அதிகாரிகள் மேலாடை அணிந்த பெண்களை அவமானப்படுத்தினார்கள். தாழக்குடி அருகே மேலாடை அணிந்து சென்ற பெண்ணுக்கு இழைக்கப்பட்ட அநீதி சாதிய ஆணாதிக்கத் திமிரின் வக்கிரமாகும்.

> "வடக்கே தாழக்குடிப் பக்கம் ஒரு பொண்ணு, நல்ல முறையில் உடுத்திக்கிட்டுப் பாதையோட வந்துக்கிட்டிருந்தாளாம், சாதி வெறியனுவ அவள நடுத்தெருவில விட்டுத் துணிய உரிஞ்சி தெய்வம் வாழக்கூடிய இடங்கள எச்சிப்படுத்தி ஒருத்தன் அவ முலையக் கடிச்சே போட்டானாம்"[121]

என்ற செய்தி சாதியப் பயங்கரவாதம், பாலியல் வன்புணர்வு, வன்முறை ஆகிய குற்றங்களின் கூட்டுப் பிழையைச் சுட்டுகிறது.

பிற்படுத்தப்பட்ட மற்றும் தாழ்த்தப்பட்ட பெண்கள் சந்தைக்கு மேலாடை அணிந்து செல்லமுடியாத அவலத்தைப் பிச்சிப்பூவின் வாழ்வு வழி அறியமுடிகிறது. சந்தைக்குள் கிறித்தவப்பெண்கள் ஆடை அணிந்து செல்ல அனுமதிக்கப்பட்ட அக்காலத்தில் இந்து சமயப் பெண்களுக்கு அவ்வுரிமை மறுக்கப்பட்டதை அந்நிகழ்வு விளக்குகிறது. பொன்னாபரணம் என்ற கிறித்தவப் பெண்ணுடன் இணைந்து சந்தைக்குச் செல்லும் பிச்சிப்பூ எனும் இந்துப் பெண்ணுக்கு அத்தகைய அநீதி இழைக்கப்பட்டது. மேலாடை அணிந்து சென்ற பொன்னாபரணம் சந்தைக்குள் செல்ல அனுமதிக்கப்படுகிறாள். ஆனால் மேலாடையுடன் உள்ளே நுழையும் பிச்சிப்பூ ஆதிக்கச் சாதி அதிகாரிகளின் பெருக்கல் வடிவக் கம்பால் தடுத்து நிறுத்தப்படுகிறாள். அவளது மேலாடை கிழிக்கப்பட்ட செய்தியை நாவல் கீழ்க்காணுமாறு பதிவு செய்கிறது.

> "பதட்டமடைந்து நெட்டைக் காவல்காரர் தன் கொக்கியால் பிச்சிப்பூ போட்டிருந்த தோள்ச் சேலையை இழுத்தார். கொக்கி அவள் முந்தானையையும் அதன் அடியில் இருந்த ரவிக்கையையும் கழுத்தில் தொங்கிக் கொண்டிருந்த தாலியையும் சேர்த்து இழுத்தது. முந்தானை விலகி ரவிக்கை கிழிந்து தாலி அறுந்து விழுந்தது"[122]

எனச் சாதிய மேலாதிக்கமும் அதிகார வன்முறையும் பெண்ணுடலில் செயற்படுவதை நாவல் விரித்துரைக்கிறது.

## பெண் கல்வி மறுக்கப்படுதல்:

ஆண் குழந்தைகளுக்கும் பெண் குழந்தைகளுக்குமான வளர்ப்பு முறை வேறுபாடு பற்றியும் நாவல் விளக்குகிறது. ஆண் குழந்தைகளுக்குக் கல்வி கற்கும் உரிமை வழங்கப்படுகையில் பெண் குழந்தைகளுக்கு அவ்வுரிமை மறுக்கப்படுகிறது.

மூர்த்தி கதாப்பாத்திரத்தின் குழந்தை வளர்ப்பு முறை இவ்வகைப்பட்டதாக உள்ளது. அவரது மகளுக்குப் பள்ளிக் கல்வி வழங்க அவர் மறுக்கிறார். இரண்டு ஆண் பிள்ளைகளையும் படிக்க வைக்கிறார். அவரது அண்ணன் பேரின்பன் பெண் குழந்தையைப் படிக்க வைக்கும்படி வற்புறுத்தியும் அவர் அதற்கு இணங்கவில்லை. இவ்வாறு பெண்ணுக்குக் கல்வி அவசியமில்லை என்று கூறும் பழமைவாதத்தின் பிரதிநிதிகளை நாவல் அடையாளங்காட்டுகிறது.

### கைம்பெண் துயர்:

இந்திய விடுதலைக்கு முன் மீட் அய்யர் வாழ்ந்த காலத்தில் இந்தியாவின் கைம்பெண்கள் கொடுமைகளை அனுபவித்து வந்தார்கள். அவர்கள் வெள்ளைச்சேலை கட்ட மட்டுமே அனுமதிக்கப்பட்டார்கள். கணவனை இழந்த சிறுவயதிலிருந்து மரணமடையும் வரை வேறு திருமணம் செய்வதை சமூகம் வரவேற்பதில்லை. மீட் அய்யர் இதனை மிகப்பெரும் சமூக அநீதியாகக் கருதுகிறார்.

> "என்ன ஜனங்கள்! இத்தனை விதவைகளைக் கொண்ட சமூகம் என்றாவது உருப்படுமா? கசந்து சுருங்குகிறது அய்யர் மனம். இருபதில் விதவை, எழுபதில் கிழவி, இடையில் வாழ்வு? யாருக்கும் மனசாட்சி இல்லையே"[123]

எனக் கைம்பெண் நிலைக்காக வருத்தப்படுகிறார். கைம்பெண்களின் லேஸ் பின்னும் திறமையைப் பராட்டுகிறார். இப்பெண்களை மறுதிருமணம் செய்ய அனுமதித்தால் அவர்களது திறமை முழுமையாக வெளிப்படும் என்று அவர் கருதுகிறார்.

### பெண்ணுடலுக்கெதிரான வன்முறை:

கலவரங்களிலும், போர்களிலும் பெண்ணுடலைச் சிதைக்கும் வன்முறைகள் காலகாலமாக நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. மண்டைக்காட்டுக் கலவரத்திலும் பெண்ணுடலுக்கெதிராக ஆணின் வன்முறை செயற்படுகிறது.

> "இந்த நேரம், சானல்ல குளிச்சிக்கிட்டு நின்ன ரெண்டு பொம்பளைக கரையில வச்சிருந்த துணிகளை எடுத்துத் தண்ணியில எறிஞ்சானுவ எங்க பயலுவ. பொம்பளைக பயந்து அலறி, பக்கத்தில இருந்த கடைக்குள்ள ஓடி ஒளிஞ்சாவ. கடைக்காரர் கதவைச் சாத்தி அதுகளப் பாதுகாத்தாரு"[124]

என்பதில் கலவரங்கள் போர்கள் போன்ற புறம் சார்ந்த வன்முறையில் பெண்ணுடல் மீதான தாக்குதல்கள் தொடர்வது எடுத்துக் காட்டப்படுகிறது. திருவிழாக் கூட்டங்களில் பெண்களுக்கெதிரான பாலியல் சுரண்டல்கள் நிகழ்வதை ஆசிரியர் ஓரிடத்தில் குறிப்பிடுகிறார்.

"திருவிழாக் கூட்டத்தில் நடக்கக்கூடிய சில்மிசங்கள் கூட வடக்குப் பக்கம் கூட்டத்தில் நடக்குமே ஒழிய, கடற்புறதுக்காரளால நடந்ததில்ல"[125]

என்பதில் பாலியல் சுரண்டல் பற்றி மேலோட்டமாகச் சொல்லப்படுகிறது.

சுதந்திரம் அடைவதற்கு முந்தைய காலகட்டத்தில் நிகழ்வதாகச் சித்திரிக்கப்படும் நிகழ்விலும் பெண்களின்ஆடைகள் கிழிக்கப்படுவது உணர்த்தப்படுகிறது.

"பெண்கள் கூட்டத்தில் சிலர் பாய்ந்து அவர்களின் சேலைகளை உருவி ரவிக்கைகளைக் கிழித்தார்கள்"[126]

என்பதில் பெண்ணின் உடல் நோக்கிக் குறிபார்த்து நிகழ்த்தப்படும் வன்முறை குறிக்கப்படுகின்றது.

விடுதலைக்கு முந்தைய காலத்தில் குமரி மாவட்டத்தில் அடிமைகளாக இருந்த பெண்கள் மிகுதியாக விற்கப்பட்டார்கள். அடிமை முறையை எதிர்க்கும் உரிமை அடிமைப் பெண்களுக்கு இல்லாமலிருந்தது. எசமான், அடிமையின் மனைவியை விற்கும் பொழுது அதனை எதிர்க்கும் உரிமை அடிமைகளுக்கு இல்லை. பருவப் பெண்கள் அடிமைச் சந்தையில் அதிக பணத்திற்கு விற்கப்பட்டனர். இவ்வடிமைப் பெண்கள் பெண்களாகவோ மனித உயிரியாகவோ கருதப்படாமல் நுகர்வுப் பொருளாகவும் வேலை செய்கின்ற சுவாசிக்கும் இயந்திரமாகவும் மட்டுமே கருதப்பட்டனர். சாத்தன் எனும் அடிமையின் மகள் தரகனால் விற்கப்படும் போது அஃறிணையாக அறிமுகப்படுத்தப்படுகிறாள்.

"இதோ பக்கத்தில் நிற்கிறதே, இது இதுகளுடைய ஒரே பெண் குட்டி, வயது பதிநாலு, உங்களுக்கு யோகம் இருந்தால் இன்று மாலையே பருவமடையக்கூடும். அப்படித் திரண்டு நிற்கிறது, அதனுடைய மார்பு களைப்பில்லாமல் உழைக்கும். இரை போடுபவனுக்குச் சுரந்து கொடுக்கும் காராம்பசு ஐயா, காராம்பசு..."[127]

எனப் பெண் பசுவாக உருவகப்படுத்தப்பட்ட அடிமை முறைக் காலம் நினைவூட்டப்படுகிறது.

## குடும்ப வன்முறை:

குடும்ப அமைப்பு ஆணின் அதிகாரத்தை நடைமுறைப்படுத்தும் நிறுவனமாக உள்ளது. அங்கு மனைவி எனும் பாத்திரத்தில் பங்கு பெறுபவள் துன்பியல் மெய்ப்பாடுகளையே எப்போதும் எழுப்ப வேண்டிய நிலை உள்ளது. கணவன் தனக்குக் கோபம் வரும்போதெல்லாம் மனைவிக்கெதிராக வன்முறைகளை

நிகழ்த்துகிறான். ஆண் என்ற பாலின அடையாளம் அவனுக்கு இத்தகைய உரிமைகளை வழங்கியுள்ளது. வார்த்தைகளாலும் ஆயுதங்களாலும் தாக்கப்பட்டாலும் அவற்றையெல்லாம் பொறுத்துக் கொள்ளும் மனநிலை பெண்ணிடம் உருவாக்கப்பட்டுள்ளது. இவ்வன்முறைகளுக்கெதிராகக் குரல் எழுப்பும் பெண் ஒழுக்கம் தவறியவளாகவும், ஆணவம் கொண்டவளாகவும் முத்திரை குத்தப்படுகிறாள். குடும்ப அமைப்புக்குள் நிகழும் இத்தகைய ஆணாதிக்க வன்முறையைப் பொன்னீலன் விவரித்துள்ளார்.

ராமையாவின் தந்தை, குடும்பத்தில் ஆண் எனும் ஆணவத்தில் பல்வேறு வன்முறைகளை நிகழ்த்துகிறார். அவர் மூன்றாவது மனைவியைத் திரைச்சிமீன் வாலால் அடிக்கடி விளாசுகிறார். ஆறுதல் இல்லாமல் அப்பெண் வெகுதூரம் நடந்து ஒரு தோப்புக்குள் உட்கார்ந்து அழுகிறாள்[128]

குடும்பங்கள் பெண்ணுக்கெதிரான வன்முறை நிகழும் களமாகப் போனதை இந்நிகழ்வு எடுத்துரைக்கிறது.

காரவிளை ஜான்சனின் தந்தை அவரது மனைவியிடம் வன்முறை செய்பவராக காட்டப்படுகிறார். பனைத்தொழிலாளியான அவர், பதநீர் சுமப்பதற்குத் தாமதமாக வந்த தன் மனைவியைக் கலக்கு மட்டையால் அடித்து விட அப்பெண் கிணற்றில் விழுந்து இறந்து போகிறார்.[129]

குடும்ப அமைப்பின் வன்முறை பெண்ணைத் தற்கொலைக்குத் தூண்டுகிறது என்ற உண்மை இதில் புலப்படுத்தப்படுகிறது.

முத்து வீட்டில் கணவன் வன்முறை செய்பவனாகக் காட்டப்படுகிறான். முத்துவை அவளது கணவன் அடிக்கும் போது பாத்திரங்கள் உருளுகின்றன. ஜெயா அலறுகிறாள். முற்றத்தில் முத்து நிலைகுலைந்து கிடக்கிறாள். அவன் அவளது நெஞ்சில் மாறிமாறிக் குத்துகிறான். குடித்துவிட்டு வந்து வன்முறையில் ஈடுபடும் அவனைச் சேது தடுக்கிறான். தாலி கட்டிய மனைவியை அடிக்கும் உரிமை தனக்கு இருப்பதாக முத்துவின் கணவன் வாதிடுகிறான். தாலியை முன்னரே கழற்றியெறிந்து விட்டதை முத்து நினைவூட்டுகிறாள். முத்துவின் கணவன் சேதுவைக் கள்ளப் புருசன் என்று திட்டுகிறான். வீதியில் நின்று வசைமொழிகளால் தாக்குகிறான்.[130]

ஆண் என்பவனுக்கு மனைவியை அடிக்கும் உரிமை உள்ளது என்ற சமூகத்தின் மனநிலையை இக்கோர நிகழ்வு வழி ஆசிரியர் படம் பிடித்துக் காட்டுகிறார்.

சேது மாதவனின் தந்தை வேறு பெண்ணின் சாதி தெரியாமல் காதலித்து, துப்பரவுத் தொழில் செய்யும் சமூகப் பெண்ணைத் திருமணம் செய்கிறார். பின்னர்

அவர் தினமும் அவளை எச்சில் சாதி என்று சொல்லி அவமானப்படுத்துகிறார். நள்ளிரவு வரை அவளை அடித்துத் துன்புறுத்துகிறார்."[131]

இங்கே குடும்ப அமைப்பு ஆணின் வன்முறை உணர்வுக்குக் களமாக அமைந்துவிடுகிறது.

## பேச்சுரிமையின்மை:

குடும்ப அமைப்புக்குள் பெண்ணுக்குப் பேச்சுரிமையற்ற நிலையையும் பொன்னீலன் கதையினூடே சொல்லுகின்றார். ராசாமணி மண்டைக்காடு கலவரம் பற்றிச் சேது மாதவனிடம் விளக்கிக் கொண்டிருந்தபோது அவரது மனைவி குறுக்கிட்டு மீனவர்களுக்காதரவாகக் கருத்துரைக்கிறார். ராசாமணி அவளது மாற்றுக் கருத்தைப் பாலின அடையாளத்தோடு கொச்சைப்படுத்துகிறார்.

> "போளா உள்ள" மனைவி பக்கம் திரும்பி வெடிக்கிறார் ராசாமணி
> "பொட்டச்சிக்கு ரொம்பத் தெரியும்"[132]

என ராசாமணி பொட்டச்சி என்ற கொச்சைச் சொல்லை மனைவிக்கெதிராக ஆளுகின்றார். 'போளா உள்ள' என்ற கட்டளை, ஆண்கள் பேசும் இடத்தில் பெண்கள் நிற்கக் கூடாது என்ற ஆணாதிக்கப் போக்கின் வெளிப்பாடாகும்.

## சமுதாய விழுமியங்கள்:

சமுதாயம் மனித நடத்தைக்கான விதிமுறைகளை வகுத்துள்ளது. எப்படியும் வாழலாம் என்ற மனப்போக்கை மாற்றுவதற்காகவும் இப்படித்தான் வாழவேண்டும் என்ற கட்டுப்பாட்டை உருவாக்குவதற்காகவும் உருவாக்கப்பட்ட நடத்தை முறைமைகளை விழுமியங்கள் என்று கூறலாம். தனி மனிதனும், மனிதக் குழுக்களும் தவறான பாதையில் செல்லும் அபாயத்தைத் தடுக்கவே இவ்விழுமியங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. இவை சமுதாய மதிப்புகள் என்று வழங்கப்படுகின்றன.

> "சமுதாயம் முழுமைக்கோ அதன் குறிப்பிட்ட ஒரு பிரிவு அல்லது வர்க்கத்திற்கோ உள்ள பொதுவான மனித நடத்தைகளின் நியதிகள் மற்றும் தகவுகளின் தொகுதியே சமுதாய மதிப்புகள் ஆகும்"[133]

என்று தி.சு.நடராஜன் சமுதாய மதிப்புக்கு விளக்கம் தருகிறார். பொன்னீலன் பல்வேறு விழுமியங்களை வலியுறுத்துகிறார்.

## மத ஒருமைப்பாடு:

பொன்னீலன் சமூக ஒருமைப்பாடு எனும் சமுதாய மதிப்பைப் பல்வேறு இடங்களில் கற்பிக்கிறார். மதவேறுபாட்டால் நிகழும் தீயவிளைவுகளை விளக்குவது நாவலின் முக்கிய நோக்கமாக இருந்தாலும், மத ஒருமைப்பாட்டுக்கான நிகழ்வுகளையும் அது விளக்கிச் செல்லுகிறது. கத்தோலிக்க கிறித்தவப் பிரிவைச் சார்ந்த சாந்தாயி இந்து சமுதாயத்தோடு கொண்டுள்ள நல்லிணக்கத்தை இதற்குச் சான்றாகக் காட்ட முடியும்.

> "தலைமுறை தலைமுறையா நாங்க கத்தோலிக்க வேதம்ண்ணா. ஆனா அம்மங்கோயில் பண்டிகை முதல் அத்தனைக்கும் நாங்கதான் முன்ன வந்து நிற்கிறோம். அம்மன் வாகனம் எடுக்கச்சில தீவட்டி புடிச்சிட்டு, நாங்கதான் முன்ன போறோம். நடை பாவாட விரிக்கிறோம். கல்யாணமோ, கருமாதிரியோ எல்லாம் நாங்க தான் முன்ன நின்னு முறையாச் செய்றோம்"[134]

என்ற சாந்தாயின் கூற்று இந்து சமய வழிபாட்டுச் சடங்குகளில் தம்மை இணைத்துக் கொள்ளும் கத்தோலிக்கக் கிறித்தவர்களைப் பற்றிப் பேசுகிறது.

மத ஒருமைப்பாட்டுணர்வை வாசகர் மனதில் பதிக்க நாவலாசிரியர் ஒரு மதத்தைச் சார்ந்தவர்கள் அடுத்த மதத்தின் கொள்கைகளைப் பாராட்டிப் பேசும் இடங்களை அமைத்துள்ளார். வெங்கடேசனின் தந்தை பிரம்ம சமாஜத்தில் சேர்ந்து பூணூல் போட்டுக் கொண்டவர். தீவிர இந்து சமயக் கொள்கைப் பிடிப்பு மிக்கவர். ஆனால் அவர் கிறிஸ்துவையும், கிறிஸ்தவத்தையும் புகழ்ந்து பேசுகிறார்.

> "ஒடுக்கப்பட்டவர்களினுள்ளே உறங்கிக் கிடக்கும் பேராற்றலை விடுதலை செய்யும் கிறிஸ்தவ வலிமையை உணர்ந்து வியப்படைந்தேன். அன்னியக் கடவுள் என்பதைத் தவிர ஏசுநாதர் செய்து வந்திருக்கிற காரியங்கள் நம் கடவுள் எவராலும் செய்ய முடியாதவை"[135]

எனக் கிறிஸ்துவைப் புகழுகிறார். குமரி மாவட்டத்தில் முதல் கிறித்தவரான தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த வேதமாணிக்கத்தின் மரபில் வந்த தேவகிருபை என்பவரைப் பிராமணரிலும் மேலான ஒழுக்க சீலர் எனப் பாராட்டுகிறார். பிற மதத்தைச் சார்ந்தவர்களை எதிரியாகக் கருதும் போக்கை இப்பாத்திரம் மாற்றிக் காட்டுகிறது.

இந்துக் கதாப்பாத்திரங்கள் கிறித்தவத்தைப் புகழுமிடங்களைக் கதைக்குள் கொண்டுவரும் பொன்னீலன், கிறித்தவக் கதாப்பாத்திரங்கள் இந்து சமயத்தைப் புகழுமிடங்களையும் அமைத்துள்ளார். வெள்ளைக்கார அதிகாரி ஒருவர் ராமசாமி

ஐயரிடம் இந்து சமய அறிவுக் கருவூலங்களைப் புகழ்ந்துரைக்கும் இடம் இவ்வகைப்பட்டதாகும்.

"நண்பரே, நான் கிறிஸ்தவன்தான் ஆனால் உங்கள் மதத்தில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவன். வேதம், உபநிடதம் இவற்றையெல்லாம் ஆழ்ந்து வாசித்திருக்கிறேன். என் மனதில் பட்டதைச் சொல்லுகிறேன். உங்கள் சமயமும், சமய இலக்கியங்களும் எங்கள் சொத்தாக இருக்குமானால், இந்நேரம் அதைக்கொண்டே உலக சமயங்களையெல்லாம் வென்றிருப்போம். அப்பேர்ப்பட்ட ஜோதி அது"[136]

என இந்து சமய இலக்கியங்களின் ஆழத்தைப் புகழ்கிறார்.

மத ஒருமைப்பாட்டுக்கு ஆதரவாகக் குரல் கொடுக்கும் பாத்திரமாக செல்வராசு கதாப்பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது. செல்வராசு இந்தியாவில் பல்வேறு மதங்கள், மொழிகள், தெய்வங்கள், பண்பாடுகள் இருப்பதனை ஊர்க்கூட்டத்தில் நினைவூட்டுகிறான். அவரவர்க்கு அவரவர் பண்பாடும் நம்பிக்கையும் முக்கியமானவை என எடுத்துரைக்கிறான். ஒரே தெய்வம், ஒரே மொழி, ஒரே பண்பாடு என்று பேசிய சதாசிவத்தின் கருத்தை மறுக்கிறான்.

"நீங்க சொல்றது வேறு நாடுகளுக்குப் பொருந்துமோ, பொருந்தாதோ தெரியல்ல, இந்தியாவுக்குப் பொருந்தவே பொருந்தாது. இந்தியா ஒரு நாடல்ல, நாடுகளோட ஒன்றியம் இங்கே பல மதம், பல மொழி, பல தெய்வம், பல பண்பாடு என்னுடையது எனக்கு முக்கியம் உன்னுடையது உனக்கு முக்கியம்"[137]

என்று மத ஒருமைப்பாட்டை வலியுறுத்துகிறான். சேதுமாதவன் மண்டைக்காட்டுக் கலவரம் பற்றி ஆய்வு செய்யச் சென்றபோது அவனுக்குத் தகவல் திரட்ட உதவியவர்கள் அலெக்ஸ், ஜார்ஜ் எனும் கத்தோலிக்க கிறித்தவர்கள் ஆவர். அவ்வூருக்குள் வருவதால் பிரச்சினைகள் ஏற்படுமா? எனச் சேதுமாதவன் வினவியபோது அலெக்ஸ் கூறும் பதில் ஒருமைப்பாட்டுணர்வின் உச்சமாகும்.

"எல்லாரும் ஓரினம், எல்லாரும் ஓர் நிறை, எல்லாரும் இந்திய மக்கள். இந்த உணர்ச்சி உங்க மனசில இருக்கா? அப்றம் என்ன பிரச்சினை வரப்போகுது? சும்மா வாருங்க"[138]

என்பது சிந்திக்கத்தக்கது. கிறித்தவர்களுக்கு இந்துக்களிடம் கசப்புணர்வு இல்லையா என்று சேதுமாதவன் கேள்வி எழுப்பியபோது அலெக்ஸ் கூறும் பதில் கிறித்தவர்களுக்கும் இந்துக்களுக்கும் இடையேயான ஒற்றுமையை புலப்படுத்துகிறது.

"என்ன கசப்பு நம்மளுக்குள்ள?" ஆச்சரியத்தில் கையை விரிக்கிறான் அலெக்சு. "கேரளத்தில இருந்து மும்முடி கட்டி கோயிலுக்கு வாறவிய யாருன்னு நினைக்கிறிய? எங்க சொந்தங்கள்தானே! எங்க மீனவ ரெத்தந்தானே! அவிய இங்க வந்து தங்குறது ஒங்க இந்து வீடுகள்லயா? எங்க வீடுகள்லதானே? அவிய இந்து என்கிறதினால பாசம் மாறிடுமா?"[139]

என்ற பதில் மதங்களை விட மனங்கள் வலிமையானவை என்பதை உணர்த்துகிறது.

இந்துக்களுக்கும் கிறித்தவர்களுக்குமிடையேயுள்ள ஒருமைப்பாட்டு ணர்வையும் பொன்னீலன் உணர்த்துகிறார். மண்டைக்காட்டு அம்மன் கோயிலுக்கு வரும் இந்துக்கள் அங்குள்ள மாதா கோயிலுக்கும் செல்வதாக அவர் கதையைப் பின்னுகிறார். அங்குள்ள மாதாவை மண்டைக்காட்டம்மையின் தங்கை என்ற நாட்டார் நம்பிக்கையையும் எடுத்துக் காட்டுகிறார். இரண்டு கோயிலுக்குமே காணிக்கை போட்டு வழிபடும் மக்களையும் மத ஒருமைப்பாட்டின் அடையாளங்களாகப் படைத்துள்ளார்.

"மாதா கோயில் திறந்தே இருக்கிறது நாலு பேரும் உள்ளே போகிறார்கள். இதுதான் கண்ணம்மா விளக்குகிறான் ஜார்ஜ். 'மண்டக்காட்டம்மைக்குத் தங்கச்சி இவ, மண்டைக்காட்டுக்கு வாற சனங்க எல்லாருமே அந்த அக்காளுக்குப் போலவே இந்தத் தங்கச்சிக்கும் காணிக்கை போட்டுக் கும்பிடுவாங்க; ரெண்டுமே கடப்புறச் சனங்களோட அம்மாமாருதான். இன்னா பாருங்க.... கடல் குளிச்சிக்கிட்டு வாறவியள. இவிய கண்ணம்மாவுக்குக் காணிக்கை போட்டுக் கும்பிட்டுக்கிட்டுத்தான் மண்டைக்காட்டம்மைகிட்டே போவாங்க"[140]

என்கிறார்.

இந்துக்களிடம் இருக்கும் அதே மத ஒருமைப்பாட்டுணர்வு கிறித்தவர்களிடம் இருப்பதையும் இதே பகுதியில் எடுத்துக் காட்டுகிறார். மீன் வியாபாரம் செய்யும் பெண்கள் மீன் பெட்டியைத் தூக்கிச் செல்லும் போது முதலில் மாதாவை வணங்கி விட்டு, பின்னர் ஆற்றைத் தாண்டி வந்து மண்டைக்காட்டம்மனை வணங்கி காணிக்கைப் போட்டுச் செல்வதாகக் கதையமைத்துள்ளார். இவை நாவலுக்குள் மத ஒருமைப்பாட்டின் தடயங்களாகக் காணக்கிடக்கின்றன.

மண்டைக்காட்டு அம்மன் கோயிலுக்கு வரும் பக்தர்களை வரவேற்பவர்களாகக் கிறித்தவ சமயத்தைச் சார்ந்த மீனவர்கள் காட்டப்படுகிறார்கள். பக்தர்களை வரவேற்றல், விருந்தோம்புதல், வசதிகளைச் செய்து கொடுத்தல், பாதுகாப்பு அளித்தல் என மதத்துக்கு அப்பால் மனிதநேயம் உள்ளவர்களாக அவர்கள் சித்திரிக்கப்படுகிறார்கள். மண்டைக் காட்டு அம்மன்

கோயிலுக்கு வரும் பக்தர்களின் கூற்று மேற்கூறிய மீனவர்களின் மத ஒருமைப்பாட்டுணர்வைப் புலப்படுத்துகிறது.

"மண்டக்காட்டு மீனவர்கள் எங்கள வரவேற்று உபசரிப்பாவ. எங்களுக்கு எல்லா வசதியும் செய்து தருவாவ. அவியதான் எங்களுக்குப் பாதுகாப்பு, திருவிழாக்கூட்டத்தில நடக்கக்கூடிய சில்மிசங்கள் கூட வடக்குப் பக்கம் கூட்டத்தில நடக்குமே ஒழிய, கடப்புறத்துக்காரளால நடந்ததில்ல. அவிய எங்கள உறவினர்களாத்தான் பாப்பாவ; நம்மள அண்டி வந்தவன், எல்லா வசதிகளையும் செய், அப்படித்தான் இருப்பாவ"[141]

எனக் கிறித்தவ மீனவர்களின் மத ஒருமைப்பாட்டுணர்வு விவரிக்கப்படுகிறது. கடலில் குளித்தல், மீன்வாங்கிச் சாப்பிடுதல், இரு தரப்புக் கடவுளரையும் வழிபடுதல் ஆகியவற்றில் மண்டைக்காட்டுக்கு வரும் கேரள மாநில பக்தர்கள், சாதி, சமய, மொழி, இன அடையாளங்களுக்கப்பால் ஒற்றுமையுணர்வுடன் நடந்து கொள்வது காட்டப்படுகிறது.[142]

எனது மதமே உயர்ந்தது என்ற ஒற்றைத் தன்மையிலமைந்த முடிவைப் பொன்னீலன் விமர்சிக்கிறார். எனது கொள்கையே உயர்ந்தது என்ற முழக்கம் எங்கிருந்து வந்தாலும் பாசிசமாகவே கருதப்படும். எமது நெறியே உயர்வானது என்பதில் அதிகாரம் கட்டமைக்கப்படுகிறது. எனவே மறுபக்கம் நாவலில் பல்சமயச் சூழலில் புரிதலோடும் இணக்கத்தோடும் வாழுவதற்கான வழிமுறைகளைக் கற்பிக்கிறார்.

"இது பன்மைத்தன்மையான உலகம் சார் அழுத்தமாகச் சொல்லுகிறார் கென்னடி. ஒற்றைத் தன்மையின் யுகம் முடிஞ்சிபோச்சி. பிறரை மதிக்கவும், நேசிக்கவும் தெரியாதவனுடைய கதை இனி எடுபடாது. எந்த மதமாக இருந்தாலுஞ்சரி. சாதியாக இருந்தாலுஞ் சரி"[143]

என்ற கருத்து ஏற்புடையதாக அமைகிறது.

மத ஒருமைப்பாட்டுணர்வுடன் இருசமயக் கடவுளரையும் வழிபடும் மனிதர்கள் பலரை நாவலில் காணமுடிகிறது. கிறித்தவ சமயத்தைச் சார்ந்த அலெக்சாண்டர், நல்ல காரியங்கள் நிகழ்வதற்குமுன் இரண்டு சமயக் கடவுளரையும் வழிபடுகிறான்.

"இது எங்க அம்ம, நாங்க வச்சிக் கும்பிட்ட தெய்வம். எங்க வீடுகள்ல நல்ல காரியம் எது முடிவானாலும், முதல்ல இந்த அம்மனுக்க பூச நடத்திட்டு, அப்புறந்தான் சர்ச்சில் சாமியார்கிட்ட சொல்லுவோம். இடையில கலவரப் பிரச்சினைகைளால கொஞ்ச காலம் இந்த வழக்கம் நின்னு போய்க்கிடந்து. எனக்கென்னவோ அத விடப்புடாதுன்னு தோணிச்சி"[144]

என மத ஒருமைப்பாட்டுணர்வு, கிறித்தவரான அலெக்சாண்டரின் மூலம் பேசப்படுகிறது.

நாவலில் வரும் ஈஸ்வர பாக்கியத்தின் இரண்டாம் மகன் மணந்த தெரசம்மாள் எனும் கத்தோலிக்கப் பெண் அழகிய நாயகி அம்மனை வணங்குகிறாள். ஈஸ்வர பாக்கியம் ஈசாக்காகப் பெயர் மாற்றம் பெற்று ஏசுவடியாளை மணமுடித்து வந்தபின் அவள் இசக்கியம்மைக்கு வெள்ளிக்கிழமை தோறும் விளக்குப் போடுகிறாள்.[145]

தனித்துவத்தை இழக்காத மத ஒருமைப்பாடு எனும் சிந்தனையையும் நாவல் முன்வைக்கிறது. இரு வேறுபட்ட மதத்தை சார்ந்தவர்கள் பதிவுத் திருமணம் செய்து, திருமணத்துக்குப்பின் அவரவர் மதத்தைப் பின்பற்றி வாழுவதனை இக்கொள்கை வரவேற்கிறது. இந்து சமயத்தைச் சார்ந்த சத்தியனும், இசுலாம் சமயத்தைச் சார்ந்த நிஷாவும் திருமணம் செய்து அவரவர் மதங்களைப் பின்பற்றி இணைந்து வாழ்வதை நாவல் இதற்கு உதாரணமாகக் காட்டுகிறது. செபாஸ்டினுக்கும், கமலிக்குமான திருமண உறவிலும் மதமாற்றம் நிகழாமல் தனித்துவம் காப்பாற்றப்படுகிறது.

வழிபாட்டிடங்கள் என்பவை ஒரு குறிப்பிட்ட சமயத்தவருக்குரியவை மட்டுமல்ல, அவை அனைவருக்கும் பொதுவானவை என்ற மனநிலையை உருவாக்க நாவல் பல இடங்களில் முயலுகிறது.

> "அங்க இருந்து இங்க வாற பொண்ணு இங்க அம்மங்கோயிலு, சொள்ள மாடங் கோயிலு எங்க போனாலும் திருநூறெல்லாம் பூசிக்கிடுவா. இங்கிருந்து அங்க போறவ, மாதா கோயிலுக்குப் போயி மண்டி போடுவா. இப்படி ஒரு உறவு அங்கேயும் இங்கேயும் நீண்ட காலமா இருக்கு"[146]

என்பதில் கோயில்கள் ஒற்றுமையை உருவாக்கும் இடங்களாகத் திகழ்கின்றன.

தங்கமணியின் மகன் ஒரு கிறித்தவப் பெண்ணைக் காதலித்து மணம் முடிக்க ஆசைப்பட்டபோது அவனது அம்மா அவனுக்கு மத ஒருமைபாட்டுணர்வை ஊட்டுகிறாள். மகனது திருமணத்துக்கு ஒப்புதல் அளிக்கும் அவள், வீட்டிற்கு வரும் பெண்ணிடம் மதத்தைத் திணிக்க கூடாது என்கிறாள். அவள் அவளது கிறித்தவ மதத்தையும், நீ உனது இந்து மதத்தையும் பின்பற்ற வேண்டும் என மகனுக்கு அறிவுறுத்துகிறாள். குழந்தைகள் பிறந்த பின் குழந்தைகள் தம் மதத்தைத் தாமே தெரிந்து கொள்ள வேண்டும் என்றும், பெரியவர்கள் அதில் தலையிடக் கூடாது என்றும் கூறுகிறார்.

> "மக்கா எங்கிட்ட கேட்டா சாமி ஒண்ணே ஒண்ணுதான். ஒருத்தன் பரமபிதா என்கிறான். அடுத்தவன் பரமசிவா என்கிறான். இன்னொருத்தன் ஏக

இறைவா என்கிறான். ஆளுக்கொரு பாசையில எல்லாவனும் ஒண்ணத்தான் கும்பிடுறான். இத மொதல்ல நீ மனசிலாக்கிக்கிடணும்”[147]

என்கிறார்.

**சாதியற்ற சமூகம்:**

சாதியற்ற சமூகத்தை உருவாக்குவது மறுமலர்ச்சிக்கால முற்போக்குச் சிந்தனையாளர்களின் இலட்சியமாக இருந்தது. வேதநாயகம் பிள்ளை, பாரதியார், பாரதிதாசன், கவிமணி போன்ற கவிஞர்கள் சாதிக்கெதிரான கருத்துக்களை முன்வைத்தார்கள்

“சாதி மதங்களைப் பாரோம்”[148]

என்றும்

“சாதிகள் இல்லையடி பாப்பா”[149]

என்றும் அறிவுறுத்தும் பாரதியிடம் சாதியற்ற சமூகத் தேடல் தென்படுகிறது. பாரதிதாசன்

“சாதிமத பேதங்கள் மூடவழக்கங்கள்
தாங்கிநடை பெற்றுவரும் சண்டையுலகிதனை
ஊதையினில் துரும்புபோல் அலைக்கழிப்போம்; பின்னர்
ஒழித்திடுவோம்; புதியதோர் உலகம் செய்வோம்”[150]

எனச் சாதிக்கெதிரான கருத்துக்களை எழுதினார். பெரியார் சாதி உருவாக்கத்தின் மூலமான மனுசாஸ்திரத்தைக் கடுமையாக விமர்சித்தார். புதுக்கவிஞர்கள் சாதியற்ற புதிய மானுடத்தைக் கனவு காணுகின்றனர்.

பொன்னீலன் எழுத்திலும் சாதி ஒருமைப்பாட்டுச் சிந்தனையைக் காணமுடிகிறது. மீட் அய்யர் எனும் மேனாட்டு அருட்தொண்டர் பற்றிய வரலாற்றுக் குறிப்பில் சாதி ஒருமைச்சிந்தனை வெளிப்பட்டுள்ளது. மீட் அய்யர் ஏழைக் குழந்தைகளின் வளர்ச்சிக்காக ஒரு விடுதி கட்டி, அதில் உள்ள குழந்தைகளுக்குப் பள்ளிக்கல்வி வழங்கினார். சாதியற்ற சமூகம் அவரது கண்முன் தொலைநோக்காக இருந்தது.

“அய்யர் அவளைத் தூக்கி நெஞ்சில் தாங்கியபடி குதிரையோடு நடந்தே தன் பங்களாவுக்கு வந்தார். அன்றே அவளை ஒன்றாம் வகுப்பில் சேர்த்து விடுதியிலும் தங்க வைத்தார். அங்கே பல சாதிக் குழந்தைகள் இருந்தார்கள். இவர்களோடு இப்போது இந்த அடிமைக் குழந்தை! சாதி வேறுபாடற்ற ஒரு சமூகம் அவர் மனதில் விரிந்தது”[151]

எனச் சாதி வேறுபாடற்ற சமூக மாற்றம் தனது விடுதியிலிருந்து தொடங்கவேண்டும் என்ற மீட் அய்யரின் இலட்சியம் இதில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

மீட் அய்யரின் மனைவி இந்தியச் சமூகத்தில் சாதி ஒற்றுமையை உருவாக்குவது கடினமானது எனக் குறிப்பிட்டாலும் என்றாவது ஒரு நாள் அனைத்துச் சாதியினரும் ஒன்றாகத் தங்கிப் பயிலும் காலம் வரும் என்றுரைக்கிறார்.

> "தளராதீர் அன்பே... காலம் கனியும் எல்லாரும் ஒன்றாகத் தங்கிக் கற்கும் காலம் வரும்... நாம் பொறுமையாயிருப்போம்"[152]

என்பதில் சாதியற்ற சமூகம் பற்றிய எதிர்நோக்கு வெளிப்படுகிறது.

ரமேசன் நாயர் எனும் கதாப்பாத்திரம் சாதி வெறியற்ற மனிதத் தன்மை மிக்க கதாப்பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளது. பிற்படுத்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த கென்னடியின் வார்த்தைகளில் ரமேசன் நாயர் உயர்வாக மதிப்பிடப்படுகிறார்.

> "சார் நாயர்கள்லயும், அற்புதமான மனிதர்கள் இருக்காங்க ரமேசன் நாயர் என்று ஒருத்தர், சாதி ஏற்றத் தாழ்வு உணர்வே இல்லாத மனித நேயர், குமாரபுரம் ஆத்தங்கரையில் அவர் வீடு, அவரும் நானும் நெருங்கிய நண்பர்கள். அவர் வீட்டுக்குப் போவேன். அவர் கூடவே அவர் கட்டில்ல படுத்துக்கிடப்பேன். அதைச் சந்தோசமாக அனுமதிச்சது அவர் குடும்பம். இப்படிப் பல குடும்பங்கள் இருக்கு"[153]

எனச் சாதி வேறுபாடற்று ஒற்றுமையுணர்வுடன் பழகும் அறம் சார்ந்த மனிதர்கள் நாவலில் வெறும் வாசிப்புக்குரியவர்களாக மட்டுமின்றி பின்பற்றத் தகுந்தவர்களாகவும் உள்ளனர்.

சாதி வேறுபாடற்ற சமூக உருவாக்கத்துக்கான மாதிரியாக வைகுண்டர் காட்டப்படுகிறார். அனைத்துச் சாதியினரையும் சமமாக நடத்திய வைகுண்டர் பற்றிய பதிவுகளை நாவல் முன்வைக்கிறது.

> "ராசாக்க மங்கலம் சாம்பவர் குடியில் பிறந்த கருப்பர் மகன் சாத்தன் அவர் என்பது கூட்டத்தில் பலருக்கும் தெரியும், சிரித்துக் கொண்டே அய்யாவின் வலது பக்கம் சவுஜன்யமாக உட்கார்ந்தார் சாத்தன்"[154]

என்பதில் அனைத்துச் சாதியினரையும் சமமாகக் கருத வேண்டும் என்ற உண்மை கதை நிகழ்வு வழியாக வலியுறுத்தப்படுகிறது.

வழக்கமாகப் பிராமணர்கள் சாதியுணர்வுடன் வாழுபவர்கள் என்ற எண்ணம் நிலவுகிறது. பொன்னீலன், ராமசாமி அய்யர் எனும் தலைமையாசிரியர் கதாப்பாத்திரத்தின் வழியாக அவ்வெண்ணத்தை உடைக்கிறார். சங்கரன் என்ற பிற்படுத்தப்பட்ட மாணவனிடம் சாதியுணர்வுடன் நடந்து கொண்ட மேலடுக்குச்

சாதிப்பிரிவைச் சார்ந்த ஆசிரியர்களை அவர் கண்டிக்கிறார். பசியுடன் இருக்கும் சங்கரனைத் தனது வீட்டிற்கு உணவு உண்ண அழைக்கிறார். "மனுஷஜாதி ஒண்ணுதான்டா"[155] என்ற ராமசாமி அய்யரின் கூற்று சாதி வேறுபாடற்ற சமூக உருவாக்கத்திற்கு அவசியமானதாகும்.

ராமசாமி அய்யரின் மனைவியும் சாதியுணர்வுக்கு அப்பாற்பட்ட மனநிலை உடையவராக விளங்குகிறார். அவர் சங்கரனை வீட்டிற்குள் அழைத்துச் செல்கிறார். கை, கால் கழுவ தண்ணீர் கொடுக்கிறாள். வீட்டிற்குள் பாயில் உட்கார வைத்து வாழை இலை போட்டுச் சோறு பரிமாறுகிறாள். குவளையில் வாய்வைத்துத் தண்ணீரைக் குடிக்கச் சொல்லுகிறாள்.[156] மேல் சாதி, கீழ்சாதி என்ற பிரிவினையை அகற்றும் மாதிரிப் பாத்திரமாக அது விளங்குகிறது.

சாதி வேறுபாட்டை ஒழிப்பதற்குப் பெரிய ஆளுமைகளின் மேற்கோள்களைப் பொருத்தமான இடங்களில் பொன்னீலன் இணைக்கிறார். சங்கரன் திருமணத்தில் வாழ்த்திப் பேசும் நேசமணியின் உரையில் சாதி வெறியை அறுக்கும் உள்ளடக்கம் அமைந்துள்ளது. "சாதி வெறியை ஒழிப்பதே முழுமையான சுதந்திரம்"[157] என்ற நேசமணியின் கூற்றில் சாதி வேறுபாடற்ற சுதந்திர இந்தியா அமையவேண்டும் என்ற நல்லிணக்கச் சிந்தனை வெளிப்படுகிறது.

சாதிக்களுக்குள் உயர்வு, தாழ்வு கூடாது என்பதற்குப் பொன்னீலன் சாதிகளின் மூலம் பற்றிய சிந்தனையை எழுப்புகிறார்.

> "ஏதோ ஒரு காலத்தில் எல்லாச் சாதியுமே ஒரே மூலத்தில் இருந்துததான் தோன்றியிருக்கும் இத உணருறது ஞானம்"[158]

என்பதில் சாதி பேதமில்லை எனும் உண்மை அறிவு புகட்டப்படுகிறது.

சாதி பேதமற்ற சமூகம் அமைய மொழி சார்ந்த ஒருமைப்பாட்டுணர்வு அமையவேண்டும். தமிழர்களுக்குத் தம் சாதியினர் தாக்கப்படும் போது வரும் வேகம், தமது மொழி பேசும் தமிழ் இனத்தவர்கள் தாக்கப்படும் போது வருவதில்லை. ஏனெனில் தமிழ் மனம் என்பது சாதி மனமாகச் சுருங்கிக் கிடக்கிறது. தமிழ்ச் சமூகம் எனும் கருத்தியலை முன்னிறுத்தும் அரசியலும் இங்கே எழுச்சி கொள்ளுவதில்லை. மொழிப்பற்றும், இனப்பற்றும் இல்லாத சமூகம் தான் சாதி எனும் குறுகிய அடையாளத்தைக் கொண்டாடிக் களிக்கும். மாதவன் கதாப்பாத்திரம் மலையாளிகளை ஒன்றிணைக்கும் மொழி, தமிழர்களை ஒன்றிணைக்கவில்லை எனக் குற்றம் சாட்டுவதில் நியாயம் இருக்கிறது.

> "மொழியும் மொழிசார்ந்த பண்பாடும் வளர்த்து செழுமைப் படுத்தப்பட்டால், சாதி வெறியும் மத வெறியும் மட்டுப்படும். உதாரணமா, நாங்க மலையாளிக, மலையாளி தில்லியில் இருக்கட்டும், எங்க இருக்கட்டும், தன் மொழி சார்ந்து

பண்பாடு சார்ந்துதான் இயங்குவான். கிறித்தவர், இசுலாம், இந்து எல்லாரையும் திருவோணம் இணைக்கும். இதை அரசே திட்டமிட்டுச் செய்யிது"[159]

எனச் சாதியுணர்வைத் தகர்க்கும் மொழியுணர்வின் ஆற்றல் குறிக்கப்படுகின்றது.

சாதியற்ற சமூகம் இந்தியாவில் சாத்தியமில்லை எனினும் சாதிவேறுபாடற்ற சமுதாயத்தை உருவாக்க முடியும் என்பதை மறுபக்கம் நாவல் விளக்குகிறது. நெய்யூர் லண்டன் மிஷன் மருத்துவமனை உருவாக்கப்பட்ட காலகட்டம் குமரி மாவட்டத்தில் சாதிப்பிரிவினைகள் கோலோச்சிய காலகட்டமாகும். மருத்துவமனையில் வரிசையாகப் போடப்பட்ட கட்டில்களில் பிராமணப் பெண், தாழ்த்தப்பட்ட பெண், சூத்திரப்பெண், நாடாரினப் பெண் ஆகியோர் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டும் உதவிசெய்து கொண்டும் இருக்கின்றனர். மேனாட்டாரின் மருத்துவ சேவை சாதியத்தை மழுங்கடித்து மனித நேயத்தை ஊக்குவித்தது.

"இந்த நாட்டிற்கு நாம் செய்த திருப்பணிகளிலெல்லாம் உயர்ந்தது இந்த நல்லிணக்கப்பணிதான்"[160]

என்ற மருத்துவரின் கூற்று மருத்துவச் சேவையால் உருவான சாதி நல்லிணக்கத்தை உணர்த்துகிறது.

## மனிதநேயம்:

மனித நேயம் எனும் விழுமியத்தைக் கொண்டுள்ள சமூகம் மகிழ்ச்சியாக இருக்குமென்பதையும், மனித நேயத்தைத் துறந்த சமூகம் மகிழ்ச்சியைக் காணமுடியாது என்பதையும் பொன்னீலன் நாவல் வழி புரியவைக்கிறார். கடற்கரை மீனவர்களிடம் பொருளாதார வளர்ச்சி குறைவாக இருந்தாலும் அவர்களது மனிநேயம் அச்சமூகத்தின் மகிழ்ச்சியான இருப்புக்கு உறுதுணையாக இருப்பதனை அவர் எடுத்துக் காட்டுகிறார்.

"கிராமத்தில் மீனவரோட இனக்குழு வாழ்க்கை மாறல்லப்பா. ஒண்ணு சேர்ந்து வேட்டையாடுறது, பங்கு வச்சிச் சாப்பிடுறது. பசிச்சவனுக்குக் குடுக்கிறது... மனுசத்தனம் இன்னும் இந்த சனங்கள விட்டுப் போகல்ல"[161]

என இயந்திரங்களின் வருகைக்குப் பின்னரும் இயந்திரமாகாத மனித மனங்களை உயர்த்திப்பிடிக்கிறார்.

**சுற்றுக் சூழல் பாதுகாப்பு:**

பனைவிளை கிராமத்தில் பள்ளிக்கூடம் கட்டுவதற்கான வாய்ப்பு உருவானபோது ஊர்த்தலைவர் புறம்போக்காகக் கிடந்த மாந்தோப்பைப் பள்ளிக் கட்டடத்துக்கு வழங்கும் எண்ணத்தை தெரிவித்தார். ஊர் மக்கள் இதனை எதிர்த்தனர். இயற்கைப் பாதுகாப்புப் பற்றிய தமது உணர்வை வெளிப்படுத்தினர்.

> "நாடான், நம்மகிட்டே இருக்க இயற்கைச் செல்வங்கள அழிச்சிரப்படாது. இது நமக்குப் பொதுச் செல்வம். அத அப்படியே பேணணும்"[162]

என்ற மக்களின் குரல் இயற்கைப் பாதுகாப்பு பற்றிய சமூக உணர்வை உருவாக்குகிறது.

**முடிவுரை:**

இவ்வியலில் சமுதாயம் என்பதற்கான வரையறைகள் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன. சமுதாய நிலைப்பாட்டில் பொன்னீலனின் எழுத்து கிராமத்தில் மையம் கொள்வது எடுத்துக்காட்டப்பட்டது. சமுதாய நிறுவனங்கள் பற்றிய சித்திரிப்பும் விளக்கப்பட்டுள்ளன. சமுதாயச் சிக்கல்கள் நாவலிலிருந்து சான்றுகளுடன் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. சமுதாய விழுமியங்கள் விளக்கப்பட்டுள்ளன. சமுதாய மாற்றம் பற்றிய செய்திகளும் விவரிக்கப்பட்டுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. செ.ரா. பரமேஷ், சமூக உளவியல், ப.4
2. மேலது, ப.10
3. ச. முருகேசன், சாகித்திய அகாதெமி விருது பெற்ற புதினங்களில் சமூதாயப்பார்வை, ப. 24
4. மேலது, ப. 118
5. ந. பிச்சமுத்து, மு.வ. வின் நாவல்களில் சமுதாய மறுமலர்ச்சியின் தாக்கம், ப.8
6. இரா. தண்டாயுதம், சமூகநாவல், ப.25
7. ச.முருகேசன், சாகித்திய அகாதெமி விருதுபெற்ற புதினங்களில் சமுதாயப்பார்வை, ப.120
8. மா.இராமலிங்கம், நோக்கு நிலை, ப.15
9. பொற்கோ, ஆராய்ச்சி நெறிமுறைகள், ப.93
10. சு.வேங்கடராமன், புனைகதை இலக்கியம், ப.108
11. வை. சச்சிதானந்தன், ஒப்பிலக்கியம், ப.245
12. க. கைலாசபதி, சமூகவியலும், இலக்கியமும், ப.244
13. கஸ்தூரி ஜான்சன், குமரி மாவட்டப் புதினங்களில் சமூக நிறுவனங்கள், ப.8
14. சு.வேங்கடராமன், புனைகதை இலக்கியம், ப.27
15. வெ. கனகசுந்தரம், ஜெகசிற்பியனின் சமூகப் புதினங்கள், ப.69
16. தி.சு. நடராஜன், திறனாய்வுக்கலை, ப.61
17. சாந்தினி மே.தாஸ் குமரி மாவட்ட சமூக அரசியல் வரலாறு, பக்.12,13
18. சு. சண்முகசுந்தரம், தமிழில் வட்டார நாவல்கள், ப.15

19. பொன்னீலன், மறுபக்கம், ப.67
20. மேலது, பக். 68,69
21. மேலது, ப.41
22. மேலது, ப.41
23. ரெ.முத்துராஜன், ஐயனார் வழிபாடு, ப.92
24. பொன்னீலன், மறுபக்கம், ப.42
25. மேலது, ப.62
26. மேலது, ப.251
27. மேலது, ப.38
28. ரெ.முத்துராஜன், ஐயனார் வழிபாடு,ப.157
29. ஷோபனா, பனைசார் உலகம் நாடார் இன வரைவியல், ப.23
30. பொன்னீலன், மறுபக்கம், ப.93
31. மேலது, ப.94
32. மேலது, பக்.94,95
33. மேலது, ப.79
34. மேலது, ப. 34
35. மேலது, ப.427
36. மேலது, ப.140
37. மேலது, ப.52
38. மேலது, ப.95
39. மேலது, ப.47
40. மேலது, ப.48
41. மேலது, ப.230
42. மேலது, ப.231
43. மேலது, ப.261
44. மேலது, ப.280
45. திருவள்ளுவர், திருக்குறள், பா.81
46. பொன்னீலன், மறுபக்கம், ப.94
47. மேலது, ப. 103
48. மேலது, ப.195

49. மேலது, ப.488
50. மேலது, ப. 501
51. மேலது, பக்.42,43
52. மேலது, ப.511
53. மேலது, ப. 84
54. ச. முருகேசன் சாகித்திய அகாதெமி விருதுபெற்ற புதினங்களில் சமுதாயப் பார்வை, ப. 124
55. பரிமளா, வாஸந்தி நாவல்கள் ஓர் ஆய்வு, ப.58
56. யோகீசுவரன், தமிழ்க்கவிதைகளில், சமுதாயச் சிக்கல்கள், ப.6
57. ரெ.முத்துராஜன், ஐயனார் வழிபாடு, ப.57
58. ச. முருகேசன், சாகித்திய அகாதெமி விருதுபெற்ற புதினங்களில் சமுதாயப் பார்வை, ப.120
59. செயராணி ராசதுரை, பெண்கள் படைப்பில் சமூகம், ப.187
60. கோ. முத்தையா, தமிழ் இலக்கியங்கள் கூறும் தத்ததுவப் போராட்டங்கள், ப.89
61. இன்னாசி, சமயமும் சமுதாயமும், ப. 86
62. பக்தவத்சல பாரதி பண்பாட்டு மானுடவியல், ப.325
63. சாந்தினி மே.தாஸ், குமரிமாவட்ட அரசியல் சமூக வரலாறு, ப.68
64. மாலதி மைத்ரி, வெட்ட வெளிசிறை, ப.17
65. மேலது, ப.17
66. பொன்னீலன், மறுபக்கம், ப.91
67. மேலுது, ப.509
68. மேலது, ப.158
69. மேலது, ப.56
70. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானுடவியல், ப.314
71. மேலது, ப.390
72. பொன்னீலன், மறுபக்கம், ப.175
73. மேலது, ப.180
74. மேலது, ப.355
75. மேலது, பக்.219,220

76. மேலது, ப.320
77. மேலது, ப.185
78. மேலது, ப.186
79. மேலது, ப.109
80. மேலது, ப.134
81. மேலது, ப.162
82. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானுடவியல், ப.315
83. பொன்னீலன், மறுபக்கம், ப.219
84. மேலது, ப.219
85. மேலது, ப.168
86. மேலது, ப.168
87. மேலது, ப.86
88. மேலது, ப.88
89. திருவள்ளுவர், திருக்குறள், குற.1072
90. கம்பர், கம்பராமாயணம், பாலகாண்டம், பா.53
91. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப. 45
92. பொன்னீலன் மறுபக்கம், ப.168
93. காளியப்பன், குமரி மாவட்ட விடுதலை வரலாறு, ப.8
94. ஐ.வி. பீட்டர், சமயத் தொண்டர்களும் சமுதாய மறுமலர்ச்சியும், பக்.65,66
95. சுகுமாறன், எங்கள் விடுதலைப் போர், ப.7
96. பொன்னீலன், மறுபக்கம், ப.170
97. மேலது, ப.39
98. மேலது, ப.553
99. மேலது, பக்.40,41
100. மேலது, ப.44
101. மேலது, ப.49
102. சுகுமாறன், எங்கள் விடுதலைப் போர், ப.3
103. மேலது, ப.6
104. மேலது, ப.3

105. சாந்தினி, மே, தாஸ், குமரி மாவட்ட சமூக அரசியல் வரலாறு, ப.87
106. பொன்னீலன், மறுபக்கம், ப.142
107. ஜி.ஐசக் அருள்தாஸ், குமரிமண்ணில் கிறிஸ்தவம், பக்.51,52
108. முகிலை இராஜபாண்டியன், (க.ஆ), தோள்சீலைப் போராட்டம், செ.தங்கமணி (தொ.ஆ) கன்னியாகுமரி மாவட்ட அரசியல் சமூக வரலாறு, ப.73
109. பொன்னீலன், மறுபக்கம், ப.278
110. மேலது, ப.67
111. மேலது, ப.67
112. மேலது, ப.85
113. மேலது, ப.85
114. மேலது, ப.87
115. மேலது, ப.88
116. வாசுகி ஜெயரத்தனம், பெண்ணியச் சுவடுகள், ப.2
117. பொன்னீலன், மறுபக்கம், ப.199
118. மேலது, ப.216
119. மேலது, ப.225
120. மேலது, ப.226
121. மேலது, ப.275
122. மேலது, ப.282
123. மேலது, ப.157
124. மேலது, பக்.88,89
125. மேலது, ப.92
126. மேலது, ப.164
127. மேலது, ப.170
128. மேலது, ப.328
129. மேலது, ப.350
130. மேலது, பக்.497,498
131. மேலது, ப.511
132. மேலது, ப.106

133. மேலது, ப.63
134. மேலது, ப.41
135. மேலது, ப.116
136. மேலது, ப.321
137. மேலது, ப.59
138. மேலது, ப.79
139. மேலது, ப.80
140. மேலது, ப.81
141. மேலது, ப.92
142. மேலது, ப.93
143. மேலது, ப.197
144. மேலது, பக்.407,408
145. மேலது, ப.409
146. மேலது, ப.443
147. மேலது, ப.547
148. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப. 1
149. மேலது, ப. 237
150. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப.126
151. பொன்னீலன், மறுபக்கம், ப.152
152. மேலது, ப.154
153. மேலது, ப.187
154. மேலது, ப.233
155. மேலது, ப.314
156. மேலது, ப.314
157. மேலது, ப.379
158. மேலது, ப.479
159. மேலது, ப.502
160. மேலது, ப.156
161. மேலது, பக்.80,81
162. மேலது, ப.249

# இயல் - 3

# மறுபக்கம் நாவலில் குமரி மாவட்ட வரலாறு

## முன்னுரை:

கேரளநாடு என்பது திருவிதாங்கூர், கொச்சி, மலபார் ஆகிய மூன்று பகுதிகளை உள்ளடக்கியது ஆகும். கேரளத்தின் தென் எல்லையாகத் திருவிதாங்கூர் அமைந்திருந்தது. இதன் தென் எல்லையாகக் கன்னியாகுமரியும் வட எல்லையாகப் பறவூரும் அமைந்திருந்தன. திருவிதாங்கோடு என அறியப்படும் இப்பகுதிக்கு ஸ்ரீவாழும் கோடு, வஞ்சி நாடு, வேணாடு என்ற பெயர்களும் உண்டு. திருவிதாங்கூரின் ஒரு பகுதியே கன்னியாகுமரி ஆகும். இம்மாவட்டத்தின் வரலாற்றை மறுபக்கம் நாவலை முன்வைத்து இவ்வியல் ஆராய்கிறது.

## எல்லை:

கன்னியாகுமரி மாவட்டத்தின் வடக்கு, கிழக்கு ஆகிய திசைகளை ஒட்டி திருநெல்வேலி மாவட்டம் அமைந்துள்ளது. தென்மேற்கில் மன்னார் வளைகுடாவும், இந்தியப் பெருங்கடலும் அமைந்துள்ளன. மேற்கு, வடமேற்குத் திசைகளில் கேரள மாநிலம் அமைந்துள்ளது. குமரி மாவட்டம் 1684 சதுர கிலோ மீட்டர் பரப்பளவைக் கொண்டது. இம்மாவட்டம் கல்குளம், விளவங்கோடு, அகஸ்தீஸ்வரம், தோவாளை ஆகிய வட்டங்களை உள்ளடக்கியுள்ளது. இம்மாவட்டம் மக்கள் தொகை நெருக்கம் மிகுந்த மாவட்டமாக உள்ளது. 2001-ஆம் ஆண்டின் மக்கட்தொகைக் கணக்கெடுப்புப்படி இங்குள்ள மக்கள்தொகை 16,69,763 ஆகும். இதில் 8,40,221 பேர் பெண்களாவர் ஆண்கள் 8,29,542 பேர் ஆவர்.

## இயற்கை அமைப்பு:

குமரி மாவட்டம் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நானிலங்களையும் தன்னகத்தே கொண்டுள்ளது. இம்மாவட்டத்தில் 449 சதுர கிலோமீட்டர் பரப்பளவுள்ள காடுகள் உள்ளன. இங்குப் பழையாறு, முல்லையாறு, வள்ளியாறு, கோதையாறு, பறளியாறு ஆகிய ஆறுகள் ஓடுகின்றன.

## இலக்கியச் சான்றுகள்:

தொல்காப்பியம் குமரிப்பகுதி பற்றிச் சொல்லுகின்றது.

"வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து"[1]

எனப் பனம்பாரனார் பாயிரம் குறிப்பிடுகின்றது. புறநானூற்றிலும் குமரி பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி குறித்த அச்சமும் புகழும் தெற்கின்கண் உள்ள கன்னிக்குத் தெற்கும் பரவுக எனப் புறநானூற்றிலமைந்த காரிகிழாரின் பாடல் குறிப்பிடுகின்றது.

"வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅ துருகெழு குமரியின் றெற்கும்
குணா அது கரைபொரு தொடுகடற் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்[2]

என்பதில் தென் எல்லையாகக் கன்னியாகுமரி குறிக்கப்படுகின்றது.

குமரியை அடுத்துள்ள பஃறுளி ஆறு பாண்டியனுக்குரியதெனப் புறநானூற்றின் வழியாக அறியமுடிகிறது.

முந்நீர் விழவினெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே[3]

என்பன புறநானூற்று அடிகள் ஆகும்.

சிலப்பதிகாரத்திலும் கன்னியாகுமரி பற்றிய செய்தி காணப்படுகின்றது. தென்னிந்திய பிராமணர்கள் குமரித்துறையில் நீராடியபின்னர் கங்கையில் நீராடச் சென்ற செய்தியைச் சிலப்பதிகாரத்திலிருந்து அறிய முடிகிறது. மாடல மறையோன் குமரித்துறையில் நீராடிச் சென்ற குறிப்பினையும் சிலப்பதிகாரத்தில் காணமுடிகிறது.

மணிமேகலையும் குமரியைப் புண்ணிய நீர்த்துறையாக அடையாளப் படுத்துகிறது. கணவனுக்குத் துரோகம் இழைத்த ஒரு பெண் தன் பாவம் நீங்க குமரிக்கு நீராட வந்த நிகழ்வை மணிமேகலையில் காணமுடிகிறது. சீவகசிந்தாமணியிலுள்ள சுரமஞ்சரியார் இலம்பகம் சீவகன் குமரியாட வந்த கதையை விளக்குகிறது.

பெரிப்பிளிஸ் என்ற நூலிலும் கன்னியாகுமரி பற்றிய குறிப்பு இருப்பதாக அ.கா.பெருமாள் கூறுகின்றார்.

"இல்லத்தாரும் துறவிகளும் பாப விமோசனத்திற்காக நீராடுமிடம். இது துறைமுகம்."[4]

எனப் பெரிப்பிளிஸ் என்ற கிரேக்க நூல் சுட்டுகிறது.

## வரலாற்றாசிரியர்கள்:

பொன்னீலனின் எழுத்து பொழுது போக்குத் தன்மை கொண்டதல்ல. அது வரலாற்று உண்மைகளை வெளிக்கொணரும் காலப்பதிவு ஆகும். வரலாற்று நாவல் என்பது இராஜா இராணிகளின் அந்தப்புரக் கிளர்ச்சிகளும், எதிரியை வீழ்த்தும் சாகசங்களும் என நம்பப்பட்டு வந்த தமிழ்ச்சூழலில், பொன்னீலன் அதற்கு மாறாக உண்மைகளிலிருக்கும் வரலாற்றை மீட்டெடுக்கிறார். மறக்கப்பட்ட நினைவுகளையும் மறைக்கப்பட்ட உண்மைகளையும் அவர் தயக்கமின்றி வெளிக்கொணருகிறார். மறுபக்கம் நாவல் எழுதுவதற்கான உந்துதலை வரலாற்றின் பக்கங்களிலிருந்து பெற்றுக்கொண்டதாக அவர் முன்னுரையில் குறிப்பிடுகிறார்.

> "தென்திருவிதாங்கூர் தோள்ச் சீலைப் போராட்டம் என்ற என் கட்டுரை அன்றைய ஆராய்ச்சி இதழில் வெளிவந்தது. குமரிமாவட்டத்தில் சமூக சமத்துவத்தை நோக்கிய முதல் போராட்டமான தோள்ச்சீலைப் போராட்டத்தையும், 20-ஆம் நூற்றாண்டில் அதன் தொடர்ச்சியாக நடந்த குமரி மாவட்டம் உருவாக்கப் போராட்டத்தையும், இவைகளுக்கிடையே 19-ஆம் நூற்றாண்டினுடைய இறுதி ஆண்டுகளில் நடந்த நில உரிமைக்கான போராட்டங்களையும் இணைத்து ஒரு நாவலாக எழுதும் ஆவல் அப்போது பிறந்தது. இதற்கு 'மறுபக்கம்' எனப் பெயரிட்டால் பொருத்தமாக இருக்கும் என்ற எண்ணமும் அப்போது தோன்றியது"[5]

எனக் குமரிமாவட்ட வரலாற்றுச் செய்திகளில் அவருக்குள்ள ஆர்வம் படைப்பாக வெளிப்பட்டமையைத் தெரிவிக்கிறார். வெங்கடேசனின் தந்தை தனது நாட்குறிப்பில்

> "என் வரலாறு என்பது அவமானங்களின் வரலாறு தவிர வேறு என்ன?"[6]

என்று குறிப்பிடுவதனை அவரது சொந்த அனுபவ முன்னுரையாகக் கொள்ள முடியாது. அதனைக் குமரி மாவட்டத்தில் ஒடுக்கப்பட்டுக் கிடந்த சமூகங்களின் வரலாறாகவே கருத முடிகிறது.

> "வரலாற்றுக்குள்ளே தேடு அங்கே சிறைபட்டுக் கிடக்கும் உண்மைகளை விடுதலை செய். விடுதலை பெற்ற உண்மைகள் உன்னை விடுதலை செய்யும்"[7]

என்ற கூற்று வரலாற்றின் வலிமையை எடுத்துரைக்கிறது.

குமரி மாவட்ட வரலாற்று நூற்களைப் பற்றியும் நாவல் பேசுகிறது. அ.கா. பெருமாள் குமரி மாவட்ட வரலாற்றாசியர்களைப் பற்றிக் குறிப்பிடுவதனை இங்கு எடுத்துக்காட்ட முடியும்.

"வரலாற்றுப் பராம்பரியம் உடைய இந்த மாவட்டத்தைப்பற்றி முழுமையான வரலாற்றை எழுத வேண்டும் என்ற முயற்சியை ஆரம்பகால ஆசிரியர்கள் யாரும் மேற்கொள்ளவில்லை. டாக்டர் கே.கே.பிள்ளை நாஞ்சில் நாட்டு வரலாற்றைச் சிறிய அளவில் ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். பாரதவங்கியின் முன்னாள் அதிகாரி டாக்டர் எஸ்.பத்மநாபன் ஆங்கிலத்திலும், தமிழிலும் இம்மாவட்டம் குறித்துப் பல புத்தகங்களை எழுதியுள்ளார். ஜாய் ஞானதாசன், ஐ.பீட்டர் போன்றோர் புராட்டஸ்டென்ட் சமயப்பங்களிப்பு குறித்து எழுதியுள்ளனர். நாஞ்சில் நாட்டின் பண்பாட்டு வரலாற்றை டாக்டர் தே.வேலப்பன் எழுதியுள்ளார்."[8]

என்பதில் குமரி வரலாற்றாசிரியர்கள் பற்றி அறிய முடிகிறது. மறுபக்கம் நாவலில் சங்கரனின் குறிப்பு கிறித்தவப் பாதிரியார்கள் எழுதிய வரலாற்றில் இருக்கும் சார்பு நிலையை விமர்சித்தாலும் முதல் வரலாறு என்ற அளவில் அதனை ஏற்றுக்கொள்கிறது.

"தேவ கிருபை மூலமாக, திருவாங்கூர் அடிமட்டச் சாதிகளைப் பற்றி வெளிநாட்டு சமயத் தொண்டர்கள் எழுதிய நூல்களைப் படிக்கத் தொடங்கினேன். கிறிஸ்தவம் பரப்பப்படவேண்டும் என்னும் அவர்களின் சுயநலத்தை ஒதுக்கி விட்டுப் பார்த்தால் அவர்கள்தானே ஒடுக்கப்பட்டோரின் முதல் வரலாற்றாசிரியர்கள்"[9]

என மேனாட்டு அருட்தொண்டர்கள் எழுதிய வரலாறு கோடிட்டுக் காட்டப்படுகிறது. நாகமய்யா எழுதிய திருவாங்கூர் ஸ்டேட் மானுவல், சங்கரனின் குறிப்பில் இடம் பெறுகிறது.

"தற்செயலாகத்தான் நாகமய்யா எழுதிய திருவாங்கூர் ஸ்டேட் மானுவேலைப் புரட்டினேன் அரசாங்க உயர் அதிகாரியாயிருந்த அந்த பிராமணர் திருவாங்கூர்ச் சாதிகளை பற்றி எவ்வளவு விசாலமாக எழுதியிருக்கிறார்"[10]

என்பதில் நாகமய்யா எனும் வரலாற்றாசிரியர் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

## தொடக்ககால வரலாறு:

சங்ககாலத்தில் குமரியை ஆய் மன்னர்கள் ஆண்டுவந்தனர்.

"கி.பி 140-இல் தென்னிந்தியக் கடற்கரையில் பயணம் செய்த கிரேக்கப் பயணி 'தாலமி' என்பவன் ஆய் அரசர்களின் நாடு கன்னியாகுமரியிலிருந்து பெட்டிகோ மலைவரை இருந்ததாகக் கூறுகிறான்"[11]

தாலமி கூறும் பெட்டிகோ மலை என்பது பொதிய மலையைக் குறிக்கின்றது.

ஆசிரியர் பெயர் இல்லாத நூலான 'செங்கடல் பயணம்' என்ற (கி.பி 78-இல் எழுதப்பட்ட) நூல் கோட்டாறு வர்த்தக மையம் பற்றியும், குமரிமுனை எனும் புனித இடம் பற்றியும் விவரிக்கிறது. கி.பி 140-இல் தாலமி கோட்டாறு குமரிமுனை மற்றும் ஆய்நாடு பற்றியும் குறிப்பிட்டுள்ளார்[12] ஆய் அரசர்களில் முதல் அரசன் ஆய் அண்டிரன் ஆவான். ஆய் அண்டிரனை அடுத்து திதியன் I , அதியன், திதியன் II, நாஞ்சில் பொருநன் ஆகியோர் ஆட்சி செய்கின்றனர்.

"கி.பி 7-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் பாண்டியர் கல்வெட்டுக்களில் ஆய் மன்னர்களைப் பற்றிக் குறிப்பு வருகிறது. இதனால் ஏழாம் நூற்றாண்டிற்குப் பின்னர் கன்னியாகுமரி மாவட்டத்தின் வடபகுதி பாண்யடிர்களின் கையில் சென்றுவிட்டது எனக் கருதலாம்.[13]

ஆய் வம்சத்தின் கடைசி அரசன் விக்ரமாதித்ய வரகுணன் ஆவான். இவன் கி.பி 886 முதல் 924 வரை குமரி மாவட்ட நிலப்பரப்பை ஆண்டுள்ளான்.

பொன்னீலன் குமரி மாவட்டத்தை ஆண்ட பாண்டிய மன்னர்கள் பற்றிக் குறிப்பிடுகின்றார். பாண்டியனுக்கும் குமரி மாவட்டத்துக்கும் சங்ககாலம் முதலே நெருங்கிய தொடர்பு இருந்து வந்துள்ளது.

"திவாகர நிகண்டு பாண்டியனைக் குமரிச் சேர்ப்பன் என்று குறிப்பிடும்."[14]

கி.பி ஏழாம் நூற்றாண்டிற்கும், பத்தாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் நாஞ்சில் நாட்டின் மீது பாண்டியர்கள் போர் தொடுத்துள்ளனர். ஆரல்வாய் மொழி கணவாய் வழியாக நாஞ்சில் நாட்டின் மீது படையெடுத்த முதல் பாண்டிய மன்னன் செழியன் சேந்தன் ஆவான். அவனைத் தொடர்ந்து அரிகேசரி மாறவர்மன், கோச்சடையன், ரணதீரன், இராஜசிம்மன், ஜடில பராந்தகன், ஸ்ரீமாறன், ஸ்ரீவல்லபன், வீரநாராயணன், சடையன் ஆகிய பாண்டிய அரசர்களும் இங்குப் படையெடுத்து வந்துள்ளனர் என்பதை வரலாறு உறுதி செய்கிறது.

சங்ககாலத்துக்குப்பின் கி.பி 650 வரை நாஞ்சில் நாட்டுப்பகுதி சேரர்கள் ஆட்சிக்குட்பட்டிருந்தது. கி.பி பத்தாம் நூற்றாண்டிலிருந்து பதின்மூன்றாம் நூற்றாண்டுவரை சோழ அரசர்களால் இப்பகுதி ஆளப்பட்டது. முதல் ராஜராஜனின் சாசனங்களில் நாஞ்சில் நாட்டின் பல பகுதிகள் சுட்டப்படுகின்றன. சோழர்கள் வலிமை குன்றிய காலத்தில் இப்பகுதி சேரர்களின் ஆட்சிக்குட்பட்டது.

மறுபக்கம் நாவல் சங்க காலத்திலிருந்தே குமரி மாவட்டத்தின் வரலாறு எப்படி இருந்தது என்பதை விளக்கும் நோக்கில் எழுதப்பட்ட நாவலன்று. மண்டைக்காட்டுக் கலவரத்தைப் பற்றிப் பேசும் போது அதனிடையிடையே தேவைப்படும் வரலாற்றுச் செய்திகளை விவரிக்கும் நாவலாகும். பல இடங்களில்

மிகப்பெரிய வரலாறுகள் சில சொற்களிலேயே அடங்கிவிடுகின்றன. வரலாற்று ஆளுமைகள் வெறும் பெயர்சுட்டலாகக் குறுகிவிடும் இடங்களும் உள்ளன.

சங்ககாலம் முதல் மறுமலர்ச்சிக்காலம் வரையிலான வரலாறு ஒரு பத்திக்குள் அடக்கப்படுவதற்கான சான்றாகக் கீழ்க்காணும் பகுதியைச் சுட்ட முடியும்.

> "திருவாங்கூரைப் பொறுத்த வரையில் மூணாம் நூற்றாண்டிலேயே சேர மரபு முடிஞ்சி போகுது. அப்புறம் வந்த ஆய் அரசர்கள் பாண்டியர்களோட ஓயாத சண்டை போடுறாங்க. அவங்க ஆட்சியும் வீழ்ச்சி அடையிது. கொஞ்ச காலம் வரை தமிழர் ஆட்சிதான் இங்கு இருந்தது. அப்புறம் நம்பூதிரிகள் என்கிற பிராமணப் பிரிவு வந்து இந்த நாட்டைக் கொஞ்சங் கொஞ்சமாய்ப் பிடிக்கிறாங்க. அவங்க, தமிழரோட கலக்குறாங்க. இந்தக் கலப்புல மலையாள மொழி பிறக்குது. நாட்டத் துண்டு போட்டுப் பரம்பரை பரம்பரையா அனுபவிக்கிறாங்க. இந்த முறை அழிஞ்சிபோகாம இருக்க மருமக்கள் தாயம் உதவுது. மனுதர்மப்படி ஆட்சி நடத்துறாங்க. அவங்க அதிகாரத்தால படிப்படியாக தமிழினம் மலையாள இனத்துக்கு அடிமைப்படுது மார்த்தாண்டவர்மா மகாராஜா காலத்தில் இந்த அடிமைத்தனம் உச்சத்துக்கு வருது. அடிமை வியாபாரமே நடக்குது. இதுதான் நம்ம பண்டைய வரலாறு"[15]

என்பதில் குமரி வரலாற்றின் சுருக்கப் பிழிவைக் காணமுடிகிறது.

## திருவிதாங்கூர்

திருவிதாங்கூர் என்ற நாடு கி.பி1750-ஆம் ஆண்டு உருவானது. அதற்கு முன்பு அது 'வேணாடு' என்ற குறுநில நாடாக இருந்து வந்தது. இரண்டாம் சேரப் பேரரசின் குறுநிலமாக வேணாடு இருந்து வந்தது. சேரர்களின் வீழ்ச்சிக்குப் பின்னர் திருவிதாங்கோடு என்ற நாடு உருவாக்கப்பட்டதாக வரலாற்றிஞர்கள் கருதுகின்றனர்.

> "சேரநாட்டின் முடிவுக்குப் பிறகு உருவான அரசியல் திருப்பங்களால் சேரநாட்டில் எஞ்சிய அரச குடும்பமும், வேணாட்டின் அரச குடும்பங்களும், ஆய் நாட்டின் அரசகுடும்பங்களும் ஒருங்கிணைந்து திருமுதாங்கோட்டைத் தலைமையிடமாகக் கொண்டு (இன்றைய கேரளபுரம்) திருமுதாங்கோடு என்ற பெயரில் ஆட்சி நடத்தினர். இந்த திருமுதாங்கோடே பிற்காலத்தில் அகண்ட திருவிதாங்கூர் (மன்னர் மார்த்தாண்ட வர்மா காலத்தில்) ஆனது."[16]

மேற்காட்டிய கூற்று திருமுதாங்கோடு என்பதே பிற்காலத்தில் திருவிதாங்கோடு என்று மாற்றம் பெற்றதை உணர்த்துகிறது.

## திருவிதாங்கூர் அரசர்கள் வரலாறு:

கேரளத்தின் தென்கோடிப் பகுதியில் திருவிதாங்கூர் அமைந்திருந்தது. திருவிதாங்கோடு என்ற ஊரின் திரிபுதான் திருவிதாங்கூர் அல்லது திரிவாங்கூர் என்பது. இச்சிறு நாட்டின் தலைநகராகத் திருவிதாங்கோடு ஒரு காலத்தில் விளங்கியதால் அப்பகுதி திருவிதாங்கூர் என்ற பெயரால் அழைக்கப்பட்டது. திருவிதாங்கூர் அரசின் வரலாற்றை அறியாமல் குமரி மாவட்ட வரலாற்றைப் புரிந்து கொள்ள முடியாது. 1729 முதல் 1949 வரை இப்பகுதியை பன்னிரண்டு மன்னர்கள் ஆண்டுள்ளனர். கன்னியாகுமரி மாவட்டம் திருவிதாங்கூரின் ஒரு பகுதியாக அமைந்தது. திருவிதாங்கூரை ஒன்பது ஆண்களும், மூன்று பெண்களும் ஆண்டுள்ளனர்.

1. மார்த்தாண்ட வர்மா
2. தர்மராஜா
3. பலராமவர்மா
4. கௌரி லட்சுமிபாய்
5. கௌரி பார்வதிபாய்
6. சுவாதித் திருநாள்
7. உத்தரம் திருநாள்
8. ஆயில்யம் திருநாள்
9. விசாகம் திருநாள்
10. ஸ்ரீமூலம் திருநாள்
11. சேது லட்சுமிபாய்
12. சித்திரைத் திருநாள்

ஆகிய பன்னிரண்டு மன்னர்கள் இங்கு ஆட்சி செலுத்தியுள்ளனர். இவர்களில் மார்த்தாண்ட வர்மா பற்றிய வரலாற்றுச் செய்திகளை மறுபக்கம் நாவல் பேசுகிறது.

## மார்த்தாண்ட வர்மா:

திருவிதாங்கூரை ஆண்ட மன்னர்களில் மிகவும் புகழ்பெற்றவர் மார்த்தாண்டவர்மா ஆவார். இவர் 1729 முதல் 1758 வரை இந்நிலப்பரப்பை ஆண்டு வந்தார். இவரது காலத்தில் திருவிதாங்கூர் நாடு பத்மனாபபுரம், திருவனந்தபுரம், கொல்லம், சேர்த்தலை என நான்கு பகுதிகளாகவும்,

முப்பத்திரண்டு வட்டங்களாகவும், இருநூற்று நாற்பத்தைந்து பிடாகைகளாகவும். பிரிக்கப்பட்டிருந்தது. இவரது காலத்தில் நாடு விரிவாக்கம் பெற்றது. மார்த்தாண்ட வர்மா வெற்றிகரமான அரசனாகக் கருதப்பட்டார்.

> "மக்கள் ஆதரவைப் பெற மார்த்தாண்ட வர்மன் நாட்டு விரிவாக்கத்தில் ஈடுபட்டார். இவருடைய போர்த்திறனால் அண்டை அயல் நாடுகளை வெற்றி கொண்டார். கி.பி.1741-இல் டச்சுக்காரர் கடற்படை குளச்சலில் தோற்கடிக்கப்பட்டது"[17]

என்பர்.

மார்த்தாண்ட வர்மா ஆட்சிப்பொறுப்பில் ஏறிய வரலாற்று சூழல் மிக முக்கியமானது.

> "மன்னர் மார்த்ததாண்டவர்மா (1729 - 1758) வேணாட்டின் அரச பதவியில் அமர்வதற்கு அவரது உற்ற தோழனான அனந்த பத்மநாபன் நாடாரும், மற்றும் 108 களரி ஆசான்களும் (நாடார் ஆசான்கள்) துணை நின்றனர். இவர்களது துணையால் மட்டுமே அன்று மார்த்தாண்ட வர்மனுக்கு எதிராக அரசு கட்டிலுக்கான உரிமைப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்த பப்புத்தம்பி மற்றும் இராமன் தம்பிமார்களையும், அவர்களுக்குத் துணையாக நின்று செயல்பட்ட எட்டு வீட்டுப் பிள்ளைகள் மற்றும் மாடம்பிள்ளையும் (அனைவரும் நாயர் நாடு வாழிகளும், பிரமுகர்களுமாவர்) சம்காரம் செய்து அரியணை ஏற்றப்பட்டார்"[18]

என்பர்

மார்த்தாண்டவர்மா ஆட்சிப் பொறுப்பேற்க உறுதுணையாக இருந்தவர்களைப் பற்றி மறுபக்கம் நாவல் பேசுகிறது. மருந்துவாழ் மலையின் அடியில் மார்த்தாண்ட வர்மாவின் இரகசியத் திட்டங்கள் வகுக்கப்பட்டதை நாவல் சுட்டுகிறது.

> "மருந்துவாழ் மலை அடிவாரப் பனங்காட்டுக்குள் அரை வட்டமாக உட்கார்ந்திருந்தவர்களின் முன்னே, சாதாரண உடையில் உட்கார்ந்திருந்தார் மார்த்தாண்ட வர்மா எதிரிகளின் ரகசிய நடமாட்டம் இந்தத் தமிழ்ப் பகுதியிலும் இருக்கக்கூடும் என்று அஞ்சி, கூடிப் பேசுவதற்கு இந்த ஆள் நுழைய முடியாத அடர்வனத்தைத் தேர்ந்தெடுத்திருந்தார் பொத்தையடி நாடான். நல்ல மனிதர், பெரு மூச்சு விட்டார் மார்த்தாண்டவர்மா"[19]

எனப் பொத்தையடி நாடான் மார்த்தாண்ட வர்மாவுக்குத் துணையாயிருந்தமை குறிக்கப்படுகின்றது.

மார்த்தாண்ட வர்மாவின் ஆலோசனைக் கூட்டத்தில் பங்கேற்ற நாடார்கள் பற்றிய செய்தியும் நாவலில் இடம் பெறுகிறது.

"அகஸ்தீஸ்வரத்து நாடான், ஈத்தா மொழி நாடான், குஞ்சன்விளைநாடான் என இந்த வட்டாரத்தின் முக்கியமான நாடான்களுக்கெல்லாம் தன் ஓட்டக்காரனை அனுப்பி, அவர்களின் மன ஓட்டங்களை அறிந்து, திருப்திப் பட்டுத்தான் அவர்களை இந்த ஆலோசனைக் கூட்டத்துக்கு அழைத்திருந்தார்"

என ஆலோசனைக் கூட்டத்தில் பங்கேற்ற நாடர்களின் பெயர்களைச் சுட்டுகிறார்.

அனந்த பத்மநாபன் எனும் வீரன் மார்த்தாண்ட வர்மாவுக்குத் துணையாக இருந்தமை பற்றியும் நாவல் பேசுகிறது.

"வேணாட்டுப் பகுதிகளிலும் இது மாதிரிச் சிலர் உழைத்தார்கள் குறிப்பாகத் தச்சன் விளை அனந்தபத்மநாபன், யாராலும் வெல்லப்பட முடியாத வீரன். தெக்கன் களரி நூற்றியெட்டுக்கும் தலைமையாசான். இளமை முதற்கொண்டு தன்னை நிழலாகப் பின் தொடரும் உயிர் நண்பன், பிராந்தன் வேடத்தில் இப்போது வேணாடு முழுவதும் உள்ள முக்கியமானவர்களைச் சந்தித்து அவர்களைத் தனக்கு ஆதரவாக மாற்ற, உயிரைத் துச்சமென மதித்து அலைந்து கொண்டிருப்பவன்"[20]

என அனந்தபத்மநாபன், மார்த்தாண்ட வர்மாவுக்குப் பலமாக அமைந்ததை எடுத்துக்காட்டுகிறார்.

மார்த்தாண்ட வர்மா ஆட்சிக்கு வந்த பின் அதற்குக் காரணமான அடித்தட்டு சமூகத்தினருக்கு உரிய மரியாதை வழங்கப்படாததைதை நாவலில் வரும் பாத்திரங்கள் விமர்சிக்கின்றன. மேல் சாதியினர் அதிகார நாற்காலியைச் சுற்றி அமர்ந்து விட்டது குறித்த அதிருப்தியையும் அவை வெளியிடுகின்றன. மார்த்தாண்டவர்மா காலத்தில் நிலவரி, மரவரி எனப் பல்வேறு வரிகள் தமிழர்கள் மீது திணிக்கப்பட்டதையும் பொன்னீலன் சுட்டிக்காட்டுகிறார்.[21]

மார்த்தாண்ட வர்மாவின் வீரம் பற்றிய குறிப்பினையும் நாவல் தருகிறது. "டச்சுப் படையைப் படையெடுக்க விடாமலே வென்ற மார்த்தாண்ட வர்மா மகாராசா" என்ற குறிப்பு மார்த்தாண்டவர்மாவின் வீரத்தைப் பறைசாற்றுகிறது.

## அனந்த பத்மநாபன்:

திருவிதாங்கூரை மார்த்தாண்டவர்மா ஆண்டபோது அவருக்கு மெய்க்காப்பாளராகவும், உறுதுணையாளராகவும் இருந்தவர் அனந்த பத்மநாபன் ஆவார். மார்த்தாண்டவர்மாவை ஆட்சிக் கட்டிலில் ஏற்றியதில் அனந்தபத்மநாபனின் பங்கு முக்கியமானது.

> "மார்த்தாண்டன் ஆட்சியதிகாரத்தைப் பெறுமுன் தம்பிமார் பெயரில் நடைபெற்ற சதித்திட்டங்களை முறியடித்து அரசராக முடிசூட்டுவதிலும், வேணாட்டைக் கொச்சி வரை விரிவாக்கம் செய்த படையெடுப்புகளிலும் அனந்தனின் பங்கு மிகப் பெரிது"[22]

என்று கே.பி.வரதராஜன் குறிப்பிடுகிறார். நாவலில் பொன்னீலன் அனந்த பத்மநாபனைக் கீழ்க்காணுமாறு அடையாளப்படுத்துகிறார்.

> "தச்சன் விளை அனந்த பத்மநாபன் யாராலும் வெல்லப்படமுடியாத வீரன். தெக்கன்களரி நூற்றியெட்டுக்கும் தலைமையாசான், இளமை முதற்கொண்டு தன்னை நிழலாக்கி பின் தொடரும் உயிர் நண்பன் பிராந்தன் வேடத்தில் இப்போது வேணாடு முழுவதும் உள்ள முக்கிய மானவர்களைச் சந்தித்து அவர்களைத் தனக்கு ஆதரவாக மாற்ற உயிரைத் துச்சமென மதித்து அலைந்து கொண்டிருப்பவன்"[23]

என அனந்தபத்மநாபனை வீரனாக அடையாளப்படுத்துகிறார். அனந்த பத்மநாபன் மார்த்தாண்ட வர்மாவை இரவில் சந்தித்து விடைபெறும்போது ஒரு பனைமர உயர நிழல் மட்டுமே அங்கு நிற்பதாகப் பொன்னீலன் குறிப்பிடுகிறார்.[24]

மார்த்தாண்டவர்மா ஆட்சிப் பொறுப்பேற்ற பின்னர் அனந்தபத்மநாபனை மரியாதையாக நடத்தியது பற்றியும் பொன்னீலன் பேசுகிறார்.

> "அவருக்கா? எவ்வளவு மரியாதை கொடுத்திருந்தாரு. ராசா ! ராசாவுக்கு நேர் இடப்புறம் அவர்தானே நின்னுக்கிட்டிருந்தாரு. கிரீடம் மட்டும் இல்ல, மத்தபடி ராசா என்ன கட்டியிருந்தாரோ அதே பட்டு, அதே வாளு "[25]

என்கிறார்.

## வைகுண்டர் வரலாறு:

வைகுண்டர் குமரி மாவட்டத்திலுள்ள சாமித்தோப்பு என்ற ஊரில் 1809-ஆம் ஆண்டு பிறந்தார். இவரது தந்தை பொன்னு நாடார் ஆவார். தாயார் வெயிலம்மை ஆவார். பெற்றோர்கள் இவருக்கு முடிசூடும் பெருமாள் என்று பெயரிட்டனர். ஒடுக்கப்பட்ட சமூகத்தைச் சார்ந்த இவருக்கு முடிசூடும் பெருமாள் எனும் பெயரைச் சூட ஆதிக்க சாதியினரிடமிருந்து எதிர்ப்புக் கிளம்பியதால் அப்பெயரால் அவரை

அழைக்க இயலாது போயிற்று. பெற்றோரும் உற்றாரும் அவரை முத்துக்குட்டி என்று அன்போடு அழைத்து வந்தனர்.

முத்துக்குட்டி 1831-ஆம் ஆண்டு உடல் நலிவுற்றபோது அவரது பெற்றோர் அவரைத் திருச்செந்தூருக்கு எடுத்துச் சென்றனர். அங்கே அவர் கடலருகே மூன்று நாட்கள் தவம் கிடந்து ஞானம் அடைந்தார். இளமைக் காலத்தில் அவர் பல அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார். அவரது போர்க்குணமும், தத்துவப் புலமையும், அற்புத ஆற்றலும், மக்களைக் கவர்ந்திழுத்தன.

வைகுண்டர் என்பவர் தனிநபரல்ல, அவர் ஓர் இயக்கம் என்பதைக் காலம் கண்டு கொண்டது. திருவிதாங்கூரில் கிழக்கிந்தியக் கம்பெனி ரெசிடென்டாகக் கர்னல் கல்லன் என்பாரும், மன்னராக சுவாதித் திருநாளும் ஆட்சி செலுத்தி வந்தனர். சாதிக்கெதிராக வைகுண்டர் குரல் எழுப்பியமையால் 1837-நவம்பரில் அதிகாரிகள் அவரைக் கைது செய்தனர். பின்னர் அவர் 1838-ஆம் ஆண்டு மார்ச் மாதம் விடுதலை பெற்றார்.

வைகுண்டர் அம்பலப்பதி, முட்டப்பதி, தென் தாமரைக் குளம்பதி, பூப்பதி, வாகைப்பதி ஆகிய பதிகளை உருவாக்கினார். சாமிதோப்புப்பதி தலைமைப்பதியாக விளங்கியது. இன்று குமரி மாவட்டத்தில் வைகுண்டரை இறையவதாரமாக எண்ணி வழிபடும் எட்டாயிரத்துக்கும் மேற்பட்ட பதிகள் உள்ளன. வைகுண்டர் மீதுள்ள அளப்பரிய மரியாதை நிமித்தம் அவர் 'அய்யா' என அழைக்கப்படலானார். அய்யா வைகுண்டரின் சிந்தனைகளை அவரது சீடரான அரிகோபால் தொகுத்து வைத்துள்ளார். அய்யாவின் சிந்தனைகள் 'அகிலத்திரட்டு அம்மானை', 'அருள்நூல்' என்னும் இரண்டு நூற்களாக வடிவம் பெற்றள்ளன.

அய்யா வைகுண்டர் சாதி கிடையாது என்பதை வலியுறுத்தினார். பணக்காரன் ஏழை என்ற வேறுபாடு கூடாது என்பதை அறிவுறுத்தினார். ஆண், பெண் பேதம் இல்லை என்ற புரட்சிகரமான சிந்தனையை ஆயிரத்து எண்ணூறுகளின் தொடக்கத்திலேயே முன்வைத்தார். மதவெறுப்புக் கூடாது என்றும் கட்டளையிட்டார். சடங்குகள் மற்றும் பலிகளில் அவருக்கு உடன்பாடு இல்லை.

"தாழக் கிடப்பாரைத் தற்காப்பதே தர்மம்
கீழது எல்லாம் மேலது ஆகும்
மேலது எல்லாம் கீழது ஆகும்
காணிக்கை போடாதுங்கோ
காவடி தூக்காதுங்கோ
கொத்தை குறையாதே

குறை மரக்கால் வையாதே
உபதேசம் செய்யும் கூலி
உடன் கையில் கொடுத்திருங்கோ”[26]

என்பன அய்யாவின் அருள்மொழிகளாகும்.

**எளிமையானவர்:**

வைகுண்டர் பற்றிய இயல்பான வருணனை அவரை நேரடியாகப் பார்ப்பது போன்ற உணர்வை உருவாக்குகிறது. கருந்தாடியும், விழுதுச் சடையும் கொண்டவராக வைகுண்டரைப் பொன்னீலன் அறிமுகப்படுத்துகிறார். ஒல்லியான உடலமைப்பையும் உயரமற்ற தோற்றத்தையும் அவர் சுட்டிக்காட்டுகிறார். மாமரத்தினடியில் நீள பனை நார்கட்டிலில் அமர்ந்து அவர் போதிக்கும் காட்சியையும் தருகிறார். தடித்தப் புருவங்களுக்குக் கீழே நெருப்புத் துண்டுகளாய் அமைந்த கண்களையும் காட்டுகிறார். வைகுண்டரைச் சுற்றி மக்கள் கூட்டம் நிறைந்திருப்பதற்கு விளக்கைச் சுற்றும் விட்டில்கள் எனும் உவமையைத் தருகிறார். ஆதரவற்றவர்கள், மாற்றுத் திறனாளிகள், கைம்பெண்கள், முதியவர்கள் ஆகியோர் வைகுண்டரின் அறிவுரைகளைக் கேட்பதற்காக நிறைந்திருப்பதையும் குறிப்பிடுகிறார்.[27]

## அய்யா வழியை உருவாக்கியவர்:

வைகுண்டரால் உருவாக்கப்பட்ட சமயம் ‘அய்யாவழி’ என அழைக்கப்படுகிறது. இம்மதம் இந்து மதத்துக்குள் ஒரு சீர்திருத்தப் பிரிவாக அமைந்தது. அய்யா வழியில் கடவுளுக்கும், மக்களுக்கும் இடையில் குருக்கள் இல்லை சாம்பிராணி பாவிப்பு இல்லை. சிலை வணக்கம் கூடாதென்பது இந்நெறியின் முக்கியக் கொள்கை ஆகும். பாவ மன்னிப்பு எனும் கொள்கையையும் இந்நெறி வலியுறுத்தியது. வர்ணாசிரமக் கொள்கைகளையும், சாதி அமைப்பையும் அய்யாவழி நிராகரிக்கிறது. தமிழ் மொழியில் வழிபாடு செய்வதை இம்மதம் வலியுறுத்துகிறது. மறுபக்கம் நாவலின் முதல் அத்தியாயத்திலேயே அய்யாவழி பற்றிய குறிப்பு இடம் பெற்றுவிட்டது.[28]

## துவையல் பந்தியை உருவாக்கியவர்:

வைகுண்டர் ‘துவையல் பந்தி’ என்ற அமைப்பை உருவாக்கினார். பல்வேறு சாதிப்பிரிவுகளைச் சார்ந்த எழுநூறு குடும்பங்கள் ஒன்றிணைந்த கூட்டாண்மை அது. அவர்கள் அனைவரும் சாதிவேறுபாடு பாராமல் ஒன்றாகக் கூடி, ஒன்றாக

வாழ்ந்து, ஒன்றாகச் சமைத்துப் பசியாறிச் செல்லும் சமத்துவ அமைப்பாக அது விளங்கியது. உப்பளங்களிலும், தோட்டங்களிலும் வேலை செய்கிற உழைப்பாளிகளின் அன்புச் சங்கமமாக அது விளங்கியது.

வைகுண்டர் தனது கொள்கைகளை அரிகோபாலர் எனும் சீடரைக் கொண்டு செய்யுள் வடிவில் எழுதப் பணித்தார். அதுதான் அகிலத்திரட்டு என்று அழைக்கப்படுகிறது. தமிழில் எழுதப்பட்ட வேதமாக அது கருதப்படுகிறது. அப்பகுதியிலுள்ள மக்களை வைகுண்டர் தனது கோட்பாடுகள் வழியாகவும், செயல்பாடுகள் வழியாகவும் தர்மயுகத்துக்குத் தயார் செய்து வந்தார்.

## நிழல் தாங்கல்களை அமைத்தவர்:

அய்யா வைகுண்டர் உருவாக்கிய நிழல் தாங்கல்கள் சமய சமுதாய பணிகளுக்குரிய களங்களாக அமைந்தன.

> "அய்யா வைகுண்டர் தாழ்த்தப்பட்ட மக்கள் கல்வியறிவு பெற்றால்தான் சமூகத்தில் உயர்வடைய முடியும் என்பதை எண்ணி வழிபாட்டுக்காகவும், கல்விக்காகவும் நிழல்தாங்கல்களை ஏற்படுத்தினார். அக்காலத்திலேயே திருவிதாங்கூரில் ஏராளமான நிழல் தாங்கல்கள் ஏற்படலாயின. இவை சமய சமுதாயப் பணிக்கேந்திரங்களாக விளங்கின"[29]

மேற்குறிப்பிடப்பட்ட நிழல் தாங்கல் பற்றிய செய்தியைப் பொன்னீலன் நாவலில் சுட்டுகிறார்.

> "மக்கள் அன்போடு தந்ததைத் தின்று வாய்க்காலில் குடித்து ஊர் ஊராகப் பனங்காடுகளில் அலைந்து நிழல்தாங்கல்களில் இளைப்பாறி, இருட்டில் விளக்கேற்றியதும் சின்னஞ்சிறுசுகளுக்கு ஏடும் எழுத்தாணியும் கொண்டு எழுத்து சொல்லிக் கொடுத்து, ஆத்திச்சூடி, கொன்றை வேந்தனுடன், அய்யா சொன்னதுகளையும் வாசித்து விளக்கமாகச் சொல்லும்போது தன் வாழ்க்கைக்குப் புதிய பொருள் ஏற்பட்டு விட்டதாகப் பூரிப்பார் அவர்"[30]

என்ற பகுதி வைகுண்டர் மட்டுமின்றி அவரது சீடர்களும் நிழல் தாங்கல்களைச் சமூக மறுமலர்ச்சியின் களமாக ஆக்கியமையை உணர்த்துகிறது.

## சமூக ஆன்மீகப் போராளி:

வைகுண்டரைச் சமூகப் போராளியாகப் பார்க்கும் நிலையும் கடவுள் அவதாரமாகப் பார்க்கும் நிலையும் உள்ளன.

> "வைகுண்ட சாமி சமூக மூடப்பழக்கவழக்கங்களையும் அரச அதிகாரத்தையும் எதிர்த்துக் கருத்துக்கள் கூறிவந்தார். திருவாங்கூர்

ஆட்சியினரின் செயல்களைக் கீழ்த்தரச் செயல்கள் என்று வருணித்தார். கடுமையான வரிவிதிப்பு, சித்திரவதை, அடிமைத்தனம், அரை நிர்வாண ஆடைமுறை போன்ற சமூக அநீதிகளை வன்மையாய்க் கண்டித்தார்”[31]

என வைகுண்டரைச் சமூகப் போராளியாக வே.தி.செல்வம் காட்டுகிறார். அய்யாவின் சமுதாயச் சிந்தனைகள் மறுமலர்ச்சியின் ஊற்றுக் கண்ணாக விளங்குகின்றன. அவரது ஆன்மீகச் சிந்தனைகளும் முற்போக்குத் தன்மை கொண்டவையாக அமைந்தன.

மறுபக்கம் நாவலில் இவ்விரு நோக்குகளும் வெளிப்பட்டுள்ளன. வெங்கடேசன் எனும் கதாப்பாத்திரம் வைகுண்டரைச் சமூகப் போராளியாகப் பார்க்கிறது.

“மண்ணில் மனிதராகப் பிறந்து, சக மனிதனின் விடுதலைக்காகப் போராடின ஒரு மாபெரும் மனிதரைக் கண்ணனாக்கிக் குறுக்கிப் போட்டீர்களே! அவர் நடத்தின போராட்டங்களை அற்பப்படுத்தி விட்டீர்களே!”[32]

என்பதில் வைகுண்டர் மாமனிதராக அடையாளப்படுத்தப்படுகிறார். இப்படிப்பட்ட சிந்தனைகளை எழுப்புபவர்கள் தனி நபர்களாக இருக்கிறார்கள். ஆனால் வைகுண்டரை கடவுள் அவதாரமாக அடையாளப்படுத்துபவர்கள் பெருங்கூட்டம் மக்களாகவும், இயக்கமாகவும், குழுவாகவும் நிற்கிறார்கள். மாசி மாதம் இருபதாவது நாள் வைகுண்டரின் அவதாரத் தினமாகக் கருதப்படுகிறது. அன்று அவதாரக் கொள்கையினரின் கொண்டாட்டங்கள், அவரைக் கடவுளாகக் காட்டி நிற்கின்றன. அய்யா அரகர அரகர சிவசிவா என்னும் புகழ் மொழிகளை அய்யாவின் பக்தர்கள் வழிநெடுக எழுப்புகிறார்கள். அவர்கள் தலையில் காவித்தலைப்பாகை கட்டப்பட்டிருக்கிறது. நெற்றியில் வெள்ளை நாமம் போடப்பட்டிருக்கிறது. வலது கையில் முக்கோணக் காவிக்கொடியைக் கட்டியிருக்கிறார்கள். அய்யாவை அவதாரமாகப் போற்றும் பாடல்களை வாகன ஒலி பெருக்கிகள் ஒலிபரப்பிச் செல்கின்றன[33] இவை வைகுண்டரை அவதாரமாகக் கருதுவோரின் செயல்களாகும்.

## சாதீய எதிர்ப்பாளர்:

வைகுண்டர் சாதி ஏற்றத்தாழ்வுகள் நீங்கி அனைத்து மக்களும் சகோதரர்களாக வாழ வேண்டும் என்று விரும்பினார். மனிதர்களை மேலானவர்கள் என்றும் கீழானவர்கள் என்றும் பிரிக்கும் சாதியை கலியின் சதி என்று குறிப்பிட்டார். அவர் சாதி என்ற அமைப்பைப் பாம்பு என்ற படிமத்தால்

விளக்கினார். விடமும் ஆபத்தும் நிறைந்தது சாதி வேறுபாடு என்பதை விளக்க அவ்வுருவகத்தை அவர் பயன்படுத்தினார். உலகிலுள்ள அனைவரும் ஒரு தாய் பெற்ற மக்கள் என்பது அவரது கருத்தாகும்.

"சாதி எனும் பாம்பு
சண்டித்தனம் பண்ணுதடா.....
மக்களை இனம் பிரிச்சி
மாறாட்டம் செய்யுதடா.
சாதியாம் பாம்பச்
சகியாதே என் மகனே
ஒருத்தி பெத்த மக்கா
ஒண்ணாக வாழ்ந்திடுங்கோ"[34]

என்று அறிவுறுத்தினார்.

வைகுண்டரின் சாதி பேதமற்ற மனப்பாங்கை அவரது வாழ்வில் நிகழ்ந்த நிகழ்வுகள் வெளிப்படுத்துகின்றன. காருபாறை என்ற ஊரைச்சார்ந்த வண்ணார் குலப்பெண்ணான சிவனணைஞ்சிக்கு வைகுண்டர் இரக்கம் காட்டிய நிழ்வை இதற்கு உதாரணமாகச் சுட்ட முடியும். அப்பெண் வைகுண்டரின் மீது அளப்பறிய பக்தி கொண்டவள் ஆவார். அவள் ஞாயிற்றுக்கிழமை தோறும் வைகுண்டரைப் பார்க்க வருவாள். ஒருநாள் வைகுண்டரையும் அவரது சீடர்களையும் விருந்துக்கு அழைத்தாள். வைகுண்டருக்கு அந்த நாளில் வேறொரு நிகழ்வில் கலந்து கொள்ள வேண்டி இருந்ததால் தனது சீடர்களை அனுப்புவதாகக் கூறினார். அதன்படி வைகுண்டரின் சீடர்கள் அந்நாளில் சிவனணைஞ்சி வீட்டுக்குச் சென்றார். சாதி வேறுபாட்டை மனதில் கொண்டிருந்த வைகுண்டரின் சீடர்கள் சிவனணைஞ்சி வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து அவள் கொடுத்த வெற்றிலையை மாத்திரம் எடுத்துக் கொண்டு, அவர் கொடுத்த உணவை உண்ணாமல் சென்று விட்டனர். இதனைக் கண்ட பிற சாதியினர் சிவனணைஞ்சியை எள்ளி நகையாடினர் . அவள் சமைத்த உணவைக் குழிதோண்டி புதைக்கும் நிலை உருவானது. இதனால் வருத்தமுற்ற சிவனணைஞ்சி வைகுண்டரைச் சந்தித்து தனது அதிருப்தியை வெளிப்படுத்தினாள். வைகுண்டர் தனது சீடர்களுக்குள் இருந்த சாதி உணர்வுக்காக வருத்தப்பட்டார். சீடர்களின் செயலுக்காகத் தனது தலையில் அடித்துக் கொண்டார். சீடர்கள் செய்த தவறுக்காக மன்னிப்புக் கேட்டார். சிவனணைஞ்சி வீட்டிற்கு மீண்டும் சென்று உணவுண்டு வரும்படி பணித்தார். சீடர்களும் சாதி உணர்வை அகற்றி அவளது வீட்டில் உணவருந்தினர்[35]

ஆதிக்க சாதியினரைக் கண்டவுடன் ஒடுக்கப்பட்ட மக்கள் இடுப்பில் துண்டைக் கட்டித் தாழ்மையை வெளிப்படுத்த வேண்டும் என்கிற சமூக நடைமுறைக்கு எதிரான நடவடிக்கைகளை வைகுண்டர் மேற்கொண்டார். ஆண்கள் இடுப்பில் துண்டு கட்டக் கூடாது என்றும், சுயமரியாதைக்கு அடையாளமாகத் தலையில் தலைப்பா கட்ட வேண்டும் என்றும் அறிவுறுத்தினார்.

> "மக்கா ஆயிரத்தி ஒண்ணாவது தடவையா சொல்லுதேன். என் முன்னே வரப்பட்ட ஆம்பிள்ளை தலைப்பா கட்டணும். பொம்பள மராப்புப் போடணும், யாரும் யாருக்கும் ஊழியஞ் செய்யப்படாது. தன்மானத்தை விடப்படாது"[36]

என்று தன்மானமாய் வாழுவதற்குப் பயிற்சி வழங்கினார். வைகுண்டர் கால சமூகச் சூழலில் இந்நிகழ்வை நோக்கும்போது ஆதிக்கச் சாதிக்கெதிரான புரட்சிகரச் செயல்பாடாக இதனைப் புரிந்துகொள்ள முடிகிறது. வைகுண்டரின் போதனை அடித்தட்டு மக்களிடம் எழுச்சியை உருவாக்கியது. ஆண்கள் தலைப்பாகை கட்டவும் பெண்கள் மாராப்பணியவும் துணிந்ததில் வைகுண்டரின் கொள்கைகள் முக்கியப் பங்காற்றின.

## பெண் விடுதலைப்போராளி:

குமரி மாவட்ட சமூக மறுமலர்ச்சியின்அடையாளமாக வைகுண்டர் திகழுகிறார். விதவைகளுக்கு எதிராகச் சமூகம் மேற்கொள்ளும் நடவடிக்கைகளை அவர் எதிர்த்தார். நகைகளை அகற்றுதல், வெள்ளை நிற ஆடையை உடுக்கச் செய்தல் போன்ற வழக்கங்களை அவர் எதிர்த்தார். கைம்பெண்களுக்குத் தன்னம்பிக்கை ஊட்டிய நிகழ்வு அவரது வாழ்வில் இடம் பெற்றுள்ளது. கணவன் இறந்ததும் கைம்பெண்கள் தாலியைக் கழற்றுவது முறையன்று என்பது அவரது கருத்தாகும். கணவனின் மரணத்திற்கு மனைவியைப் பொறுப்பேற்கச் செய்வது முறையன்று என்று வைகுண்டர் கூறுகின்றார்.

> "பொன்னு மக்கா எத்தனை தடவை சொல்லியிருக்கேன். தாலி அறுக்காதே, கோலங்குலைக்காதேன்னு, அவன் செத்ததுக்கு நீயா பொறுப்பு? கூட்டத்தை நிமிர்ந்து பார்த்துத் தாடியை உருவி, எல்லாரும் கேட்டுக்கிடுங்க, புருசனப் பறிகொடுக்கது சங்கடந்தான். அதுக்காகப் பொம்பளையள அலங்கோலப்படுத்திக் காலம் பூரா சங்கடப்படுத்தியது கடவுளுக்கு ஏற்காத கொடுமை. பூட்டின தாலிய நீக்கப்படாது"[37]

என ஒரு கைம்பெண்ணுக்குக் கூறும் அறிவுரையை நாவல் எடுத்துக்காட்டுகிறது.

### மேலாடை அணிய வலியுறுத்தியவர்:

பெண்கள் இடுப்புக்குமேல் ஆடை அணியக்கூடாதென மேட்டுக்குடி பிற்போக்குவாதிகள் தடை விதித்த போது வைகுண்டர் மேலாடை அணிய வேண்டும் என வலியுறுத்தினார். பெண்கள் மேலாடை அணிந்து வெளியில் வரவேண்டும் என்பது ஐயாவின் அறிவுறுத்தலாகும்.

> "அய்யா வைகுண்டர் தன்னை நாடி வந்த பெண்களிடம் மேலாடை அணிந்து வரப்பணித்தார். அய்யா வைகுண்டரின் அறிவுரையை ஏற்றுக்கொண்டு பெண்கள் மேலாடை அணிந்தனர். அதைக்கண்ட மேட்டுக்குடியினர் வெகுண்டு தாக்கினார்"[38]

என்று சாந்தினி மே. தாஸ் குறிப்பிடுகிறார்.

தோள்சீலை அணியக் கூடாதென்ற மேட்டிமைச் சமூகத்தாரின் அநீதிகளை வைகுண்டரின் வரிகளிலிருந்து நேரடியாகப் பெற முடிகிறது.

"பூமக்கள் நீதமுடன் போட்ட
தோள் சீலை தன்னைப்
போடாதே என்றடித்தானே சிவனே அய்யா
என்மக்கள் சான்றோர்கள்
இடுப்பில் எடுத்தகுடம்
ஏண்டி இறக்கென்றானே சிவனே அய்யா"[39]

என்பதில் ஆதிக்க சாதியினரின் அநீதிகளுக்கெதிரான வைகுண்டரின் விழிப்புணர்வுக் கருத்துக்களைக் காணமுடிகிறது. மேலாடை அணியும் உரிமையை வழங்காத ஆதிக்கச் சாதியினருக்கு எதிரான குரலாக வைகுண்டரின் குரல் அமைந்தது. பெண்கள் மேலாடை அணியவேண்டும் என்பது வைகுண்டர் பெண்களுக்கு வழங்கிய அறிவுரையாகும். சமூக விதிமுறைகளுக்குட்பட்டு மேலாடை அணியாமல் வைகுண்டரின் போதனைகளைச் செவிமடுக்கச் சென்ற பெண்ணை அவர் பிரம்பால் முதுகில் அடிக்கிறார்.

> "எத்தனை மட்டஞ் சொல்லியிருக்கேன் என் முன்னே மூடாம வந்திருக்கியே. மக்கா அச்சந்தான் எல்லாக் கீழ்மைக்கும் தாய். அச்சத்தை விடு"[40]

என அப்பெண்ணுக்கு அறிவுரை வழங்குகிறார். ஒடுக்கப்பட்டுக் கிடந்த மக்களுக்கு அவர் துணிவைக் கற்பித்தார் தைரியத்தில் தெய்வம் உயிர்வாழுவதாக அவர் அறிவுறுத்தினார்.

## கிறித்தவத்தின் வரலாறு:

இயேசு நாதரின் சீடர்களில் ஒருவரான தோமா கி.பி 52-ஆம் ஆண்டு கேரளத்தில் உள்ள கொடுங்கல்லூருக்கு வந்தார் என நம்பப்படுகிறது. இவர் கேரளத்தில் நிரணம், கொல்லம், காயல், கொட்டாரக்கரை, கொக்கமங்கலம், கிராங்கனூர், பாலூர் ஆகிய இடங்களில் தேவாலயங்களை உருவாக்கினார். திருவிதாங்கோட்டிலும் ஒரு சிற்றாலயம் ஒன்றை உருவாக்கினார். இவர் கேரளத்திலிருந்து கன்னியாகுமரி வழியாகச் சென்னைக்குச் செல்லும் போது கொல்லப்பட்டாரென்று வாய்மொழியாகச் சொல்லப்பட்டு வருகிறது. தோமா வழியாகக் கிறித்தவத்தை ஏற்றுக் கொண்டவர்களும், அவர்களது மரபினரும் தாமஸ் கிறித்தவர்கள் என்றழைக்கப்பட்டனர். கி.பி ஆயிரத்து அறுநூறுகளில் குமரிமாவட்டத்தில் தாமஸ் கிறித்தவர்கள் இருந்ததை மெல்சியார் நியூன்ஸ் பறட்டோ குறிப்பிடுகிறார்.

> "நான் தென் திருவிதாங்கூரில் தாமஸ் கிறித்தவர்கள் சிலரைக்கண்டேன். இவர்கள் இந்துக்களைப்போல் பழக்கம் உடையவர்கள். தங்களின் திருமண நிகழ்ச்சியில் தாலி கட்டுவதிலும் வேறு சடங்குகளிலும் இந்துக்களைப் பெரிதும் பின்பற்றுகின்றனர்"[41]

என்று கி.பி.561-இல் குறிப்பிடுகின்றார்.

திருவிதாங்கூர் ஸ்டேட் மேனுவலை முதலில் எழுதிய வி.நாகம் அய்யா கி.பி 1439-ஆம் ஆண்டுக்கு முன் குமரி மாவட்டத்தில் கிறித்தவம் பரவிவிட்டது என்கிறார்.[42] 1533 -37 ஆம் ஆண்டுக்குள் கன்னியாகுமரி முட்டம் துறைமுகக் கடற்கரை பரதவர்கள் கத்தோலிக்கக் கிறித்தவத்தைத் தழுவியதாகக் கருதப்படுகிறது. வாஸ்கோடகாமா கேரளத்திற்கு வருவதற்கு முன்னரே கன்னியாகுமரி மாவட்டத்தில் கத்தோலிக்கக் கிறித்தவம் பரவியிருந்தது குறிப்பிடத்தக்கது ஆகும்.

பதினாறாம் நூற்றாண்டிலிருந்து குமரி மாவட்டதில் கத்தோலிக்கக் கிறித்தவம் வேகமாகப் பரவத் தொடங்கியது.

## சவேரியார்:

புனித சேவியர் தென் திருவிதாங்கூருக்கு வந்தபின் கத்தோலிக்கக் கிறித்தவம் அதிவேகமாகப் பரவியது. புனித சேவியர் ஸ்பெயின் நாட்டில் உள்ள நவேரா என்னும் பகுதியைச் சார்ந்தவர். இவர் 1506-இல் டோன் ஜான்கியாஜோ, டோனா மரியான் ஆகியோருக்கு மகனாகப் பிறந்தார். புனித இஞ்ஞாசியாரிடம் வேதம் கற்றார்.

இறைப்பணிக்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டார். போர்ச்சுகல் அரசரின் உதவியுடன் 1541 ஏப்ரல் 7-ஆம் நாள் கப்பல் ஏறி 1942 மே 6-ஆம் நாள் கோவாவுக்கு வந்து சேர்ந்தார். மைக்கேல்வாள் என்னும் அருட்தந்தையின் வழிகாட்டுதலின்படி தென் திருவிதாங்கூருக்கு வந்தார். இவரது பணிகளால் கவரப்பட்ட கடற்கரை கிராமங்கள் முழுமையாகக் கத்தோலிக்கக் கிறித்தவத்தை ஏற்றுக்கொண்டன.

சவேரியார் வடுகர் படையை விரட்டிய நிகழ்வை வரலாற்றின் பக்கங்கள் சுட்டுகின்றன.

> "வடுகர் படையின் அட்டூழியத்தைக் கேள்விப்பட்ட சவேரியார் குமரிவாழ் பரதவர்களைக் காப்பாற்ற 1544 ஜூலை மாதத்தில் கன்னியாகுமரிக்கு வந்தார். அனாதைகளைப்போல் ஆதரவின்றி பசியால் வாடிய மக்களைப் பார்த்துக் கண்ணீர்விட்டார். இவர்களுக்கு உதவி செய்யும் நோக்கில் வழக்கம்போல் சிலுவை ஒன்றினைக் கையில் ஏந்திக் கொண்டு வடுகர் அதிகாரிகளை நோக்கித் துணிச்சலுடன் நடந்தார். கிறித்தவர்களுக்குச் செய்யும் அட்டூழியங்களை நிறுத்தக் கூறி கடினமாக அவர்களை எச்சரித்தார். முடிவில் வடுகர்படை அங்கிருந்து பின்வாங்கியது"[43]

என ஜி.ஐசக் அருள் தாஸ் குறிப்பிடுகிறார். இந்நிகழ்வைப் பொன்னீலன் நாவலில் பதிவுசெய்கிறார்.

ஒரு மாலை நேரத்தில் சவேரியார் மாதா கோயிலில் அருளுரை ஆற்றிக் கொண்டிருக்கிறார். வடக்கிலிருந்து விஜயநகரப் பேரரசின் படை கடற்கரை கிராமத்தைக் கொள்ளையிட வருகிறது. இதைக்கண்ட ஆண்களும், பெண்களும் அலறுகின்றனர். யாரும் பயப்படவேண்டாம் என்று சவேரியார் மக்களுக்கு நம்பிக்கையூட்டுகிறார். அவர் திருச்சிலுவைக் கோலை உயர்த்திப் பிடித்தபடி குதிரையில் வடக்கு நோக்கிச் செல்லுகிறார். சவேரியாரைக் கண்டதும் விஜயநகரப் படை அப்படியே நின்றுவிட்டது. படைத்தளபதி குதிரையிலிருந்து இறங்கி மரியாதையுடன் சவேரியாரைச் சந்திக்கிறார். அவர் சவேரியாரிடம் ஆசி பெற்றுவிட்டுத் திரும்பி விடுகிறார்.[44]

## ரிங்கல் தௌபே:

ரிங்கல் தௌபேயின் முழுப்பெயர் வில்லியம் தொபியாஸ் ரிங்கல் தௌபே என்பதாகும். இவர் ஜெர்மனி நாட்டில் புருஷியா மாகாணத்தில் சிசிலியா நாட்டில் ஷீடல் உயிட்ஸ் எனும் ஊரில் 1770-ஆம் ஆண்டு ஆகஸ்ட் 8-ஆம் நாள் பிறந்தார்.

ஹாலே பல்கலைக் கழகத்தில் இறையியல் பயின்று போதகர் பட்டமும் பெற்றார். இந்தியாவில் இறைப்பணி செய்யும் நோக்கில் 1797-ஆம் ஆண்டு கல்கத்தாவுக்கு வந்தார். கல்கத்தாவிலும், பீகார் மாநிலத்திலுள்ள ராஜ்மகால் மலைத்தொடரிலும் இறைப்பணியாற்றி விட்டு இங்கிலாத்துக்குச் சென்றுவிட்டார். 1804-இல் இலண்டன் அருட்பணி இயக்கத்தின் மூலம் தரங்கம்பாடிக்கு வந்தார். பின்னர் திருநெல்வேலிப் பகுதியில் இறைப்பணி செய்தார். அங்கு இறைப்பணி செய்து கொண்டிருந்த காலத்தில் திருவிதாங்கூர் பகுதியில் நற்செய்தி பணி செய்ய வேண்டியதன் தேவையை அவர் உணர்ந்தார்.

1806-இல் ஆரல்வாய்மொழியில் வந்திறங்கினார். 25.04.1806-அன்று மைலாடிக்கு வந்தார். முதலில் மிகக் குறைவான மக்களே ரிங்கல் தௌபே போதித்த கிறித்தவத்தை ஏற்றுக் கொண்டனர். இங்கு நாற்பது பேருக்குத் திருமுழுக்கு வழங்கினார். 1809-ஆம் ஆண்டு மைலாடியில் ஆலயம் கட்ட அடிக்கல் நாட்டினார். இதுவே குமரி மாவட்டத்தின் முதல் சீர்திருத்தத் திருச்சபை ஆகும். மயிலாடி தவிர, கோயில்விளை, தென்தாமரைகுளம், புத்தளம், ஆத்திக்காடு, ஈத்தாமொழி, பிச்சைக்குடியிருப்பு ஆகிய இடங்களிலும் ஆலயங்களைக் கட்டியெழுப்பினார்.

## சமூகப்பணி:

இப்பகுதியிலுள்ள மக்கள் ஆன்மீகம், கல்வி, பொருளாதாரம் ஆகியவற்றில் சிறந்து விளங்க ரிங்கல் தௌபே பாடுபட்டார். இவர் 1809 இல் மயிலாடியில் ஆங்கிலப் பள்ளியொன்றை நிறுவினார். 1809-இல் திருவிதாங்கூர் ரெசிடெண்டைச் சந்தித்து வறுமைக் கோட்டுக்குக் கீழ் வாழ்ந்த கிறித்தவர்கள் பயிர்செய்து பொருளீட்ட தரிசு நிலங்களை இலவலசமாகப் பதித்து வாங்கினார்.

## சமயப்பணி:

மறுபக்கம் நாவல் ரிங்கல் தௌபேயை 'நாற்பது வயதுகூட நிரம்பாத ரஷ்யநாட்டுப் படிப்பாளி' என அறிமுகப்படுத்துகிறது.[45] வேதமாணிக்கத்தின் அழைப்பின் காரணமாக அவர் மயிலாடிக்கு வருவதாகச் சொல்லப்படுகிறது. ரிங்கல் தௌபே கிறித்தவச் சுடரை மகராசன் வேதமாணிக்கத்தின் வீட்டுப் பனைஓலை மாடத்தில் ஏற்றிவைப்பதாகக் காட்சியமைத்துள்ளார்.[46] திருச்சபை கட்டப்பட்ட ஏழு ஊர்க்காரர்களும் மயிலாடிக்கு வந்து சுடர்களைக் கொண்டு செல்வதாக நாவல் கற்பனை மெருகேற்றுகிறது.

"ஜேம்ஸ் டவுன்காரர்கள், தாமரைக்குளக்காரர்கள், புத்தளம் காரர்கள், ஆத்திக்காட்டு விளைக்காரர்கள், கோயில்விளைக்காரர்கள் ஈத்தா மொழிக்காரர்கள், இப்படியாகப் பலர் சுடர்களைக் கொண்டு போக"[47]

என ரிங்கல்தௌபேயால் நிறுவப்பட்ட திருச்சபைகள் அமைந்த இடங்கள் தொகுத்துரைக்கப்படுகின்றன.

ரிங்கல் தௌபேயின் கிறித்தவப் பிரச்சாரமும் நாவலில் இடம்பெறுகிறது. இறைவனை வழிபட வரும்போது தூய ஆடை உடுத்த வேண்டும், உடம்பை மூடிக்கொள்ள வேண்டும், தலையில் முக்காடிட்டுக் கொள்ள வேண்டும், இறைவன் விரும்பும் வாழ்வு வாழவேண்டும் ஆகிய அறிவுரைகளை அவர் வழங்குகிறார்.[48]

## சமூகப்பணி:

சமூக மாற்றத்தில் ரிங்கல் தௌபேயின் பணி குறிப்பிடத்தகுந்தது. சமய மாற்றத்துடன் கூடிய சமூக மாற்றத்தை அவர் முன்னெடுத்துச் சென்றார். ஆலயத்துக்கு வரும்போது மேலாடை அணிந்து வருவதற்கான அனுமதியை இங்கிலாந்து மகாராணியிடமிருந்து பெற்றுக் கொடுக்கிறார். தலைவரி, முலைவரி, கட்ட வேண்டியதில்லை என அரசின் அனுமதியோடு அறிவிக்கிறார். ஞாயிற்றுக் கிழமை அரசுப்பணி உள்ளிட்ட எவ்வகை ஊழியத்திற்கும் கிறித்தவர் செல்ல வேண்டியதில்லை என்பதையும் தெரிவிக்கிறார்.[49] ரிங்கல் தௌபேயின் முயற்சியால் கிடைத்த உரிமைகள் முழு குமரி மாவட்டத்துக்கும் பயன்படாமல் கிறித்தவத்தைச் சார்ந்தவர்களுக்கு மட்டுமே பயன்பட்டமை கவனிக்கத் தக்கது.

## சார்லஸ் மீட்:

சார்லஸ் மீட் குமரி மாவட்டத்தில் 1818 முதல் 1856 வரை சமயப்பணி புரிந்தார். இவருக்குச் சார்லஸ் மால்ட்டும் அவரது மனைவியும் உதவியாக இருந்தார்கள். இவர் நாகர்கோவிலில் 140 அடி நீளமும் 70 அடி அகலமும் கொண்ட கல்கோயில் கட்டப்படக் காரணமாக இருந்தார். 1820-இல் நாகர்கோவிலில் ஒரு அச்சகத்தை நிறுவினார். இதுதான் குமரி மாவட்டத்தின் முதல் அச்சகமாகும்.

## கல்விப்பணி:

மீட் அய்யர் 1819-ஆம் ஆண்டு நாகர்கோவிலில் ஆண்கள் மட்டும் பயிலும் பள்ளிக்கூடத்தை நிறுவினார். இப்பள்ளியில் பயின்ற மாணவர்களுக்கு உணவும்

புத்தகமும் இலவசமாகக் கொடுக்கப்பட்டன. மீட் அய்யரின் கல்விப்பணியை அ.கா பெருமாள் உயர்வாக மதிப்பிடுகிறார்.

> "ரெவரெண்ட் மீட் குமரி மாவட்ட கல்வியை வகைப்படுத்துவதில் முன்னணியில் நின்றவர். இவர் இந்த மாவட்டத்துக் கல்விக்காக 56 ஆண்டுகளைச் (1817-1873) செலவழித்திருக்கிறார். இவர் ஆரம்பித்த பள்ளியில் படித்தவர்கள் பிற்காலத்தில் திருவிதாங்கூர் திவான் ஆயிருக்கிறார்கள். குமரி மாவட்டப் பள்ளிகளில் கண்காணிப்பாளராக அவர் பதவியேற்ற பின்பு (1855) இங்குள்ள மொத்தக் கல்விப் போக்கையும் மாற்ற ஆரம்பித்தார்"[50]

என்று மீட் அய்யரின் கல்விப்பணி பற்றிக் குறிப்பிடுகிறார்.

மீட் அய்யரின் கல்விப்பணி சமூக மாற்றத்திற்கான உந்து சக்தியாக அமைந்ததாக வே.தி.செல்வம் கருதுகிறார்.

> "கி.பி 1817-இல் ரிங்கலை அடுத்து மீட் பாதிரியார் வந்தார். இவர் கல்விக்கு அதிக மதிப்புக் கொடுத்தார். கல்வியே அறியாமை, பேதமை, அடிமைத்தனம், வறுமையில் இருந்து மீளவழி என்று கூறினார். மீட் கல்விப் பணியை மயிலாடியிலிருந்து நாகர்கோவிலுக்கு மாற்றினார். கி.பி.1819-இல் நாகர்கோவிலில் மத்திய கல்விக் கூடத்தை அமைத்தார்"[51]

என்று குறிப்பிடுகின்றார்.

மீட் அய்யர் தொடங்கிய பள்ளியில் அடிமைக்குழந்தை சேர்க்கப்பட்ட நிகழ்வைப் பொன்னீலன் விவரிக்கிறார். அவர் அடிமைக் குழந்தையை ஒரு குளக்கரையில் சந்திக்கிறார். மலையாள எசமானிடமிருந்து அக்குழந்தையை வாங்கி நெஞ்சில் ஏந்தி தனது மாளிகைக்குக் கொண்டுவருகிறார். அவளை ஒன்றாம் வகுப்பில் சேர்க்கிறார். அங்குள்ள விடுதியில் தங்க வைக்கிறார். அவருடைய மனைவி இறந்த பின் அவர் திருமணம் செய்த ஜோஹன்னாவின் முயற்சியால் அப்பள்ளி உருவாக்கப்பட்டமையை நன்றியோடு நினைவு கூருகிறார். அடிமைக் குழந்தையைத் தங்கும் விடுதியில் சேர்த்தமையால் பிற சாதிக்குழந்தைகள் அங்கிருந்து வெளியேறியமைக்காக வருத்தப்படுகிறார்.[52] இந்நிகழ்வில் மீட் அய்யரின் சாதியற்ற சமூகம், அடிமைகளற்ற சமூகம் எனும் உயர்வான இலட்சியங்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

தென்திருவிதாங்கூர் கிறிஸ்தவப் பள்ளிகளின் தலைமைக் கண்காணிப்பாளராக மீட் அய்யர் பொறுப்பேற்ற காலகட்ட நிகழ்வுகளையும் நாவல் அசைபோடுகிறது. அவர் தலைமைக் கண்காணிப்பாளாராகப் பொறுப்பேற்றபின் பொன்னரை பள்ளிக்கூடத்துக்குக் குதிரையில் செல்கிறார். பள்ளியில் புதிதாகச்

சேர்க்கப்பட்டிருக்கும் புலையர் மாணவனைப் பார்க்கவேண்டும் என்கிறார். அம்மாணவனிடம் நன்றாகப் படித்து அவனது சமூகம் விடுதலை பெறுவதற்குத் தொண்டு செய்யும்படி அறிவுறுத்துகிறார். புலையர் பையனைப் பள்ளியில் சேர்த்த தலைமையாசிரியரின் செயலைப்பாராட்டி மாதம் ஒரு பணம் ஊதிய உயர்வு வழங்குகிறார். அலுவலகத்துக்குத் திரும்பியபின் ஒரு சுற்றறிக்கையை கிறித்தவப் பள்ளிகளுக்கு அனுப்புகிறார்.

> "இன்று முதல் புலையர் ஆண் குழந்தைகளைப் பள்ளியில் சேர்க்கும் ஆசிரியர்களுக்கு, ஒரு குழந்தைக்கு மாதம் ஒரு பணம் வீதம் சம்பள உயர்வும், பெண்குழந்தைகளை சேர்க்கும் ஆசிரியர்களுக்கு ஒரு குழந்தைக்கு மாதம் ஒன்றரைப் பணம் வீதம் சம்பள உயர்வும், பணி செய்யும் காலம் முழுவதும் தரப்படும்"[53]

என்று பாலின சமூக சமத்துவ உருவாக்கத்துக்கான செயல்முறையைப் பள்ளியிலிருந்து தொடங்குகிறார்.

## மருத்துவப்பணி:

மீட் அய்யர் நெய்யூர் மருத்துவமனையின் சேவையில் ஆர்வம் காட்டியமை குறித்தும் நாவல் உரைக்கிறது. அவர் நெய்யூர் மருத்துவமனையின் கட்டடப்பணிகளைப் பார்வையிடுகிறார். மருத்துவப் பணியாளர்களின் பணித்திறன் குறித்துக் கேட்டறிகிறார். நோயாளிகள் நெய்யூர் மருத்துவமனையைத் தேடி வருவதில் பெருமிதம் கொள்கிறார். கருவுற்ற பலசாதிப் பெண்களும் அங்கு மருத்துவ வசதி பெற்று ஒரே அறையில் தங்கி ஒருவருக்கொருவர் உதவியாயிருப்பதை அறிந்து மகிழ்ச்சியடைகிறார். இவ்வாறு கல்விப்பணியோடு மருத்துவப் பணியிலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்ட மீட் அய்யரின் சேவை உள்ளம் எடுத்துக்காட்டப்படுகிறது.

## சமயப்பணி:

மீட் அய்யரின் சமயப்பணி பற்றியும் நாவல் பேசுகிறது. சமூகப் பணிகளை உயர்வாக மதிப்பிடும் நாவல் சமயப் பணிகளை எள்ளல் தன்மையுடனேயே விவரிக்கிறது.

> "பெருவெள்ளத்தை எதிர்த்துப் பாயும் துடிப்புள்ள பெரிய மீன்களுக்காகக் கரையோரம் குந்தியிருக்கும் தூண்டில்காரன் போல தன் சமயத் தூண்டிலில் இரை கோர்த்து மீன் பிடித்து கை சோர்ந்து களைத்து கிடக்கிறார் அய்யர்"[54]

என்ற உவமையில் எள்ளல் தொனி தென்படுகிறது.

## மேலாடை அணிய ஆதரவு:

குமரி மாவட்டதில் கிறித்தவத்தைத் தழுவிய பெண்கள் மேலாடை அணியும் உரிமை பெற மீட் அய்யர் காரணமாக இருந்தமையை சாந்தினி மே.தாஸ் சுட்டிக் காட்டுகிறார்.

> "மீட் பாதிரியாரின் தூண்டுதலினால் கிறித்தவ மதம் தழுவிய பிற்படுத்தப்பட்ட மக்கள் நாயர் குல ஆண்களையும் பெண்களையும் போல் ஆடை அணியத் தொடங்கினர். பெண்கள் ரவிக்கையும் அதன்மேல் தோள்சீலை அணியவும் ஆண்கள் கணுக்கால் வரை வேட்டி கட்டி தோளில் துண்டு போட்டுக் கொள்ளவும் தொடங்கினர். முதலில் வீட்டுக்குள் மட்டும் இவ்வாறு உடை அணியத் தொடங்கிய இவர்கள், அதன் பின் தேவாலயம், சந்தை முதலிய பொது இடங்களுக்குச் செல்லும் பொழுதும் அணியத் தொடங்கினர்"[55]

என்பதிலிருந்து பெண்கள் தோள்சீலை அணியும் மறுமலர்ச்சியை உருவாக்கியவராக மீட் அய்யரைப் புரிந்து கொள்ள முடிகிறது.

## மரணத்திலிருந்து தப்புதல்:

முகிலை இராசபாண்டியனின் நாவல்களை முன்வைத்துக் குமரிமாவட்ட சமூக வரலாற்றை ஆய்ந்த சாந்தினி மே.தாஸ், மீட் பாதிரியார் தனக்கு விரிக்கப்பட்டிருந்த மரணவலையினின்று தப்பியதை விளக்குகிறார். மீட் பாதிரியாரின் கடிதத்தை உதயகிரி கோட்டையில் இருந்த சிபால்டிடம் கொண்டு சேர்த்தவராகத் தேவசகாயம் என்பவரைக் குறிப்பிடுகிறார். மண்டைக்காட்டிலிருந்த பல்சமயமக்களிடம் மீட் பாதிரியார் உதவி கேட்டதாக ஒரு குறிப்பைத் தருகிறார். இச்செய்தி வருமாறு:

> "மீட் பாதிரியார் தன்னைக் கொல்ல நடக்கும் சதியினை அறிந்துகொண்டார் அதனால் தனக்கு உதவும்படி தனக்கு நம்பிக்கைக்குப் பாத்திரமான தேவசகாயம் என்பவன் மூலம் உதயகிரி கோட்டையில் இருந்த ஆங்கிலேயப் படைப்பிரிவின் கேப்டன் சிபால்டிற்குக் கடிதம் ஒன்றை அனுப்பினார். அது மட்டுமின்றி மண்டைக்காட்டு மக்கள் அனைவரிடமும் சென்று மதவேறுபாடு கருதாமல் உதவி கேட்க, அவர்களும் தங்கள் ஆயுதங்களுடன் தேவாலயத்திற்கு வந்து பாதுகாப்புக்காக நின்றனர்."[56]

மீட் பாதிரியாருக்குக் கேப்டன் சிபால்டு உதவிய நிகழ்வு குறித்தும் சாந்தி மே.தாஸ் எழுதுகிறார்.

"மீட் பாதிரியாரின் கடிதம் கிடைக்கப்பெற்ற கேப்டன் சிபால்டு முதலில் தயங்கினாலும் ஆபத்தில் இருப்பது தன் இனத்தவன் என்பதை உணர்ந்ததும், பாதிரியாருக்கு ஆபத்து நேர்ந்தால் ரெசிடெண்ட் துரைக்குப் பதில் சொல்ல வேண்டிவரும் என்பதை எண்ணிப்பார்த்தும், தமது படைவீரர்களுடன் புறப்பட்டார். அதோடு மேலும் ஒரு படைப்பிரிவை மறுநாள் புறப்பட்டு வருமாறு ஆணையிட்டுச் சென்றார்"[57]

எனச் சிபால்டு அனுப்பிய படைப்பிரிவு மீட் அய்யரின் உயிரைக் காப்பதற்குக் காரணமாக இருந்ததைக் கோடிட்டுக் காட்டுகிறார்.

மீட் அய்யரின் உயிருக்குக் குறிவைக்கப்பட்ட நிகழ்வு பற்றியும் அவர் உயிர் தப்பியது பற்றியும் நாவலில் விளக்கப்படுகிறது. மீட் அய்யர் நெய்யூரிலிருந்து திங்கட்சந்தை வழியாகக் குதிரையில் வந்து கொண்டிருந்தபோது அவரைக் கொன்று விடுவதாகச் சில முரடர்கள் கத்துகின்றனர். தன்னைச் சுற்றி ஆபத்து இருப்பதை உணர்ந்த அவர் ஒருகடிதம் எழுதி, நம்பிக்கையான தூதுவர் மூலம் உதயகிரிக் கோட்டைக்கு அனுப்புகிறார். இராணுவத் தலைவராக இருந்த சிபால்டு தனது கட்டுப்பாட்டிலிருக்கும் பதினைந்தாவது இராணுவப்பிரிவைத் தயார்படுத்தி மண்டைக் காட்டுக்கு அனுப்புகிறார். மீட் அய்யருக்கு எதிரான கொலைச்சதி முறியடிக்கப்படுகிறது.[58]

## மூன்றாம் திருமணம்:

மீட் அய்யரின் மூன்றாம் திருமணம் பற்றிய தகவலும் நாவலில் தரப்படுகிறது. இரண்டாம் மனைவி இறந்தபின் மீட் அய்யர் லூயிஸ் எனும் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளுகிறார். அது பொதுமக்களால் மட்டுமின்றி கிறித்தவ சபை உறுப்பினர்களாலும் விமர்சிக்கப்படுகிறது. ஐம்பத்தொன்பது வயதைத் தாண்டியபின் மீட் அய்யர் திருமணம் செய்தது இந்தியக் கலாச்சாரத்துக்கு ஒவ்வாதது என விமர்சனங்கள் எழுகின்றன. அவர் மூன்றாம் திருமணம் செய்து கொண்ட விமர்சனத்துக்கான அடிப்படை இல்லை என்றும், அவர் தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சார்ந்த பெண்ணைத் திருமணம் செய்ததுதான் விமர்சனத்துக்கான காரணம் என்றும் நாவலில் தெளிவுபடுத்தப்படுகிறது.

## ஜோஹன்னா:

மீட் அய்யரின் மனைவி ஜோஹன்னா ஆவார். இவர்தான் குப்பாயத்தை வடிவமைத்தவர் ஆவார். முகிலை இராசபாண்டியன், குப்பாயம் என்ற ஆடை புழக்கத்து வந்தது பற்றி எழுதுகிறார்.

> "சார்லஸ் மீட் பாதிரியாரின் மனைவி தாழ்த்தப்பட்ட பெண்கள் மேலாடையாக அணிவதற்கு என்று ஓர் உடையைத் தைத்தார். அதைக் குப்பாயம் என்று குறித்தனர். இடுப்பு வரையில் தாழ்ந்த நீண்ட கைகளைப் பெற்றுக் காட்சி தந்த இப்புதிய குப்பாயத்தைத் தைப்பதற்குக் கிறித்தவப் பெண்களுக்கு அவர் கற்பித்தார்"[59]

என்று அவர் குறிப்பிடுகிறார்.

ஜோஹன்னாவின் சமூகப்பணியையும் நாவல் புகழ்ந்துரைக்கிறது. நாகர் கோவில் மாளிகை வாசலில் காத்து நிற்கும் பெண்களின் பொருளாதார வளர்ச்சிக்கு ஜோஹன்னா உதவுகிறார். கைம்பெண்களுக்குத் தையல் சார்ந்த கலைகளைக் கற்பிக்கிறார். மால்ட் அய்யரின் மனைவி மார்த்தாள் ஜோஹன்னாவுக்குத் துணையாக இருக்கிறார். அவர்தான் கைம்பெண்களுக்குக் குச்சுத்தையல் கற்பிக்கிறார். அவர்கள் தயாரிக்கும் லேஸ்களை வாங்கி லண்டனுக்கு அனுப்பி அதில் கிடைக்கும் வருமானத்தில் பாதியை அப்பெண்களுக்குக் கொடுக்கிறார். மீதிப் பணத்தைச் சேர்த்து ஒரு பள்ளிக் கூடத்தை உருவாக்குகிறார்.[60]

## காக்ஸ் பாதிரியார்:

நெய்யூர் பகுதியில் கிறித்தவ சமயப்பணி செய்து வந்த மீட் அய்யர் 1853 ஆம் ஆண்டு ஓய்வு பெற்றார். அவ்விடத்தில் காக்ஸ் பாதிரியார் நியமிக்கப்பட்டார். இவர் நாடர்களுக்கும் கிறித்தவர்களுக்கும் இழைக்கப்பட்ட அநீதிகளுக்கு நீதிமன்றம் வழி தீர்வு கிடைக்கப் பாடுபட்டார்.

> "காக்ஸ் பாதிரியார் பணிக்கு வந்ததும் கிறித்தவர்களுக்கும் நாடார்களுக்கும் இழைக்கப்பட்ட கொடுமைகளையும் கொலை வழக்கில் சம்பந்தபட்டவர்களை விசாரிக்க திவான் கிருஷ்ணராவ் முயற்சிப்பதையும் கடிதம் மூலம் சென்னை ஆளுநர் ஹாரிஸ் பிரபுவுக்குத் தெரிவித்தார். காக்ஸ் பாதிரியாரின் கடிதம் கிடைக்கப்பெற்ற ஆளுநர் அக்கடிதத்தை ஜெனரல் கல்லனுக்கு அனுப்பி உடன் நடவடிக்கை எடுக்க ஆணையிட வேறு

வழியின்றி திவான் கிருஷ்ணராவ் விசாரணையை ஒழுங்காக நடத்த ஏற்பாடு செய்தார்”[61]

எனக் காக்ஸ் பாதிரியார் நீதியை மீட்டெடுக்க முயற்சி செய்ததைச் சாந்தினி மே.தாஸ் விளக்குகிறார்.

தமிழக நாடார் வரலாற்றை எழுதிய இராபர்ட் எல்.ஹார்டு கிரேவ், ஜான் காக்ஸ்-ஐ அரசியல் செல்வாக்கு மிக்கவராக அடையாளப்படுத்துகிறார். அடிமைத்தனத்துக் கெதிரான சமுதாய மறுமலர்ச்சியில் அவரது பங்கு முக்கியமானது என்பதை வரலாறு தெரிவிக்கிறது.

“அடிமைத்தனத்தின் கொடுமை பற்றியும் அவர்களுக்கு எதிரான கொடுமை பற்றியும் சென்னை அரசாங்கத்திற்கு ஜான்காக்ஸ் விண்ணப்பம் செய்தார். அவ்விண்ணப்பத்தின் மூலம் கவர்னரை இச்செயலில் நேரடியாகத் தலையிட்டு அரசின் அதிகாரத்தின் மேல் அதிகாரம் செலுத்தும்படி ஜான் காக்ஸ் வேண்டுகோள் விடுத்தார். சென்னை அரசாங்கத்துடன் ஜான்காக்ஸ் மேற்கொண்டிருந்த தொடர்பு சம்மந்தப்பட்ட கடிதம் வெளியிட்டபோது அவ்வெளியீடு திருவிதாங்கூர் அரசாங்கத்திற்கும் கிறித்தவ ஆலயங்களுக்கும் இடையிலுள்ள மாறுபட்ட புதியநிலை குறித்துப் பொதுமக்களுக்கு அறிவுறுத்தியது”[62]

என்கிறார். மறுபக்கம் நாவலில் காக்ஸ் பாதிரியார் பற்றிய செய்திகள் மேலோட்டமாக அமைந்துள்ளன.

## வேத மாணிக்கம்:

குமரி மாவட்ட புரோட்டஸ்தாந்து திருச்சபையின் தோற்றம் என்பது வேதமாணிக்கத்திடமிருந்து தொடங்குகிறது. வேதமாணிக்கம் தோவாளை வட்டத்திலுள்ள மயிலாடி ஊரைச் சார்ந்தவர். வேதமாணிக்கத்தின் தந்தை மாசிலாமணி ஆவார்.

வேதமாணிக்கம் தாஞ்சாவூரில் ஜே.சி கோல்பிடம் திருமுழுக்குப் பெற்றார். பின்னர் தரங்கம்பாடியில் ரிங்கல் தௌபேயைச் சந்தித்தார். திருவிதாங்கூரில் கிறித்தவத்தைத் தழுவும் ஆவலில் பலர் இருப்பதாக ரிங்கல் தௌபேயிடம் தெரிவித்தார். ரிங்கல் தௌபே 1805-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 24-ஆம் நாள் மயிலாடிக்கு வந்தார். அங்கு வேதமாணிக்கத்தின் சொந்த நிலத்தில் ஓர் ஆலயத்தைக் கட்டினர். அவர் வேதமாணிக்கத்துக்கும் அவரோடு கிறித்தவத்தைப் பின்பற்றியவர்களுக்கும் ஜெர்மன் லுத்தரன் திருச்சபையின் மரபைக் கற்பித்தார். அவரது பிற்காலத் தலைமுறையின் கல்வி மற்றும் பொருளாதார வளர்ச்சி

பொன்னீலனை வியப்படையச் செய்கிறது. தலித் எழுச்சியை அவர் ஒடுக்கப்பட்டோரின் பேராற்றல் என விளக்குகிறார்.

"விடுமுறை நாட்களில்தான் தேவகிருபை தன் வீட்டுக்கு வருவார். திரும்பத் திரும்ப அவர் வீட்டுக்குப் படையெடுத்தேன். சாதியில் அவர் சாம்பவர், வாழ்விலோ, பிராமணரிலும் மேலான ஒழுக்க சீலர். கிறிஸ்தவ வெளிச்சத்தை இந்த திருவாங்கூர் நாட்டுக்குக் கொண்டு வந்த மகான் வேதமாணிக்கத்தின் வழிவந்தவர். ஆச்சரியமாக இருக்கிறது. அந்தக் குடும்பத்தைச் சார்ந்த அத்தனை பேரும் பேரறிஞர்கள், பெரிய கவிஞர்கள், எழுத்தாளர்கள், அதிகாரிகள், ஒடுக்கப்பட்டவர்களினுள்ளே உறங்கிக் கிடக்கும் பேராற்றலை விடுதலை செய்யும் கிறிஸ்தவ வலிமையை உணர்ந்து வியப்படைந்தேன்"[63]

என வேதமாணிக்கம் பற்றியும் அவரது பிற்காலத் தலைமுறையினர் பற்றியும் பொன்னீலன் பாத்திரங்களின் வழி பேசுகிறார்.

மறுபக்கம் நாவலில் ரிங்கல் தௌபேயை வேதமாணிக்கம் அழைத்து வருவதாக ஒரு நாடகக் காட்சி இடம்பெறுகிறது. ரிங்கல் தௌபே வேதமாணிக்கத்தின் அழைப்பின் பேரில் திருவிதாங்கூருக்கு வந்தார் என்றும், கர்னல் மன்றோவின் வேண்டுகோளின் படி வந்தார் என்றும் இருவித கருத்துக்கள் வரலாற்றில் நிலவுகின்றன. பொன்னீலன் வேதமாணிக்கத்தின் அழைப்பால் ரிங்கல் தௌபே வருவதாகக் கதை சொல்லுகின்றார்.

"வேதமாணிக்கம் அழைத்துவர மகாராசனின் காலடித் தடத்தைப் பின்பற்றி, நடுராத்திரி வந்து சேர்ந்தார் அந்த வெள்ளைத் தோலர், மயிலாடும் சிற்றூராம் மயிலாடிக்கு"[64]

என மயிலாடி நோக்கிய ரிங்கல் தௌபேயின் வருகையில் வேதமாணிக்கத்தின் பங்கு சுட்டப்படுகிறது.

வேதமாணிக்கமும் அவரைச் சார்ந்தவர்களும் கிறித்தவத்தில் சேர்ந்த பொழுது அரசு தரப்பிலிருந்து சில உரிமைகள் வழங்கப்பட்டிருந்தாலும் ஆதிக்கச் சாதியைச் சார்ந்த அதிகாரிகளால் தொடர்ந்து இன்னலுக்கு ஆளாயினர். ஞாயிற்றுக்கிழமை அரசு ஊழியத்துக்குக் கிறித்தவர்கள் செல்லாததால் கோபங்கொண்ட மல்லன்பிள்ளை என்னும் அதிகாரி தேவாலய வழிபாட்டு வேளையில் உள்ளே புகுந்து வேதமாணிக்கத்தையும் அவரைச் சார்ந்தவர்களையும் தாக்குகின்றார். அவருடன் சென்றவர்களும் பிறரைத் தாக்குகின்றனர். வேதமாணிக்கத்துக்கும் மல்லன் பிள்ளைக்குமான சண்டைக்காட்சி கீழ்காணுமாறு பதிவாகியுள்ளது.

"வேத மாணிக்கத்தின் தலையில் ஓங்கி அடிக்கவே, அவரை உதறிவிட்டு மல்லன் பிள்ளை புலி போல எழுந்தார். மயங்கித் தரையில் கிடந்த வேதமாணிக்கத்தை அரசாங்க ஆட்கள் தடிகளால் அடித்துத் துவைத்தார்கள்"[65]

என மல்லன் பிள்ளையால் வேதமாணிக்கம் தாக்கப்பட்ட நிகழ்வு விவரிக்கப்படுகிறது. மறுநாள் மல்லன்பிள்ளையின் தலைமையில் கிறித்தவர்களுக்கு எதிராக மிகப்பெரிய வன்முறை கட்டவிழ்த்துவிடப்படுகிறது. வேதமாணிக்கத்தின் உயிர்த்தீபம் எதிரிகளின் பொறாமைக் காற்றில் அணைந்து போகிறது. வேதமாணிக்கத்தின் மரணம் பற்றியும் நாவல் விளக்குகிறது.

"கால் ஒடிந்த வேதமாணிக்கம் அடித்து நொறுக்கப்பட்டு, கைவிலங்கு கால் விலங்கு, மாட்டப்பட்டு, தக்கலை டானா பிரைக்குத் தரதரவெனத் தரையோடு தரையாக இழுத்துச் செல்லப்பட்டார். அங்கும் அவருக்குச் சரியான தரும அடி அணு, அணுவாகச் சித்திரவதை ஆண்டவர் கருணைமிக்கவர். வேதமாணிக்கம் உயிரைச் சீக்கிரத்தில் தன்னோடு சேர்த்துக்கொண்டார்.[66]

என வேதமாணிக்கம் சித்ரவதை செய்யப்பட்டு கொல்லப்பட்ட நிகழ்வு கூறப்பட்டுள்ளது.

## குமரி மாவட்ட ஆளுமைகளின் வரலாறு:

பொன்னீலன் மறுபக்கம் நாவலில் ஜீவா, நேசமணி, தாணுலிங்கம் நாடார் ஆகிய குமரிமாவட்ட ஆளுமைகளின் வரலாற்றைத் தருகிறார்.

## ப.ஜீவானந்தம்:

பொன்னீலனுக்கு ஜீவாவிடம் ஈர்ப்பு அதிகம். இடதுசாரி சிந்தனையாளரும் தலைவருமான ஜீவா இடதுசாரி இயக்க ஈடுபாடுகொண்ட பொன்னீலனை ஈர்ப்பது பொருத்தப்பாடுடையதே. ஜீவானந்தம் பற்றிய ஒரு கட்டுரை நூலை அவர் படைத்திருந்தாலும், நாவலினூடே அவரைப்பற்றிப் பேசவும் ஆவல் கொள்ளுகிறார். மறுமலர்ச்சி கால குமரிமாவட்டத்தில் உதித்த ஆளுமைகளைப் பற்றிப் பேசும் பொழுது ஜீவானந்தத்தைத் தவிர்த்து அதனைப் பேச முடியாது என்பதனால் அதனைச் சார்பு மிக்க நிலைப்பாடாகக் கருதாமல் நடுநிலையான எழுத்துச் செயல்பாடாகவே மதிப்பிட முடிகிறது. அருந்ததியர்களுக்குச் சங்கம் அமைத்துப் போராடச் சொல்லிக் கொடுத்தவராக ஜீவா அறிமுகப்படுத்தப்படுகிறார்.

"அந்தக் காலத்தில் எங்க சனங்க நிலைமை ரொம்ப, ரொம்ப மோசம் யாரக்கண்டாலும் ஒதுங்கி ஓடணும். எதைக்கண்டாலும் விலகிப் பதுங்கணும். வாயைத் திறந்து ஒரு வார்த்தை பேசினா, முதுகில் அடிவிழும். இந்தச்

சூழ்நிலையில்தான் எங்க ஆளுகள ஒண்ணு சேர்த்துச் சங்கம் வைக்கிறாராம் ஜீவா ரொம்பச் சிரமமான வேலை. அவங்களச் சந்திச்சிப்பேசி, தைரியமூட்டி, ஒண்ணு சேர்த்து, நாகர்கோவில் நகரத்துத் தெருக்கள்ல ஊர்வலம் விட்டு, கையை உயர்த்திக் கோசம் போட வச்சாராம்"[67]

என ஜீவா ஒடுக்கப்பட்ட மக்களை ஒன்றிணைக்கும் சக்தியாகக் காட்டப்படுகிறார். அவர் நாகர்கோவில் நகராட்சிக்குட்பட்ட கடைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு வாரத்துக்கு ஒரு நாள் விடுமுறை கிடைக்கப் போராடி வெற்றி பெறுகிறார். தொழிலாளர்களையும் பொதுமக்களையும் ஈர்க்கும் ஜீவாவின் பேச்சாற்றல் பற்றிய செய்திகளையும் நாவலில் காணமுடிகிறது. 'ஜீவா பேசினால் கருங்கல்லும் உயிர் ஏறி எந்திருச்சிரும்'[68] என்ற கூற்றை மிகையெனக் கொள்ளாமல் கவித்துவ மொழியாகப் புரிந்து கொள்ளுவதே பொருத்தமானது.

ஜீவா தனது பேச்சில் உழைக்கும் வர்க்கத்தை ஒன்றிணைக்கிறார். தோழர்களை மட்டுமல்லாது தோழியர்களையும் விழித்துப் பேசுகிறார். உலகை அழிக்கத் துடித்த ஹிட்லரைப் புறமுதுகிட்டு ஓடச்செய்த ரஷ்ய நாட்டு அதிபர் ஜோசப் ஸ்டாலினை ஒப்பற்ற தொழிலாளி வர்க்கத் தலைவர் என்கிறார். ஹிட்லரும், ஸ்டாலினும் சர்வாதிகாரத்தின் இரண்டு வடிவங்கள் எனப் புரிந்து கொள்ளப்பட்ட நவீன சமூகத்தில் ஸ்டாலினை மட்டும் உயர்வாகச் சித்திரிக்கும் ஜீவாவின் சொற்களை நாவல் மேற்கோள் காட்டுவது, பொன்னீலனின் இடதுசாரி இயக்க ஈடுபாட்டைத் தெளிவாக்குகிறது. ஜீவா செருப்புத் தைக்கும் தொழிலாளர்களிடம் பேசும்போது முன்னாள் உருஷ்ய அதிபர் ஜோசப் ஸ்டாலின் செருப்புத் தைக்கும் தம்பதியருக்கு மகனாகப் பிறந்ததைச் சுட்டிக்காட்டிக் கைத்தட்டல் வாங்குகிறார்.[69]

## நேசமணி:

நேசமணி 1895-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 12-ஆம் தேதி அப்பலோஸ் ஞானம்பாள் தம்பதிகளுக்கு மகனாகப் பிறந்தார். பி.ஏ வரை பயின்ற அவர் முதலில் ஆசிரியராகப் பணியாற்றினார். மக்களுக்காகச் சமூகப்பணி செய்யவேண்டும் என்ற பேராவல் அவரைத் தூண்டவே திருவனந்தபுரம் சட்டக் கல்லூரியில் சேர்ந்து சட்டம் பயின்று பி.எல் பட்டம் பெற்றார்.

நேசமணி 1943-இல் வக்கீல் சங்கத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1943-இல் நாகர்கோவில் நகரசபையின் தலைவரானார்.

அதற்கடுத்த ஆண்டில் கல்குளம், விளவங்கோடு பகுதிகளின் பிரதிநிதியாகத் திருவிதாங்கூர் சட்ட சபைக்குத் தெரிவு செய்யப்பட்டார்.

திருவிதாங்கூரில் தமிழர் வாழும் பகுதிகளைத் தமிழ் நாட்டுடன் இணைக்கும் பணியிலும் அவர் தன்னை ஈடுபடுத்திக்கொண்டார். இதனால் தமிழார்வலர்களின் ஒத்துழைப்புடன் திருவிதாங்கூர் தமிழ்நாடு காங்கிரஸ் உருவானது. 1948-இல் விளவங்கோடு சட்டசபையில் வெற்றி பெற்றார். அதன் பின்னர் பாராளுமன்ற உறுப்பினராகவும் தெரிவு செய்யப்பட்டார். 1957-ஆம் ஆண்டு நடைபெற்ற பொதுத்தேர்தலில் கிள்ளியூர் தொகுதியில் போட்டியிட்டு வெற்றி பெற்றார்.

1962-இல் பாராளுமன்ற உறுப்பினராகத் தெரிவு செய்யப்பட்டார். 1968- ஆம் ஆண்டு ஜீன் முதல்நாளில் நேசமணி இயற்கை எய்தினார்.

## வழக்கறிஞர்பணி:

1921-ஆம் ஆண்டில் நாகர்கோவிலில் நேசமணி வழக்கறிஞர் பணியைத் தொடங்கினார். "ஆரம்பத்திலேயே வக்கீல் தொழிலில் நேசமணி புகழ்பெறத் துவங்கினார். திருவிதாங்கூர் மாநிலம் முழுவதிலும் நேசமணியின் விவாதத் திறன் புகழ் அடையத் தொடங்கியது. திருவிதாங்கூர் மாநிலத்தில் சிறப்பு மிக்க கிரிமினல் வக்கீல்களின் பட்டியலில் நேசமணியின் பெயரும் இடம் பெற்றது"[70]

நேசமணி வழக்கறிஞராக ஆன முதல் நாள் நாகர்கோவில் நீதிமன்றத்துக்கு வந்த நிகழ்வு, வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. இக்காட்சியைப் பொன்னீலன் வருணனை முறையில் படைத்துள்ளார். நீதிமன்றக்கட்டடம், வழக்கறிஞர்கள் ஓய்வெடுக்கும் மண்டபம், வழக்கறிஞர்களின் ஆடை, நேசமணியின் தோற்றம் ஆகியவற்றை அவர் வருணிக்கிறார். நேசமணி நாற்காலியில் அமரும் காட்சியை ஒரு சாகச நிகழ்வைப் போல வடித்துக் காட்டுகிறார்.

> "வக்கீலாகப் பதிவு செய்து கொண்டபின், நாகர்கோவில் நீதிமன்றத்துக்கு முதன் முறையாக வந்தார் நேசமணி. வக்கீல்கள் உட்காரக்கூடிய இந்த மண்டபத்தினுள் நுழைந்தார். மீசை இல்லாத அந்த இளம் விளவங்கோட்டு முகத்தை யாரும் பொருட்படுத்தவில்லை. முக்காலிகளைக் கடந்து, கையற்ற நாற்காலிகளையும் கடந்து, இருக்கிறதிலேயே பெரிய நாற்காலியை சர் என்று பின்னால் இழுத்து உட்கார்ந்து அதில் கால் மீது கால் போட்டுச் சாய்ந்தார்"[71]

என நேசமணியின் முதல் நாள் நீதிமன்ற அனுபவத்தைச் சொல்லுகிறார்.

தூக்குத்தண்டனை விதிக்கப்பட்ட கைதியான மாடக்கண்ணுவுக்காக நேசமணி வழக்காடிய நிகழ்வு செவிவழிக்கதைகளில் பரவிக்கிடக்கிறது. எதார்த்தம் என்றும் புனைவு என்றும் விவாதிக்கப்படுகிற அந்நிகழ்வைப் பொன்னீலன் தனக்கே உரித்தான நடையில் நகையுணர்வோடு வெளிப்படுத்துகிறார். பொன்னீலன் அதனை வரலாற்றுச் செய்தி என்று குறிப்பிடாமல் கதை என்றே குறிப்பிடுகிறார்.

> "ஐக்கோர்ட்டில் நீதிபதி முன்னே நேசமணி நின்று தன் இறுதி வேண்டுகோளைச் சொன்னாராம், எஸ் யுவர் லாட்ஷிப், என் கட்சிக்காரரைத் தூக்கில் போட வேண்டும் என்கிற கீழ்க்கோர்ட் விதியை அப்படியே நீங்கள் உறுதி செய்யுங்கள் ஆனா, ஒண்ணு என்ன ஆனா?
>
> "தூக்கில் போடுறது சரி," ஆட்காட்டி விரலைத்தூக்கி "ஆனால் என் கட்சிக்காரர் சாகக் கூடாது. கீழ்க்கோர்ட்டு விதியில் அவர் சாகணும்னு குறிப்பிடல.. தூக்கில போடத்தான் சொல்லியிருக்கு. ஆகவே..
>
> இப்படியும் ஒரு விவாதமா நீதிபதியின் கையிலிருந்த பேனா அது பாட்டுக்குத் தண்டனையை ஆயுள் தண்டனையாகத் திருத்தி எழுதியதாம் இந்தச் சம்பவத்துக்குப் பிறகுதான் திருவாங்கூர் கோர்ட்டுகளில் சாகும் வரை தூக்கிலிடணும் என்கிற வாசகம் நடைமுறைக்கு வந்ததாக ஒரு பேச்சு"[72]

என நேசமணியின் புத்திசாலித்தனததை நகைச்சுவையோடு விளக்குகிறார்.

## சமூகப்பணி:

குமரி மாவட்டத்தில் பிளேக் நோய் பரவிய காலகட்டத்தில் நேசமணி மருத்துவர்களை அழைத்துச் சென்று சாதி, மத வேறுபாடின்றி அனைத்து மக்களுக்கும் மருத்துவ உதவி செய்த நிகழ்வும் நாவலில் சுருக்கமாகச் சுட்டப்பட்டுள்ளது.[73]

## அரசியல் வாழ்வு:

நேசமணி நாகர்கோவில் நகர்மன்றத் தலைவர் பதவிக்குப் போட்டி போட்ட நிகழ்வும் நாவலில் விவரிக்கப்பட்டுள்ளது. வடிவீஸ்வரத்தில் நேசமணி ஓட்டு கேட்க வரக்கூடாது என்று சில மேலாதிக்க வகுப்பினர் தடைவிதித்திருந்தனர். நேசமணி ஒரு யானையை வாடகைக்கு எடுத்து அதிலமர்ந்து வடிவீஸ்வரம் தெருக்களில் தேர்தல் பிரச்சாரம் பண்ணினார்.[74]

## தென்எல்லைப் போராட்டம்:

குமரி மாவட்டத்தைத் தாய்த்தமிழகத்தோடு இணைப்பதற்காக நடைபெற்ற போராட்டத்தின் நாயகனாக நேசமணி கருதப்படுகிறார். பாதிக்கப்பட்ட மக்களை விடுவிக்க வந்த வரலாற்று நாயகனாக அவர் போற்றப்படுகிறார்.

> "ஆளும் வர்க்கம் அரக்கர்நிலை அடைந்து மக்களைத் துன்புறுத்தும் போது, பாதிக்கபட்ட மக்களை மீட்க பல பெரியவர்கள் தோன்றுவார்கள். இது உலக வரலாறு தரும் உண்மை. அவர்களில் ஒருவர்தான் நேசமணி"[75]

என்ற மதிப்பீடு பொருத்தமுடையதே. புதுக்கடை போராட்டத்தில் சிறையில் அடைக்கப்பட்டவர்களை வெளியே கொண்டுவர நேசமணி பல்வேறு முயற்சிகளை எடுத்தார். சிறையிலடைக்கப்பட்டவர்கள் இந்து மதத்தினர் என்றோ, கிறித்தவ மதத்தினர் என்றோ வேறுபாடு பாராமல் அனைத்து மக்களுக்காகவும் அப்பணியைச் செய்தார். பொதுமக்களிடம் பணம் திரட்டுதல், வழக்கை நடத்துதல், வழக்குகளை வேறுமாநிலத்துக்கு மாற்றுதல், பாராளுமன்றத்தில் குரல் கொடுத்தல் எனச் சிறையிலடைக்கப்பட்டவர்களுக்காக ஆவன செய்தார்.[76]

மார்ஷல் நேசமணி குமரிமாவட்ட மக்களை ஒன்றிணைத்து இப்போராட்டத்தை வழிநடத்திச் சென்று வெற்றியும் கண்டார்.

## தாணுலிங்க நாடார்:

குமரி மாவட்டத்து முக்கிய ஆளுமைகளில் ஒருவராகத் தாணுலிங்க நாடார் கருதப்படுகிறார். மண்டைக்காட்டுக் கலவரம் பற்றிய செய்தி சேகரிப்பில் வெங்கடேசனுக்குத் தாணுலிங்கநாடார் பற்றிய குறிப்புகள் தேவைப்படுகின்றன. பரமசிவம் எனும் பெரியவர் தாணுலிங்கநாடார் பற்றிய குறிப்புகளைச் சொல்லுகின்றார்.

> "நல்ல உயரம், கருப்பு நிறம், அப்படிப்பட்ட ஒரு கம்பீரமான முகத்த நான் பார்த்ததே இல்ல. சட்டையைக் கழட்டிட்டு, அம்பும் வில்லும் கையில கொடுத்தா ராமன்தான்"[77]

எனத் தாணுலிங்க நாடாரின் தோற்றம் சிறப்பித்துக் கூறப்படுகிறது. தாணுலிங்கநாடார் உத்தமமான வாழ்க்கை வாழ்ந்தவர். காங்கிரஸ் கட்சி மீது பற்று கொண்டவர். இந்து சமய மரபுகளில்ஆழ்ந்த பிடிப்புடையவர். இந்தியாவின் முதல் பிரதமரான நேருவோடு நெருக்கம் கொண்டவர். பாராளுமன்ற உறுப்பினராக மக்கட்பணி செய்தவர். அவரது மகளுக்குக் கடற்கரைப் பகுதியைச் சார்ந்த சிலரால் நிகழ்த்தப்பட்ட கொடுமை அவரை இந்து முன்னணிக்கு அழைத்துச் சென்றது.[78]

தாணுலிங்க நாடாரின் பொதுவாழ்க்கை என்பது மதஉரிமையை நிலைநாட்டும் நோக்கில் தொடங்கியது. சந்தையடி எனும் ஊரை ஒட்டிய கிறித்தவப் பள்ளிக் கூடத்தில் ஆண்டு விழா நடைபெற்றபோது புகைப்படம் எடுக்கும் நிகழ்ச்சியில் அய்யாவழிக் குழந்தைகளின் நெற்றியிலிருந்த திருநாமம் அகற்றப்பட்டது. இப்புகைப்படத்தை கண்ட பெற்றோர் அதிர்ச்சியடைந்தனர். இதைக் கேள்விப்பட்ட தாணுலிங்கம் நாடார் மதஉரிமையை நிலைநாட்டும் நோக்கில் தன்னைப் பொது வாழ்க்கையில் இணைத்துக் கொள்ளுகிறார்.

> "தாணுலிங்க நாடார் அப்ப பி.ஏ முடிச்சிட்டு ஊர் திரும்பியிருக்கிற நேரம் சந்தையடியில இந்தப் பிரச்சினை வந்ததா, ஸ்ரீவிதாஸ், ஆர்.எஸ்.நாடார், திரவியம், தங்கையா, ராஜாமணி, ராமசாமி, எல்லாரும் சேர்ந்து நேரே திவான் சர்.சி.பி.ராமசாமி அய்யர் கிட்டப் போறாங்க. ஒரு அரசாங்க பள்ளிக்கூடம் கட்டுறதுக்கு ஆடர் கொடுக்கிறாரு அவரு இப்படித்தான் தொடங்குது அவருடைய பொது வாழ்க்கை அப்றம் சட்டம் படிச்ச வக்கீலாகுறாரு"[79]

எனப் பொதுவாழ்க்கையில் தாணுலிங்க நாடாரின் நுழைவு விளக்கப்படுகிறது.

மன்னத்து பத்மநாபன் என்பவர் தலைமையில் செயல்பட்ட இந்துமண்டலம் என்ற அமைப்பில் தாணுலிங்கநாடார் உபதலைவராகச் செயல்பட்டதையும் நாவல் சுட்டுகிறது.[80] குமரி மாவட்டத்தைத் தமிழகத்தோடு இணைக்கும் போராட்டத்தில் நேசமணியும் தாணுலிங்கநாடாரும் இணைந்து இயங்கி வெற்றி பெற்றதையும் நாவல் பதிவு செய்கிறது.[81] அதே நேரம் நேசமணியோடு ஒத்துச் செல்லாத போக்கைக் கொண்டவராகவும் தாணுலிங்க நாடாரை நாவல் அடையாளப்படுத்துகிறது.[82]

> "நேசமணியை எதிர்த்தவர்"
>
> "நேசமணியோடு ஒத்துப்போக முடியாதவர்"[83]
>
> "நேசமணியோடு ஒத்துப்போகாதவர்" [84]

ஆகிய பாத்திரக் கூற்றுக்கள் தாணுலிங்கநாடாரை நேசமணிக்கு எதிரானவராக அடையாளங்காட்டுகின்றன.

குமரி மாவட்டம் மலையாள ஆதிக்கத்திலிருந்து விடுபட்டுத் தமிழகத்தோடு இணையப் போராடிய போராளிகளில் ஒருவராகத் தாணுலிங்க நாடாரை வரலாறு பதிவு செய்துள்ளது. நாவலும் இக்கருத்தை வழி மொழிகிறது.

## அடிமைகளின் விடுதலை வரலாறு:

இந்தியாவில் தொல்பழங்காலத்திலேயே அடிமை முறை இருந்துள்ளது. வேதகாலத்துச் சொல்லான 'தாஸ்யூக்கள்' என்பது அடிமையைக் குறித்தது. திருவிதாங்கூரில் அண்மைக்காலம் வரை அடிமை முறை இருந்துள்ளது.

கி.பி 849-ஆம் ஆண்டில் திருவிதாங்கூரின் தென்பகுதியில் ஆட்சி செய்த வேணாட்டு அய்யன் அடிகள் திருவடிகள் என்பவரின் கல்வெட்டு ஒன்று அடிமைக்காசு என்னும் ஒரு நாணயத்தைக் குறிப்பிடுகிறது. இதிலிருந்தே தென்திருவிதாங்கூரின் அடிமை வரலாறு தொடங்கவதாகக் கொள்ளலாம்.[85]

ஈழவர், புலையர், வேடர் ஆகிய சாதியினர் தொடக்ககாலத்தில் இப்பகுதியில் அடிமைகளாக இருந்துள்ளனர். ஆதிக்க வகுப்பினரின் நிலங்களில் விவசாயக் கூலிகளாக இருந்தவர்கள் அடிமை வர்க்கத்தைச் சார்ந்தவர்கள். கி.பி 1400-களில் குமரி மாவட்டத் திருமணங்களில் பெண் வீட்டார் சீதனமாக ஆண்வீட்டுக்கு அடிமைகளைக் கொடுத்துள்ளனர். 1458, 1470-ஆம் ஆண்டுகளில் எழுதப்பட்ட ஆவணங்கள் இச்செய்தியை, உறுதிசெய்கின்றன. இவ்வடிமைகள் விவசாயம், வீட்டு வேலை ஆகியவற்றில் பயன்படுத்தப்பட்டுள்ளனர். பிராமணரைத் தவிர அனைத்து சாதியினரிலும் அடிமைகள் இருந்ததாகக் கருதப்படுகிறது. அடிமைவிலைப் பிரமாணம் எழுதும் வழக்கமும் அக்காலத்தில் இருந்து வந்துள்ளது. இவ்வடிமை முறைக்கு அரசின் ஆதரவும் இருந்துள்ளது. அடிமைப் பிரமாணம் எழுதுவதற்கு அரசுக்குப் பணம் செலுத்த வேண்டிய நிலை இருந்தது. அடிமைகள் பற்றிய உண்மைகளை வரலாற்றிலிருந்தும் நாவலிலிருந்தும் அறியமுடிகிறது.

## அடிமைச்சமூகங்கள்:

இந்த அடிமை முறை ஆரியர் வருகைக்குப் பின் வழக்கத்துக்கு வந்தாக கருதப்படுகிறது.

> "ஆரியர் வருகைக்குப் பின்னால் அடிமைத்தனம் தலைவிரித்தாடியது. திருவிதாங்கூரிலும் அடிமைகள் மிருகத்தை விடக் கேவலமாக நடத்தப்பட்டனர். ஒரு காலத்தில் சமுதாயத்தில் உயர்ந்த நிலைகளில் இருந்தவர்களுள் ஒரு பிரிவினரான பாணர், பறையர் போன்ற சாதி மக்கள் கி.பி 8 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட ஆரிய கலாச்சார மாற்றத்தால் அடிமைகள் ஆயினர்"[86]

எனக் கருதப்படுகிறது

## அடிமைகளின் சமூக மதிப்பு:

தென் திருவிதாங்கூரில் நிலவிய அடிமை முறை பற்றி சாந்தினி மே.தாஸ் கீழ்க்காணுமாறு எழுதுகிறார்.

> "தென் திருவிதாங்கூரில் கீழ்ச்சாதியினராகக் கருதப்பட்ட மக்கள் பழைய மரபின்படியும் அரசாங்கச் சட்டப்படியும் கூலி பெறாமல் அரசாங்கத்திற்கும் பண்ணையாளர்களுக்கும் அடிமை வேலைகள் செய்யக் கட்டாயப்படுத்தப்பட்டனர்"[87]

என்று கூறுகின்றார்.

அடிமைகளுக்கும் அவர்களை உடைமையாக வைத்திருந்தவர்களுக்கும் இடையே மிகப்பெரிய மதிப்பு வேறுபாடு நிலவியது. அடிமையின் சொற்கள் கூட உடைமையாளர்களால் கட்டமைக்கப்பட்டதாக இருந்தன. அடிமைகள் பிற மனிதர்களைப் போல சக மனிதர்களை விளித்து மொழியாட முடியாத நிலையிருந்தது. உயர்வான புகழ் மொழிகளின் சொற்களஞ்சியத்திலிருந்து வார்த்தைகளைச் சேகரித்து உடைமையாளரிடம் பேசும் நிலை அவர்கள் மீது திணிக்கப்பட்டிருந்தது. அடிமை தன்னையும், தன் குடும்பத்தையும் அடையாளப்படுத்தும் சொற்கள் சுயமரியாதைக்கு எதிர்நிலையிலிருந்தது.

> "ஒரு அடிமை அவரது எஜமானரிடமோ அல்லது அவரது குடும்பத்தின் மிகவும் சிறிய ஆண் உறுப்பினரிடமோ பேசும் போது, அவர்களை எஜமான் என்றும், தன்னை அடியான், அடியோன் என்றும், அவனது குழந்தைகளைக் குரங்குகள், கன்றுக்குட்டிகள் என்றும் கூறவேண்டியிருந்தது"[88]

என சாந்தினி மே.தாஸ் குறிப்பிடுவதனை இங்குச்சுட்ட முடியும்.

## அடிமைச்சந்தை:

அடிமைச்சந்தை பற்றிய செய்திகளை நாவல் சேகரித்துத் தருகிறது. குமரி மாவட்டத்தில் இரணியல் உள்ளிட்ட இடங்களில் அடிமைச் சந்தைகள் இருந்தன. இங்கு அடிமைகள் மிகக்குறைந்த விலைக்கு விற்கப்பட்டுள்ளனர். அடிமைகளை விற்கும்போது அவர்களது முகம் துணியால் மூடப்பட்டுள்ளது. அடிமைகளை விற்கும் தரகர்கள் இருந்தார்கள். அடிமைகளை வாங்க வருபவர்களிடம், அடிமைகளின் பயன்பாட்டைச் சொல்லித் தரகர்கள் வியாபாரம் செய்துள்ளனர்.

> "இதோ நிற்கிறதே இது ஆண். 25 வயதுதான். உள்ளங்கை ரேகை தெரியும் முன்பே எழுந்து, கஞ்சி இருக்கிறதோ இல்லையோ, வயலுக்குப் போய்விடும். மாலையிலும் உள்ளங்கை ரேகை மறையும் வரை அசராமல் வேலை செய்யும். நிலவுக்காலங்களில் இரவிலும் உழைக்கும் இரண்டு நேரக் கஞ்சியும்,

> ஓணத்துக்கு இரண்டு முண்டும் போதும். எப்போதும் சிரிக்கும். முதுகில் சவுக்கடி விழுந்தாலும் அந்தச் சிரிப்பு மறையாது"[89]

என ஒரு ஆண் அடிமை விற்பனை செய்யப்படுகிறான்.

ஆண்கள் மட்டுமின்றி பெண்களும் அடிமைச் சந்தையில் விற்கப்பட்டுள்ளனர். பருவம் அடையாத பெண்கள் கூட இச்சந்தையில் விற்பனை செய்யப்பட்டுள்ளனர். அடிமைகளை வாங்க பணக்காரர்கள் பணத்துடன் அச்சந்தைக்கு வந்துள்ளனர். ஒரு திருமணமான ஆணும் பெண்ணும் இருபது பணத்துக்கு விற்கப்பட்டுள்ளனர். சிறுமி ஒருத்தி பதினாறு பணத்துக்கு விற்கப்பட்டுள்ளாள். அடிமையை வாங்குபவர்களுக்கு அடிமை ஓலைப்பத்திரங்கள் எழுதிக் கொடுக்கப்பட்டுள்ளன.

## ஒற்றிக்கு வைத்தல்:

அடிமையை உரிமையாக வைத்திருக்கும் உரிமையாளர் அவ்வடிமையை பிறருக்கு விற்பதில் தடை எதுவும் இல்லை. தன்னையே அடிமையாக விற்றுக்கொள்ளும் இழிவான உரிமை தனிநபர்களுக்கு வழங்கப்பட்டிருந்தது. தற்காலத்தில் நிலத்தை ஒற்றியாக வைப்பதைப் போல அக்காலத்தில் மனிதர்கள் தம்மையே ஒற்றியாக வைத்துள்ளனர். உடைமையாளர்களிடம் வாங்கிய கடனைத் திருப்பிச் செலுத்த இயலாத நிலையில் ஏழைகள் தம்மையே அடிமையாக ஒற்றிக்கு வைத்துள்ளனர். இத்தகு இக்கட்டான சூழ்நிலையில் தம்மை மட்டுமின்றி தமது பிள்ளைகளையும் ஏழைகள் ஒற்றிக்கு வைத்துள்ளனர். 1472-ஆம் ஆண்டில் எழுதப்பட்ட ஒற்றி ஓலை ஆவணம் பற்றி அ.கா.பெருமாள் கூறுவது கவனிக்கத்தக்கது.

> "1472 ஆம் ஆண்டு ஒற்றி ஓலை ஆவணம் கிடைத்துள்ளது. ஒருவர் தன் கடனைத் திருப்பிக் கொடுக்க முடியாத நிலையில் தன் மகளை ஒரு நிலவுடைமையாளரிடம் அடிமையாக ஒற்றி வைத்த நிகழ்ச்சியை இந்த ஆவணம் கூறுகிறது."[90]

ஒற்றி வைக்கப்பட்ட அடிமைக்கு உடல் நலக்குறைவு ஏற்பட்டால் அவர் செய்த வேலைகளை ஒற்றி வைத்தவர் வந்து செய்ய வேண்டும் என்ற நிலையிருந்தது.

## தலைமுறை அடிமைத்தனம்:

திருவிதாங்கூரில் பொருட்களைப் போல் மனிதர்களை வாங்கி விற்கும் அடிமை முறை நிலவியது. மேலாதிக்க சாதியினர் ஒடுக்கப்பட்ட மக்களை அடிமைகளாக வைத்திருந்தனர்.

"ஓர் அடிமைக் குடும்பத்தில் பிறந்தவர் வாழ்நாள் முழுவதும் அடிமையாக இருந்து தான் இறக்கும் போது இந்த இழிநிலையைத் தனது சந்ததிகளுக்கு விட்டுச் சென்றனர்"[91]

இவ்வாறு அடிமையாய்ப் பிறந்து அடிமையாய் இறப்பதோடு தனது அடுத்த தலைமுறையையும் அடிமையாகவே விட்டுச் செல்லும் வாழ்வு சில குறிப்பிட்ட ஒடுக்கப்பட்ட சமூகங்கள் மீது திணிக்கப்பட்டது.

அடிமைகள் மூன்று முறைகளில் கைமாற்றம் செய்யப்பட்டனர் எனத் தெரிகிறது. முதலாவது முறை ஜென்மம் அல்லது விலைக்கு வாங்குதல் எனப்பட்டது. ஓர் அடிமையினுடைய முழு விலையையும் கொடுத்து வாங்குதல் 'ஜென்மம்' ஆகும். ஓர் அடிமையின் விலையில் மூன்றில் இரண்டு பங்குத்தொகையை மட்டும் பெற்றுக்கொண்டு அடிமையை விட்டுக்கொடுக்கும் முறை 'காணம்' அல்லது 'அடமானம்' எனப்பட்டது. அடிமையை அடமானம் வாங்கியவன் அடமானம் கொடுத்தவனுக்கு ஆண்டு தோறும் சிறிதளவு அரிசியும் கொடுக்கவேண்டும். அடகு வாங்குபவனிடம் இருக்கும்போது அடிமை இறந்து விட்டால் அவனுடைய விலைக்குச் சமமான விலையுள்ள ஓர் அடிமையைத் திரும்பக் கொடுக்க வேண்டும். அந்த அடிமையை அடகு வாங்குவதற்காக எஜமான் கொடுத்த பணத்தின் வட்டிக்கும் அடிமைக்குக் கொடுக்கப்படும் உணவுக்கும் ஈடாக அடிமை புது எஜமானிடம் உழைக்க வேண்டும். மூன்றாவதாகப் 'பாட்டம்' அல்லது 'குத்தகை' முறையிலும் அடிமைகள் கைமாற்றம் செய்யப்பட்டனர். இம்முறையில் அடிமைகளை வாங்கியவன் ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட தொகையை பழைய எஜமானுக்குக் கொடுக்க வேண்டும்.[92]

## அடிமைகள் செய்த வேலைகள்:

அடிமைகள் அனுபவித்த கொடுமைகள் குறித்து ஐசக்அருள் தாஸ் விளக்குகிறார்.

"இவர்கள் சமூகத்தில் எவ்வித உரிமையுமின்றி இழிபிறவிகளாக அரசாலும் மக்களாலும் புறக்கணிக்கப்பட்டனர். சாதியமைப்பின் கடுமையான மூன்று விதிகளான தீண்டாமை, நெருங்காமை, காணமுடியாமை ஆகியவற்றினால் சமூகத்தில் விருப்பமான வேலையினைத் தேட முடியாமல் தவித்தனர். நில உடைமையாளர்களின் வயல்களில் வேலை செய்யும் இழிவான அசுத்தமான பணிகளைச் செய்யவுமே வற்புறுத்தப்பட்டனர். காலைமுதல் இரவுவரை நெற்பயிரிடும் வயல்களில் உழுதல், கிளறுதல், வேலியடைத்தல், கரைகளை அமைத்தல், விதைகளைத் தூவுதல், களையெடுத்தல், நீரை ஏற்றுதல்,

அறுவடை செய்தல் போன்ற பணிகளைச் செய்து நாட்டின் பொருளாதார உயர்வுக்கு வழிவகுத்துத் தங்கள் வாழ்க்கையைப் பயங்கர வேதனையில் கழித்தனர்”[93]

என்று அவர் குறிப்பிடுகின்றார்.

## அடிமைகளின் தொடர்பியல்:

அடிமைகள் வெளியில் செல்லும் போது ஒரு கையில் ஒரு தடிக்கம்பை பிடித்துக்கொண்டும் மற்றொரு கம்பால் அதனைத் தட்டிக் கொண்டும் செல்லவேண்டும். அடிமையின் வரவு பற்றிய தொடர்பியல் குறியீடாக அது அமைந்தது. அடிமைகள் வயல்களில் வேலை செய்யும் போது அதனருகில் இலைகளையும் மரக்கிளைகளையும் அடையாளமாக வைக்க வேண்டும். திருவிதாங்கூர் மக்கட் தொகையில் எட்டில் ஒருவர் அடிமைப் பிரிவைச் சார்ந்தவர்களாக இருந்தனர்.

## அடிமைகளின் குடும்பச்சிதைவு:

அடிமைகளின் குடும்பச்சிதைவு உடைமையாளர்களால் தீர்மானிக்கப்பட்டது. மனைவி, குழந்தை என்று சொந்தம் கொண்டாட முடியாமல் அடிமைகள் திண்டாடினர். உறவுகளைப் பிரித்தல் என்பது அடிமை விற்பனையின் பின்னாலிருந்த உளவியல் வக்கிரம் ஆகும். உடைமையாளர்களிடம் பிறரைத் துன்புறுத்தி இன்பம் காணும் வக்கிர மனோபாவமும் செயற்பட்டது.

“ஒரு அடிமையின் மனைவியை விலைக்கு வாங்கிய எஜமான், அவளை இன்னொரு அடிமைக்கு மனைவியாகக் கொடுப்பதும் உண்டு. அடிமைகளை, அடிக்கவோ, கை கால்களைத் துண்டிக்கவோ அல்லது அவர்களைக் கொல்லவோ அவர்களுக்கு உரிமை உண்டு”[94]

என ஐ.வி.பீட்டர் குறிப்பிடுகிறார்.

“கணவன் மனைவி குழந்தைகள் என்பவர்கள் தனித்தனி எஜமான்களிடம் விற்கப்பட்டதால் வாழ்க்கை முழுமையும் சீரழிந்தது. ஓர் அடிமையின் மனைவியை விலைக்கு வாங்கியவன், அவளை மற்றொரு அடிமைக்கு மனைவியாகக் கொடுப்பதும் உண்டு”[95]

மேற்காட்டிய நிலை அடிமைகளின் குடும்ப அமைப்பைக் குலைத்துப்போடும் புறக்காரணியாக அமைந்தது.

## அடிமைகளுக்கு தண்டனை:

அடிமைகள் தன் எசமானின் வேலைகளை ஒழுங்காகச் செய்யாவிடில் தண்டனை பெற்றுள்ளனர்.

> "அடிமையாக இருப்பவர் தனது எஜமான் சொல்லும் அனைத்து வேலைகளையும் செய்யவேண்டும். அவ்வாறு செய்யவில்லை என்றாலோ தண்டனை வழங்கப்பட்டிருக்கிறது. அடிமைகளை மாட்டை விடக் கேவலமாக நடத்தியிருக்கிறார்கள்"[96]

என்று முகிலை. இராசபாண்டியன் குறிப்பிடுகிறார்.

## அடிமை முறை ஒழிப்பு:

இந்தியாவில், ஆங்கில அரசுக்குட்பட்ட இடங்களில் அடிமைமுறை நிலவியதனை மேனாட்டுக் கிறித்தவ இறைத் தொண்டர்கள் எதிர்த்தார்கள். வடஇந்தியாவில் அடிமை முறையை ஒழிக்க வில்லியம் கேரி குரல் கொடுத்தார். 1845-ஆம் ஆண்டு கிழக்கிந்தியக் கம்பெனிக்குட்பட்ட இடங்களில் அடிமை முறையை ஒழிக்கும் சட்டத்தை ஆங்கிலேய அரசு இயற்றியது. ஆனால் திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் மட்டும் அடிமை முறை ஒழியவில்லை.

அடிமை முறையை ஒழிக்க மீட், மால்ட், ஆக்ஸ் போன்ற கிறித்தவப் பரப்புரையாளர்கள் முயற்சி எடுத்தனர். 15.10.1853-அன்று உத்திரம் திருநாள் மன்னரால் இயற்றப்பட்ட சட்டத்தின்படி அடிமைகள் விடுதலை செய்யப்பட்டனர்.

## அடிமைகள் விடுதலை:

அடிமைகளின் வரலாற்றைப் மறுபக்கம் நாவலில் பதிவு செய்யும் பொன்னீலன் அவ்வடிமைகளின் விடுதலை பற்றிய செய்திகளையும் தருகிறார். அடிமைகளின் விடுதலை பற்றிய செய்தி தண்டோராக்காரர் வழியாக இசையும் சொற்களுமாய் பொது மக்கள் காதுகளை எட்டுகிறது.

> "இதனால் சகலருக்கும் தெரிவிப்பதாவது இன்று முதல் திருவாங்கூரில் அரசு அடிமைகள், ஜென்மி அடிமைகள், கோயில் அடிமைகள் முதலிய எல்லா அடிமைகளும் விடுதலை செய்யப்படுகிறார்கள். இனி அடிமை வைத்திருப்பது சட்டப்படி குற்றம். இது ஸ்ரீ பத்மநாபதாச வஞ்சி பாலராமவர்ம குலசேகர கீரிடபதி மன்னன் சுல்தான் ராஜராமராஜா பகதூர் சம்சீர்ஜங் மகராஜா ஆயில்யம் திருநாள் பொன்னு திருமேனியின் திருவுள்ளப்படி .... டும்.....டும்"[97]

என மக்களுக்கு அறிவிக்கப்படுகிறது. இது மன்னரின் நேரடி விருப்பத்தால் வந்த மாற்றம் அல்ல என்றும் மீட் அய்யரின் முயற்சியால் வந்தது என்றும் பாத்திரங்கள் உரையாடிக் கொள்கின்றன.

> "அட தெரியாதா உமக்கு, இந்த கிறித்தவப் பாதிரிப் பயலுவ அதிலும் இப்ப மீட் துரை என்கிற கிழவன், அவன் மெட்ராஸ் கவர்னரைப் பிடிச்சி, இந்த நாட்ல உள்ள அடிமைகளை விடுதலை செய்யச் சொல்லி வற்புறுத்தினாராம். நம்ம ராசாவும் கவர்னருக்குப் பயந்து கூடிய சீக்கிரம் சட்டம் கொண்டு வரப் போறாராம்"[98]

என அடிமை ஒழிப்புச் சட்டம் வருவது பற்றி ஒரு பாத்திரம் குறிப்பிடுகிறது.

அடிமைகள் விடுதலைச்சட்டம் வந்த பின்னர் எல்லா அடிமைகளும் விடுதலை செய்யப்பட்டனர். அடிமை வரி நிறுத்தப்பட்டது. அரசாங்க அலுவலர்கள் அடிமைகளை வாங்கவோ,விற்கவோ கூடாது. அடிமை தொடர்பான எந்தவித கைமாற்றங்கள், கொடுக்கல், வாங்கல் பதிவுகள் செய்யக்கூடாது. அடிமைகள் மீது இழைக்கப்படும் குற்றங்களுக்குத் தண்டனை உண்டு[99] என்ற அரசின் கட்டளை வந்த பின்னர் அடிமை முறை இம்மண்ணில் முழுமையாக ஒழிக்கப்பட்டது.

## தோள்சீலைக் கலக வரலாறு:

திருவிதாங்கூர் பகுதியில் மேலாடை அணிவதற்கான உரிமை மறுக்கப்பட்ட சமூகத்தினர் மேலாடை அணியும் உரிமைக்காக நடத்திய போராட்டமே தோள்சீலைக் கலகம் ஆகும்.

> "அரசாண்டவர்களின் ஆளுமை, அதிகார வர்க்கத்தின் கெடுபிடி, சாதீய ஒடுக்குமுறை முதலிய அநீதிகளால் மேலாடை அணியும் உரிமையை இழந்த தென் திருவிதாங்கூரில் வாழ்ந்த தாழ்ந்த சாதியினர், 19-ஆம் நூற்றாண்டில் நடத்திய போராட்டம் தோள்சீலைப் போராட்டம்"[100]

என்று சாந்தினி மே.தாஸ் குறிப்பிடுகிறார்.

> "மேலாடை அணிய உரிமையின்றியிருந்த குமரிமாவட்டத் தாழ்ந்த இன மக்கள் நடத்திய போராட்டம் 'தோள்சீலைக் கலவரம்' என்றழைக்கப்பட்டது"[101]

எனக் கஸ்தூாரி ஜான்சன் குறிப்பிடுகிறார்.

தோள் சீலைக் கலகத்தை சாணார்ரகளை என்றும், People's Revolt என்றும் அழைப்பர். இதனைத் தோள்சீலைப் போராட்டம் அல்லது சான்றோர் மக்கள் புரட்சி என்று வரலாற்றாசிரியர்கள் வருணித்தனர்.[102]

## தோள்சீலை அணிவதற்கு எதிரான சமுதாயச்சூழல்:

திருவிதாங்கூரில் ஆதிக்க சாதியினர் 'சவர்ணா' என்றழைக்கப்பட்டனர். தாழ்த்தப்பட்டவர்களைக் குறிக்க 'அவர்ணா' எனும் சொல் பயன்படுத்தப்பட்டது. தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் கோயிலுக்குள் நுழைய அனுமதிக்கப்படவில்லை. அரசுடைமையான பொதுக்குளத்தில் குளிக்கும் உரிமை இல்லை. பொதுக்கிணற்றிலிருந்து தண்ணீரெடுக்கும் உரிமையும் மறுக்கப்பட்டது. அவர்கள் அரசுக்குரிய பொதுச் சத்திரத்தில் தங்கவும் அனுமதிக்கப்படவில்லை. ஆதிக்க சாதியினரின் வீதிகளில் நடக்கவும் இவர்களுக்கு உரிமை இல்லை. கல்வி கற்கும் உரிமையும் இவர்களுக்கு வழங்கப்படவில்லை.

தாழ்த்தப்பட்ட பெண்கள் தண்ணீர்க் குடத்தை இடுப்பில் வைத்துச் சுமந்து வர அனுமதிக்கப்படவில்லை. அவர்கள் தலையில் குடத்தை வைத்துக்கொள்ள வற்புறுத்தப்பட்டனர். அவர்ணா என்ற அடித்தட்டுப் பிரிவைச் சார்ந்த சாதிப்பெண்கள் மார்பை மறைக்க ஆடை அணியமுடியாத நிலையிருந்தது. அ.கா.பெருமாளின் வரலாற்று நூல் இதனைக் கீழ்க்காணுமாறு விளக்குகிறது.

> "அவர்ணா சாதியினரில் பெண்கள் தங்கள் மார்பைச் சேலையால் மறைக்கக்கூடாது. உலோக ஆபரணங்களாலும் மறைக்க கூடாது. குடைபிடித்துக்கொண்டு வீதியில் நடக்கக் கூடாது. அவர்கள் கல்யாண வரி, தலை வரி என்ற தனி வரிகள் கட்ட வேண்டும். பெண்களின் மார்புக்கென்று தனி வரி இருந்தது"[103]

என்பதில் தாழ்த்தப்பட்ட வகுப்புப் பெண்களுக்கெதிரான ஒடுக்குமுறைகள் சுட்டப்படுகின்றன.மேற்காட்டிய நடத்தை விதிமுறைகளையும் ஒடுக்குமுறைகளையும் மீறுபவர்கள் ஆதிக்கச் சாதியினரால் துன்புறுத்தப்பட்டனர்.

நாடார், ஈழவர், காவேரி, நாவிதர், பறையர், புலையர், சாம்பவர், வள்ளுவர், சேரமர் ஆகிய சாதிப் பிரிவுகளைச் சார்ந்த பெண்கள் மார்பில் மேலாடை அணிய முடியாத நிலை இருந்தது. அரசு அதிகாரிகளையும் தலைவர்களையும் கண்டால் கண்டிப்பாக மார்பைத் திறந்து வைத்திருக்கவேண்டும். அரசு அதிகாரிகளாக ஆதிக்க சாதியினரே இருந்தமையால் இத்தகைய கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருந்தன. மேல் சாதி அதிகார அடக்குமுறையே இச்சிக்கலுக்கான அடிப்படைக் காரணமாகும்.

"இத்தகைய அவல நிலைக்கு ஆளும் வர்க்கமும், அரசியல் செல்வாக்கு மிக்க உயர்குல மக்களின் கொடிய மனப்போக்கும், அடிப்படைக் காரணங்களாக அமைந்தது"[104]

என்று டி.எச் ஜார்ஜ் குறிப்பிடுகிறார்.

## மேலாடை அணியத்தடை:

மேலாடை இல்லாமல் இருப்பது என்பது மரியாதையை வெளிப்படுத்தும் புற அடையாளமாகக் கருதப்பட்டது. உயர்வான மதிப்புடையவர்கள் முன் மேலாடையின்றி வெறுமையாகத் தோற்றமளிப்பது மரியாதையின் வெளிப்பாடு எனக் கற்பிக்கப்பட்டிருந்தது. தெய்வங்களுக்கு முன் வெற்று மார்புடன் இருப்பதைப் போல, மேலடுக்கில் உள்ளவர்களுக்கு முன் மேலாடை இல்லாமல் இருக்கவேண்டும் என எதிர்பார்க்கப்பட்டது. பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் திருவிதாங்கூர் பகுதியில் இத்தகைய கொடுமை நிலவியது. திருவிழாக்களிலும் கூட மேலாடை அணிந்து செல்ல அவர்கள் அனுமதிக்கப்படவில்லை.

"தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பெண்கள் இடுப்புக்கு மேற்பாகத்தில் எவ்விதமான துணியும் அணியக்கூடாது என்ற சட்டம் நிலவி வந்தது. அவர்கள் குடைபிடிப்பதற்கும் ஒரு மாடிக்குமேல் வீடுகட்டுவதற்கும் நாட்டின் பொதுவான மொழியைப் பேசுவதற்கும் அனுமதிக்கப்படவில்லை. கூலி பெறாத அரசாங்க வேலை செய்வதற்கும் சத்ரிய குல மக்களுக்கு ஏவல் வேலைகள் செய்வதற்கும் அவர்கள் பயன்படுத்தப்பட்டனர்"[105]

என்று டி.எச்.ஜார்ஜ் உரிமையற்ற விளிம்பு நிலை மக்களின் நிலையை எடுத்தியம்புகிறார். ஒடுக்கப்பட்ட பெண்களுக்கு மேலாடை அணியும் உரிமை மறுக்கப்பட்டதனைத் 'திணிக்கப்பட்ட நடத்தைத் தோரணை' என்று மதிப்பிட முடிகிறது. முழு உடலையும் ஆடையால் அலங்கரிக்க முடியாத நாகரீக மறுப்பு நிலையை இரா. பொன்னுவும் எடுத்துக் காட்டுகிறார்.

"மேட்டுக்குடியினரால் திணிக்கப்பட்டுள்ள வழக்கப்படியே உடை உடுத்திக்கொள்ள அனுமதிக்கப்பட்டிருந்தனர். மேட்டுக் குடியினரின் கெடுபிடி காரணமாக அரைமனிதர்களாக அரைகுறை ஆடையுடன் ஒடுக்கப்பட்டவர்கள் நடமாடினர்"[106]

என்கிறார். வற்புறுத்தப்படும் அநாகரீகத்தின் பின்னணியிலிருக்கும் சாதிய மேலாண்மையை இது எடுத்துக்காட்டுகிறது.

முழு உடலையும் மறைக்க விதிக்கப்பட்டிருந்த தடை பற்றி கே.பி.வரதரராசன் கீழ்க்காணுமாறு குறிப்பிடுகிறார்.

"ஆண்ட தமிழினத்தை அடிமை ஆக்குவதற்காய் ஆரியக் கலப்புக் குருதியினர் பலஅடக்கு முறைச் சட்டங்கள் இயற்றி, திருவிதாங்கூர் இராஜ்யத்தில் செயல்படுத்தினர். அவற்றுள் துணி உடுக்கத் தடைவிதித்ததும் ஒன்று தமிழ் இன ஆண்களும், பெண்களும் அரைக்குக் கீழ்முட்டிற்கு மேல் மட்டும் மறைக்க அழுக்குச் சீலை மட்டும் உடுக்கலாம் என்பது சட்டம்"[107]

மேற்காட்டிய கூற்று சாதியமும் சட்டமும் கை கோர்த்து ஆடை பற்றிய விதிமுறைகளை உருவாக்கியதை எடுத்துக்காட்டுகிறது.

அடித்தட்டு சாதிப்பெண்கள் மேலாடை அணிவதை வலியுறுத்திய வைகுண்டரின் கொள்கைகள், மீட் அய்யரின் சட்டப்படியான நடவடிக்கைகள், காக்ஸ் அய்யரின் தொடர் நடவடிக்கைகள், மதமாற்றம், மக்களின் ஒன்றிணைந்த போராட்டம் ஆகியவை தோள்சீலை அணியும் உரிமையை மீட்டுத்தந்தன.

## வைகுண்டரும் தோள்சீலை விழிப்புணர்வும்:

தோள்சீலை அணிதல் பற்றிய விழிப்புணர்வைப் பிற்படுத்தப்பட்ட மற்றும் தாழ்த்தப்பட்ட மக்களிடம் வைகுண்டர் ஊட்டினார். ஆண்களுக்குத் தலைப்பாகையும், பெண்களுக்குத் தோள்சீலையும் அவசியம் என்பதை அவர் வலியுறுத்தினார்.

"தன்னைக் காணவரும் பக்தர்களில் ஆண்கள் தலைப்பாகை அணிய வேண்டும் என்று கூறியதுபோல் பெண்களை மேலாடை அணிய அறிவுறுத்தினார். இத்தகைய புரட்சிகளுக்காக அவர் சிறையில் அடைக்கப்பட்டார்"[108]

என்பதில் தோள்சீலை அணிதல் பற்றிய புரிந்துணர்வை உருவாக்கிய முன்னோடியாக வைகுண்டரைக் காணமுடிகிறது. வைகுண்டர் தோள்சீலை அணிய வலியுறுத்திய நிகழ்வும், கொள்கையும், நாவலில் சொல்லப்படுகின்றன.

"மார்பை மூடாமல், கூட்டத்தோடு கூட்டமாக உட்கார்ந்திருந்த ஒரு இளம்பெண்ணை எப்படியோ பார்த்துவிட்டார் அய்யா அண்ணாவி போல் எழுந்து அவள் பின்னால் போய், பிரம்பால் அவள் முதுகில் ஒன்று வைத்தார். கொல்லென்று கூட்டம் சிரித்தது. எத்தனை மட்டஞ் சொல்லியிருக்கேன். என் முன்னேயே மூடாம வந்திருக்கிறியே மக்கா, அச்சந்தான் எல்லாக் கீழ்மைக்கும் தாய். அச்சத்தை விடு... திரும்பவும் கட்டிலில் போய்

உட்கார்ந்தார். மக்கா ஆயிரத்தி ஒண்ணாவது தடவையா சொல்லுதேன். என் முன்ன வரப்பட்ட ஆம்பிள்ளை தலைப்பா கட்டணும் பொம்பள மாராப்புப் போடணும்."[109]

என்பதில் வைகுண்டரின் முற்போக்குப் பார்வை வெளிப்படுகிறது.

## மீட் அய்யரும் உரிமை மீட்பும்:

புராட்டஸ்தாந்து மிஷனரிகளின் வரவு, கல்விப்பரவலாக்கம் போன்றவை பழைய மரபுகளுக்கெதிரான விழிப்புணர்வை மக்களிடம் உருவாக்கின. ரிங்கல் தௌபே எனும் மேனாட்டு அருட்தொண்டர் மயிலாடிக்கு வந்தபோது அங்கு மேலாடையின்றி இருந்த பெண்களைப் பார்த்து அதிர்ச்சியடைந்துள்ளார். இந்த நடைமுறை அவருக்கு உடன்பாடு இல்லாததாக இருந்தது. மற்றொரு புராட்டஸ்தாந்து அருட்தொண்டரான மீட் அய்யர் இந்நடை முறையை மாற்ற முயன்றார்.

"சார்லஸ் மீட் கிறித்தவ ஆலயங்களுக்கு வரும் பெண்களுக்கென்றே ஜம்பரை வடிவமைத்தார். இதைப் பெண்கள் அணிவதற்குத் திருமதி மீட் கற்றுக் கொடுத்தார். இந்த ஜம்பர் கையில்லாத ஒருவகை தொய்வான பனியன் போன்றது. இதைக் குப்பாயம் என்ற பெயரால் குறிப்பிட்டனர். பெண்ணின் மார்பின் அளவைப் பொறுத்து குப்பாயம் தொளதொளவென்றோ இறுக்கமாகவோ இருக்கும். இந்தக் குப்பாயம் பெண்ணின் கழுத்திலிருந்து இடைவரை உள்ள பகுதிகளை மறைக்கும்படி வடிவமைக்கப்பட்டது. பெண்கள் சர்ச்சுக்கு மட்டுமல்ல, வேறு இடங்களுக்கும் குப்பாயத்தைப் போட்டுக் கொண்டு சென்றனர்"[110]

எனக் குப்பாயம் ஒடுக்கப்பட்ட வகுப்பினரால் அணியப்பட்டமை சொல்லப்படுகிறது.

மீட்அய்யரின் மனைவியால் வடிவமைக்கப்ட்ட குப்பாயத்தைத் தாழ்த்தப்பட்ட பெண்கள் அணிந்ததோடு அதற்கு மேலாகச் சேலையும் உடுத்தத் தொடங்கினர். இது மேலடுக்குச் சாதியினரைக் கோபப்படுத்தியது. கிறித்தவத்தைத் தழுவியவர்கள் நாகரிகமான ஆடையணிந்து மிடுக்குடன் நடந்து செல்வதை அவர்களால் தாங்கிக் கொள்ள இயலவில்லை.

"உயர் சாதியினரான சிலர் அவ்வாறு புதிய ஆடை அணிகளை அணிந்து வந்தவர்களை அடித்து உதைத்தனர். சில பெண்களின் மேலாடைகளைப் பிடித்துக் கிழித்தனர். இதனால்ஆத்திரம் கொண்ட சான்றார் குலமக்கள் போராட்டத்தில் ஈடுபட்டனர்"[111]

என முகிலை ராசபாண்டியன் குறிப்பிடுகிறார்.

## மூன்று கால கட்டம்:

தோள்சீலைக்கலகம் மூன்று கால கட்டங்களில் நடந்தது. 1822 முதல் 1823 வரை முதல் கால கட்டமாகும். இரண்டாம் காலகட்டம் 1828 முதல் 1830 வரையுள்ள காலப்பகுதியாகும். 1855 முதல் 1859 வரை இறுதிக்கட்டப் போராட்டம் நடைபெற்றது.

## முதலாம் காலகட்டம்:

தோள்சீலைப் போராட்டம் முதன் முதலில் கல்குளம் தாலுகாவில் உள்ள கொத்தனாவிளையில் நடந்தது. 1822-ஆம் ஆண்டு மே மாதம் கிறித்தவ தேவாலயத்திற்குச் சென்ற பெண்கள் மேலாடை அணிந்து சென்றபோது, மேல் சாதியினரால் அவர்கள் தடுக்கப்பட்டனர். அப்பெண்களின் மேலாடைகள் கிழிக்கப்பட்டன. இரணியல் சந்தைக்கு மேலாடை அணிந்து சென்ற பெண்களும் மானபங்கம் செய்யப்பட்டனர். பாதிக்கப்பட்டவர்களைச் சார்ந்தோர் ஒன்றிணைந்து கொடுமைக்காரர்களைத் தாக்கினர். பத்மநாபபுரம் நீதிமன்றத்தில் வழக்குத் தொடரப்பட்டது.

## இரண்டாம் காலகட்டம்:

இரண்டாம் கலவரம் நெய்யூரில் நிகழ்ந்தது. இது கல்குளம் ஆற்றூர், திற்பரப்பு, அருமனை, களியல் ஆகிய இடங்களுக்குப் பரவியது. குப்பாயம் அணிந்த பெண்களுக்கு எதிராகச் செயல்பட்ட பழமைவாதிகளின் முயற்சிகள் முறியடிக்கப்பட்டன.

## மூன்றாம் காலகட்டம்:

மூன்றாம் காலகட்டப் போராட்டம் ஆற்றுக்கல்லில் ஆரம்பித்து நெய்யூர் வரை தொடர்ந்தது. இப்போராட்டத்தில் காக்ஸ் பாதிரியாரின் பங்களிப்பு முக்கியமானது. முதல்இரு போராட்டமும், கலவரமும் நேரடியாக தோள்சீலைக் கலகத்தோடு தொடர்புடையவை. மூன்றாம் கட்ட மோதல்கள் நேரடியாகத் தோள்சீலை அணியக் கோரும் போராட்டமாக அமையாமல் மதமோதலாக முடிவடைந்தது. இக்காலங்களில் ஆதிக்கச்சாதியினரும் உரிமை மறுக்கப்பட்ட சமூகங்களும் மோதிக்கொண்டன. தோள்சீலை அணியத் தூண்டும் கிறித்தவத்தின் மீதுள்ள கோபத்தால் தேவாலயங்கள் தீக்கிரையாக்கப்பட்டன. 1855-ஆம் ஆண்டு அக்டோபர் முதல்

1859 பிப்ரவரி வரை நடைபெற்ற கலவரங்களின் விளைவாக ஒன்பது கிறித்தவ ஆலயங்களும் மூன்று பள்ளிகளும் தீயிடப்பட்டன.[112]

## மேலாடை அணியும் உரிமையும் - மதமாற்றமும்

ஒடுக்கப்பட்ட சமூகத்தைச் சார்ந்த பெண்களுக்கு மேலாடை அணியும் உரிமை மறுக்கப்பட்ட போது அவர்கள் கிறித்தவத்துக்கு மதம் மாற வேண்டிய நிலை ஏற்பட்டது. கிறித்தவப் பெண்கள் தேவலாயத்துக்கும் பிற இடங்களுக்கும் மேலாடை அணிந்து செல்ல மேனாட்டு அருட்தொண்டர்கள் உரிமையை வாங்கிக் கொடுத்தமையால் பிற சமூகப் பெண்களும் கிறித்தவத்தைத் தழுவத் தொடங்கினர். இதனால் மேலாதிக்க வகுப்பினர் கலவரங்களை உருவாக்கினர். இச்செய்தியை 'நாவலும் தோள்சீலைப் போராட்டமும்' என்ற நூல் குறிப்பிடுகிறது.

> "திருவிதாங்கூரில் தாழ்த்தப்பட்டவர்கள் கோயிலுக்குள் செல்வதற்கும் மேலாடை அணிவதற்கும் அனுமதி மறுக்கப்பட்டதால் அவர்கள் தங்களை அரவணைத்துக் கொள்ளத் தயாராக இருந்த கிறித்தவ மதத்தைத் தழுவினர். அதுமட்டுமின்றி அவர்கள் மேலாடை அணிந்து தேவாலயங்களுக்குச் சென்று வழிபட்டனர். இதனைக் கண்டு மனம் குமுறிய மேல்சாதி இந்துக்கள் கலவரங்களில் ஈடுபடலாயினர்"[113]

என அந்நூல் குறிப்பிடுகிறது.

கிறித்தவப் பெண்கள் மேலாடை அணிந்து செல்வதைப் பார்த்த மேல்சாதியினரின் தாக்குதல் பற்றியும் நாவல் விவரிக்கிறது.

> "ஐந்து முழம் சேலையை உடம்பில் நளினமாகச் சுற்றி பாம்படமிழந்த செவிமடல்களில் உன்னிப்பூக் கம்மல்கள் ஒளிவீச முந்தானையால் முக்காடிட்டபடி பெண்கள்"[114]

எனப் பெண்கள் மேலாடை அணிந்து தேவாலயத்துக்குச் சென்ற நிகழ்வைப் பொன்னீலன் காட்டுகிறார். மேலாடைக்கெதிரான மேல்சாதி அதிகாரியின் இழிவான பேச்சையும் நாவலில் குறிக்கின்றார்.

> "முலையை மூட ரவிக்கை, உடம்பு மூட சீலை, தலைமேல முக்காடு... இடுப்புல புத்தகம்.... பிரியனையும் புள்ளையையும் கூட்டிக்கிட்டு நீங்க நடக்கிற நடை எங்க மகாராணியே தோத்துப் போவாகளே. இவ்வளவு திமிர் எங்கிருந்துளா வந்தது?"[115]

என மேலாடை அணிந்த பெண்களை மேலதிகாரி இழிவுபடுத்துகிறான்.

## மேல் சாதியினரின் வன்முறை:

தோள்சீலை அணிவதற்கெதிரான வன்முறைகள் 1859-ஆம் ஆண்டின் தொடக்கத்தில் மிகுதியாக நடைபெற்றன. தாழக்குடி என்ற இடத்திலுள்ள பெண்களின் மேலாடைகள் கிழியத்தெறியப்பட்டன. கிறித்தவர்கள் ஊரைவிட்டுத் துரத்தப்பட்டனர். குமாரபுரம், ஆரல்வாய்மொழி, செம்பொன்விளை, காட்டுப்புதூர் ஆகிய இடங்களில் வன்முறை நிகழ்வுகள் ஏற்பட்டன. இவ்வன்முறைகளில் அரசு அதிகாரிகளின் பங்களிப்பு தீவிரமுடையதாகத் திகழ்ந்தது.

## மேலாடைகள் கிழிக்கப்படுதல்:

இசக்கி மாடன் மேல் சாதியினரை அவமானப்படுத்திய நிகழ்வும் மல்லன் பிள்ளையின் பதிலடியும் தோள்சீலைக் கலகத்தோடு தொடர்புடையவையாகும். கண்ணனூரில் வாழ்ந்த கிறித்தவர்கள் ஞாயிற்றுக்கிழமைகளில் அரசுக்கு ஊழியம் செய்ய மறுத்ததால், மேல்சாதி அதிகாரிகள் அவர்கள் தலையில் ஓலைக்கட்டை ஏற்றி பத்மநாபபுரம் கோயில் யானைக்கும் கொண்டு செல்லும்படி வற்புறுத்தினர். மேல் சாதியினர் அதிகார வன்முறையில் ஈடுபடுவதற்கு எதிராக இசக்கிமாடனும் அவனைச் சார்ந்த சிலரும் ஒன்று திரண்டதோடு, மேல் சாதியினரை அடித்து உதைத்தனர். அந்த ஓலைக்கட்டை மேல்சாதியினர் தலையில் ஏற்றி மீண்டும் கண்ணனூர் வரை சுமக்க வைத்தனர்.[116]

இதையறிந்த மேல் சாதியினருக்குக் கோபம் அதிகரித்தது. மல்லன் பிள்ளை தலைமையில் ஆயுதங்களுடன் புகுந்த மேல்சாதியினர் நாடார்களின் வீடுகளைக் கொள்ளையடித்து, சிலவீடுகளுக்குத் தீவைத்தனர். கண்ணனூர் ஆலயத்தைத் தீவைத்துக் கொழுத்தினர். முகிலை இராசபாண்டியன் மல்லன் பிள்ளையின் அத்து மீறலைக் கீழ்க்காணுமாறு பதிவு செய்கிறார்.

> "விளவங்கோட்டுப் பகுதியில் சவேரியாள், ஞானப்பூ, அன்னாள் ஆகிய பெண்கள் சந்தைக்குப் போகும்போது மேலாடை அணிந்து சென்றனர். அதைக்கண்ட நட்டாலம் பார்வதியக்காரன் கோபம் கொண்டான். மல்லன் பிள்ளை என்பவனை அனுப்பி அந்தப் பெண்களின் மேலாடைகளைக் கிழித்து எறியச் செய்தான்"[117]

என மல்லன் பிள்ளையின் அநீதிச் செயலை முகிலை ராசபாண்டியன் எடுத்துக்காட்டுகிறார். இசக்கி மாடன், மல்லன் பிள்ளை ஆகியோரோடு தொடர்புடைய இந்நிகழ்வுகளை 'மறுபக்கம்' நாவல் தருகின்றது.

நாவலில் மல்லன் பிள்ளையும் அவருடைய ஆட்களும் கையில் தடிகளுடன் தேவாலயத்துக்குள் நுழைகின்றனர். தேவாலயத்தில் வழிபாட்டிலிருந்தவர்களைத் தாக்குகின்றனர். பெண்கள் கூட்டத்தில் சிலர் பாய்ந்து அவர்களின் சேலைகளை

உருவி, ரவிக்கைகளைக் கிழிக்கின்றனர். ஓலைக் கட்டைத்தூக்கிச் சடையனின் தலையிலேற்றி பத்மநாபபுரத்துக்குக் கொண்டு செல்ல வைக்கின்றனர். வழியில் புலிப்புனம் இசக்கி மாடன், மல்லன் பிள்ளையையும் மற்றவர்களையும் நிறுத்துகின்றான். மல்லன் பிள்ளையைத் தாக்குகின்றான். அதிகாரி தலையில் ஓலைக்கட்டை ஏற்றி சுமக்க வைக்கின்றான். மறுநாள் நாடார் சமூகத்தாரின் குடிசைகள் தீக்கிரையாக்கப்படுகின்றன. பல பெண்களின் மேலாடைகள் கிழிக்கப்படுகின்றன. மீட் அய்யரின் மாளிகையைத் தரைமட்டமாக்குகின்றனர்.

## மேலாடை அணியும் உரிமை:

தோள்சீலை அணிய விழிப்புணர்வூட்டிய வைகுண்டரின் சிந்தனைகள், பொதுமக்களின் ஒன்றிணைந்த போராட்டம், மீட் அய்யர், காக்ஸ் அய்யர் ஆகியோரது தொடர் முயற்சிகள் ஆகிய அனைத்திற்குமான பதில் 1859-ஆம் ஆண்டு கிடைத்தது. ஸ்ரீ உத்திரம் திருநாள் மகாராஜா 1859-இல் கீழ்க்காணும் உத்தரவைப் பிறப்பித்தார்.

> "கிறித்தவ மதத்தைத் தழுவிய சான்றோர் குலப் பெண்களும் , குப்பாயம் அணிந்து கொள்ளவோ மீனவப் பெண்களைப் போல எல்லா மதத்தைச் சேர்ந்த சான்றோர் குலப்பெண்களும் கட்டிச்சீலை கொண்டு உடுத்திக் கட்டிக்கொள்ளவோ, உயர்சாதிப்பெண்கள் மேலாடை அணிவது போன்று அல்லாமல் வேறு எந்த விதத்திலாவது மார்பை மறைத்துக் கொள்வதற்கு எந்த விதமான தடையும் இல்லையாதலால் இந்த அறிக்கையை எல்லா மக்களும் அறிந்து அதன்படி நடந்து கொள்ளவேண்டும்"[118]

என்ற ஆணை பிறப்பிக்கப்பட்டது அதன் பின்னர் தோள்சீலைப்போராட்டம் முடிவுக்கு வந்தது.

## தென் எல்லைப் போராட்ட வரலாறு:

இந்திய நாடு 1947-ஆகஸ்ட் 15 அன்று விடுதலை பெற்றாலும் குமரி மாவட்டதுக்கு உண்மையான விடுதலை 1956-ஆம் ஆண்டு டிசம்பர் ஒன்றாம் நாள் தான் வந்து சேர்ந்தது. ஏனெனில் சமஸ்தான அரசின் அடக்குமுறைகளிலிருந்து அவர்கள் அன்றுதான் விடுதலை பெற்றனர்.

1956-ஆம் ஆண்டு வரை குமரி மாவட்டம் கேரளா மாநிலத்தின் ஆளுகைக்குட்பட்டிருந்தது. தொடக்க காலத்தில் திருவிதாங்கூர் சமஸ்தானத்துக்கு உட்பட்ட குடிமக்களாய் வாழ்வதில் குமரி மக்களுக்கு கடினமாக இல்லை. 19-ஆம் நூற்றாண்டில் இந்தியாவில் மலையாளிகள் குமரிமாவட்டத்

தமிழர்களை இரண்டாம் தரக் குடிமக்களைப் போல நடத்த முயன்ற போது மலையாள நாட்டிலிருந்து பிரிந்து விடவேண்டும் என்ற எண்ணம் இங்குள்ள தமிழர்களுக்கு வந்தது.

குமரி மாவட்டத்தைத் தமிழகத்துடன் இணைக்கும் போராட்டம் குறித்து சாந்தினி மே.தாஸ் கீழ்க்காணுமாறு குறிப்பிடுகிறார்.

> "குமரி மாவட்ட விடுதலை வரலாறு இரு நாடுகளின் எல்லைப் போராட்டம் அன்று; ஒரே நாட்டில் இரு வேறு எல்லைகளில் வாழ்ந்த இரு இனங்களின் உரிமைப்போராட்டம் என்ற வகையில் தனித்தன்மை வாய்ந்ததாய் விளங்குகிறது. அடக்கப்பட்ட ஒடுக்கப்பட்ட மக்கள் நடத்திய முதல் போராட்டம் என்ற வகையில் சரித்திர முக்கியத்துவம் பெறுகிறது"[119]

என்கிறார்.

கஸ்தூரி ஜான்சன் மொழிவாரி மாநிலப் பிரிவுப் போராட்டத்தைத் தமிழர்களின் ஒன்றிணைந்த போராட்டமாகப் பார்க்கிறார்.

> "திருவிதாங்கூர் அரசின் கீழ் அமைந்த பகுதிகளில் உள்ள தமிழர்கள் ஒருங்கிணைந்து அரசை எதிர்த்துத் தமிழ்நாட்டுடன் இணைய வேண்டும் என்று விடுதலைப் போராட்டம் நடத்தினர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் தொடங்கிய இப்போராட்டம், இருபதாம் நூற்றாண்டின் தொடக்க காலக்கட்டத்தில் வலுவடைந்து 1956-ஆம் ஆண்டு நிறைவுற்றது"[120]

என்கிறார்.

## போராட்டம் தோன்றியசூழல்:

குமரி மாவட்டத்தைத் தமிழகத்தோடு இணைப்பதற்காக நடைபெற்றப் போராட்டம் வரலாற்றுச் சிறப்பு மிக்கதாகும். மலையாள மொழியாதிக்கம், மலையாள இன ஆதிக்கம், மலையாள மேலாதிக்க சாதியினரின் ஆதிக்கம் ஆகியவற்றைத் தகர்த்தெறிவதை நோக்கமாகக் கொண்டு இப்போராட்டம் நடத்தப்பட்டது. திருவிதாங்கூர் அரசு மலையாளிகளுக்கு ஆதரவாகவும் தமிழர்களுக்கு எதிராகவும் செயல்பட்டமையால் இப்போராட்டம் வெடித்தது.

> "19-ஆம் நூற்றாண்டு இறுதியில் மலையாளிகள் சிறுபான்மைத் தமிழர்களை மானசீகமாக ஒதுக்குவதைக் குமரி மாவட்ட தமிழ் பேசிய மக்கள் குறிப்பாக ஒடுக்கப்பட்ட மக்கள் உணர்ந்தும் ஒன்றும் செய்யமுடியாத நிலையில் இருந்தனர். இந்த நிலையில் மலையாள நாட்டிலிருந்து குமரி மாவட்டம் பிரிய வேண்டுமென்ற உணர்வு தோன்றியது"[121]

என்று அ.கா பெருமாள் குறிப்பிடுகிறார்.

மலையாள ஆதிக்க சக்திகளுக்கும் தமிழ்ப்போராளிகளுக்கும் இடையேயான முரண்களையும் போராட்டத்திற்கான காரணங்களையும் மறுபக்கம் நாவல் தெளிவுபடுத்துகிறது.

> "பல காரணஞ் சொல்லலாம், ஆளுகிறவன் அடிமைப் பட்டவன் என்கிற அரசியல் காரணம், சுரண்டுறவன் சுரண்டப்படுறவன் என்கிற பொருளாதாரக் காரணம், மருமக்க வழி-மக்கவழி மலையாளம்-தமிழ் இப்படி பண்பாட்டுக் காரணங்கள் பெரும்பான்மையின் அக்கிரமத்துக்கு அடங்க மறுத்து நிமிர்ந்து நிற்கிற சிறுபான்மையைச் சகிக்க முடியாத ஆதிக்க போதை இலங்கை மோதலுக்கு என்னவெல்லாம் காரணம் உண்டோ, அதெல்லாம் இதுக்கும் பொருந்தும் இரண்டு தேசிய இனங்களுக்கிடையில் நடந்த போர் தம்பீ "[122]

எனக் குமரி விடுதலைப் போருக்கான காரணங்களை நாவல் தருகிறது.

## மொழி வழி மாநிலத்தின் தேவை:

கன்னியாகுமரி மாவட்டத்தைத் தமிழ்நாட்டோடு இணைக்கும் போராட்டம் தேவையற்றது என்ற எண்ணம் கொண்ட கதாப்பாத்திரமாகச் சேது காட்டப்படுகிறான். இந்தியா எனும் பெருந்தேசத்தில் கன்னியாகுமரி கேரளாவின் புவியியல் பரப்பில் இருந்தாலும் தமிழகத்தின் எல்லைக்குட்பட்டிருந்தாலும் சம மதிப்புடையதாகவே அது திகழும் என்று சேது கருதுகிறான். ஆனால் மொழி அடிப்படையிலான ஒன்றிணைவு தேவை என்பதை ஆசிரியர் வெங்கடேசன் கதாப்பாத்திரம் வழியாக வெளியிடுகிறார்.

> "இந்தியா ஒரு நாடல்ல, பல நாடுகளோட ஒன்றியம். தமிழ்நாடு, கேரளாநாடு, ஆந்திராநாடு, வங்க நாடு, இப்படி பல நாடுகள் சேர்ந்த ஒன்றியம். ஒவ்வொரு நாட்டுக்கும் மொழி தனி, உடைதனி, உணவு தனி, பண்பாடு தனி நம்முடைய தேசிய இன அடையாளங்களை இழந்தா நம் வாழ்வும் வளர்ச்சியும் போச்சி. இந்திய ஒன்றியத்துக்கு அர்த்தமே போச்சி"[123]

என மொழி சார்ந்த புவியியல் பரப்பு மற்றும் பண்பாட்டின் தேவையை அவர் வலியுறுத்துகிறார்.

## திருவிதாங்கூர் தமிழர் காங்கிரஸ் தோற்றம்:

அக்காலத்தில் கேரளப் பகுதிகளில் வலுவாக இருந்த மலபார் மாகாணக் காங்கிரஸ் கொச்சி பிரஜாமண்டல், திருவிதாங்கூர் சமஸ்தானக் காங்கிரஸ் ஆகிய மூன்று அமைப்புகளின் தலைவர்களும் 1945 நவம்பர் 18-ஆம் தேதி ஒன்றுகூடிக்

கன்னியாகுமரி முதல் காசர் கோடுவரை கேரள மாநிலம் அமைக்க வேண்டும் என முடிவெடுத்தனர். இதில் உடன்பாடில்லாதவர்கள் அகில திருவிதாங்கூர் தமிழர் காங்கிரஸ் என்ற கட்சியைத் தொடங்கினர். 1945-ஆம் ஆண்டு டிசம்பர் 16-ஆம் நாள் இக்கட்சியின் முதற்கூட்டம் நடைபெற்றது.

## தென் எல்லைப் போராட்ட இயக்கங்கள்:

திருவிதாங்கூர் மலையாள ஆதிக்கத்துக்கு எதிராகத் தமிழர்கள் கிளர்ந்தெழுந்ததற்கு வெறும் மொழி இன உணர்வு மட்டும் காரணமன்று, மலையாளிகளின் மனிதாபிமானமற்ற அரசியல் அமைப்பு முறைகளும் அதன்மேல் கட்டப்பட்ட சமூக, பொருளாதார, சமய, மொழி, கலாச்சார அடிப்படையிலான நியாயமற்ற கட்டுமானங்களும் தமிழ் மக்களைப் போராடத் தூண்டின. மலையாளிகள் எதிர்ப்பு இயக்கம், மலையாள எதிர்ப்பு இயக்கம், அன்புக்கொடி இயக்கம், தமிழர் விடுதலைகாங்கிரஸ், தமிழர் கட்சி, ஈத்தாமொழி தமிழ்ச் சங்கம், மத்திய வாலிபர் சங்கம், நாஞ்சில் தமிழர் காங்கிரஸ், அகில திருவிதாங்கூர் தமிழர் காங்கிரஸ் சுதந்திர திருவிதாங்கூர் கழகம், திருவிதாங்கூர் தமிழ்நாடு காங்கிரஸ், போன்ற அமைப்புகள் மலையாள ஆதிக்கத்திலிருந்து குமரி மண் விடுதலை பெற மக்களை ஒன்றிணைத்துப் போராடின.

மறுபக்கம் நாவலில் பொன்னீலன் கன்னியாகுமரி மாவட்டத்தைத் தமிழ்நாட்டோடு இணைப்பதற்காகப் போராடிய இயக்கங்கள் பற்றிச் சுருக்கமாகக் குறிப்பிடுகின்றார். ஜோயல் நத்தானியேல் எனும் கதாப்பாத்திரம் அனைத்துத் தமிழருக்கும் புரியும் படியான பேச்சுவழக்கில் இவ்வரலாற்றை உரைக்கின்றது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மோசஸ் சாலோமன், அருமை நாயகம் ஆகியோர் இணைந்து மலையாளி எதிர்ப்பு இயக்கம் தொடங்கினர். இவ்வியக்கத்துக்கு வேதமாணிக்கம் என்பவர் தலைமை தாங்கினார். வேதமாணிக்கம் 1920-இல் கொல்லப்படுகிறார். அவ்வியக்கச் செயல்பாடு அத்துடன் நிறைவடைகிறது.

1928-ஆம்ஆண்டு தமிழர் விடுதலை காங்கிரஸ் என்ற அமைப்பு உருவாக்கப்பட்டது. 1935-இல் தமிழர்கட்சி தொடங்கப்பட்டது. இவ்வியக்கங்கள் விரைவில் அழிவுற்றன. அதன் பின்னர் சமஸ்தான காங்கிரஸ் இயக்கம் தொடங்கப்பட்டது. ஏ.சங்கரம் பிள்ளை, ஓ.சங்கரம் பிள்ளை, சிவமுத்துக் கருப்ப பிள்ளை, எஸ் சிவம் பிள்ளை, டி எம் சுந்தரம் பிள்ளை போன்றோர் நகரக் குழுவிலிருந்து இவ்வியக்கத்தை வழிநடத்துகின்றனர். 1945-இல் காசர்கோடு என்ற இடத்தில் சமஸ்தான காங்கிரஸ் கூடி காசர்கோடு முதல் கன்னியாகுமரி

வரை திருவிதாங்கூர் ஒரே நாடாக இருக்க வேண்டும் என்ற தீர்மானத்தை நிறைவேற்றியது. அதற்குப் பொறுப்பாட்சி உருவாக்கப்படவேண்டும் என்றும் முடிவு செய்தது. பி.எஸ் மணி இதனை எதிர்த்தார். இந்தப் பிரிவைச் சரி செய்ய 1945-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 18-ஆம் நாள் நாகர்கோவிலில் சிவமுத்துக் கருப்பபிள்ளை தலைமையில் ஒரு சமஸ்தான காங்கிரஸ் கூட்டம் நடந்தது. அதிலும் காசர்கோடு முதல் கன்னியாகுமரி வரை ஒரே கேரளம் என்று முடிவு செய்யப்பட்டது. எனவே பி.எஸ் மணி சமஸ்தான காங்கிரஸில் இருந்து வெளியேறினார். அதன் பின்னர் அவர் நாஞ்சில் தமிழர் காங்கிரஸ் என்ற அமைப்பை உருவாக்கினார். ஆர்.கே.ராம், காந்திராமன், இரா.வேலாயுதம் பெருமாள் ஆகியோர் இவ்வியக்கத்தை ஆதரித்தனர். இவர்கள் அனைவரும் பி.சிதம்பரம் பிள்ளையைச் சந்திக்கச் சென்றபோது இவ்வரசியல் இயக்கத்தின் பெயரிலிருக்கும் குறையைச் சுட்டிக்காட்டினார். நாஞ்சில் நாடு என்பது தோவாளை மற்றும் கல்குளம், விளவங்கோடு பகுதிகளை உள்ளடக்காது என்றும் குறிப்பிட்டார். அதனால் குமரி மாவட்டத்தின் அனைத்து மக்களையும் உள்ளடக்கி அகில திருவிதாங்கூர் தமிழர் காங்கிரஸ் என்று அவ்வரசியல் இயக்கத்துக்குப் பெயர் வைக்கச் சொன்னார்.

## அகில திருவாங்கூர் தமிழ்நாடு காங்கிரஸ்:

தென்திருவிதாங்கூரில் பெரும்பான்மைச் சமூகம் நாடார் சமூகம் என்பதால் அவர்களிலிருந்து ஒருவரை இவ்வியக்கத்திற்குத் தலைமையேற்கச் செய்ய வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார். வந்தவர்கள் அவரது கருத்துக்கு இணங்கினர். நேசமணியை அவ்வியக்கத்தின் தலைவராக்க முயன்றனர். நேசமணி அதற்கு மறுத்துவிடவே, பொறுப்பாட்சிப் போராட்டத்தில் சிறை சென்ற எஸ்.நத்தானியேல் என்பவர் அகில திருவிதாங்கூர் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராக நியமிக்கப்பட்டார். ம.பொ.சி இந்த அமைப்புக்கு ஆதரவாக இருந்தார்.

1947-ஆம் ஆண்டு அக்டோபர் 8-ஆம் தேதி நாகர்கோவில் ஆலன் நினைவு மண்டபத்தில் நேசமணி ஒரு கூட்டத்தைக் கூட்டினார். சிதம்பரம் பிள்ளை, சிவதாணுபிள்ளை, அப்துல் ரசாக், நத்தானியேல் போன்றோர் இக்கூட்டத்திற்கு வந்ததோடு திருவிதாங்கூர் தமிழ்நாடு காங்கிரசில் சேருகின்றனர்.

## மலையாள அரசின் அடக்குமுறை:

மலையாளிகளால் தமிழர்கள் ஒடுக்கப்பட்ட பின்னணியை நேசமணியின் கீழ்க்காணும் கூற்று புலப்படுத்துகிறது.

"விளவங்கோடு, இரணியல், தக்கலை மற்றும் திருவட்டார் போலீஸ் நிலையங்களில் பணிபுரிபவர்களும் மலையாளிகளே. அவர்கள் தமிழ்நாட்டின் எல்லா முக்கிய பதவிகளிலும் இருக்கின்றனர். அவர்களுக்குத் தமிழர்களிடம் எந்த அனுதாபமும் கிடையாது. தமிழர்கள் மற்றும் தமிழ்நாடு காங்கிரஸ் திரும்பத் திரும்ப எடுத்துச் சொல்லியும் அரசின் அடக்குமுறை கொள்கைகளும் போலீஸ் அட்டூழியங்ஙளும் கட்டுக்கடங்காமல் போய்க்கொண்டிருந்தன"[124]

என மலையாளஅரசு தமிழர்களுக்கெதிரான மன நிலையில் இயங்கியதை மார்ஷல் நேசமணி சுட்டிக்காட்டுகிறார்.

1947-ஆம் ஆண்டு அக்டோபர் ஆறாம் நாள் மார்த்தாண்டத்தில் திருவிதாங்கூர் தமிழ்நாடு காங்கிரசின் சார்புடைய முப்பதாயிரம் பேர் ஒன்றாகத் திரண்டு குமரி மாவட்ட விடுதலை கோரி கூட்டம் நடத்தினர். மலையாள ஆதிக்க சக்தியினர் தமிழர்கள் மீது வன்முறையை ஏவினர். தமிழர்களின் கடைகள் தாக்கப்பட்டன. திருவிதாங்கூர் தமிழ்நாடு காங்கிரசின் அலுவலகக் கட்டத்தின் கீழிருந்த கடைகள் உடைக்கப்பட்டன. தமிழர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதியை காவல்துறை தடுத்து நிறுத்தவில்லை. இதனால் நீதித்துறை மீதும் காவல் துறை மீதும் தமிழர்களுக்கு அவநம்பிக்கை ஏற்பட்டது. குழித்துறை, மணலிக்கரை, அருவிக்கரை, பாகோடு, திக்கணம் கோடு, மடிச்சல் ஆகிய இடங்களில் தமிழகத்தோடு குமரி மாவட்டத்தை இணைக்கும் விடுதலைப் போராட்டங்களை மக்கள் நடத்தியபோது அதிகார அமைப்பால் தாக்கப்பட்டனர். தமிழர்கள் இவ்வடக்குமுறைகளுக்குப் பணிந்துவிடவில்லை. குமரியின் விடுதலை வரலாற்றை அவர்கள் வீரமுடன் முன்னெடுத்துச் சென்றனர். அப்போதைய மலையாள அரசின் அடக்குமுறைகளால் தமிழர்கள் பாதிப்படைந்ததை மார்ஷல் நேசமணியின் வாசகங்கள் உணர்த்துகின்றனர்.

"தமிழர்களை வேட்டையாடுவதும் அவர்களை மனிதாபிமானம் இல்லாமல் தாக்குவதும் பின்னர் விட்டுவிடுவதும் காவல் துறையினருக்கு ஒரு விளையாட்டாகவும் பொழுது போக்காகவும் இப்போது மாறிவிட்டது. இவர்களால் தாக்கப்பட்டவர்களில் பலர் வாழ்வதற்கே தகுதியற்றவர்களாகி விட்டனர். பலரால் தங்கள் அன்றாட வேலைகளைக் கூட செய்ய முடியவில்லை. நடந்து கொண்டிருக்கும் வழக்குகளில் சேர்க்கப்பட்டுவிடுவோமோ அல்லது புதிய பொய் வழக்குகளில் சேர்த்து விடுவார்களோ என்ற பயத்தில் ஏராளமான இளைஞர்கள் மற்றும் தமிழ்ப்

பிரமுகர்கள் தங்கள் வீடுகளுக்கு வெளியே வந்து உலவ தைரியம் இல்லாமல் அடைந்து கிடக்கின்றனர்”[125]

என அரசு அதிகாரம் தமிழர்களுக்கெதிராகத் தீவிரமாகச் செயல்பட்டதனை அவர் விளக்குகின்றார்.

முதல் மந்திரியாக இருந்த பட்டம் தாணுப்பிள்ளை தமிழர்களுக்கெதிராக அடக்குமுறையை ஏவிவிட்டார். நேசமணியை ஆறுவாரம் சிறையில் அடைத்தார். ஆயினும் தமிழர்களின் போராட்டம் மங்கவில்லை. கொச்சி கெஜட் எரிப்பு, சட்ட எரிப்பு, நீதிமன்ற மறியல், பதிவாளர் அலுவலக மறியல், உண்ணாவிரதப் போராட்டம் எனப் பல்வேறு போராட்டங்களைத் தமிழக மக்கள் முன்னெடுத்துச் சென்றனர்.

## அதிகார வன்முறை:

குமரியை மீட்டெடுக்கும் போராட்டத்தில் மலையாள காவல்துறையின் அத்துமீறல்கள் கொடூரம் மிக்கதாய் அமைந்தன. கழு நாட்டான் விளை என்ற இடத்தில் நடந்த பொதுக்கூட்டத்தில் காவல் துறையின் அதிகார வன்முறை வெளிப்படுகிறது. அப்பொதுக்கூட்டம் ஒரே ஒரு வாசலைக் கொண்ட தனியார் பூமியில் நடைபெறுகிறது. அக்கூட்டத்தில் லாரான்ஸ் என்பவர் பேசிக் கொண்டிருக்கும்போது காவல் துறையினரின் வாகனம் உள்ளே நுழைகிறது. காவல் துறையினரைப் பார்த்ததும் அவர் பேச்சை முடித்துக்கொள்கிறார். அவரைத் தொடர்ந்து சி.கோபாலகிருஷ்ணன் பேசத் தொடங்குகிறார். காவல் துறையினர் மேடையில் ஏறி அவரிடமிருந்த ஒலி பெருக்கிக் கருவியைப் பறிக்கின்றனர். அவர் பேசுவதற்குத் தடை விதிக்கின்றனர். அவரது சட்டையைப் பிடித்து இழுத்த பின்னரும் அவர் உணர்ச்சியாகப் பேசுகின்றார். தன்னை எவ்வளவு கொடுமைப்படுத்தினாலும் தான் பேச்சை நிறுத்தப்போவதில்லை என அவர் அறிவிக்கிறார். அதனைத் தொடர்ந்து நிகழ்ந்த காவல் துறையினரின் வன்முறையை அந்நாட்குறிப்பு தருகிறது.

## மாணவர் போராட்டம்:

மொழி வாரி மாநிலம் கேட்டு நடந்த போராட்டத்தில் மாணவர்கள் பங்கேற்றதனைக் கஸ்தூரி ஜான்சன் சுட்டுகிறார்.

“குழித்துறையிலும், ஆற்றூரிலும் துப்பாக்கிச் சூடு நடத்தியதுடன் தலைவர்களான நேசமணியும் தாணுலிங்க நாடாரும் கைது செய்யப்படுகின்றனர். மாணவர்களும் மொழிவாரி மாநிலம் கேட்டு ஊர்வலம் நடத்திக் கைது செய்யப்படுகின்றனர்”[126] என்று கூறுகின்றார்.

1954 ஆகஸ்ட் 11 ஆம் தேதி புதுக்கடையில் நடைபெற்ற போராட்டம் பற்றிய குறிப்புகளை நாவலில் வரும் உயிரோட்டம் நிறைந்த கதாப் பாத்திரமான வெங்கடேசனின் நாட்குறிப்பிலிருந்து பெற முடிகிறது. பள்ளியில் பயிலும் மாணவர்களிடம் கூட தமிழர் எனும் இனவுணர்வு இருந்தமையை அந்நாட்குறிப்பு உணர்த்துகிறது.

"1954 ஆகஸ்ட் 11 காலையிலேயே புதுக்கடையில் ஒரு விதமான பதட்டநிலை உருவாயாச்சி. ஏற்கனவே முஞ்சிறை ரெஸ்தர் கச்சேரியில குழப்பம் தொடங்கியாச்சி. எல்லா கவர்மெண்ட் ஆபிஸ் மேலேயும் கல்லெறி நடக்கு. கலவரம் பள்ளிக்கூடத்துக்கும் வந்தாச்சி. பள்ளிக்கூடத்துக்கு வெளியே நூத்துக்கு அதிகமான பயலுக கூடி நின்று கூவுதானுக வாருங்க பிலே வெளியே ...ஓ....ஓ உள்ள மயிரப் புடுங்கிக்கிட்டு இருக்கியா? எங்க மீசைக்கார சார் பயங்கர கோவக்காரரு வெளியே கூவிக்கிட்டு நிக்கிறவங்கள அடிக்கிறதுக்காக வராந்தாவுக்கு ஓடுறாரு. அதுக்குள்ளே கம்பி இல்லாத சன்னல் வழியா பயலுக திமுதிமுன்னு வெளியே சாடியாச்சி. நானும் சாடினேன். எங்கள அடிக்கக் கம்ப ஓங்கிக்கிட்டுத் திரும்பி வாறாரு சார். அதுக்குள்ள பொட்டப்புள்ளையெல்லாம் வெளியே ஓடிட்டு ஓ...ன்னு கூவிக்கீட்டுப் பள்ளிக்கூடமே கிரவுண்டுக்கு வந்தாச்சி.

தமிழ்நாடு தமிழருக்கே!
மலையாளி ஆதிக்கம் ஒழிக!
பட்டந் தாணுப்பிள்ளை ஒழிக!
மார்சல் நேசமணிக்கு ஜே!!

சரப்பட்டாசு போல கோசங்களை வெடிச்சிக்கிட்டு மெயின் கேட் வழியாக ரோட்டுக்கு பாயுது மாணவர் பட்டாளம்"[127]

என மாணவர்கள், போராட்டதில் இறங்கிய நிகழ்வு பதிவாகியுள்ளது.

## தடியடியும் துப்பாக்கிச் சூடும்:

நேசமணியின் ஆணைக்கிணங்க 1954 ஆகஸ்ட் மாதம் 11-ஆம் நாள் உச்சகட்ட தமிழர்ப் போராட்டம் நடைபெற்றது. கடையடைப்பு, பேருந்து இயங்காமை, ஊர்வலம் எனப் போராட்டம் வலுத்தது.

"போராட்டம் வெற்றியடைந்த செய்தி பட்டம் தாணுபிள்ளைக்குப் பறந்தது. அவர் ஆத்திரத்தில் சீறினார். தமிழ்ப்பகுதிகளுக்குப் போலீஸ் படையை அனுப்பிச் சுட்டுக் கொல்ல உத்தரவிட்டார். மார்த்தாண்டம், புதுக்கடை,

தொடுவட்டி ஆகிய இடங்களில் போலீஸ் தடியடி செய்தும், துப்பாக்கியால் சுட்டும் வெறியாட்டம் நடத்தினர்”[128]

என அரசின் வன்முறையை வரலாறு குறிக்கின்றது.

பட்டம் தாணுப்பிள்ளையால் நடத்தப்பட்ட துப்பாக்கிச்சூட்டின் பயங்கரம் பற்றிச் சின்னக்குத்தூசி கீழ்க்காணுமாறு குறிப்பிடுகிறார்.

“விடுதலை தினத்தை அடக்கத் திருவிதாங்கூர் போலீஸ் போதாது என்று ராணுவத்தையும் துணைக்கு அழைத்துக் கொண்டு பட்டம் தாணுப்பிள்ளை ஆட்சி, போராட்டத்தை நசுக்குவது என்ற பேரால் மனித வேட்டை நடத்தப்பட்டது. சிட்டுக்குருவியைச் சுடுவது போலப் போராட்டக்காரர்களைச் சுட்டுத் தள்ளியது போலீஸ். ஒரு இடம் இரண்டு இடங்களில் அல்ல. அரைடஜனுக்கும் மேற்பட்ட இடங்களில் துப்பாக்கிச்சூடு நடத்தப்பட்டது.11பேர் பதறப்பதறக் கொல்லப்பட்டனர்”[129]

என்று குறிப்பிடுகிறார்.

காவல் துறையின் துப்பாக்கிச் சூடு தடியடி ஆகியவற்றுக்குப் பயப்படாமல் தமிழ் இனப்போராளிகள் தொடர்ந்து போராடியதை நாவல் விளக்குகிறது.

“மக்கள் கலஞ்சி ஓடல்ல. அப்படியே நின்னுக்கிட்டிருக்காக. அப்பதான் அந்த நாசமாப்போன போலீசுக்காரனுவ வேனுக்குள்ள இருந்தே சுடுறானுவ. இந்தக் கொட்டுக்கு ஒன்னும் பேய் வாராதுன்னு கத்திகிட்டு ஒரு கல்ல எடுத்து வேன் மேல எறிஞ்சாரு ஒருத்தர். துப்பாக்கிச் சூடு தீவிரமாச்சி. ஆளுக புளிய மரத்துக்குப் பின்னால பதுங்குகிறாக. எத்தனை பேரு பதுங்க முடியும்? சூடு பட்டு அஞ்சாறு பேரு தரையில விழுந்து நெளியிறாக, கால், கை உடைஞ்சி அலறுறாக, ஜாலியன் வாலாபாக் பற்றி எங்க சார் பள்ளிக்கூடத்தில் சொன்னதை நேரே பார்க்கிறேன். அங்க சுட்ட ஜெனரல் டயர் வெள்ளையன். இங்க சுட்டவன் சொந்த நாட்டான். செத்தவங்க எண்ணிக்கையில வித்தியாசம் இருக்கும். மத்தப்படி எல்லாம் ஒண்ணுதான்”[130]

எனக் காவல் துறையினரின் நடவடிக்கை குறிக்கப்படுகின்றது.

காவல் துறையினரின் துப்பாக்கிச் சூட்டுக்குப் பயந்து சிலர் அருகிலிருந்த வீட்டுக்குள் நுழைகின்றனர். அங்கே கை கால் முறிந்தவர்களும் தடியடி பட்டவர்களும் கிடந்து துடிக்கின்றனர். சாலையின் ஓரத்திலுள்ள கடையில் இருந்த

பையனையும் காவலர்கள் தாக்குகின்றனர். இன்னொரு சிறுவனின் வாய்க்குள் துப்பாக்கியை நுழைக்கின்றனர். சிலரைத் துப்பாக்கியால் இடித்து காவல்துறை வாகனத்துக்குள் ஏற்றுகின்றனர்.

மலையாளிகளின் ஆதிக்கத்தை ஆதரிப்பவர்களும் தமிழர்களைத் தாக்குகின்றனர். தாக்கப்பட்ட பலர் தடுமாறி அருகிலிருந்த வாய்காலுக்குள் விழுகின்றனர். நாலாபக்கத்திலும் சிதறி ஓடும் மக்கள், கூட்ட நெரிசலில் மூச்சுத்திணறினர். புதுக்கடைச் சந்திப்பிலும் காவல் துறையினர் தடியடி நடத்துகின்றனர். ஓடுபவர்களைப் பூட்சு காலால் உதைக்கின்றனர். வசை மொழிகளையும் உதிர்க்கின்றனர். உங்களுக்குத் தமிழ்நாடுதானே வேண்டும், இதுதான் தமிழ்நாடு என்று உதைக்கின்றனர்.

குமரியைத் தமிழகத்தோடு இணைக்கப் போராடியவர்களுக்கெதிராகப் புதுக்கடையில் நிகழ்த்தப்பட்ட தாக்குதலை ஜாலியன் வாலாபாக் படுகொலையோடு நாவலாசிரியர் ஒப்பிட்டுப் பேசுகிறார்.இரண்டு நிகழ்வுகளுக்குமான வேறுபாட்டையும் அவர் சொல்லுகின்றார்.

> "முக்கிய மந்திரிப் பட்டம் தாணுப்பிள்ளையும், அவருக்கு பட்டாளமும் இதுக்குத் துணையாகச் சாதிவெறி பிடிச்ச சில உள்ளூர் வெறியனுகளும், தமிழர்களுக்குச் செய்த கொடுமையை ஜாலியன் வாலாபாக்குக்கு ஒப்பிட்டா, அது சரியல்ல. அங்க தப்பி ஓட வழியில்லாததினால பலர் செத்தாங்க. இங்கே தப்பி ஓடினவங்களையும் தேடிப்பிடிச்சித் தினமும் கொன்னானுவ நாசமாப் போன போலீஸ்காரனுக. இந்தச் சம்பவங்க துப்பாக்கிச் சூட்டை விடவும் கொடுமையானதுக."[131]

என ஜாலியன் வாலாபாக் படுகொலையை விடப் பயங்கரம் நிறைந்த அவ்வதிகார வன்முறையை விளக்கிக் காட்டுகிறார்.

புதுக்கடையில் உள்ள வீடுகளுக்குக் காவல் துறையினர் தீவைத்துவிட்டு தமிழர்கள் தீவைத்ததாகப் பொய் வழக்குப் போடுகின்றனர். இரவு நேரங்களில் தமிழர் வீடுகளிலுள்ள ஆண்களைக் காவல் துறையினர் வாகனத்தில் ஏற்றிச்சென்று தாக்குகின்றனர். இவ்வாறு தாக்கப்பட்டவர்களில் சிலர் உடனடியாக மரணமடைகின்றனர்.[132] சிலர் ஆறுமாதம் கழித்து மரணமடைகின்றனர். ஒரே சிறையில் ஆயிரம் தமிழர்களை மூன்று நாள் அடைத்து வைக்கின்றனர். மூன்று நாட்களும் அவர்களுக்கு உணவு வழங்காமல் துன்புறுத்துகின்றனர்.

காவல் துறையினருக்குப் பயந்து அந்திக்கடை மூன்று மாதமாய்க் கூடவில்ல. பொருட்களை வாங்க முடியாமல் பொதுமக்கள் பசியால் வாடுகின்றனர். பட்டம் தாணுப்பிள்ளை புதுக்கடை துப்பாக்கிச் சூட்டில் தப்பியவர்களைக் கண்டறிந்து

தாக்குவதற்கான வழிமுறையை உருவாக்குகின்றார். ஊருக்குள்ளிலிருந்தே காட்டிக் கொடுப்பவர்களை ஊக்கப்படுத்தும் முயற்சியாக அது அமைகின்றது. காட்டிக் கொடுப்பவன், போராட்டத்தில் கலந்ததாக ஊரிலுள்ள யாரைக் காட்டிக் கொடுத்தாலும் அவர்களைப் பிடித்துச்சென்று காவல் துறையினர் கடுமையாகத் தண்டிக்கின்றனர்.[133]

## தென் எல்லைப் போராட்டத்தை ஆதரித்த மலையாளிகள்:

இடதுசாரிச் சிந்தனையாளர்கள் மலையாளிகளாய் இருந்தாலும் தமிழகத் தென் எல்லைப் போராட்டத்தை ஆதரித்ததாகப் பொன்னீலன் எழுதுகிறார். அதற்கான மாதிரியாக மாதவன்தம்பி எனும் கதாப்பாத்திரத்தைப் படைத்துக் காட்டுகிறார். இடதுசாரிகளின் அகில இந்தியத் தன்மையுடைய மொழி மாகாணக் கொள்கையையும் நாவலில் தருகிறார்.

"கம்யூனிஸ்டுகளும் மொழி வழி மாகாணம் அமையப் போராடினாங்க ஆனா அவங்க பார்வை அகில இந்தியத் தன்மையுடையது
ஐக்கிய தமிழகம் சிந்தாபாத்
ஐக்கிய கேரளம் சிந்தாபாத்
தமிழர் -மலையாளி ஐக்கியம் சிந்தாபாத்!
இது நியாய உணர்வுள்ள மலையாளிகள் பலரைத் தமிழர் பக்கம்சேர்ந்து போராடத் தூண்டிச்சி"[134]

என்கிறார்.

பொதுமக்களைப் பொருத்தவரை மலையாளிகளில் பெரும்பான்மையானவர்கள் இப்போராட்டத்திற் கெதிரானவர்களாகவே இருந்தனர். ஆனால் தமிழருக்கு ஆதரவான மலையாளிகளும் இருந்தனர். இதற்கான காரணத்தையும் பொன்னீலன் நாவலில் கூறுகின்றார். அவர்கள் மொழியால் மலையாளிகளாக இருந்தாலும் சாதியால் குமரிமாவட்டப் பனையேறும் சமூகத்தினருக்கு உறவாக இருந்தனர். மொழியுணர்வை விடச் சாதியுணர்வு சமூக உறவைத் தீர்மானிப்பதில் முக்கியப் பங்காற்றுவதாகப் பொன்னீலன் கருதுகிறார்.[135]

## விடுதலை:

1956-ஆம் ஆண்டு நவம்பர் முதல் நாள் திருவிதாங்கூரிலுள்ள தமிழர் பகுதி தமிழ்நாட்டோடு இணைக்கப்பட்டது. இப்பகுதிக்கு வைக்கப்பட வேண்டிய பெயர் பற்றிய விவாதங்கள் மக்களிடையே நடைபெற்றன. நேசமணி மாவட்டம், நாஞ்சில்

மாவட்டம், நாகர்கோவில் மாவட்டம் எனப் பல பெயர்கள் முன்னிறுத்தப்பட்டன. இறுதியில் கன்னியாகுமரி என்ற பெயர் வைக்கப்பட்டது. இதன் பின்னணியாவது:

> "குமரித்தந்தை நேசமணியோ இதையெல்லாம் பொருட்படுத்தாமல் இந்தியாவின் வடக்கே இமயமலையைப் போன்று தெற்கே குமரி எல்லை என வழக்கில் இருக்கிறது. எனவே கன்னியாகுமரி மாவட்டம் என்று பெயர் சூட்டினால் இம்மாவட்டத்தின் பெயரும் உலகெங்கும் தெரியவரும் என்று எண்ணியே கன்னியாகுமரி மாவட்டம் என்று பெயர் சூட்ட விரும்பினார். இதற்காக அன்றைய தமிழக முதல்வரைச் சென்னைக்குச் சென்று நேரில் சந்தித்தார். கன்னியாகுமரியின் முக்கியத்துவத்தை உணர்ந்த அன்றைய முதல்வர் பெருந்தலைவர் காமராசரும் மாாஷல் நேசமணியின் கோரிக்கையை ஏற்று கன்னியாகுமரி மாவட்டம் என்றே பெயர் சூட்டினார்"[136]

எனும் கருத்து கன்னியாகுமரி என்ற பெயரிடப்பட்டதன் பின்னணியை விளக்குகிறது.

## குமரி விடுதலை:

குமரி மாவட்ட மக்களின் தியாகம் நிறைந்த போராட்டத்தின் காரணமாகக் குமரி மாவட்டம் தாய்த்தமிழகத்தோடு இணைக்கப்படுகிறது.

'கன்னியாகுமரி மாவட்டம் தமிழ்நாட்டோடு சேர்ந்ததும்' என்பதில் குமரி தமிழ்நாட்டின் புவியியல் பரப்புடன் இணைந்ததைப் பொன்னீலன் எடுத்துக்காட்டுகிறார். "கன்னியாகுமரி மாவட்டம் பிரிஞ்சி தமிழ்நாட்டோட இணைஞ்சி கலக்டரெல்லாம் போட்டாச்சி"[137] எனத் தமிழ்நாட்டு அரசு நிர்வாகத்துக்குப்பட்ட குமரியையும் அவர் காட்டுகிறார்.

## முடிவுரை:

இவ்வியலில் குமரிமாவட்ட இயற்கையமைப்பு விளக்கப்பட்டுள்ளது. குமரி மாவட்டத்தின் தொடக்ககால வரலாறு சுருக்கியுரைக்கப்பட்டுள்ளது. குமரி மாவட்டத்தில் தோன்றிய உயர்ந்த ஆளுமைகளைப் பற்றிய வரலாறு தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. குமரி மாவட்டத்தில் சமயப்பணியும் சமூகப் பணியும் செய்த மேனாட்டுக் கிறித்தவர்கள் பற்றிய செய்தியும் விவரிக்கப்பட்டுள்ளது. அடிமைகளின் விடுதலை வரலாறு, தோள்சீலைக் கலகம், குமரி மாவட்டத்தைத் தாய்த்தமிழகத்தோடு இணைப்பதற்கான போராட்டம் ஆகியவை வரலாற்றியல் நோக்கில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.

## அடிக்குறிப்புகள்:

1. தொல்காப்பியர், தொல்காப்பியம், ப.1
2. புறநானூறு, பா.6
3. மேலது, பா.9
4. அ.க.பெருமாள், தென்குமரியின் கதை, ப.23.
5. பொன்னீலன், மறுபக்கம், ப.5
6. மேலது, ப.108
7. மேலது, ப.116
8. அ.க.பெருமாள், தென்குமரியின் கதை, ப.16,17
9. பொன்னீலன், மறுபக்கம், ப.117
10. மேலது, ப.10
11. அ.க.பெருமாள், தென்குமரியின் கதை, ப.34
12. வேலாயுதப்பெருமாள் திருமால் செல்வம் (க.ஆ), கன்னியாகுமரி வரலாற்றுச்சுருக்கம், செ.தங்கமணி(தொ.ஆ), கன்னியாகுமரி மாவட்ட அரசியல் சமுக வரலாறு,ப.3
13. அ.க.பெருமாள், தென்குமரியின் கதை, ப.37
14. மேலது, ப.40
15. பொன்னீலன், மறுபக்கம், பக்.456,457
16. கு.சுகுமாறன், எங்கள் விடுதலைப் போர், ப.2
17. வே.தி.செல்வம்,(க.ஆ) கன்னியாகுமரி மாவட்ட வரலாற்றுச் சுருக்கம், செ.தங்கமணி(தொ.ஆ), கன்னியாகுமரி மாவட்ட அரசியல் சமூக வரலாறு, ப.18
18. கு.சுகுமாறன், எங்கள் விடுதலைப் போர், ப.2,3
19. பொன்னீலன், மறுபக்கம், ப.12
20. மேலது, ப.122
21. மேலது, ப.127
22. கே.பி.வரதராஜன்,(க.ஆ) மாவீரன் அனந்த பத்மநாபன், செ.தங்கமணி (தொ.ஆ), கன்னியாகுமரி மாவட்ட அரசியல் சமூக வரலாறு,ப.49
23. பொன்னீலன், மறுபக்கம், ப.122
24. மேலது,ப.124
25. மேலது, ப.125
26. அ.க.பெருமாள், தென்குமரியின் கதை, ப.221
27. பொன்னீலன், மறுபக்கம், ப.232

28. மேலது, ப.37

29. ந.காளியப்பன், குமரிமாவட்ட விடுதலை வரலாறு, ப.23

30. பொன்னீலன் மறுபக்கம், ப.234

31. வே.தி.செல்வம் (க.ஆ), கன்னியாகுமரி மாவட்ட வரலாற்றுச்சுருக்கம், செ.தங்கமணி (தொ.ஆ), கன்னியாகுமரி மாவட்ட அரசியல் சமூக வரலாறு, ப.25

32. பொன்னீலன், மறுபக்கம், ப.37.

33. மேலது, ப. 37

34. மேலது, ப.234

35. மேலது, பக்.235,236

36. மேலது, ப.232

37. மேலது, ப.233

38. சாந்தினி மே.தாஸ், குமரி மாவட்ட அரசியல் சமுக வரலாறு, ப.89

39. என்,விவேகானந்தன் (ப.ஆ), அருள் நூல், ப.26

40. மேலது, ப.232

41. அ.க.பெருமாள், தென்குமரியின் கதை, ப.250

42. மேலது, ப.250

43. ஐசக் அருள்தாஸ், குமரி மண்ணில் கிறிஸ்தவம், ப.20

44. பொன்னீலன், மறுபக்கம், பக்.628,630

45. மேலது, ப.130

46. மேலது, ப.130

47. மேலது, ப.131

48. மேலது, ப.131

49. மேலது, ப.132

50. அ.க.பெருமாள், தென்குமரியின் கதை, ப.289

51. வே.தி.செல்வம் (க.ஆ), கன்னியாகுமரி மாவட்ட வரலாற்றுச் சுருக்கம், செ.தங்கமணி (தொ.ஆ), கன்னியாகுமரி மாவட்ட அரசியல் சமுக வரலாறு, ப.23

52. பொன்னீலன், மறுபக்கம், பக்.152,153

53. மேலது, ப.155

54. மேலது, ப.158

55. சாந்தினி, மே.தாஸ், குமரி மாவட்ட அரசியல் சமுக வரலாறு, ப.59

56. மேலது, ப.52

57. மேலது, ப.52
58. பொன்னீலன், மறுபக்கம், பக்.158,160
59. முகிலை இராஜபாண்டியன் (க.ஆ), தோள்சீலைப் போராட்டம், செ.தங்கமணி (தொ.ஆ), கன்னியாகுமரி மாவட்ட அரசியல் சமூக வரலாறு, ப.78
60. பொன்னீலன், மறுபக்கம், ப.157
61. சாந்தினி மே.தாஸ், குமரி மாவட்ட அரசியல் சமூக வரலாறு, ப.60
62. இராபர்ட் எல்.ஹார்டு கிரேவ், தமிழக நாடார் வரலாறு, பக்.94,95
63. பொன்னீலன், மறுபக்கம், ப.116
64. மேலது, ப.130
65. மேலது, பக்.163,164
66. மேலது, ப.166
67. மேலது, ப.208
68. மேலது, ப.209
69. மேலது, ப.210
70. சம்சுதின் (க.ஆ), தலைவர் நேசமணியின் வீரவரலாறு, ஆல்பென்ஸ் நெதானியேல், அரிகரசுதன் (தொ.ஆ), மார்ஷல் நேசமணி குமரியின் தந்தை, ப. 372.
71. பொன்னீலன், மறுபக்கம், ப.372
72. மேலது, ப.375
73. மேலது, ப.376
74. மேலது, ப.376
75. இவாஞ்சலின் ஜெமி(க.ஆ), திருவிதாங்கூர் தமிழ்மக்கள் போராடக்காரணம், ஆல்பென்ஸ் நதானியேல், அரிகரசுதன்(தொ.ஆ) மார்ஷல் நேசமணி குமரியின் தந்தை, ப.13
76. பொன்னீலன், மறுபக்கம், ப.470
77. மேலது, ப.453
78. மேலது, ப.454
79. மேலது, ப.454
80. மேலது, ப.454
81. மேலது, ப.455
82. மேலது, ப.453
83. மேலது, ப.456

84. மேலது, ப.456
85. அ.க.பெருமாள், தென்குமரியின் கதை, ப.117
86. இவாஞ்சலின் ஜெமி(க.ஆ), திருவிதாங்கூர் தமிழ்மக்கள் போராடக்காரணம், ஆல்பென்ஸ் நதானியேல், அரிகரசுதன்(தொ.ஆ), மார்ஷல் நேசமணி குமரியின் தந்தை, ப.18
87. சாந்தினி மே.தாஸ், குமரி மாவட்ட அரசியல் சமூக வரலாறு, பக்.64,65
88. மேலது, ப.65
89. பொன்னீலன், மறுபக்கம், ப.170
90. அ.க.பெருமாள், தென்குமரியின் கதை, ப.119
91. ஜாய் ஞானதாசன், ஒரு மறக்கப்பட்ட வரலாறு, ப.33
92. ஐ.வி.பீட்டர், சமயத்தொண்டர்களும் சமுதாய மறுமலர்ச்சியும், பக்.68,69
93. ஐசக் அருள்தாஸ், குமரி மண்ணில் கிறிஸ்தவம், ப.47
94. ஐ.வி.பீட்டர், சமயத்தொண்டர்களும் சமுதாய மறுமலர்ச்சியும், ப.69
95. ஐசக் அருள்தாஸ், குமரி மண்ணில் கிறிஸ்தவம், ப.50
96. முகிலை இராஜபாண்டியன் (க.ஆ), தோள்சீலைப் போராட்டம், செ.தங்கமணி (தொ.ஆ), கன்னியாகுமரி மாவட்ட அரசியல் சமூக வரலாறு, ப.72
97. பொன்னீலன், மறுபக்கம், பக்.172,173
98. மேலது, ப.172
99. அ.க.பெருமாள், தென்குமரியின் கதை, ப.121
100. சாந்தினி மே.தாஸ், குமரி மாவட்ட அரசியல் சமூக வரலாறு, ப.41
101. கஸ்தூரி ஜான்சன், குமரி மாவட்ட புதினங்களில் சமூக நிறுவனங்கள், ப.162
102. சுகுமாறன், எங்கள் விடுதலைப்போர், ப.10,11
103. அ.க.பெருமாள், தென்குமரியின் கதை, ப.123
104. டி.எச்.ஜார்ஜ், குமரி மாவட்ட பெண்ணுரிமைப் போராட்டம், ப.3
105. மேலது, பக்.10,11
106. இரா.பொன்னு, தென்கோடியில் ஒரு சமுதாயப் புரட்சி, ப.57
107. கே.பி.வரதராசன், இரண்டாவது தோள்சீலைக் கலவரத்தில் அனந்தன் வழியார்களின் பங்கு, பக்.16,17
108. முகிலை இராஜபாண்டியன் (க.ஆ), தோள்சீலைப் போராட்டம், செ.தங்கமணி (தொ.ஆ), கன்னியாகுமரி மாவட்ட அரசியல் சமூக வரலாறு, ப.71

109. பொன்னீலன், மறுபக்கம், ப.232
110. அ.க.பெருமாள், தென்குமரியின் கதை, ப.133
111. முகிலை இராஜபாண்டியன் (க.ஆ), தோள்சீலைப் போராட்டம், செ.தங்கமணி (தொ.ஆ) கன்னியாகுமரி மாவட்ட அரசியல் சமூக வரலாறு, ப.78
112. இராபர்ட் எல்.ஹார்டு கிரேவ், தமிழக நாடார் வரலாறு, ப.98
113. க.கல்யாணி, நாவலும் தோள்சீலைப் போராட்டமும், ப.109
114. பொன்னீலன், மறுபக்கம், ப.161
115. மேலது, ப.162
116. முகிலை இராஜபாண்டியன் (க.ஆ) தோள்சீலைப் போராட்டம், செ.தங்கமணி (தொ.ஆ) கன்னியாகுமரி மாவட்ட அரசியல் சமூக வரலாறு, ப.78
117. மேலது, ப.76
118. மேலது, பக்.84,85
119. சாந்தினி மே.தாஸ், குமரி மாவட்ட அரசியல் சமூக வரலாறு, ப.107
120. கஸ்தூரி ஜான்சன், குமரி மாவட்ட புதினங்களில் சமூக நிறுவனங்கள், ப.160
121. அ.க.பெருமாள், தென்குமரியின் கதை, ப.91
122. பொன்னீலன், மறுபக்கம், ப.461
123. மேலது, ப.473
124. பீட்டர், குமரிமாவட்ட விடுதலை, கல்குளம் விளவங்கோடு நாடார் மக்கள் தந்த விலை, ப.7
125. மேலது, ப. 20
126. கஸ்தூரி ஜான்சன், குமரி மாவட்ட புதினங்களில் சமூக நிறுவனங்கள், ப.160
127. பொன்னீலன், மறுபக்கம், ப.463
128. சம்சுதீன் (க.ஆ), தலைவர் நேசமணியின் வரலாறு, ஆல்பென்ஸ் நதானியேல், அரிகரசுதன் (தொ.ஆ), மார்ஷல் நேசமணி குமரியின் தந்தை, ப.62
129. குமுதம் ரிப்போர்ட்டர், 15-4-2001, பக்.24,25
130. பொன்னீலன், மறுபக்கம், ப.464
131. மேலது, பக்.468,469
132. மேலது, ப.468

133. மேலது, ப.468

134. மேலது, ப.487

135. மேலது, ப.472

136. ஆல்பென்ஸ் நதானியேல் (க.ஆ) விடுதலை வீரன் நேசமணி, ஆல்பென்ஸ் நதானியேல், அரிகரசுதன் (தொ.ஆ), மார்ஷல் நேரமணி குமரியின் தந்தை, ப.79

137. பொன்னீலன், மறுபக்கம், ப.411

# இயல் - 4

# மறுபக்கம் நாவலில் நாட்டார் வழக்காறுகள்

## முன்னுரை:

நாட்டார் வழக்காறுகள் ஒரு சமூகத்தின் வரலாற்றை அறிவதில் முக்கிய இடம் வகிக்கின்றன. வழக்கமாக வரலாறு என்பது தன்னிகரில்லாத தலைவர்களை மையமிட்டதாக அமைகிறது. மன்னர் மற்றும் அரசியல் தலைவர்களின் வெற்றி தோல்விகளின் பட்டியலாக வரலாறு சுருங்கிப் போய்விடுகிறது. கற்பிக்கப்படும் வரலாற்றில் பாமரர்களுக்கு இடமிருப்பதில்லை. எனவே மரபு வழிப்பட்ட வரலாற்றிற்கு மாற்றாக விளிம்பு நிலையினரின் வரலாற்றைத் தொகுக்க வேண்டிய தேவையிருக்கிறது. இவ்வியல் மறுபக்கநாவலில் காணப்படும் குமரி மண்ணின் நாட்டார் வழக்காறுகளை ஆராய்கிறது.

## நாட்டார் வழக்காறுகள்:

நாட்டார் வழக்காறுகள் அடித்தள மக்களின் வரலாற்றுக்கு உதவும் தரவுகளைத் தமக்குள் அடக்கிவைத்திருப்பதனை ஆ.சிவசுப்பிரமணியன் எடுத்துக்காட்டுகிறார்.

> "நாட்டார் பாடல்கள், பழமொழிகள், வாய்மொழிக்கதைகள், நாட்டார் தெய்வங்கள் அவை தொடர்பான வழிபாட்டு முறைகள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், கதைப்பாடல்கள், கர்ணபரம்பரையாய் வழங்கிவரும் வாய்மொழிச் செய்திகள் சடங்குமுறைகள் என்பன எல்லாம் அடித்தள மக்களால் உருவாக்கப்பட்டு, அவர்களிடையே வழங்கி வருபவை. இவற்றின் பயன்பாடு பலதரத்தவை. இவற்றின் அடிப்படை நோக்கம் வரலாற்றைக் கூறுவதல்ல. எனினும் இவை அடித்தள மக்களின் வரலாற்றுக்கு உதவும் தரவுகளைத் தம்முள் அடக்கியுள்ளன"[1]

இக்கூற்று அடித்தளமக்களின் வழக்காறுகள் வரலாற்றின் ஒருபகுதியாக அமைவதை உறுதி செய்கிறது.

## சிறுதெய்வ வழிபாடு

நாட்டுப்புறப் பண்பாட்டில் சிறுதெய்வ வழிபாடு முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. அப்பர் தேவாரத்தில் "சென்று நாம் சிறுதெய்வம் சேரோம்

அல்லோம்'' எனச் சிறுதெய்வ வழிபாடு குறிக்கப்படுகின்றது. இதற்கு, எதிர் நிலையிலிருக்கும் 'பெருந்தெய்வம்' எனும் சொல் புறநானூற்றில் பயின்று வருகிறது.

"இருபெருந் தெய்வமும் உடன்நின்ற"[2]

என்பதில் திருமாலும் பலராமனும் பெருந்தெய்வங்களாகக் குறிக்கப்படுகின்றனர். சிறுதெய்வ வழிபாடு என்பது தாழ்வானது என்பது தவறான கருத்தாகும். மூதாதையரின் வழிபாட்டு மரபுகள் சிறுதெய்வ வழிபாடு எனும் நாட்டார் தெய்வ வழிபாட்டு முறையிலேயே தொடருகின்றன. பிராமணர்கள், சைவ வேளாளர்கள் தவிர்ந்த சாதிப் பிரிவினரிடையே சிறுதெய்வ வழிபாடு காணப்படுகிறது.

## குமரி மாவட்டத்தில் சிறுதெய்வ வழிபாடு

குமரி மாவட்டத்தில் வழிபடப்படும் சிறுதெய்வங்களாவன:

"மாடன், அக்கினி மாடன், இசக்கிமாடன், உதிரமாடன். குமுளி மாடன், சுடலை மாடன், கள்ளை மாடன், மாடன் தம்பிரான். மாடசுவாமி, மல்லன், நீலன், நீலகண்டன், மூர்த்தி, மந்திர மூர்த்தி, இருளன் குட்டி, காலகுட்டி, காலன், கறுப்பண்ணன், கறுப்பன், முச்சந்தி மூப்பன், பூதத்தான், மாய கொண்டான், வீரன், சுடலை, வீரசுடலை போன்ற பெயர்களில் ஆண் தெய்வங்கள் காணப்பட்டன"[3]

என்பதில் குமரி மாவட்டத்தில் வழிபடப்படும் சிறுதெய்வங்களின் பெயர்களை அறியமுடிகிறது. பொன்னீலன் குமரி மாவட்ட சிறு தெய்வங்கள் பற்றி நாவலில் விவரிக்கிறார். வெள்ளைக்காரச்சாமி கோயிலின் பக்கத்திலுள்ள, சிவன் கோயிலில் சிவனோடு சுடலை மாடன், காலசாமி, வன்னியடி மறவன், இசக்கி, செங்கிடாய்க்காரன் எல்லோரும் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டிருக்கும் காட்சியை நாவலில் காட்டுகிறார்.[4]

## முன்னோர் வழிபாடு

இறந்துபோன முன்னோர்களை வழிபடும் மரபு இந்தியாவில் பரவலாகக் காணப்படுகிறது. முன்னோர்களின் ஆற்றல், அனுபவம், ஆசி ஆகியவை பின் தலைமுறையினருக்குக் கிடைப்பதற்காக இவ்வழிபாடு செய்யப்படுகிறது.

"இறந்தோரின் ஆற்றல் வாழ்வோரின் நலனில் பெரும்பங்கு வகிக்கிறது என்னும் கருத்தாக்கத்தால் ஏற்பட்டதே முன்னோர் வழிபாடாகும்"[5]

என்பர்.

முன்னோர் வழிபாடு தொன்மை சமயத்தில் ஒரு கூறாக அமைந்துள்ளது. பழந்தமிழரின் நடுகல் வழிபாட்டிற்கும் இன்றைய தமிழரின் முன்னோர் வழிபாட்டிற்கும் இடையே தொடர்பு இருப்பதாகச் சக்திவேல் குறிப்பிடுகிறார்.

"இறந்த முன்னோர் வழிபாட்டைத் தமிழகமெங்கும் காணலாம். தமிழரிடையே இருந்த நடுகல் வழிபாடும் முன்னோர் வழிபாட்டோடு தொடர்புடையதாகும். ஒருவர் செய்த அருஞ் செயல்கள் அவர் இறந்த பின்பும் அவருடைய உறவினருடன் தொடர்பு பெறுகின்றன என்ற நம்பிக்கையே முன்னோர் வழிபாட்டிற்கும் அடிப்படையாகும்"[6]

என்பர். இறந்த கன்னியரை வழிபடும் மரபு பற்றிப் பொன்னீலன் மறுபக்கம் நாவலில் குறிப்பிடுகிறார்.

குமரி மாவட்ட நாட்டார் வழிபாட்டு மரபுகளில் ஒன்று கன்னி பூசை ஆகும். குடும்பங்களில் திருமணம் ஆகாமல் இறந்துபோன கன்னிகளைத் தெய்வமாகக் கருதி வழிபடுவர். இதனைக் கன்னிபூசை என அழைப்பர். கன்னிபூசை செய்யும் அன்று வீட்டிலுள்ள யாரும் புலால் உணவு உண்ண மாட்டார்கள். கன்னி மூலையில் ஆண்டு தோறும் கன்னிக்குத் துணி, வளையல், பவுடர், சோப்பு போன்றவற்றை வைத்துக் கன்னிபூசை செய்வது வழக்கம். மறுபக்கம் நாவலில் வெங்கடேசனின் மனைவியான சிவகாமி கன்னி பூசை பற்றி விளக்குகிறார்.

"குடும்பங்கள்ல கலியாணமாகாம இறந்து போற கன்னிகளைத் தெய்வமாக் கும்பிடுற வழக்கம் இங்க எல்லா வீடுகள்லயும் உண்டு. இவிய தங்கச்சிமார் ரெண்டுபேர் இளம் வயசில தவறிப்போனாவ. அவியளுக்குத் துணி, வளையல், பூ, பொட்டு எல்லாம் வாங்கி வச்சிக் கும்பிடுற நாள் இன்னு"[7]

எனக் கன்னி பூசை செய்யப்படும் முறை விளக்கப்படுகிறது. கன்னித் தெய்வங்களை வீட்டிற்குள்ளேயே வழிபடுவதற்குச் சமூகப் பின்புலமொன்று உள்ளது. வைதீகத்தின் வரவுக்குப் பின்னர் அடித்தட்டு மக்கள் கோயிலோடும் தெய்வத்தோடும் அணுக்க உறவு கொண்டு வாழ முடியாத நிலை ஏற்பட்டது. கோயிலுக்குள் நுழையும் உரிமையும், புரோகிதராகும் உரிமையும் மறுக்கப்பட்ட நிலையில் தமக்கு அவர்கள் இல்லுறை தெய்வங்களை உருவாக்கினர்.

"அவர்கள் தத்தமக்குரிய இல்லுறை தெய்வங்களையும், மூதாதையர்களையும், தம்வீட்டில் இறந்த கன்னியரையும், பிள்ளை பெறவியலாத இறந்த பிள்ளைத் தாய்களையும் வழிபட்டு வந்தனர்"[8]

இவர்களில் கன்னித் தெய்வங்களை வழிபடும் போக்கு குமரி மாவட்ட நாட்டார் மரபில் மிகுந்து காணப்படுகிறது. இறந்த கன்னியர் வணக்கத்தைப் பேய் வழிபாடு என ஐசக் அருள்தாஸ் குறிக்கிறார்.

"இறந்து போனவர்களுடைய ஆவிகளே பேய்களாக மறுஉருவாக்கம் பெறுகின்றன என நம்பினர். மணமாகு முன் இறந்த இளம் பெண்களின் ஆவிகளைக் கன்னிப்பேய் என வணங்கினர்"[9]

என்ற கூற்றில் கன்னிப்பேய், என்ற சொல்லாடல் வன்மையாகத் தெரிகிறது. இதனை 'முன்னோர் வழிபாடு' என்ற வகைக்குள் அடக்குவதே பொருத்தமானமாக அமையும்.

## குலதெய்வ வழிபாடு

குலதெய்வ வழிபாட்டில் பல்வேறு பயன்பாட்டு நோக்குகள் உள்ளன.

"குலதெய்வத்தை வழிபடுவதன் மூலம் இம்மக்கள் நோய் நொடிகள் இன்றியும் தொழில் விருத்தி பெற்றும் செல்வ வளங்கள் பெற்றும் இன்பத்துடன் வாழலாம் என்ற நம்பிக்கை கொண்டுள்ளனர். குலதெய்வத்தை வழிபடவில்லை எனில் தெய்வத்தின் கோபத்திற்கு ஆளாகி அதனால் துன்பம் ஏற்படும் என்று நம்புகின்றனர்"[10]

என ஷோபனா குறிப்பிடுகிறார்.

பிராமணர்களுக்கும் நாட்டார் குலசாமிகள் இருப்பதாக மறுபக்கம் நாவல் குறிப்பிடுகிறது. தேவகோட்டைப் பகுதியில் சிங்கமுகக்கருப்பனும், நாராண மங்கலத்தில் பெரியநாயகியும், இராமேஸ்வரத்தில் ராக்கச்சி அம்மனும் மானாமதுரையில் சட்டிக் கருப்பணனும், மீமீசலில் வீரமாகாளியும் சில பிராமணக் குடும்பங்களில் குலசாமியாக இருப்பதை ஆசிரியர் எடுத்துக்காட்டுகிறார்.[11]

தமிழ் மக்களில் சிலர் சந்தனக் கருப்பனைக் குலதெய்வமாக வழிபடுகின்றனர். சந்தனக் கருப்பன் கோயிலில் தேவர்கள், சேர்வைக்காரர், நாடார்கள், பம்பை கொட்டும் பறையர்கள் எல்லோருக்கும் மரியாதை செய்யப்படுவதாக நாவல் குறிப்பிடுகிறது. [12]

## வீரர் வழிபாடு

சிறுதெய்வங்கள் பலவும் ஆயுதங்களை ஏந்திய வடிவிலமைந்துள்ளன. எனவே இவற்றை வீரவழிபாட்டுத் தெய்வங்கள் என்று குறிப்பிட முடியும். ஊர், கால்நடை, நீர், பயிர் ஆகியவற்றைக் காப்பதற்காகச் சண்டையிட்டு உயிர் துறந்தவர்களை நாட்டுப்புற மக்கள் வழிபடுகின்றனர். சுடலை மாடன் வீரவழிபாட்டுத் தெய்வமாகும்.

**சுடலைமாடன்:**

சுடலைமாடன் பல்வேறு பெயர்களில் வழிபடப்படுகிறார்.

"வேட்டியப்பன், பட்டவன் என்ற பெயர்களில் வடமாவட்டங்களிலும், மதுரை முகவை மாவட்டங்களில் கருப்பசாமி என்ற பொதுப்பெயரிலும் நெல்லை குமரிமாவட்டங்களில் சுடலை மாடன் என்ற பொதுப் பெயரிலும் இத்தெய்வங்கள் அடங்கிவிடும்"[13]

எனத் தொ.பரமசிவன் கூறுகின்றார்.

கொல்லப்பட்ட வீரனைச் சார்ந்த பிரிவினர் அவனிடமிருந்து வரங்களை, வேண்டுகின்றனர். மறுபக்கம் நாவலில் சுடலை மாடன் பற்றிய குறிப்பு காணப்படுகிறது.[14]

**பிச்சைக்காலன் :**

பிச்சைக்காலனைக் கொலையில் உதித்த தெய்வமாக வானமாமலை அடையாளப்படுத்துகிறார்.

"பிச்சைக்காலன் கதையில் கொலை செய்யப்பட்டவனது தங்கை கொலை செய்யத் தூண்டியவனது ஆசை நாயகி, கொலை செய்யத் தூண்டியவனை அவளே கொல்லுகிறாள். தானும் தற்கொலை செய்து கொள்ளுகிறாள். அண்ணனும் தங்கையும் பேய்களாகிக் கொலை செய்தவர்களைக் கொல்லுகிறார்கள்.[15]

என்பதில் பிச்சைக்காலனின் கதையை அறிய முடிகிறது.

குமரி மாவட்டத்திலுள்ள சூரங்குடியில் அரிசிப் பிள்ளை, பிச்சைக்காலன் ஆகியோருக்கான கோயில்கள் அமைந்துள்ளன. சம்புக்குளத்தருகே அமைந்துள்ள இக்கோயில்களில் இத்தெய்வங்களுக்கு வருடத்தில் இரண்டுமுறை கொடை விழா எடுக்கப்படுகிறது. இவ்வழிபாடு பலியிடப்படும் மனித உடல்கள் காலங்காலமாகக் கொண்டாடப்படுவதாகக் கருதச் செய்கிறது. இவ்வழிபாட்டுக்குப் பின்னால் ஒரு கதை புதைந்து கிடக்கிறது.

பழங்காலத்தில் மணிக்காஞ்சி பட்டினத்தில் பிச்சையாள் எனும் பெண் வாழ்ந்து வந்தாள். அவளுடைய கணவன் இறந்துபோனபின் அவள் தன் மகனான பிச்சைக்காலனுடனும், மகளான அரிசிப்பிள்ளையுடனும் பிழைப்புக்காகச் சூரங்குடிக்கு வருகிறாள். அப்பகுதியை ஆண்டுவந்த சேனைக்குட்டி எனும் மன்னன் அக்குடும்பத்தை ஆதரித்து வருகிறான். பிச்சைக்காலன் வளர்ந்து மன்னனின் காரியக்காரனாகப் பொறுப்பேற்கிறான். அவன் நேர்மையானவனாக அதிகாரம் செலுத்துகிறான். இதனால் மன்னனின் பழைய காரியக்காரனும்

அவனது ஆட்களும் நெருக்கடிக்கு உள்ளாகின்றனர். அவர்கள் அனந்தரன் சேனைக்குட்டியிடம் கோள்மூட்டி பிச்சைக்காலனைக் கொலை செய்கின்றனர். பிச்சைக்காலனின் அக்காளான அரிசிப்பிள்ளை சேனைக்குட்டியைத் தந்திரமாக வெட்டிப் பழிதீர்த்துத் தானும் மரணமடைகிறாள். இவர்களனைவரும் பிற்காலத்தில் தெய்வங்களாக வழிபடப்படுகின்றனர்.[16]

## மன்னன் மதிப்பன் :

> நாட்டார்கதைகளில் மன்னன் மதிப்பன் பற்றிய செய்திகள் உள்ளன. "வள்ளியூரிலிருந்து ஆட்சி செய்த குலசேகரப்பாண்டியனுக்குத் துணையாக மன்னன் மதிப்பன் என்ற இரு சகோதரர்கள் இருந்துள்ளனர். அவர்கள் இருவரையும் கொல்வதற்காகக் குலசேகர பாண்டியன் மீது படையெடுத்து வந்த கன்னடியன் ஆள் அனுப்பியிருக்கிறான். வஞ்சகமான முறையில் அவர்களைக் கொன்று போட்டனர்"[17]

என்று மன்னனும், மதிப்பனும் வஞ்சமாகக் கொல்லப்பட்ட கதையை ஏ.என்.பெருமாள் குறிப்படுகிறார்.

கோவளத்தின் காவல் தெய்வங்களாக மன்னன் மதிப்பன் என்பவர்கள் போற்றப்படுகின்றனர். கோவளத்து மக்கள் இந்துக்களாக இருந்தபோது அவர்களைக் காவல் காத்த தெய்வங்களாக இவர்கள் அறியப்படுகிறார்கள். அவ்வூர் மக்கள் கிறித்தவர்களாக மதம் மாறிய பின்னர் கூட இவ்விரு சாமிகளுக்கும் காணிக்கைப் போட்டுக் கும்பிடுவதாகப் பொன்னீலன் குறிப்பிடுகிறார்[18]

## தம்பிமார் வழிபாடு :

வீரர்களைத் தெய்வங்களாக்கி வழிபடும் மரபுக்குச் சான்றாகத் தம்பிமார் வழிபாட்டைக் குறிப்பிடமுடியும். நாகர்கோவிலிருந்து அம்மாண்டி விளைக்குச் செல்லும் வழியில் ஒரு காட்டுக்குள் தம்பிமார் கோயில் உள்ளது. பப்புத்தம்பி இராமன் தம்பி என்ற இருவரையும் போற்றும் வண்ணமாக இவ்வழிபாட்டிடம் உருவாக்கப்பட்டுள்ளது.

பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வேணாட்டு ஆட்சி தமிழருக்கா மலையாளிகளுக்கா என்று நடந்த பெரும் போராட்டத்தில் கொல்லப்பட்ட இவ்விரு தம்பிகளையும் வழிபடும் நோக்கில் இக்கோயில் கட்டப்பட்டுள்ளது. தம்பிமாருக்கு இருபத்தி நான்கு கோயில்கள் இருப்பதாக நாவல் குறிப்பிடுகின்றது.

"இருபத்தி நாலு கோயில் இருக்கு. எல்லாமே ஒளிவு மறைவா, ராவைக்கு ராமானமா ராசாவுக்குத் தெரியாம நடக்குவு"[19]

என்பதில் மறைவாகக் கட்டப்பட்டிருக்கும் தம்பிமார் கோயில் பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

## சிதம்பர நாடான் வழிபாடு :

சிதம்பர நாடானைக் கடவுளாக வழிபடுவதற்குப் பின்னணியில் ஒரு கதை உள்ளது. சிதம்பர நாடார் கதை என்ற நாட்டுப்புறக்கதையை ஏ.என்.பெருமாள் 'நாட்டுப்புறக் கதைகள் தரும் வரலாற்றுச் செய்திகள்' எனும் கட்டுரையில் தருகிறார்[20]

பள்ளத்தூரைச் சுற்றியுள்ள பகுதிகளைப் பறக்கை வரையிலும் தன்னாட்சியின் கீழ் வைத்து சுய அதிகாரம் செலுத்தி வந்தவர் சிதம்பர நாடார். இவர் களரி, மாந்தரீகம் முதலிய கலைகளில் சிறப்புற்று இருந்தார். வஞ்சி நாட்டு மன்னருக்கும் இவருக்கும் நெருங்கிய தொடர்பு இருந்துள்ளது. பறக்கையிலுள்ள ஒரு பார்ப்பன இனப்பெண் பாம்பு கடித்து இறந்ததாக நினைத்து அவளைச் சிதையிலேற்றி நெருப்பு வைத்துவிட்டனர். இது பறக்கைச் சுடுகாட்டில் நடந்தது. ஆனால் அப்பகுதியில் சென்ற சிதம்பர நாடார் அந்தப்பெண் இறக்க வில்லை என்பதைத் தன் கூர் மதியால் அறிந்து அவளைச் சிதையிலிருந்து இறக்கி தன்னுடைய மந்திர ஆற்றலினால் உயிர் திரும்புமாறு செய்தார். அவள் தன் பக்கத்தில் சிதம்பர நாடார் நிற்பதைக் கண்டு தன்னுடைய அவல நிலையை எடுத்துக் கூறினாள். தான் இந்த நிலையில் திரும்பி தன் வீட்டிற்குச் சென்றால் உண்மையை அறியாது தன்னைப் பேய் என்று துரத்தி விடுவரென்று அஞ்சி அவருடைய காலில் விழுந்து தன்னைக் காப்பாற்றுமாறு கெஞ்சினாள். இந்த நிலையில் சிதம்பர நாடார் என் செய்வதென்று அறியாது திகைத்தார். அப்பொழுது அந்தப் பார்ப்பனப் பெண் அவரோடு வாழவிரும்புவதாகப் பணிவோடு கூறினார். அதைக்கண்டு மிகவும் வருந்திய சிதம்பர நாடார் அவளைத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்று மணம் செய்து கொண்டார். அவர்களுக்கு ஒரு பிள்ளையும் பிறந்து வளர்ந்தது.

இதையறிந்த பார்ப்பனப் பெண்ணின் குடும்பத்தினர் சாதி வேறுபாட்டை மறந்து பறக்கைக்கு வரும்படி அழைத்தனர். இதை அவர்களுடைய குடும்பத்தினர் விரும்பவில்லை. பகை வளர்ந்தது. பறக்கைக்குப் பக்கத்தில் வந்த சிதம்பர நாடாரைப் பிடித்துக் கட்டிவைத்து அவரைக் கொல்வதற்கு அனுமதி வழங்குமாறு ஒரு கடிதத்தைக் கொடுத்து உடனே வஞ்சி மன்னரிடம் அனுப்பினர்.

மன்னரிடமிருந்து தங்களுக்கு ஆதரவான பதில் வருமென்று கருதினர். தொலைவிலிருந்தே ஓட்டன் வருவதைக் கண்டு பதிலைச் சரியாக அறிவதற்கு முன்பே பறக்கையைச் சார்ந்தவர்கள் சிதம்பர நாடாரைக் கொன்றுவிட்டனர்.

இது சாதி வெறியின் கோர முகத்தை வெளிப்படுத்தும் கதையாகும். அதன்பின்னர் சிதம்பர நாடார் தெய்வமாக்கப்படுகிறார். இன்றுவரை அவரைத் தெய்வமாக வழிபடும் மக்கள் இம்மாவட்டத்தில் உள்ளனர்.

குமரி மாவட்டத்தில் சிதம்பர நாடான் எனும் வீரனுக்குக் கோயில் கட்டி வழிபாடு நடத்துவது பற்றிப் பொன்னீலன் விளக்குகிறார். சுமார் முன்னூறு ஆண்டுகளுக்கு முன் இங்கு வாழ்ந்த வீரன் சிதம்பர நாடான் ஆவார். பறக்கையைச் சுற்றியுள்ள பகுதிகளுக்கு அவர்தான் அதிகாரியாகப் பணியாற்றினாராம். பறக்கையில் உள்ள ஒரு பிராமணப் பெண்ணை மரணத்திலிருந்து காப்பாற்றியமையால் அவருக்கும் அப்பெண்ணுக்குமிடையே தொடர்பு ஏற்படுகிறது. சிதம்பர நாடானோடு வாழ அவரது வீட்டுக்கு அப்பெண் வந்துவிடுகிறாள். பறக்கையிலுள்ள மேலடுக்குச் சாதிப்பிரிவைச் சார்ந்தவர்கள் சிதம்பரநாடானைக் கொன்று விடுகின்றனர். சிதம்பர நாடானுக்கும் அவரது மனைவிக்கும் இங்குக் கோயில் அமைக்கப்பட்டுள்ளது. ஆண்டுக்கு ஒருமுறை இக்கோயிலில் கொடை கொடுக்கும் வழக்கம் உள்ளது"[21] என மறுபக்கம் நாவல் குறிப்பிடுகின்றது.

## சேர்வைக்காரன் சாமி :

சேர்வைக்காரன்சாமி எனும் நாட்டுப்புறத் தெய்வம் பற்றிய வாய்மொழிக்கதைகள் இங்கு வழக்கிலுள்ளன. பல தலைமுறைகளுக்கு முன்னால் பாண்டிக்குப் பனையேறச் சென்ற முத்தையாவின் முன்னோருடன் பாண்டியிலிருந்து வந்த தெய்வமே சேர்வைக்காரன் சாமி என்ற வரலாறு வாய்மொழி வழக்கிலுள்ளது. முத்தையா வம்சத்தின் முன்னவர் ஒருவர் பனையேறிக் கொண்டிருந்தபோது, இராஜ ரூபம் கொண்ட ஒருவர் கீழே நின்று தனக்குப் பசிப்பதாகக் கூறுகிறார். மன்மதனைப் போன்ற அந்த அழகு மிக்கவருக்குப் பனையேறி வயிறு நிறைய பதநீர் கொடுத்தாராம். அந்த அழகான மனிதர் பதனீரைக் குடித்துவிட்டு கீழ்க்காணுமாறு கூறினாராம்.

> "மக்கா நான் உன்னோடு பாண்டியிலிருந்து வந்த சேர்வைக்காரன். எனக்குக் கோயில் கட்டி விளக்குவச்சி என்னையக் கும்பிடு உனக்கு எல்லாந் தருவேன்"[22]

என்று கூறி மறைந்தாராம். பெரியவர் வீட்டுக்கு வந்து, அன்றே ஒரு நல்ல இடமாகப் பார்த்து முக்கோலை நட்டு, விளக்கேற்றிக் குடும்பிடுகிறார். அதன்பின் அவருக்குச் செல்வம் நிறைந்ததாக வாய்மொழிக்கதை குறிப்பிடுகின்றது.

முத்தையா, சேர்வைக்காரன் சாமியை இறைவனாக எண்ணி வழிபடுகிறார். வெள்ளிக்கிழமை மாலைகளில் முத்தையா வீட்டிலுள்ள அவர்களுக்குத் திருநீறு கொடுத்து, விளக்கேற்றுகிறார். வெள்ளிதோறும் பூசை நடத்துகிறார். சேர்வைக்காரன் சாமிக்காகத் திருவிழா கொண்டாடும்போது கருங்கிடாவெட்டி, சாமியாடிச் சங்கடம் சொல்லி வருகிறார். சேர்வைக்காரன் சாமி மக்களைப் பாதுகாத்து வருவதாக அவரது வழிவந்தவர்கள் நம்புகின்றனர்.

## வெள்ளைக்காரன் சாமி :

வெள்ளைக்காரன்சாமி வழிபாட்டுக்குப் பின்னாலும் ஒரு நாட்டுப்புறக்கதை உள்ளது. ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் கன்னியாகுமரிக்கு அருகில் ஒரு வெள்ளைக்காரர் சிறப்பாக ஆட்சி செய்து வந்துள்ளார். இவரது பெயர் எதுவென நாட்டார்கதை விளக்கவில்லை.

"சிந்தை மெக்க மனமகிழ்ந்து சிறந்த நல்ல காலாளும்
துப்பாக்கி செய்கின்ற துரை வெள்ளைக்காரர்களும்
துரிதமுடம் பீரங்கி செய்யும் வெள்ளைக்காரர்களும்
வெள்ளைக்காரர் பாளையமும் மிக்க படைத்தலைவரும்
வேண்டும் வண்ணம் படைக்கரியும் வேந்தர்களும் புடைசூழ
அடக்கி அரசாண்டிருந்தார் ஆணழகன் பரங்கித்துரை "[23]

இவ்வெள்ளைக்காரர் தனக்கென ஒரு கப்பலைச் செய்துள்ளார். அக்கப்பல் கோவளத்துக்கு அருகிலுள்ள தவிட்டுத்துறையில் மூழ்குகிறது. அதன் அருகிலுள்ள மன்னன் தேவன் பாறையில் வெள்ளைக்காரன் சாமி கோயில் அமைக்கப்பட்டுள்ளது. மண் சுவராலான கீற்றுக்கூரை கோயிலான வெள்ளைக்காரன்சாமி கோயிலின் சிறப்பை நாவலில் வரும் கோயில் தர்மகர்த்தா விளக்குகிறார்.

"ஒரு வெள்ளைக்காரர் சமாதியான இடமாம். இது அவர் யார் என்கிறது யாருக்குந் தெரியல்ல கப்பல் உடைஞ்சி, அவர் கரை ஒதுங்கியிருக்கலாம் என்கிறாங்க. ஆண்டுக்கு ஒருமுறை வெள்ளைக்கார சாமிக்குக் கொடை கழிப்போம். அன்னிக்கிப் பூசாரி அந்தக் காலத்து வெள்ளைக்காரர் போல கோட்டு சூட்டு போட்டுக்கிட்டு, நாற்காலியில உக்காருவாரு. பாட்டில்

பாட்டிலா பிராந்தி குடிப்பாரு. அவர் பேச்சு பூரா தஸ்புஸ்ன்னு இங்கிலிசுலாதான் இருக்கும். ஆட்டமும் வரும். ரொட்டி, ஆட்டுக்கறி இதுகதான் சாமிக்குப் படைப்போம். சாமி எல்லாருக்குந் திருநீறு குடுத்துச் சங்கடஞ் சொல்லும்; ரொம்பத் துடியான சாமி சொன்னது பலிக்கும்"[24]

என்கிறார்.

இந்த வெள்ளைக்காரன்சாமியார் என்பதில் மக்களிடையே கருத்து வேறுபாடு உள்ளது. குமரி மாவட்டத்தில் கிறித்தவத்தைப் பரப்பிய ரிங்கல் தெளபேதான் வெள்ளைக்காரச் சாமி எனச் சிலர் கருதுகின்றனர். ஏசுநாதரை வெள்ளைக்கார வழிபாட்டு முறையில் வழிபடாமல் இந்திய மண்ணின் வழிபாட்டு முறையில் வழிபடுவதற்காக இக்கோயில் உருவாக்கப்பட்டிருப்பதாகக் கருதுவோரும் உளர்.

**பெண்தெய்வ வழிபாடு :**

பெண் தெய்வங்கள் தங்கள் இறப்பிற்குரிய காலத்தில் இறந்தவர்களாக இல்லாமல், அகால மரணமடைந்தவர்களாக உள்ளனர். பெண் தெய்வங்களை வழிபடும் மரபும் நாட்டுப்புறங்களில் உள்ளன. பெண் தெய்வ வழிபாட்டின் குறிக்கோள்களைத் தொ. பரமசிவன் எடுத்துரைக்கிறார்.

"பொதுவாகப் பெண் தெய்வ வழிபாடுகள் உடல் வளம், மனவளம், மகப்பேற்று வளம், பயிர்வளம் இவற்றையே குறிக்கோளாகக் கொண்டு நடைபெறும்."[25]

என்பதில் பெண் தெய்வ வழிபாட்டின் நோக்கங்கள் உணர்த்தப்படுகின்றன.

பெண் கடவுளரை வழிபடும் மரபு நாட்டார் பண்பாட்டில் மிகுந்துள்ளது. இத்தெய்வங்களைத் தாய்த் தெய்வங்கள் என்று அழைப்பர். தாய்த்தெய்வங்கள் கன்னி, தேவி, மனைவி எனும் மூன்று பாகுபாட்டுக்குள் அடக்கப்படுகின்றனர். கின்ஸ்லி எனும் நாட்டார் வழக்காற்றியல் அறிஞர் மேற்காட்டிய வகைப்பாட்டைச் செய்தவராவார்.

"தமிழ்ச் சமுதாயத்தில் வணங்கப்பெறும் தாய்த்தெய்வங்கள் அனைத்தும் தாய்மார்களல்ல. அதாவது தாய்மை நிலை பெற்றவர்கள் அல்லர். தாய்தெய்வம் என்பது ஒரு பொதுச் சுட்டுகையாக அமைகின்றதேயன்றி, உண்மையில் தாய்த் தெய்வங்கள் கன்னித்தெய்வம், தேவிதெய்வம், மனைவி தெய்வம் என்றே பாகுபடுகின்றன"[26]

என்று அவர் கூறுகின்றார். கன்னித் தெய்வங்கள் செல்வி, குமரி எனும் பெயர்களில் அழைக்கப்படுகின்றன. கடல்கெழு செல்வி, கன்னியாகுமரி போன்ற பெயர்களை இதற்குச் சான்றாகக் காட்ட முடியும்.

"கற்புடைய பத்தினிப் பெண்கள் திருமணமாகா நிலையில் பேராற்றல் கொண்டவர்கள். அவர்கள் சீற்றமடைந்தால். கட்டுக்கடங்கா ஆற்றலை வெளிப்படுத்துபவர்கள் அழிக்கும் ஆற்றல் படைத்தவர்கள்"[27]

என்ற கருத்து கன்னித் தெய்வங்களின் அளப்பரிய ஆற்றலை எடுத்துக்காட்டுகிறது.

குமரி மாவட்டத்தில் காளி, மாகாளி, கங்காளி, உச்சினி மாகாளி, பத்திரகாளி, ரண பத்திரகாளி, கருங்காளி, காந்தகாரி, பகவதி, பார்வதி, பேச்சி, சுடலைப் பேச்சி, சுள்ளைப் பேச்சி, வள்ளி, மல்லி, தெய்வானை, நீலமை, நீலி, சூலி, அம்மன், முத்தாரம்மன், மாரியம்மன், கன்னி முத்து, மாரிமுத்து, ஈனமுத்து, இசக்கி, மாச இசக்கி, ஈனாயிசக்கி, வீரி, காரி போன்ற சிறு தெய்வங்களை வழிபட்டு வருகின்றனர். முத்தாரம்மன் வழிபாடும், பத்திரகாளி வழிபாடும் இங்கு மிகுந்து காணப்படுகின்றன.

## இயக்கி :

இயக்கியைப் பெண் தெய்வமாகவும், பேய்த் தெய்வமாகவும் சுட்ட முடியும்.

"ஆலமரத்து இசக்கியைக் குறித்து மக்களிடம் அச்சமூட்டும் கதைகள் பல இடம் பெறுவதால் அத்தெய்வத்திடம் பணிவுடன் நடந்து கொள்கின்றனர்"[28]

எனக் கஸ்தூரி ஜான்சன் குறிப்பிடுகிறார்.

இசக்கி எனும் பேய்த்தெய்வம் பற்றிய பயங்கர புனைவும் நாவலில் உள்ளது. அய்யாவு நாடான் எனும் மந்திரவாதி மண்ணைக் குதிரையாக்கி, ஊரைச் சுற்றி வரும் வேளையில் ஒரு இசக்கி இவரை வழி மறிக்கிறாள். அவர் தன் மந்திர வலிமையால் இசக்கியைக் கட்டி, அவளது உச்சந்தலையில் ஆணி அடித்து வீட்டுக்கு இழுத்து வருகிறார். சோறு ஆக்குதல், பதநீர் காய்த்தல், வீட்டு வேலை செய்தல் ஆகிய பொறுப்புகளை இசக்கிக்குக் கொடுக்கிறார். அவளை இசக்கி எனத் தன் மனைவியிடம் அறிமுகப்படுத்தாமல் வேலைக்காரி என்றே அறிமுகப்படுத்துகிறார். அவளது தலையில் எண்ணெய் வைக்கக் கூடாது என்னும், தலைசீவ சீப்புக் கொடுக்கக் கூடாது என்றும் மனைவியிடம் எச்சரிக்கிறார். ஒருநாள் இசக்கி தனது தலையில் கிடக்கும் பேனையும் ஈரையும் எடுத்து விடச் சொல்லுகிறாள். அய்யாவு நாடாரின் மனைவி, கணவரின் கட்டளையை மறந்து இசக்கிக்கு உதவுகிறாள். இசக்கி என உணராமல் அவளது தலையில் எண்ணெய் தேய்க்கிறாள். தலையில் ஆணி தட்டுப்படவே, ஆணியைப்பிடுங்கி எடுக்கிறாள். மந்திரக் கட்டுக்குள் ஆணியடிக்கப் பட்டிருந்த இசக்கி ஆகாயத்துக்கும் பூமிக்குமாக வளர்ந்து நிற்கிறாள். மந்திரவாதி மனைவியின் குடலை உருவி மாலையாகப்

போடுகிறாள். வயிற்றுப் பிள்ளையைக் கடித்து மூன்றுமுறை குலவை இடுகிறாள். மந்திரவாதியைப் பார்த்ததும் ஆகாயத்தில் பாய்ந்து மறைந்துவிடுகிறாள்.[29]

இயக்கி, எசக்கி, ஏக்கி என்ற பெயர்களில் அழைக்கப்படும் இசக்கி பற்றிய பயங்கர கதைகள் நாட்டுப்புறங்களில் மிகுந்து கிடப்பதற்கான சான்றாக இக்கதையைக் கொள்ளலாம்.

குமரி மாவட்டத்தில் பல கிராமங்களில் இயக்கிக்குக் கோயில்கள் உள்ளன. ஆசிரியர் இயக்கி அம்மையின் வடிவம் பற்றிய உரையாடலை இரண்டு கதாப்பாத்திரங்கள் வழியாக நிகழ்த்துகிறார். இயக்கி பேரழகுடையவளாக இருந்தும் அவளது அழகைச் சிற்பிகள் வடிக்காமல் பயங்கரமானவளாகக் காட்டுவதன் பொருளை இவ்வுரையாடல் வெளிக் கொணர்கிறது.

> "இதுஎன்ன? எல்லா இசக்கியம்மனையும் இப்படி நீண்ட பல்லும், துருத்திய முலையும், இடுப்பில் குழந்தையும், கையில் கட்டாரியுமாச் செய்திருக்கான் சிற்பி "முகஞ்சுளிக்கிறான் சேது
>
> "உண்மைதான், "வருத்தத்தோடு ஒப்புக் கொள்கிறார் வெங்கடேசன்." இயக்கி பேரழகி. அந்த அழகை யாரும் சிலையில் வடிக்கல்ல. பழி தீக்கிற நேரம் அவ எடுத்த கொடூர வடிவத்தத்தான் சிலையாக்குறானுக. இயக்கி என்கிற அழகியோட உருவத்தச் செய்ய சிற்பிகளும் பக்தர்களும் முன்வரணும். முயற்சிச்சா நடக்கும."[30]

என இயக்கி பற்றிய புதிய பிம்பத்தை ஆசிரியர் கண்ணெதிரே நிறுத்துகிறார்.

இசக்கியம்மனுக்கு வெள்ளிக்கிழமைதோறும் விளக்குப்போடும் வழக்கம் குமரி மாவட்டத்திலுள்ளது. இசக்கியம்மனைப் பேச்சுவழக்கில் ஏக்கியம்மை என்று அழைப்பதையும் இங்குக் காணமுடிகிறது[31]

## காளி :

ஆண் உறவின்றி கன்னியாக மக்களைப் பெற்றவளைத் தாய்த் தெய்வமாக வழிபடும் மரபு தமிழகத்தில் உள்ளது. இரா. சீனிவாசன் ஏழு கன்னித் தெய்வங்களில் ஒன்றாகக் காளியைக் குறிப்பிடுகிறார்.

பிராமி, மகேசுவரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி முதலியோரை அவர் கன்னித்தெய்வங்கள் என்கிறார்.[32]

நாவலில் பொன்னம்பலம் எனும் கதாப்பாத்திரம் சரஸ்வதி பூசைக்கு மாற்றாகக் காளி பூசை நடத்துகின்றார். அவர் வேலைபார்த்த அலுவலகத்தில் அதிகாரியும் அவரைச் சார்ந்தவர்களும் கூடி சரஸ்வதி படத்துக்கு மாலை போட்டு, சுண்டல் படைத்து மிருதங்கம் தட்டிப் பாட்டுப் பாடுகின்றனர். மறு அறையில்

பொன்னம்பலமும் அவரது நண்பர்களும் கூடிக் காளி பூஜை நடத்துகின்றார்கள். கள்ளும் சுட்டகருவாடும் வைத்து உடுக்கடித்து ஆடத் தொடங்குகின்றனர்"[33]
காளி பூசையில் இருக்கும் நாட்டார் தன்மையை இப்பகுதி எடுத்துக் காட்டுகிறது.

## முத்தாரம்மன்:

தமிழகத்தில் பல்வேறு அம்மன்கள் வழிபடப்படுகின்றன. முத்தாரம்மன் மாரியம்மன், காளியம்மன், பத்திரகாளியம்மன், இசக்கியம்மன் போன்றவை அம்மன்கள் என்ற வகையுள் அடங்கும்.[34]

இவற்றில் முத்தாரம்மனின் பிறப்புக் குறித்து தே.லூர்து சுட்டுகிறார். அவர்,

"வேள்வித்தீயில் பார்வதியின் வியர்வைத் துளிவழித் தோன்றியவள் முத்தாரம்மன்"[35]

என்கிறார்.

மறுபக்கம் நாவலில் முத்தாரம்மன் வழிபாடு பற்றிப் பேசப்படுகிறது. "காலங்காலமா நம்மளக் காத்து ரச்சிக்கிற முத்தாரம்மனும்"[36] என்பதில் முத்தாரம்மன் எனும் நாட்டார் தெய்வம் புகழப்படுகிறது.

முத்தாரம்மன் வழிபாட்டை நாட்டார் மரபில் வந்த பெண்தெய்வ வழிபாடு எனக் கொள்ளாமல் அதனைப் புறந்தள்ளும் போக்கும் இம்மாவட்டத்தில் காணப்படுகிறது. மேலைநாட்டு கிறித்தவ இறைத்தொண்டர்களும், வைகுண்டரும் முத்தாரம்மனைப் பேய்த்தெய்வமாகக் கருதினர். நாவல் இதனை எதிர்க்கிறது.
சின்ன நீலனின் மனக்கருத்து இதனை உறுதிசெய்கிறது.

"தலைமுறை தலைமுறையாக எங்களப் பெத்து வளர்த்துப் பாதுகாத்து வாறாளே, எங்க மூத்த அம்ம முத்தாரம்ம, அவளைப் பேய் என்று எப்பிடி ஒதுக்கித் தள்ளமுடியும்?"[37]

என அவர் தனக்குள் வினவுகிறார்.

## சடங்கு :

மனிதனின் வாழ்க்கை வட்டம் சடங்குகளால் சூழப்பெற்றது. சமயம், சமூகம், காலம், இடம் ஆகியவற்றிற்கேற்ப சடங்குகளின் தன்மைகள் வேறுபடுகின்றன. கல்வி மறுமலர்ச்சியும் நவீனத்துவ எழுச்சியும் ஒருபுறுமிருக்க, அதன் மறுபுறம் மூதாதையர்களின் பண்பாட்டுக் கூறுகள் இருப்பதைக் காணமுடிகிறது. விஞ்ஞானத்தின் வியத்தகு வளர்ச்சி பகுத்தறிவுத் தளத்தில் இயங்கினாலும், கேள்விக்கப்பாற்பட்ட பழமரபின் எச்சங்களும் தொடர்ந்து கொண்டேதான் இருக்கின்றன.

மனித வாழ்க்கைச் சுழற்சியின் நிலை மாற்றங்களைச் சடங்குகளிலிருந்து பிரித்தறிய இயலாத நிலையே தொடர்கிறது.

"உயிரியல் தளத்தைக் காட்டிலும் பண்பாட்டுத் தளத்தில் வாழ்வின் நிலை மாற்றங்கள் மேலும் நுண்மையாக்கம் பெற்றுப் பல்கிப் பெருகி விடுகின்றன. ஒவ்வொரு நிலைமாற்றமும் ஒரு சடங்கு நிகழ்வோடு பண்பாட்டு வயப்படுகின்றது. அல்லது சடங்கு வயப்படுத்தப்படுகின்றது"[38]

என்று பக்தவத்சல பாரதி குறிப்பிடுகிறார்.

"சடங்குகள் சமயத்தின் கருப்பொருளாகக் கருதப்படும் புனிதத் தன்மையின்பால் மக்கள் கொள்ளும் நடத்தைக் கோலங்களின் தொகுப்பாகும்"[39]

என்று பக்தவத்சல பாரதி குறிப்பிடுகிறார்.

சடங்கு என்பது கருத்துத் தளத்திலிருந்து செயல் தளத்துக்கு வரும் தொன்ம இயக்கம் ஆகும். செயல் மற்றும் நிகழ்த்தல் இதில் முக்கியத்துவம் பெறுகின்றன.

"சடங்கின் தன்மைகளுள் முதன்மையான கூறு அது. சிந்தனை வடிவில் நிலை நிறுத்தப்படாமல் செயல்வடிவத்தில் நிகழ்த்தப்படுவதாகும். எனினும் சடங்கின் செயல் (action) தன்மையானது சிந்தனை வடிவின் பின்புலத்தோடு வெளிப்படுவது; நிகழ்த்தப்படுவது"[40]

என்னும் கருத்து மானிடவியல் துறையில் பரவலாக ஏற்கப்பட்டுள்ளது. ரோத்தன் பூலர் எனும் அறிஞர்

"சடங்கென்பது அசட்டைத்தனமற்ற உள்ளார்ந்த அக்கறையுடைய வாழ்வில் குறியீட்டளவில் உந்துதலைப் பெற அல்லது நேரடியாகப் பங்கெடுத்துக் கொள்ள சரியான பொருத்தமான நடத்தை முறைகளுடன் தன்னார்வமாக நிகழ்வதாகும்"[41]

பொதுவாகச் சடங்குகளின் பின்னணியில் தொன்மங்கள் இருக்கின்றன. தொன்மம் சார்ந்து சடங்குகள் வெளிப்படுகின்றன.

"தொன்மமும் அதன் பொருண்மைகளை வெளிப்படுத்தும் நம்பிக்கைகளும் சடங்கு நிகழ்த்துதலில் பின்பற்றப்படும் நடைமுறையை நிர்ணயிக்கின்றன"[42]

எனும் கூற்று தொன்மமும் சடங்கும் இணைந்தியங்கும் பாங்கினை வெளிப்படுத்துகிறது. சடங்குகள் நிகழ்த்துதல், நனவு நிலைத் தன்னார்வம், ஆகியவற்றைச் சார்ந்து இயங்குகிறது. இது பகுத்தறிவு, பொழுதுபோக்கு ஆகிய நோக்கங்களற்று செயற்படுகிறது. கூட்டுத்தன்மையுடன் சமூகம் சார்ந்து சடங்குகள் நிகழ்த்தப்படுகின்றன. சடங்குகளில் குறியீட்டுத்தன்மை முக்கியமானதாக

அமைகிறது. கால சுழற்சிக்கேற்ப திரும்பத் திரும்ப ஒரே ஒழுங்கமைவில் செய்யப்படும் சடங்குகளும் உள்ளன. மறுபக்கம் நாவல் குமரி மாவட்ட நாட்டார் வழிபாட்டிலமைந்த பல்வேறு சடங்குகளை எடுத்துக்காட்டுகிறது.

## காப்பு கட்டுதல் :

திருவிழாவின் தொடக்கத்தில் காப்பு கட்டுதல் எனும் சடங்கு நிகழ்கிறது. கோயிலையும், ஊரையும் புனிதமாக்கும் குறியீட்டு நடவடிக்கையாக அதனைக் கருத முடிகிறது.

> "ஆண்டின் ஏனைய காலத்தில் பொதுவாழ்வின் ஒரு பகுதியாக அனைவரின் நெருக்கத்திற்கும் உட்பட்டிருந்த கோயிலானது திருவிழாவின் போது புனிதம் மிகுந்த தளமாகப் பிரிக்கப்பட்டு அம்மனுக்குக் காப்புக் கட்டப்படுகிறது. காப்பு கட்டியதிலிருந்து கோயிலானது அவ்வூருக்குப் புனிதம் மிக்கத் தளமாகவும், பிற ஊரார்குத் திருவிழா நடைபெறும் ஊர் புனிதமிக்க தளமாகவும் மாற்றப்படுகிறது"[43]

என்பர்.

பலிபீடத்தில் காப்புக் கட்டப்படுவதற்கான காரணத்தை சி.கே ஃபுல்லர் கீழ்க்காணுமாறு குறிப்பிட்டுள்ளார்.

> "பலிபீடங்கள் தாம் கோயிலின் உட்புறமுள்ள தூய்மைப்பரப்பினை வரையறை செய்கின்றன. இந்தப் பலிபீடக்கல்லுக்கு அப்பால் தீட்டு உண்டாக்கும் பொருட்கள் செல்லக் கூடாது"[44]

என்று காப்பு கட்டுதலின் நோக்கத்தைத் தெளிவுபடுத்துகிறார். கோயிலுக்குக் காப்புக் கட்டும் பழக்கம் பற்றி மறுபக்கம் நாவல் சுட்டுகிறது[45]

## நரபலி :

நரபலி என்பது மனிதனையே இறைவனுக்குப் பலியாகக் கொடுப்பது ஆகும். இதற்கு நவகண்டம் கொடுத்தல் என்ற பெயரும் உண்டு.

> "கழுத்தையறுத்துப் புது இரத்தம் கொடுப்பதனை நவகண்டம் கொடுத்தல் என்பர். இதனை நரபலி எனலாம்[46]

என்று லூர்து குறிப்பிடுகிறார்.

பழங்காலத்தில் அடிமைகளை நரபலி கொடுக்கும் வழக்கம் குமரி மாவட்டத்தில் இருந்ததாக நாவல் கூறுகின்றது. குமரி மாவட்டத்திலிருந்த அடிமைச் சந்தையிலிருந்து அடிமைகளை விலைக்கு வாங்குபவர் தனது நோய் குணமாக அவ்வடிமையின் உறுப்புக்களைப் பலியாகச் செலுத்தும் வழக்கம் இங்கிருந்தது அடிமையை வாங்குபவரின் கையில் நோய் என்றால் அடிமையின் கையும், காலில் நோய் என்றால் அடிமையின் காலும், தலையில் நோய் என்றால் அடிமையின் தலையும் பலியாகப் படைக்கப்பட்டுள்ளன.[47]

## உயிர்ப்பலி :

உயிர்களைத் தெய்வத்திற்காகப் பலியிடுவது உயிர்ப்பலியாகும். ஆடு, கோழி, பன்றி எருமை போன்ற விலங்குகளைப் பலியிடுதலை உயிர்ப்பலி என்று லூர்து குறிப்பிடுகிறார்.[48]

அம்மன் வழிபாட்டில் உயிர்ப்பலி ஏற்புடையதாக விளங்கியது. பெரும் பான்மையும் பலியிடுவதில் ஆடுகள் பயன்படுத்தப்பட்டன. ஒரு அருஞ்செயலைச் செய்வதற்கு முன்னர் பலியிடுதல் சடங்கை நிகழ்த்தினால் அச்செயல் வெற்றியாக முடியும் என்ற நம்பிக்கையும் மக்களிடம் இருக்கின்றது.

மீட் அய்யரைக் கொலைசெய்யச் செல்லுவதற்கு முன்னால் அம்மனுக்குப் பலி செலுத்துவதில் ஆர்வம் காட்டும் மனிதர்களை நாவலில் காணமுடிகிறது. கிறித்தவத்தைப் பரப்பும் மீட் அய்யரைக் கொலை செய்யத் திட்டமிடுபவர்களின் உரையாடலில் உயிர்ப்பலி பற்றிய சிந்தனைகள் தெறிக்கின்றன. மீட் அய்யரின் தலையை வெட்டி அம்மனுக்குப் படைத்துப் பூசை செய்யவேண்டும் என அவர்களில் ஒருவர் கருத்துத் தெரிவிக்கிறார். மீட் அய்யரைக் கொலை செய்வதற்கு முன்னால் அம்மனை வழிபடுவது முறையானது என மற்றொருவர் தன் கருத்தை வெளிப்படுத்துகிறார். இதனை அனைவரும் ஆமோதிக்கின்றனர். தீவட்டிகள் வழிகாட்ட வாளேந்திய அவ்வீரர்கள் காட்டுப் பாதையில் மண்டைக் காட்டம்மன் கோயிலுக்குச் செல்லுகின்றனர். அவர்கள் தங்கள் ஆயுதங்களை அம்மன் வடிவப் புற்றின் முன்னே வரிசையாகக் கிடத்துகின்றனர். தங்களது செயல் திட்டத்துக்கு அருள் புரியும்படி அம்மனை வேண்டுகின்றனர். அதன் பின்னர் ஆடு ஒன்று உயிர்ப்பலியாக்கப்படுகிறது.

> "கொண்டு வந்திருந்த கருப்பு ஆட்டுக்குட்டியின் கழுத்தை அறுத்து, வாள்கள் மேலே உதிரம் தெளித்து, அம்மனை வணங்கித் திலகமிட்டு, நம்பிக்கையோடு, தங்கள் தங்கள் ஆயுதங்களைக் கையில் எடுத்தார்கள் வீரர்கள்"[49]

என்பதில் ஆட்டின் இரத்தத்தை ஆயுதங்களில் தெளிக்கும் சடங்கு பற்றிய செய்தியை அறியமுடிகிறது.

அம்மன் கொண்டாடியார் ஒரு கருஞ்சேவலைப்பிடித்து நோயுற்றுவர்களின் தலையைச் சுற்றி வடக்கு இடுவைக்குக் கொண்டுபோய் சேவலின் தலையைத் திருகி வீசினால் நோய் குணமாகும் என்ற நம்பிக்கையும் இங்கு உள்ளது[50]

## பதிலிப்பலி :

நாகரிக வளர்ச்சி, பண்பட்ட கடவுட் கொள்கைகளின் வரவு, அகிம்சைக் கொள்கைகளின் தாக்கம் ஆகியவற்றால் உயிர்ப்பலியைத் தவிர்க்கும் உணர்வு சமூகத்தில் தோன்றியது. அப்போது உயிர்களுக்கான இடத்தில் காய்கறிகளை இட்டு நிரப்பும் பழக்கம் உருவாயிற்று. தலையை இறைவனுக்குக் கொடுப்பதற்கான குறியீடாகத் தேங்காய் உடைத்தல் அமைந்தது. மாவிளக்குகள் கூடத் தலைகளுக்குப் பதிலிகளாகவே தோன்றுகின்றன.

> "சில இடங்களில் உயிர்ப்பலி இட்டமைக்குப் பதிலாக ஏதேனும் ஒரு விலங்கின் உருவாரங்களைச் செய்து வைப்பதனைப் பதிலிப்பலி"[51]

என்று கொள்ள முடிகிறது.

நோய் ஏற்பட்ட உறுப்பின் வடிவைச் செய்து தெய்வத்துக்குப் படைப்பதால் அவ்வுறுப்பிலுள்ள நோய் நீங்கும் என்ற நம்பிக்கை கிராமங்களிலுள்ளது.

> "உருவம் செய்து வைக்கின்ற முறை தீமையை மாற்றுவிக்கும் முறையுடன் தொடர்புடையதாக இருக்க வேண்டும். நோய் ஏற்பட்டிருக்கின்ற உறுப்பு போன்றே மற்றொரு உறுப்பினைச் செய்து வைப்பதின் வாயிலாக அந்நோயை அந்த உறுப்பிற்கு மாற்ற முடியும் என நம்புகின்றனர்"[52]

என முத்துராஜன் கூறுகின்றார்.

மண்டைக் காட்டம்மன் கோயிலுக்கு வரும் பக்தர்கள் நோய் குணமாக மரக்கட்டையாலான உடல் உறுப்புகளைக் காணிக்கை போடுவது பற்றியும் நாவல் குறிப்பிடுகின்றது. மண்டைக்காட்டம்மன் கோயிலுக்கு வெளியில் விற்கப்படும் மரக்கட்டையாலும் வெள்ளியாலும் செய்து வைக்கப்பட்ட உடல் உறுப்புகளை வாங்கிப் பக்தர்கள் அம்மனுக்குக் காணிக்கையாகப் படைப்பார்கள். கை, கால், தலை, கண், உடல் போன்ற மனித உடல் பாகங்கள் அங்கு செய்து வைக்கப்பட்டிருக்கும். உடலில் எந்த உறுப்பில் நோய் உள்ளதோ. அந்த உறுப்பின் வடிவைக் கடையில் வாங்கிக் காணிக்கையாகச் செலுத்தினால் நோய் குணமாகும் என்பது பக்தர்களின் நம்பிக்கையாக உள்ளது.[53]

பதிலிப்பலியில் தாவரங்களுக்கான இடம் மிக முக்கியமானது.

"உயிர்ப்பலியைக் கொண்டிருந்த வேதகாலச் சமயமானது, பின்னாளில் இந்து சமயமாக உருவெடுத்தபோது தாவரப்படையலைக் காலப்போக்கில் முதன்மைப்படுத்திக் கொண்டது"[54]

என்று பக்தவத்சல பாரதி குறிப்பிடுகின்றார். பூசணி உடைத்தல், எலுமிச்சம் பழம் பிழிதல், அரிசிப்படையல் போன்றவை உயிர்ப்பலியின் பதிலியாக ஆக்கப்பட்டுள்ளன. நாட்டார் சமய மரபிலும் தாவரப்படையல் பிற்காலத்தில் இடம் பெற்று விட்டது.

மனிதனைப் பலியிடுதல், விலங்குகளைப் பலியிடுதல் என்ற நிலை மாறி நாகரிக கால வழிபாட்டுச் சடங்குகளில் கும்பிளங்காயை வெட்டும் முறை உருவாகியிருப்பதனை நாவல் எடுத்துக் காட்டுகிறது.

"ஒரு கும்பிளங்காய்க்கு மஞ்சளுஞ் சுண்ணாம்புந் தடவி, பலிபீடத்தில வைப்பாவ. உள்ளே நிக்கிற பூசாரி அரிவாளத் தூக்கி வெளியே எறிவாரு அதப்பிடிச்சி, இங்க நிற்கிற சிவப்புத் துணி உடுத்த தடிச்ச ஆளு கும்பிளங்காய ரெண்டா வெட்டுவாரு"[55]

என்பதில் கும்பிளங்காய் வெட்டும் சடங்கு விவரிக்கப்படுகிறது.

**திருவிளக்கு வழிபாடு :**

அம்மன் கோயில் வழிபாட்டு முறைகளில் ஒன்றாகத் திருவிளக்குப் பூசை திகழ்கிறது. இதில் பெண்களின் பங்களிப்பு முக்கியமானதாக அமைகிறது. நாவலில் திருவிளக்குப் பூசை காட்டப்படுகிறது. பூசி மினுக்கின பித்தளை தட்டுகளில் பித்தளை விளக்கு, கிண்ணத்தில் எண்ணெய், வெற்றிலை, பாக்கு, பழம், பூ எல்லாவற்றையும் இரண்டு கைகளிலும் தாங்கியபடி பெண்கள் மண்டபத்துக்குள் நுழைகிறார்கள். கோயிலில் இரவு எட்டுமணிக்குத் திருவிளக்குப் பூசை தொடங்குகிறது. கருவறை வாசலுக்கு நேரே நெடுக இடம்விட்டு, எதிரெதிராகவும், வரிசையாகவும் பெண்கள் உட்காருகிறார்கள். தங்கள் தங்கள் விளக்குகளில் எண்ணெய் விட்டு, திரிகள் போட்டு, தட்டில் உள்ள வழிபாட்டுப் பொருட்களை ஒழுங்காக அடுக்கி அவர்கள் பூசைக்குத் தயாராகிறார்கள். நூற்றியெட்டுப் பெண்கள் நூற்றியெட்டுத் திருவிளக்குகளை அமைக்கின்றனர். வட மொழியில் இறைவனைப் புகழும் புகழ்மொழிகளை ஒருபெண் தொடங்கிவிட, மற்றப் பெண்கள் திருப்பிச் சொல்லுகிறார்கள்.

இடுப்பில் ஈரத்துண்டு கட்டிய பூசாரி திரையை விலக்கும்போது முத்தாரம்மன் ஒளிவீசுகிறாள். ஒருபெண் தன் திருவிளக்கைப் பூசாரியிடம் கொடுக்க, அம்மன் முன்னால் எரிந்து கொண்டிருக்கும் விளக்கில் அதைப் பொருத்தி அப்பெண்ணிடம்

அவர் திருப்பிக் கொடுக்கிறார். அப்பெண் அச்சுடரால் வரிசையாக இருக்கிற எல்லா விளக்குகளிலும் சுடரேற்றுகிறாள். ‘ஓம் ஒளிர் வளர்விளக்கே போற்றி’ எனும் பாடலைப் பெண்கள் பாடுகின்றனர். இவ்வழிபாட்டு முறையில் வைதீகம் நுழைந்தாலும், நாட்டுப்புறப் பெண்களின் வழிபாட்டு முறையாக இதனைக் கருத முடிகிறது. திருவிளக்குப் பூசையில் ஆன்மீகமும் அழகும் ஒன்றிணைவதாகப் பொன்னீலன் கருதுகிறார்.

> "கோயிலுக்குள்ளே சரஸ்வதிகளையும், லெட்சுமிகளையும் போல பெண்கள் வரிசையாக உட்கார்ந்திருக்கிறார்கள். ஒவ்வொருவர் முன்னாலும் தங்கமாய் மினுங்கும் குத்துவிளக்கு. ஒவ்வொரு விளக்கிலும் 5 சுடர்கள். விளக்கின் முன்னால் வாழை இலையில் வெற்றிலை, பாக்கு, குங்குமம், பழம் இவைகளோடு ஒரு குவியல் உதிரிப் பூவையும் வைத்து, ஓம். . . ஓம். . . ஓம் என 108 தேன் குரல்கள் கிலுங்க, ஒலிபெருக்கி வழியாகப் பக்தி வெள்ளம் ஊரின் மூலை முடுக்குகளிலெல்லாம் பெருக்கெடுத்து ஓடுகிறது"[56]

என்று அவர் குறிப்பிடுகிறார்.

## இருமுடி கட்டுதல் :

இருமுடி கட்டி பக்தியாக வந்து தெய்வத்தை வழிபடும் மரபும் உள்ளது. மண்டைக்காட்டம்மனை வழிபடக் கொல்லம் பகுதியிருந்து வரும் ஒடுக்கப்பட்ட மக்கள், குருசாமி தலைமையில், இருமுடிகட்டி, சரணம் சொல்லி வருவார்கள். அவர்கள் அனைவரும் வெள்ளைக் கொடி ஒன்றைக் கையில் வைத்திருப்பார்கள்.

> "சரணந்தா தேவி
> சரணந்தா தேவி - பொன்னமே
> சரணந்தா தேவி
> சரணம் தா தேவி பகவதியே"[57]

எனும் சரணம் சொல்லி அவர்கள் மண்டைக் காட்டம்மனை வழிபட வருவார்கள்.

## ஒடுக்குப் பூசை :

மண்டைக்காட்டம்மன் கோயிலில் ‘ஒடுக்குப் பூசை’ என்ற வழிபாடு நடைபெறுவதுண்டு. அம்மன் கொடையின் இறுதிநாளில் இவ்ஒடுக்கு பூசை நடைபெறுகிறது. நள்ளிரவு ஒரு மணியளவில் ஒடுக்குப் பூசை நடைபெறும். அது ஒரு சாவுச் சடங்கைப் போல் நிகழ்த்தப்படுகிறது.

"பூசைக்கி உண்டான சோறு, கறியெல்லாம் பக்கத்துப் பள்ளிக் கூடத்தில சமைப்பாவ, அதுக்கு ஒடுக்குச் சோறுன்னு பேரு. அதுகள ஏழு பனையோலைக் கடவங்கள்ல வச்சிருப்பாவ. அதுக்குன்னு விரதம் இருந்த ஏழு பேர் தலையில ஏழு பனையோலைக் கடவங்களையும் ஏத்தி, ஒரே வெள்ளைத் துணியால ஏழு கடவங்களையும் சேர்த்து மூடி, கொண்டு வருவாவ. யாரும் சட்டை போட்டிருக்க மாட்டாவ. வாய்கள வெள்ளைத் துணியால கட்டியிருப்பாவ. தலைக்கு மேல வெள்ளப் பாவாட விரிச்சிப் பிடிச்சிருப்பாவ. பாத்தா செத்துப்போன உடம்பக் கொண்டு வாறது மாதிரி இருக்கும். பாதை முழுதும் மாத்து விரிப்பாவ. ஒரு முரசு டங், டங் டங்னு ஒத்த அடி அடிச்சிட்டே வரும். முன்னால ஒருத்தர் தீ வட்டி பிடிச்சிக்கிட்டுப் போவாரு. சாத்தாங் கோயில்ல இருந்து அந்த ஊர்வலம் புறப்படும். அந்த நேரத்தில வேற எந்தச் சத்தமும் இருக்காது. ஒரு வித பயம் நம் மனசில கவியும். பொம்பளைக, சின்னப்பிள்ளைக யாரும் அந்த நேரம் அந்தப் பக்கம் வரமாட்டாவ. இங்கே கோயிலச் சுத்தி வந்து; அத இறக்குவாவ. உடனே ஒரு பறையை ஒருத்தர் ரெண்டு தட்டு தட்டுவார். கடைசியில ஒரு கும்பிளங்காய்க்கு மஞ்சளுஞ் சுண்ணாம்புந் தடவி, பலி பீடத்தில் வைப்பாவ. உள்ளே நிற்கிற பூசாரி அரிவாளத் தூக்கி வெளியே எறிவாரு. அதப்பிடிச்சி இங்க நிற்கிற சிவப்புத்துணி உடுத்த தடிச்ச ஆளு கும்பிளங்காயை ரெண்டா வெட்டுவாரு. நாலு சுவர்லையும் ரெத்தத் துளி தெறிக்கும். அதோட அந்த நிகழ்ச்சி முடியிது. பார்க்க, நம்ம கிராமப்புறங்கள்ல நடக்கிற சாவுச் சடங்குகள் போல இருக்கும்."[58]

என்பதில் ஒடுக்குப் பூசை நடைபெறும் விதம் விவரிக்கப்பட்டுள்ளது.

**படையல் :**

நாட்டார் வழிபாட்டு மரபில் படையல் முக்கிய இடம்பிடிக்கிறது. தெய்வங்கள் மனிதன் படைப்பதை எடுத்து உண்ணாவிடினும், தெய்வங்களுக்குப் படைப்பதனை மக்கள் நம்பிக்கையோடு செய்து வருகின்றனர். மண்டைக்காட்டம்மனுக்கு மண்டையப்பம் எனும் உணவு படைக்கப்படுகிறது.

"இங்க அம்மனுக்குப் படைக்கிற முக்கியமான பண்டம் மண்டையப்பம் அப்பம் பெரிசா இருக்கிறதினால அந்த பெயர்னு எடுத்துக்கிடாதிய. அந்த அப்பத்தில கண்ணு, மூக்கு, வாயி எல்லாம் வச்சிருப்பாங்க"[59]

என மண்டையப்பப் படையல் பற்றி விளக்கப்படுகிறது.

முத்தாரம்மைக்கு மாலை போட்டு, வெற்றிலை, பாக்கு ஆகியவை படைக்கப்படுகின்றன. சாம்பிராணிப் புகையும் காட்டப்படுகிறது.

முத்தாரம்மைக்கும், இசக்கியம்மைக்கும் கோழி, கடா ஆசியவற்றைச் சமைத்த பின் செவ்வாய் மற்றும் வெள்ளிக் கிழமைகளில் படைக்கும் வழக்கம் இங்குள்ளது.[60]

தெய்வங்களுக்குக் கள்ளைப் படைக்கும் முறை தமிழகத்தில் பழங்காலந்தொட்டு இருந்து வருகிறது.

"தெய்வத்திற்குக் கள் படைத்து வழிபடும் முறை பண்டைக் காலத்திலேயே இருந்துள்ளது. அன்று தூய்மையான முறையில் சேகரிக்கப்பட்டு, பதப்படுத்தப்பட்ட கள்ளை மட்டுமே தெய்வத்திற்கு வைத்துப் படைத்தனர்"[61]

என்பதனை அறியமுடிகிறது.

அகநானூறு தெய்வத்திற்குக் கள்ளையும். வெள்ளாட்டுக் கிடாவினையும் காணிக்கைப் பொருளாகத் தந்து வழிபட்டதைக் குறிப்பிடுகிறது.

"கள்ளும் கண்ணியும் கையுறையாக
நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்
நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஒச்சி"[62]

என அகநானூறு குறிப்பிடுகிறது.

பதநீரைப் பிள்ளையாருக்குப் படைப்பது பற்றிய செய்தியையும் நாவலில் காண முடிகிறது. நாராயணப் பெருமாள் என்பவர் ஒரு பிள்ளையார் கோவிலை நிலைப்படுத்தியபொழுது, அவ்விடத்திற்கு முன்னால் பனை நிற்பது பொருத்த முடையதல்ல எனக் கருதப்பட்டது. பத்திரகாளி தந்த காமதேனு ஆகிய பனைமரத்தை வெட்டக் கூடாது என ஊரார் கூறிய நிலையில், அப்பனையிலிருந்து வரும் பதநீரைத் தினமும் பட்டையில் வைத்துப் பிள்ளையாருக்குப் படைக்கின்றனர். பிள்ளையாரும் அதனை அமுதமாகக் குடித்து வருகிறார்.[63] நாட்டார் பண்பாட்டில் அவர்களது உணவு வகைகளே இறைவனுக்குரிய படையல் பொருள்களாவதை இது மெய்ப்பிக்கிறது.

## கிடாய் வெட்டு :

அம்மன் கொடையின் முக்கிய நிகழ்வாகக் கிடாய்வெட்டு அமைகிறது. வியாழக்கிழமை அம்மனை வாகனத்தில் வைத்து ஊரைச் சுற்றி இறக்கிய பிறகு கிடாய்வெட்டு நிகழ்ச்சி நடைபெறும். இந்நிகழ்ச்சியைப் பொன்னீலன் தெளிவுபட விவரிக்கிறார்.

"சந்தனம் பூசி மாலை போட்டு சாம்பிராணிப் புகை காட்டி கருங்கிடாய்கள் சொள்ளமாட சாமி முன்ன வரிசையாக வரும். குடிமகன் கையில ரெண்டரை முழ நீளத்தில பளபளக்கும் ஒரு வெட்டருவா. ஆட்டை ஒருத்தன் பிடித்துக் கொள்ள, மறுபக்கம் ஒருத்தன் துளிரான மா இலையை நீட்ட அதைத் தின்னுவதற்காக நீளும். அதன் கழுத்தில தலையை ஒட்டி ஒரு வெட்டு விழும். ரத்தம் பீறிட, கால்கள் உதற, முண்டம் அங்கும் இங்கும் புரளும். சில வேளைகளில் துண்டுபடாத தலையுடன் ஓடுற ஆடுகள் கோயிலைச் சுற்றி ரெத்தம் தெளிக்கும். அதிகாலை 5 மணிக்கெல்லாம் அம்மன் கோயில் வளாகம் ரெத்தச் சேற்றில் புரளும். முண்டங்களும் விழி பிதுங்கிய தலைகளுமாக கோயில் ஒரு படுகளமாய்க்கிடக்கும். ஒவ்வொருவரும் தம்தம் முண்டங்களைத் தூக்கிக் கொண்டு ஒதுக்குப் புறத்துக்கு நகருவார்கள். ரெத்த வாடை ஒரு மாதம் கோயில் பக்கமே ஆளுகள நெருங்க விடாது"[64]

எனக் கிடாய்வெட்டு நிகழ்ச்சி விவரிக்கப்படுகிறது.

அம்மன் வாகனம் ஊர்சுற்றி வந்து, கிழக்கு வாசலில் இறக்கி வைக்கப்பட்டபின் கிடாய் வெட்டு நிகழுகிறது. அதற்கு முன்னர் வேட்டுக்களும் விடப்படுகின்றன. சுடலைமாடசாமி முன்னால் கருங்கிடாய்கள் நிறுத்தப்படுகின்றன. அவற்றின் கழுத்தில் மாலைகள் போடப்படுகின்றன. அவற்றின் தலைகளில் சந்தனப்பொட்டு இடப்படுகின்றது. கிடாயானது சுடலை மாடசாமிக்கு முன்னால் நிறுத்தப்படுகிறது. ஆசாரி கிடாய்க்குச் சாம்பிராணிப் புகை காட்டி, முகத்தில் தண்ணீர் அடிக்கிறான். அதன் பின்னர் கிடாயின் கழுத்து வெட்டப்படுகிறது. [65]

## சொக்கப்பனை :

சொக்கப்பனை மரம் தயாரிப்பது பற்றிய குறிப்புகள் நாவலில் காணப்படுகின்றன.

"திருக்கார்த்திகையை ஊர் சிறப்பாகக் கொண்டாடியது. ஒரு மாதமாகவே இளைஞர்கள் பொரிஞ்சான் புல்பிடுங்கி உலர வைத்து, முற்றங்களில் குவிக்கத் தொடங்கி விட்டார்கள். காடெல்லாம் அலைந்து உயரமான கத்தாளம் பூக்களைத் தண்டுகளோடு வெட்டி வந்து உலரவைத்துச் சொக்கப்பனை மரம் தயார் செய்தார்கள்"[66]

என்று நாவல் குறிப்பிடுகிறது.

கற்றாழைத் தடிகளின் குறுக்கும் நெடுக்குமாகக் குச்சிகள் கட்டிக் கை கால் அமைத்து, பொரிஞ்சான் புல்லை மனித வடிவில் செய்து, சொக்கப்பனையை உண்டாக்குவார்கள். அதனுள்ளே வெடிகளை வைத்துக் கட்டுவார்கள். சொக்கப்பனையைக் கொளுத்தும் நிகழ்வு மாலையில் நடைபெறும். அம்மன் கோயிலில் உயரமான மூங்கிலில் பனை ஓலைகள் கட்டி, சொக்கப் பனையை நட்டு வைப்பார்கள். அம்மனுக்குச் சிறப்புப்பூசை முடிந்தபின் சொக்கப்பனை கொளுத்தப்படுகிறது. கோயிலில் மட்டுமின்றி வீட்டு முற்றங்களிலும் வேறுவேறு சொக்கப்பனை செய்து கொளுத்துவார்கள்.[67]

பத்திரகாளியம்மை கோவிலில் திருக்கார்த்திகை அன்று பச்சைப்பனை வெட்டி, சொக்கப்பனை கொளுத்தும் வழக்கம் உள்ளதை இந்நாவல் வழியாக அறிய முடிகிறது.[68]

## நாட்டார் வழிபாட்டு மரபுகள்

நாட்டார் வழிபாட்டு மரபுகளான காணிக்கைப்போடுதல் , தீ மிதித்தல், தீச் சட்டி ஏந்துதல், அக்கினிக்காவடி எடுத்தல், முத்துச்சொரிதல், கோமாதாபூசை, பனைமரப் பூசை, சாமியாட்டம் ஆகியவை இங்கு ஆராயப்படுகின்றன.

## காணிக்கைப் போடுதல் :

தன்னிடமுள்ள பொருளின் ஒரு பகுதியைத் தெய்வத்துக்குக் காணிக்கையாகப் போடும் வழக்கம் பல சமயங்களிலும் உள்ளது. நாட்டார் தெய்வங்களுக்கும் மக்கள் காணிக்கை போடும் வழக்கத்தைப் பின்பற்றுகின்றனர். மண்டைக்காட்டில் மண்டைக்காட்டம்மை இந்துக்களின் வழிபடு தெய்வமாக இருக்கிறார். மண்டைக்காட்டம்மையின் தங்கையான கண்ணம்மாவுக்கும் இதே ஊரில் கோயில் உள்ளது. இங்குள்ள கத்தோலிக்கக் கிறித்தவர்களின் மாதாகோயிலே கண்ணம்மாவுக்கான கோயிலாகும். இந்து சமயமும், கிறித்தவ சமயமும் ஒன்றிணையும் புள்ளியை இந்நாட்டுப்புற வழிபாட்டு மரபு உருவாக்கியுள்ளது.

> "மாதா கோயில் திறந்தே இருக்கிறது. நாலு பேரும் உள்ளே போகிறார்கள். "இதுதான் கண்ணம்மா" விளக்குகிறான் ஜார்ஜ் "மண்டக் காட்டம்மைக்குத் தங்கச்சி இவ மண்டைக்காட்டுக்கு வாற சனங்க எல்லாருமே அந்த அக்காளுக்குப் போலவே இந்தத் தங்கச்சிக்கும் காணிக்கை போட்டுக் கும்பிடுவாங்க. ரெண்டுமே கடப்புறச் சனங்களோட அம்மமாருதான். இன்னா பாருங்க... கடல் குளிச்சிக்கிட்டு வாறவியள, இவிய

கண்ணம்மாவுக்குக் காணிக்கை போட்டு கும்பிட்டுகிட்டுத்தான் மண்டைக்காட்டம்மைகிட்டே போவாங்க"[69]

என்பதில் சமய ஒன்றிணைவும் காணிக்கைப் போடும் வழிபாட்டு மரபும் குறிக்கப்படுகின்றன.

## தீமித்தல் :

மனிதன் இறைவனோடு ஒன்றிணைவதற்காகப் பல்வேறு அதீத செயல்களைப் புரிகின்றனர். நேர்த்திக்கடன், பலி இடுதல், செடல் குத்துதல் போன்றவை தெய்வத்தோடு தம்மை இணைத்துக் கொள்ளும் மனிதச் செயல்பாடுகளாக அமைகின்றன. தீமித்தலும் இவ்வகைப்பட்டதே.

இறைவனுக்காக நெருப்பையும் பொருட்படுத்தாத உணர்ச்சிமிக்க வழிபாட்டு முறையே பூக்குழி மிதித்தலாகும். நெருப்பைப் போன்ற பயங்கர ஆபத்திலிருந்து இறைவன் தன்னைக் காப்பாற்றுவான் என்ற பக்தியுணர்வு இதில் மேலோங்கி நிற்கிறது. நாவலில் குமாரகோவில் முன்னால் வெட்டப்பட்ட பூக்குழி பற்றிய செய்தி சொல்லப்படுகிறது. ஆண்டிச் சாமியார் அக்கினிக் காவடி எடுத்த அன்று குமார கோவில் வாசலில் நெடு நீளத்துக்குப் பூக்குழி வெட்டப்படுகிறது. அதில் முழங்கால் அளவுக்கு தீக்கங்குகள் கனன்று கொண்டிருக்கின்றன. எரிந்து தணிந்த தணல் சிவப்பு நிறத்தில் சூடாகக் குவிந்து கிடக்கிறது. ஆண்டிச்சாமியாரும், அவருக்குப் பின்னால் சென்ற பக்தர்களும் பூக்குழி தீயில் இறங்கி மறு கரைக்கு வருகின்றனர் [70]

## தீச்சட்டி ஏந்துதல் :

மறுபக்கம் நாவலில் சாமியைச் சோதிப்பதற்காகத் தீச்சட்டி ஏந்தச் சொல்லும் நிகழ்வு இடம் பெறுகிறது. சின்ன நீலனிடம் பொறாமை கொண்டவர்கள் அம்மன் கொடை உச்சிப் பூசை வேளை தீச்சட்டியை ஏந்தச் சொல்லுகிறார்கள். அவர்கள் தீச்சட்டியில் சிரட்டைக் கரி நெருப்பு வளர்த்து அம்மன் முன்னால் வைத்து விட்டார்கள். மஞ்சள் பானை குளிக்கத் தென்னம் பூவும் கையுமாகக் கோவிலினுள்ளிருந்து வெளியே வந்த சின்ன நீலனிடம் தீச்சட்டியைத் தூக்கி ஆடினால்தான் உண்மையான சாமி என்று கூறுகிறார்கள். சின்ன நீலன் இரண்டு கைகளாலும் தீச்சட்டியைத் தூக்கி மேளக்காரர்கள் பின் தொடர கோயிலை மூன்று சுற்று சுற்றி, அம்மன் முன் இறக்கி வைக்கிறார்.[71]

## அக்கினிக்காவடி எடுத்தல் :

நாட்டுப்புற வழிபாட்டு மரபு என்பது துணிவைத் துணையாகக் கொண்டது. இறைவனுக்காக உடல் வருத்தங்களைப் பொருட்படுத்தாதது. அத்தகு தீவிரத்தன்மை மிக்க வழிபாட்டு முறைகளில் ஒன்றாக அக்கினிக் காவடி எடுத்தலைக் குறிப்பிட முடியும். நாவலில் ஆண்டிச்சாமியார் என்பவர் அக்கினிக் காவடி எடுக்கிறார். தைப்பூசத்துக்கு அக்கினிக் காவடி எடுக்கப்படுகிறது. அவர் அக்கினிக் காவடி கட்டி குமார கோவிலுக்குச் செல்கின்றார். கனவில் தோன்றிய முருகனின் ஆணைப்படி அவர் அதனைச் செய்கிறார். அதற்காக அவர் நோன்பிருந்து தன்னைத் தயார் செய்து கொள்ளுகிறார். நாற்பத்தோராவது நாள் அதிகாலையில் எழுந்து நீராடி கோடிக் காவியாடை அணிந்து கொள்கிறார். திரிதிரியாகத் தொங்கும் அவரது ஈரச்சடையை உச்சியில் கும்பமாகக் கட்டிக் கொள்ளுகிறார். அவரது சீடர்கள் ஒரு வெண்கலச்சட்டியில் தேங்காய்ச் சிரட்டைகளை எரித்துக் கங்கு உண்டாக்குகிறார்கள். சட்டி நெருப்பாய்ப்பழுத்துச் சிவந்து போகிறது. சட்டியின் இருபக்கமும் இருந்த வளையங்களில் கோர்க்கப்பட்டிருந்த சங்கிலிகளின் நுனியில் கூர்மையான இரண்டு கொக்கிகள் இருந்தன. ஆண்டிச்சாமியார் இரண்டு கொக்கிகளையும் தன் இடுப்பில் இரண்டு பக்கமும் சதையில் குத்திக் கொள்ளுகிறார். மேளதாளங்கள் முழங்க நெருப்புச் சட்டியை இழுத்துக் கொண்டு நடக்கத் தொடங்குகிறார். ‘அரோகரா’ எனும் சத்தத்தை எழுப்பியபடி மேளக்காரர்களின் பின்னால் பக்தர்கள் செல்லுகின்றனர். மேளமடித்து ஆடி ஆடிச் செல்லும் மேளக்காரர்களுக்கும், ‘அரோகரா’ என்ற ஒலியெழுப்பும் பக்தர்களுக்கும் இடையில் ஆண்டிச்சாமியார் ஆவேசமாகக் குதித்து ஆடியபடி, தீச்சட்டியை இழுத்துக் கொண்டு நடக்கத் தொடங்குகிறார். குமாரகோயில் வாசலில் வெட்டப்பட்டிருந்த பூக்குழியில் ஆண்டிச்சாமியார் இறங்கி மறுபக்கம் கரையேறுகிறார். இறுதியில் அவர் அக்கினிக் காவடியுடன் கோயிலுக்குள் நுழைகிறார்.[72] உடலில் ஏற்படும் காயங்களையும், இரத்தத்தையும், நெருப்புச் சூட்டையும் இறைவனுக்காகத் தாங்கிக் கொள்ளும் அதீத பக்தி இதில் வெளிப்படுகிறது.

## முத்துச்சொரிதல் :

அம்மன் கொடைகாலத்தில் அம்மனுக்கு முத்துச் சொரிதல் எனும் நிகழ்வு நிகழ்த்தப்படுகிறது. இது, கிடாய்க் கறியும் சோறும் கலந்த உணவை அம்மன்மீது சொரியும் நிகழ்ச்சியாகும்[73]

**கோமாதா பூசை :**

வைதீகத்தின் வரவுக்குப் பின் கிராமங்களில் கோமாதாபூசை போன்ற வழிபாட்டு மரபுகளுக்கு முக்கியத்துவம் ஏற்பட்டது. கோமாதா பூசையில் ஒரு பால்பசு கொண்டு வரப்படும். அப்பசுவை வீட்டுக்குள் கொண்டுவந்து நிறுத்துவர். அப்பசு ஓமகுண்டத்தை மூன்று முறை சுற்றி வருவது அப்பூசையின் முக்கிய நிகழ்வாகும். மறுபக்கம் நாவலில் ராசாமணி வீட்டில் நடைபெறும் கோமாதா பூசையை நாவல் விளக்கமாகச் சொல்லுகிறது.

> "கோமாதா பூசைக்காகப் பால்ப்பசு கொண்டு வரணும். எங்க தம்பி வீட்ல ஒரு பசு கிடந்தது. கருப்பும் வெள்ளையுமாக் கண் கொள்ளாத அழகு. அத அவிழ்த்திட்டு வந்தோம். தம்பீ... பல வீடுகள்ல பார்த்திருக்கேன். பசுவ வீட்டுக்குள்ளே கொண்டு வாறதுக்குள்ளாவே டங்குவார் அறுந்து போகும். கொண்டுவந்தாலும் சனியன் லேசில நீர்விடுமா? நீர்விட்டாலுஞ் சாணி போடுமா? வீட்டுக்காரனத் துடிதுடிக்க வச்சிடும் இந்தப்பசு என்னன்னா தடதடன்னு வீட்டுக்குள்ளே தானா ஏறுது ஏறி!! உம்மம்!" "ஏறி ஓமகுண்டத்த அதுவாகவே மூணு சுத்து சுத்துது. அங்கினயே, அந்த நிமிசமே நீர்விட்டு, அதுக்கு மேலே சாணியும் போட்டுதா. எல்லாரும் திகைச்சுப் போனாவ... அந்தச் சாணியும் நீருந்தெறிச்ச இடந்தான் தம்பி இது. அய்யரே அசந்துட்டாரு, நாடார்வாள் இதுமாதிரி யோகம் என் ஜென்மத்தில இதுவரை நான் பார்த்ததில்லை. இந்த இடத்தை வெள்ளையடிச்சிப் போடாதேங்கோ லட்சுமி தேவி இதிலதான் வாசம் பண்ணுவாள். அப்படியே கண்ணாடிப் போட்டு பாதுகாத்து பூசை பண்ணுங்கோ. லட்சம் பேர்ல ஒருத்தருக்கு வாய்க்கிற அற்புதம் என்கிறார்."[74] மேற்காட்டிய பகுதியில் கோமாதா பூசை வாசகரின் கண்முன் கொண்டு வந்து நிறுத்தப்படுகிறது.

**பனை மரப்பூசை :**

குமரி மாவட்டத்தில் பனைமரப்பூசை என்ற நாட்டார் வழிபாட்டு மரபைக் காணமுடிகிறது. ஆண்டுக்கு ஒருநாள் பனைமரம் பூசை செய்யப்படுகிறது. பனைக்குப் பூசை செய்தால் பனங்காடு நன்றாகப் பலன் தரும் என்ற நம்பிக்கையில் இப்பூசை செய்யப்படுகிறது. பனை மூட்டில் நின்று ஒருவர் மடக்குப்பட்டையில் பழம், வெற்றிலைப்பாக்கு எல்லாவற்றையும் படைப்பார். கிழக்குத் திசை பார்த்துப் பனையில் ஒரு பூமாலையைக் கட்டுவார். பனை மூட்டில் ஒருகலயம் கள் வைக்கப்படும். பூசாரி சேவல் கோழியின் தலையைத் திருகி வெற்றிலை மேல்

வைப்பார். சேவல் துடிப்பு அடங்கியபின் அருகில் நிற்பவர்கள் சேவலின் முடியைப்பின்னி சருகையும், சுள்ளியையும் குவித்துத் தீவளர்த்து, சேவலைச் சுடுவர். வெந்த கோழியை எடுத்துப்பூசாரி இன்னொரு பட்டையில் வைப்பார். தீக்கங்குகளை ஒரு சிரட்டையில் அள்ளி, அதில் சாம்பிராணித் தூளைத் தூவி, பனையையும், படைக்கப்பட்டவற்றையும் மூன்றுமுறை சுற்றி கீழே வைத்துவிட்டுக் கும்பிடுவார். மற்றவர்களும் கும்பிடுவர்[75] இவ்வாறு பனைமரத்துக்குப் பூசை செய்யும் வழக்கம் இங்குள்ளது.

> "மரத்தைத் தான் வணங்கும் தெய்வத்தின் குறியீடாக நினைத்து மக்கள் வழிபட்டு வருகின்றனர்"[76]

என்ற முத்துராஜனின் கருத்து பனைமர வழிபாட்டோடு பொருத்திப் பார்க்கத்தக்கது.

## சாமியாட்டம் :

சிறுதெய்வ வழிபாட்டில் சாமியாட்டம் முக்கியத்துவம் வாய்ந்தது என்பது தொ.பரமசிவன் கருத்தாகும். அவர்,

> "சிறு தெய்வங்களின் முதற்பண்பு அவை பிராமணரால் பூசை செய்யப்பெறாதவை ஆகும். பிராமணப் பூசை இன்மையால் இவை இயல்பாகவே இரத்தப்பலி பெறும் தெய்வங்களாகும். இத்தெய்வங்கள் நாள்தோறும் ஆறுகாலப் பூசை பெறுவதில்லை. முத்தெய்வங்களின் திருவிழாக்களில் 'சாமியாட்டம்' இடம்பெறும்"[77]

என்று குறிப்பிடுகிறார்.

சாமி என்பது மனிதனுக்கு அப்பாலான உணர்வெழுச்சி நிலையாகக் கருதப்படுகிறது.தெய்வீக தளமும் மனிதத் தளமும் தளமாற்றம் பெற்றுத் தொடர்பியல் வலிமை கொள்ளும் புள்ளியாக இது அமைகிறது. சாமியாடுதலின் நிலை பற்றி பக்தவத்சல பாரதி பேசும்போது,

> "சடங்கு வரிசையில் இறுதி நிலையில் யாராவது ஒருவர்மூலம் சாமி வரும். சில திருவிழாக்களில் சாமி சடங்கு முறைப்படி வரவழைக்கப்படும். பூசாரி சாமியிடம் கேட்பார். எல்லாவகையான கேள்விகளுக்கும் பதில் கூறியபின் மலையேறுவதாக அறிவித்தபின் கற்பூரம் கொடுத்துச் சாமியை மலை ஏற்றுதல் நிகழும்"[78]

என்று கூறுகின்றார்.

வழிபடுபவரும், வழிபாட்டுக்குரியவரும் ஒன்றிணையும் நிகழ்வாகச் சாமியாட்டம் அமைகிறது.

"தெய்வமும் மனிதனும் சங்கமம் பெறும் ஓர் உயர்ந்த அனுபவமே அது. வழிபாட்டுக் குழுவின் நீண்ட சடங்கு வரிசையில் பங்குபெறும் பக்தர்கள் மீது சாமி வருதல் மூலம் பக்தர்கள் தெய்வத்தோடு இணைகிறார்கள். இச்சங்கமத்திற்காகத் தெய்வத்தை வருணித்தல், ஆவேசமாக ஆடுதல், பாடுதல், இசைக்கருவிகளை முழக்குதல் ஆகியன படிப்படியாக அதிகரித்துக் கொண்டே செல்லும். இச்சங்கமத்தை முழுமை செய்யும் பணியைக் கற்பூரம் ஏற்றுதல் நிகழ்த்துகிறது."[79]

என்று பக்தவத்சல பாரதி குறிப்பிடுகிறார்.

அம்மன் கோயில் கொடைகளில் சாமியாட்டம் நடைபெறுகிறது. பொன்னீலனின் எழுத்தில் சாமியாட்டம் நேரடி ஒளிபரப்பாக விரிந்து கிடக்கிறது.

"வெளியே மடமடவென்று பனைஓலைகள் அடுப்புகளில் எரிய மஞ்சட்பானைகள் கொதித்துப் பொங்கின "ரெண்டரங்கண... ரெண்டரங்கண... என்று செண்டை மேளம் நரம்புகளை முறுக்கேற்றியது. சின்னநீலன் மேலே அம்மன் இறங்கினாள். சடார் என்று துள்ளி, கருவறையினுள்ளே பாய்ந்து, அம்மன் கழுத்தில் கிடந்த மாலைகளை அள்ளித் தன் கழுத்தில் போட்டுக் கொண்டு வெளியே வந்து, தரையில் கால் பரவாமல் ஆகாயத்திலேயே மிதந்தது போல நாலாபக்கமும் சுழன்று ஆடினார். அம்மை கொண்டை அவிழ்ந்து சடைசடையாக நாலா பக்கமும் சுழன்றது. கெண்டைக்கால் முள்தெறித்து எங்கேயோ போனது, ஆட்டத்தின் உச்சியில் மேளத்தை நிறுத்திவிட்டு, நாடானைப் பிடித்து இழுத்து கூட்டத்தின் நடுவில் நிறுத்தினார் அம்மை. நாடான், பகையாளியை நீ தட்டி வைக்கிறியா? இல்ல நான் தட்டி வைக்காட்டாடே? இடுப்பில் கைப்போட்டுப் பிடித்து, அவரை இழுத்துக் கொண்டே சுற்றி சுற்றி வந்தார் அம்மை. அது என்னால எப்படிஆகும்?. இரண்டு கைளையும் குவித்துக் கும்பிட்டபடி அம்மனோடு சுற்றி வந்தார் நாடான். அம்மா ஒன்கிட்ட இல்லாத வல்லமையா? நீயே தட்டி வையி! நாடானைப் பிடித்து அப்பால் தள்ளிவிட்டு. அம்மை துள்ளிக் குதித்து அடுப்புக்கு ஓடினார். தகதகவென எரிந்து கொண்டிருந்த பனையோலை நெருப்பினுள்ளே கைவிட்டு நெருப்புத் துண்டுகளைக் கைநிறைய அள்ளி, வடக்கே பார்த்து நின்றார் அம்மன்.

இன்னா, தட்டி வச்சிற்றேன்!

இன்னா, தட்டி வச்சிற்றேன்!

இன்னா, தட்டி வச்சிற்றேன்!

மூன்றுமுறை சொல்லித் தீயை வடக்கே எறிந்து விட்டு ஒற்றைக்காலை மடக்கி ஒ...ஒ... என்று குலவையிட்டபடி ஆடினார் அம்மை. கூடிநின்ற பெண்களும் குரவையிட்டார்கள். கேலி செய்ய வந்தவர்கள் பயந்து பின்வாங்கத் தொடங்கினார்கள்"[80]

எனச் சாமியாட்டம் காட்சிப்படுத்தப்படுகிறது.

சாமியாடுபவர் கூறும் வார்த்தைகள் அம்மனின் வாக்கு என்ற நம்பிக்கையையும் மக்கள் கொண்டுள்ளனர். அம்மன் அருள் ஏறி சாமியாடத் தொடங்கினால் மக்களின் துன்பங்களெல்லாம் விலகிப் போகும் என்ற நம்பிக்கையும் அதனேடு தொடர்புடையதாக அமைகிறது.[81]

## நம்பிக்கைகள்:

சமயம் என்பது எப்போதுமே நம்பிக்கையுடன் தொடர்புடையது. விஞ்ஞானப்பூர்வமான அளவீடுகளால் சமயத்தைப் புரிந்து கொள்ள இயலாது. இயற்கைக்கு அப்பாற்பட்டவற்றை அப்படியே நம்பும் மனப்பான்மையைச் சமயம் வளர்த்து விடுகிறது.

> "பகுத்தறிவிற்கு எட்டாததும், செயலறிவிற்கு உட்படாததுமான ஓர் உலகத்துடன் தொடர்பு கொள்ள மக்கள் ஏற்படுத்திக் கொண்ட முறையே சமயம்"[82]

என ஓடியா எனும் அறிஞர் குறிப்பிடுகிறார். வரலாற்றுக்கு முந்தையை காலம் முதல் அறிவியல் காலம் வரை சமயம் என்பது நம்பிக்கையை நம்பியே இயங்கிக் கொண்டிருக்கிறது. மக்களிடம் காணப்படும் நம்பிக்கைகயை,

சமயம் சார்ந்த நம்பிக்கைள்
அமானுஷ்ய நம்பிக்கைகள்
பேய் பற்றிய நம்பிக்கைகள்
மந்திரவாதம் பற்றிய நம்பிக்கைகள்
கனவு பற்றிய நம்பிக்கைள்
வாழ்வியல் நம்பிக்கைள்

என்று பகுத்துக் கொள்ளலாம்.

## சமயம் சார்ந்த நம்பிக்கைள் :

அம்மன் கோயில் பூசாரி தண்ணீரை முகத்தில் வீசியடித்தால் நோய் குணமாகும் என அவ்வழிபாட்டைப் பின்பற்றும் மக்கள் நம்புகின்றனர்.[83]

பிள்ளை இல்லாதவர்கள் அம்மன் கோயிலில் ஒரு மண்டலம் தங்கி, ஒருநேரம் மட்டும் உண்டு வந்தால் பிள்ளைப் பேறு கிடைக்கும் என்ற நம்பிக்கையும் இங்குள்ளது.[84]

நோய்களைக் குணமாக்கும் ஆற்றல் நாட்டுப்புறத் தெய்வங்களுக்கு இருப்பதாக நம்பும் மக்கள் இங்கு உள்ளனர். ஊரில் பேதி நோய் பரவியபோது வயிற்று வலியால் துயருற்ற ஏழுபேரை அம்மன் கொண்டாடி யார் அம்மன் கோயிலுக்குத் தூக்கி வரச் செய்து, அம்மன் முன்னால் அவர்களைக் கிடத்தி, வயிற்றில் திருநீறு போட்டுத் தடவினால் நோய் குணமாகும் என்ற நம்பிக்கையை இவர்களிடம் காண முடிகிறது.[85]

அம்மன் கோயிலை ஒட்டி வெட்ட வெளியில் அடுப்பு மூட்டி, தீவளர்க்கையில் பானை பொங்கினால் அம்மனுக்கு அருள்வரும் என்ற நம்பிக்கையும் இங்கு உள்ளது.[86]

## குருசடி பற்றிய நம்பிக்கை :

பெரிய காட்டை ஒட்டி வாழும் மக்கள் நோய்வாய்ப்பட்டாலோ, மனநிலைப் பிறழ்வு ஏற்பட்டாலோ பெரிய காட்டிலமைந்த குருசடியில் கொண்டு வைத்தால் குணமாகும் என்ற நம்பிக்கையுடன் வாழுகின்றனர். குருசடி கத்தோலிக்க கிறித்தவர்களுக்குரியதாயினும் இந்துக்களும் மேற்காட்டிய காரணங்களுக்காக அங்குச் செல்வதுண்டு.[87]

## அமானுஷ்ய நம்பிக்கைகள் :

மனித அறிவுக்கும் ஆற்றலுக்கும் விளங்காத காட்சிகள், ஒலிகள், சக்திகள், அற்புதங்கள், தரிசனங்கள் போன்றவை பற்றிய நம்பிக்கைள் நாட்டுப்புறங்களில் மிகுந்துள்ளன. கடவுளர்கள் காட்சியளித்தல், பேய்கள் திகிலூட்டுதல், இறந்தவர்கள் தோற்றமளித்தல் போன்றவை இதனுள் அடங்குபவை ஆகும்.

பசுவில் பால்குடிக்கும் சிறுமியின் முந்தைய காட்சி வெளிப்பாடும் பிந்தைய மறைவும் இத்தகைய அமானுஷ்யத் தன்மையில் அமைந்தவை ஆகும். பகவதி எனும் இளைஞன் மாடுகளை மேய்த்துக் கொண்டிருக்கிறான். ஒரு சிவலைப்பசுவைக் காணாமல் தேடுகிறான். கறையான் புற்றின் மறைவில் சிவலைப்பசுவின் அடியில் ஒரு சிறுமி பால் குடித்துக் கொண்டிருக்கிறாள். பகவதி ஓடிவந்து மாட்டின் உரிமையாளரிடம் செய்தியைச் சொல்லுகிறான். நாடான் வந்து பார்த்தால் சிறுமி நின்றதற்கான எந்தத் தடயமும் இல்லை. பக்கத்து முல்லைப் புதரில் ஒரு கொத்துக்

பூவைக் கிள்ளி அச்சிறுவன் காட்டிய இடத்தில் வைத்து வணங்குகிறார்.[88] இது அமானுஷ்ய தோற்றங்கள் பற்றிய நாட்டுப்புற நம்பிக்கையாகும்.

## பேய் பற்றிய நம்பிக்கைகள் :

பேய்கள் பற்றிய நம்பிக்கைகள் குமரி மாவட்டத்திலுள்ள படித்த சமூகத்திடமும் மிகுந்து காணப்படுகிறது.

> "இப்பேய்கள் இருளான இடங்களிலும் மரங்களிலும் குடியேற்ற வீடுகளிலும், காடுகளிலும் தங்கியிருப்பதாக நம்பினர். தொழிலில் நஷ்டங்களும் வருவதாகக் கருதினர். வலிப்பு நோய், மனநோய் போன்ற நோய்கள் ஏற்பட்டால் பேய்ப் பிடித்திருப்பதாக நம்பி பேய்களை விரட்டும் நோக்கில் செருப்பினாலும் துடைப்பானாலும் அடித்து வசைச் சொற்களால் நிந்தித்தனர்"[89]

எனப் பேய்களால் ஏற்படும் துன்பங்கள் குறிக்கப்படுகின்றன.

> "திருவிதாங்கூரிலுள்ள பேய்களை வணங்கும் பல தாழ்ந்த சாதியினரும் இறந்து போனவர்களுடைய ஆவிகள் பல இடங்களிலும் அலைந்து திரிந்து சொல்ல முடியாத தீமைகளைச் செய்வதாக நம்புகிறார்கள். அந்த ஆவிகளுக்குப் பேய்கள், பிசாசுகள், பூதம், அலவறை, கிரான், சாவு எனப் பல பெயர்களை வழங்குகிறார்கள்"[90]

என்று சாமுவேல் சகாரியா குறிப்பிடுகிறார்.

மனிதர்களுக்குள் பேய்கள் நுழைந்து, அவர்களை ஆட்டுவிப்பதாக நம்பப்படுகிறது. திருநீறு பூசுவதன் மூலம் பேயை ஓட்ட முடியும் என இந்துக்கள் நம்புகின்றனர். ஜெப எண்ணெய் பூசுதல், பிரார்த்தனை செய்தல் போன்றவற்றின் வழியாகப் பேய்களை விரட்ட முடியும் எனக் கிறித்தவர்கள் நம்புகின்றனர். நாவலில் பிரம்மசக்தி சாமிக்கண்ணுவின் மகன் பெரியநீலன், கிறித்தவ சமயத்துக்கு மதம் மாறியதால் அவன் அடிக்கடி கர்த்தரே என்று முனகப் பழகியிருந்தான். அவனுக்குப் பேய் பிடித்திருப்பதாகப் பிரம்மசக்தி எண்ணினாள்.

> "இவனுக்குப் பேய் பிடித்திருக்கிறது என்று பயந்து அம்மங்கோயில் திருநீற்றை அவன் உச்சியில் போட்டு கன்னத்திலும் தடவினார் தாய் பிரம்மசக்தி அவர் பார்வை மறைந்ததும், அவசர அவசரமாக அதைத் தன்வேட்டி முனையால் துடைத்ததை ஒரு தடவை சாமிக்கண்ணுவே நேரில் பார்த்துவிட்டார்"[91]

என்பதில் திருநீறு பூசுவதால் பேயை விரட்ட முடியும் என்ற கிராமத்து நம்பிக்கையைக் காணமுடிகிறது.

நாட்டுப்புறத் தெய்வங்களைப் பேய்கள் எனக் கொச்சைப்படுத்தும் போக்கு சமூகத்திலிருப்பதையும் பொன்னீலன் எடுத்துக் காட்டுகிறார். ஒரே சமயத்துக் குள்ளிருந்தும் இத்தகையை குரல்கள் எழுவதனைச் சதாசிவத்தின் கூற்றால் அறிய முடிகிறது.

> "சார் இந்த நாட்டுக் கிராமக் கோயில்கள்ல பழைய பூசாரிமார் பாமரத்தனமா என்னென்னவோ பண்ணிக்கிட்டுக் கிடக்கானுக, ரப்பிஷ் எல்லாத்தையும் மாற்றணும், அங்கே குடியிருக்கிற பேய்களத் துரத்தணும்"[92]

என்று சதாசிவன் கூறுகின்றான்.

முத்தாரம்மன் என்ற நாட்டுப்புறத்தெய்வத்தை அய்யா வைகுண்டர் பேய்த்தெய்வம் என்று கூறுவதனைப் பொன்னீலன் எடுத்துக்காட்டுகிறார்.

> "முத்தாரம்மனா? அவ ஒரு பேய்த் தெய்வம், பேய்த் தெய்வத்துக்குக் காலம் முடிஞ்சி போச்சி. அவள மறந்துட்டு எல்லாரும் நாராயணரைக் கும்பிடுங்க என்று அய்யா பேசி வருகிறாரே"[93]

என்பதில் வைகுண்டரின் கருத்து முன்வைக்கப்படுகிறது.

பாம்பைப் பேய் எனக் கருதுவது பற்றிய குறிப்பும் நாவலில் உள்ளது. நெடுங்குளம் ஊரில் இடைவிடாத மழை பதினான்கு நாட்கள் பெய்தது. அவ்வூரிலுள்ள ஒரு பனை மரத்தில் நூற்றுக்கும் மேற்பட்ட பாம்புகள் தொங்குகின்றன. அவை பார்ப்பதற்குப் புடலங்காய்கள் தொங்குவதைப் போல உள்ளன. அவை பாம்புகளல்ல என்றும், நெடுங்குளத்துக்குள் நெடுங்காலமாய்க் குடியிருந்த பேய்கள் என்றும் பெரியவர்கள் கூறுகின்றனர்.[94] இது பாம்புகளைப் பேயாகக் கருதும் மனநிலையைப் பிரதிபலிக்கிறது.

**மந்திரவாதம் பற்றிய நம்பிக்கைகள் :**

எதிரியை அழிப்பதற்கு மந்திரவாதத்தை நாடும் மக்கள் நாட்டுப்புறங்களில் உள்ளனர்.

> "மந்திரங்களைக் குறித்து கிராமத்து மக்களிடம் இன்னும் அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கிறது. மந்திரங்கள் நல்ல காரியங்களுக்கும் பயன்படுகிறது. தீய காரியங்களுக்கும் பயன்படுகிறது.[95]

என்பர்.

எதிரியை அழிப்பதற்காக மந்திரவாதிகள் அழைத்து வரப்படுகின்றனர். அவர்களது மந்திரவாதத்தால் எதிரியை அழிக்க முடியும் என நம்பப்படுகிறது. அம்மன் புகழ் ஓங்கிய போது அதனைப் பொறுக்காதவர்கள் மந்திரவாதியை அழைத்து வந்தமை குறித்து நாவல் பேசுகிறது.

"அம்மனைக் குடத்தில் அடைப்பதற்காக மலையிலிருந்து காணிக்காரனைக் கொண்டு வந்து மந்திரஞ் செய்வதாகவும், அம்மன் மந்திரவாதியை ரெத்தங்கக்க அடித்து, மூணாம் நாள் அவன் செத்துப் போனதாகவும் ஒரு வதந்தி பரவியது. அம்மன் புகழ் மேலும் ஓங்கியது" [96]

என மந்திரம் தோற்றுப்போன செய்தி சொல்லப்படுகிறது.

சின்ன நீலன் காலில் முள் தைத்து அசைய முடியாமல் ஆன போது அவருக்கெதிராக மந்திரவாதம் செய்யப்பட்டிருப்பதாக மக்கள் நம்பினர்.[97]

மந்திரவாதிகள் மந்திரத்தின் வலிமையால் பேயை ஓட்டுகின்றனர். மந்திர சக்தியால் சுட்டமண்ணைக் குதிரையாக்கி, அதில் ஏறி ஊரைச் சுற்றி வருவதையும் நாவல் காட்டுகிறது.

**கனவு பற்றிய நம்பிக்கைகள் :**

கிராமங்களில் கனவு பற்றிய நம்பிக்கைகள் நிறைந்து காணப்படுகின்றன. கனவில் தோன்றும் காட்சிகளை அவர்கள் பொருளுடையதாகக் கருதுகின்றனர். கனவில் வரும் பொருள்கள் அவர்களுக்கு எதிர்காலம் பற்றிய எச்சரிக்கையை வழங்குகின்றன. நல்ல கனவு, கெட்ட கனவு என இருவகையாகக் கனவுகளை அவர்கள் பகுத்து வைத்துள்ளனர். கனவில் இறந்துபோன மனிதர்களும், தெய்வங்களின் பிம்பங்களும் தோன்றினால் அக்கனவைக் கவனமாக மனதில் வைத்து ஆராய்கின்றனர். இக்கனவுகள்வழி முன்னோர்களும் தெய்வங்களும் சமகால மனிதர்களோடு உரையாடுவதாக அவர்கள் நம்புகின்றனர்.

மறுபக்கம் நாவலில், சின்ன நீலன் கனவில் முத்தாரம்மை தோன்றி பேசுகிறார். முத்தாரம்மை வழிபாட்டிலிருந்து அய்யாவழிக்குச் சென்ற காலகட்டத்தில் அவருக்கு இக்கனவு தோன்றுகிறது.

"தகப்பனார் இறந்த பதிநாறாம் நாள் ராத்திரி . . . . மணல் வெளியில அவர் உறங்கிக் கொண்டிருந்த போது, இற்றுப் பொத்தலாகி ஒரு பக்கத்தூண் ஒடிந்து சாய்ந்து போன ஓலைக்கூரை, அதன் உள்ளே. . . அழகெல்லாம் திரண்டு வடிவம் பெற்ற அம்மை, சிவப்புப் பட்டுடுத்தி, முழங்காலைக் கட்டிக் கொண்டு தலைகுனிந்து உட்கார்ந்திருந்தாள். அவள் கண்ணில் இருந்து கண்ணீர் சொட்டுச் சொட்டாகக் கன்னத்தில் வடிந்து கொண்டிருந்தது. சின்ன நீலனைப் பார்த்ததும் அழும் குரலில் கேட்டாள் அம்மை. என்னைய முழங்காலக் கட்டிக்கிட்டு உக்கார வச்சிட்டியேப்பா! எத்தனை நாளைக்கு நான் இப்படியே இருப்பேன்? பரம்பரை பரம்பரையா எனக்குப் பூசை பண்ணினவனில்லியா நீ"[98]

என முத்தாரம்மை கனவில் தோன்றி உரைக்கிறார். இக்கனவு சின்ன நீலன் வாழ்க்கையை மாற்றியமைக்கிறது. அவர் வைகுண்டரின் அனுமதியோடு மீண்டும் முத்தாரம்மை வழிபாட்டுக்கு வந்துவிடுகிறார்.

மனிதர்களுக்குச் சிலநோய்கள் ஏற்படுவதற்கான காரணத்தையும், தீர்வையும் கனவில் தோன்றி தெய்வங்கள் சொல்லுவதனையும் பார்க்க முடிகிறது. கோடைக் காலத்தில் அம்மைநோயும் மழைக்காலத்தில் பேதி நோயும் ஊரைச் சீரழித்ததற்கான காரணத்தைச் சின்னநீலன் அவரது கனவிலிருந்தே அறிகிறார். அம்மன் வழிபாடுகள் முறைப்படி செய்யப்படாமல் அம்மன் குறை இருந்ததனால்தான் இத்தகைய நோய்கள் வருகின்றன என்பதை அவர் கனவிலிருந்து கண்டறிகிறார்[99]

கனவில் கடவுள் தோன்றி வழிபாட்டிடம் பற்றிய செய்திகளைச் சொல்லுவதனையும் நாவல் குறிப்பிடுகிறது. நாராயணப்பெருமாள் என்பவர் பறக்கையிலிருந்து ஒரு கல்லுப் பிள்ளையாரைத் திருடி, வண்டியில் போட்டுத் தன் வீட்டுக்குக் கொண்டு வருகிறார். வீட்டுக்குள் வைத்து வழிபாடும் செய்கிறார். அக்காலகட்டத்தில் ஊரில் எல்லோருக்கும் சிரங்கு என்ற அரிப்பு நோயும், பேனும் ஏற்படுகின்றன. பிள்ளையார்தான் இதற்குக் காரணம் என்று மக்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர். நாராயணப் பெருமாள் பிள்ளையாரைத் தூக்கிக் கொண்டு போய்ப் பறக்கைக் குளத்தில் போடுகிறார். பின்னர் மைலாடி என்ற ஊரில் சென்று பிள்ளையாரைக் கல்லில் செய்து வாங்கி, வீட்டில் கொண்டு வைத்து வழிபடுகிறார். இந்நிலையில் பிள்ளையார் தினமும் நாராயணப் பெருமாளின் கனவில் தோன்றிப் பேசுகிறார்.

> "என்னைய இப்படி வீட்டுக்குள்ள அடச்சிப் போட்டிருக்கியே. . . முச்சந்தியில கொண்டு வையி. . .  முச்சந்தியில கொண்டு வையின்னி அவரைத் தொந்தரவு பண்ணியிருக்காரு"[100]

கனவில் தோன்றும் காட்சிகளை உண்மையென நம்புவதற்கான சான்றாக இந்நிகழ்வு அமைகிறது. அவர் கனவில் கேட்ட பிள்ளையாரின் குரலுக்கு இணங்குகிறார். தலம் பார்த்துப் பிள்ளையாருக்குக் கோயிலும் கட்டுகிறார்.

கடவுளர் கனவில் தோன்றுவதாகப் பக்தர்களுக்கு நம்பிக்கை உள்ளது. முருக பக்தரான ஆண்டிச்சாமியார் கனவில் முருகன் தோன்றுகிறார். குமாரகோயில் முருகன் அவருடன் தமிழ் மொழியில் பேசுகின்றார்.

"ஏ ஆண்டி, அக்கினிக்காவடி கட்டி இந்தத் தைப்பூசத்துக்கு நீ என் சன்னதிக்கி வா"[101] (ப.367)

என்று கூறுகின்றார். கனவுகள் பொருள் நிறைந்தவை என்பதாகவே நாட்டார் சமூகம் நம்புகிறது. ஆண்டிச்சாமியர் தனது கனவை ஊர்ப் பெரியவர்களிடம் கூறுகிறார். தேவ சம்போர்டைச் சார்ந்தவர்களிடமும் கூறுகின்றார். ஆண்டிச்சாமியார் முறையாக விரதம் இருந்து, அக்னி குண்டம் இறங்கி முருகனின் கட்டளையை நிறைவேற்றுகிறார்.

## வாழ்வியல் நம்பிக்கை :

அன்றாட வாழ்க்கை என்பது பல்வேறு நம்பிக்கைகளின் தொகுப்பாக அமைவதைக் காணமுடிகிறது. வாழ்வியல் நம்பிக்கைகள் சமயத்தோடு நேரடியாக ஒட்டுறவு கொண்டவையல்ல. இவை அனைத்து மக்களுக்கும் பொதுவானவையாகும்.

குமரி மாவட்ட மக்களிடம் நல்லநேரம் பார்க்கும் வழக்கம் உள்ளது. திருமணம், புதுவீடு புகுதல், சுபநிகழ்வுகள் அனைத்தும் நல்ல நேரம் பார்த்தே இங்குச் செய்யப்படுகின்றன. நாவலில் வரும் சேது புதுவீடு போகவேண்டிய நாளில் காலை பத்து மணியிலிருந்து நல்ல நேரம் தொடங்குவதாகச் சிவகாமி [102] கூறுகிறார்.

## சகுனம் பார்த்தல் :

நாட்டுப்புற மக்கள் எதிரில் வரும் உயிர்கள், கேட்கும் ஒலிகள் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு சகுனங்களை வகுத்து வைத்துள்ளனர். நல்ல சகுனம், கெட்ட சகுனம் ஆகியவை பற்றிய நம்பிக்கைகள் அவர்களிடம் உள்ளன. வடதிசையிலிருந்து கழுதை கத்தினால் நல்ல சகுனமாகக் கருதப்படுகிறது.[103]

## ஆணையிடுதல் :

தகவலைக் கூறுபவர் தகவலைப் பெறுபவரிடம் நம்பிக்கையை ஏற்படுத்த ஆணையிடுதல் எனும் உத்தியைப் பின்பற்றுவதனை எல்லா இடங்களிலும் காணமுடிகிறது. இறைவன், இயற்கை, முன்னிலையில் நிற்பவர், தாய், தந்தை, குழந்தைகள் ஆகியோர் பெயரிலும், தன் பெயரிலும் ஆணையிடுகின்றனர். ஒருவர்

ஆணையிட்டால் அவர் கூறுவது அனைத்தும் உண்மையென நம்பப்படுகிறது. இதில் பொய்யாக ஆணையிடுவதும் சமூகத்தில் காணப்படுகிறது.

"அம்மனாண, நாலே கால் போட்டு நேத்துதான் அஞ்சி சிப்பம் அந்த மம்பட்டிப் பல்லனுக்கு வித்தேன்... எந்தத் தயக்கமும் இல்லாமல் பிரம்மசக்தி பொய் சொல்லுவார்"[104]

எனப் பொய்யாணையிடப்படுவதை நாவல் காட்டுகிறது.

**மணமகள் வந்த நேரம்:**

பெண்கள் திருமணமாகி மணமகன் வீட்டில் காலடி வைத்த பொழுது நன்மை தீமைகளைத் தீர்மானிக்கிறது எனும் நம்பிக்கையும் இங்கே உள்ளது. நாவலில் பிச்சிப்பூ எனும் கதாப்பாத்திரம் இந்நம்பிக்கையை விளக்குவதாக அமைகிறது. பிச்சிப்பூ பாண்டி நாட்டிலிருந்து மூர்த்தியாரை மணம்முடித்துக் குமரி மாவட்டத்திலுள்ள ஒரு ஊரில் காலடி வைத்த பொழுது, இயற்கையையே மாற்றியமைத்து விட்டதாக அம்மக்கள் நம்புகின்றனர். சாரல் மழை தப்பியதற்கும், பயிறுப் பயிர்கள் வாடியதற்கும், பனைமரத்தில் பதநீர் குறைந்ததற்கும், கோழி நோய் வந்ததற்கும் காரணம் பிச்சிப்பூ ஊரில் காலடி எடுத்து வைத்ததுதான் என அம்மக்கள் நம்புகின்றனர். இதன் காரணமாக ஊர்க் கூட்டத்தைக் கூட்டி மூர்த்தியையும், பிச்சிப்பூவையும் ஊரை விட்டே விலக்கி வைக்கின்றனர்.[105]

## கத்தோலிக்கர் சடங்குகள் :

கத்தோலிக்கக் கிறித்தவர்கள் செய்யும் சடங்குகளைக் கருத்தியல் சடங்குகள் என்ற வகைக்குள் அடக்க முடியும்.

"இச்சடங்குகள் யாவும் சமூகத்தினைக் கட்டிக் காக்கவும், கட்டுக் கோப்பாக வைத்திருக்கவும், முரண்பாடுகளைக் களைந்து ஒற்றுமை காக்கவும், சமூக உறவுகளைப் பேணவும், தனி மனித விழைவுகளை நிறைவடையச் செய்து அவற்றின் வாயிலாக அத்தனிமனிதனை உகந்த நிலைச் சமூகத்திற்கேற்ற மனிதனாக வளர்த்தெடுக்கவும் போன்ற தன்மைகளைக் கொண்ட அனைத்துச் சடங்குகளும் இவ்வகையில் அடங்கும்"[106]

எனக் கருத்தியல் சடங்குகளுக்கு விளக்கம் தரப்படுகிறது.

## குருத்தோலை எரித்தல் சடங்கு :

கிறித்தவர்கள் இயேசுவின் சிலுவைப்பாட்டை சாம்பல் புதன்கிழமை அன்றிலிருந்து சிறப்பாகச் சிந்திக்கத் தொடங்குவர். அன்று முந்தைய ஆண்டின் குருத்தோலையைப் பாதிரியார் வாங்கி எரிப்பார். அந்தச் சாம்பலை மந்திரித்துத் தண்ணீரில் கரைத்து 'மண்ணில் பிறந்தவனே மண்ணுக்குத் திரும்புவாய்' என்று சொல்லி கத்தோலிக்கர்களின் நெற்றியில் சிலுவை அடையாளத்தை வரைவார்.[107] ஆண்டுதோறும் சாம்பல் புதனன்று குருத்தோலை எரிக்கும் சடங்கு நடைபெறுகிறது.

## நாற்பது நாள் உபவாசம் :

சாம்பல் புதன் தொடங்கி பெரிய வெள்ளி வரை உள்ள காலம் லெந்து காலம் அல்லது துளிர்விடும் காலம் என்று அழைக்கப்படுகிறது. இதனைத் தவக்காலம் எனக்குறிப்பிடுகின்றனர்.

சாம்பல் புதன் முதல் பெரிய வெள்ளிவரை கிறித்தவர்கள் உபவாசம் இருக்கின்றனர். உபவாசம் என்பது உணவு உண்ணாமல் இருப்பது ஆகும். பொன்னீலன் இதனைச் சந்தி சுத்தப் போசனம் என்று குறிப்பிடுகிறார்.

> "ஒரு சந்திசுத்தப் போசனமா?" சேதுவின் நீண்ட மூக்கு விடைக்கிறது. "கிறிஸ்தவ வீடுகள்லயா?"
>
> "ஆமா!" அழுத்தமாய்த் தலையாட்டுகிறார் பெரியவர் "அதாவது ஒரு நேரச் சாப்பாடு, அதுங் காய்கறிச் சாப்பாடு. தொழிலுக்குப் போறவியளுக்கு மட்டும் அந்தக் கடமை கிடையாது."[108]

எனக் சந்தி சுத்தப் போசனம் பற்றிக் குறிப்பிடப்படுகிறது.

## சிலுவைப்பாதை :

கத்தோலிக்கக் கிறித்தவர்கள் சிலுவைப்பாதை என்ற சடங்கை நிகழ்த்துகின்றனர். கத்தோலிக்கத் தேவாலயங்களின் உட்புறத்திலுள்ள இரண்டு பக்கச் சுவர்களிலும் பதினான்கு ஸ்தலங்கள் அமைக்கப்பட்டிருக்கும். பிலாத்து இயேசுவைச் சிலுவைக்கு ஒப்புக் கொடுத்ததில் இருந்து, உயிர்த்தெழுதல் வரையுள்ள பதினான்கு காட்சிகள் சிற்பங்களாகச் சுவர்களில் செதுக்கப்பட்டிருக்கும். ஒவ்வொரு ஸ்தலத்துக்கு முன்னாலும் முழங்கால் போட்டு அழுது மன்றாடுவார்கள்.[109] கத்தோலிக்கத் திருச்சபைகளில் உள்ள இச்சிலுவைப்பாதைச் சடங்கு சீர்திருத்தத் திருச்சபைகளில் இல்லை.

**மந்திரக் கோல் வழிபாடு :**

ஒரு மீனவர் கிராமத்தின் மீது வடுகர் படை, படையெடுத்து வந்த நிலையில், சவேரியார் தனது திருச்சிலுவைக் கோலை உயர்த்திப்பிடிக்கிறார். அதைக்கண்ட வடுகர் படை திரும்பிச் சென்று விடுகிறது. வடுகர் படையின் தளபதி குதிரையை விட்டிறங்கி நடந்து வந்து சவேரியார் முன் மண்டியிட்டு ஆசிபெறுகிறார். சவேரியாரின் மந்திரக்கோலைக் கண்டு வடுகர்படை பின்னிட்டுச் சென்றதை மீனவ மக்கள் அதிசயமாகப் பார்க்கிறார்கள். அதனால் பாறையில் மந்திரக்கோலை நட்டு வழிபடுகிறார்கள்.[110]

**பஜனை :**

குமரி மாவட்டக் கிறித்தவர்கள் கார்த்திகை மாதம் முழுவதும் பஜனை பாடுவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். ஊரிலுள்ள சிறுவர்களும், பெரியவர்களும் ஒன்றாக இணைந்து தாளங்கள் அடித்து ஆன்மீகப் பாடல்கள் பாடி ஊரைச் சுற்றி வருவார்கள். இப்பவனி தேவாலயத்தில் தொடங்கி, தேவாலயத்தில் முடிவடையும். இரவு ஏழுமணியிலிருந்து பத்து மணிக்குள்ளாக இப்பஜனை பாடும் நிகழ்வு நடைபெறும். சில தலைமுறைக்கு முன்னால் குமரி மாவட்டம் முழுவதும் காலரா நோய் வந்து ஏராளமான மக்கள் மரணமடைந்தமையால், அத்தகைய மரணங்கள் நிகழாமல் ஊரைக் காக்கக் கடவுளை வேண்டி இப்பஜனை செய்யப்படுகிறது. கார்த்திகை மாதம் முடிந்த பின்னர் கிறிஸ்து பிறந்த நற்செய்தியை அறிவிக்கப் பஜனை பாடிச் செல்லுகின்றனர். இப்பஜனை, இரவு முழுக்க நடைபெறும். இது கேரல் பவனி என அழைக்கப்படுகிறது. கத்தோலிக்கக் கிறித்தவர்களை விட, சீர்திருத்தக் கிறித்தவர்கள் வாழும் ஊர்களில் பஜனை பாடும் நிகழ்வு மிகுதியாகக் காணப்படுகிறது.

பொன்னீலன் கத்தோலிக்கத் திருச்சபையினர் செல்லும் பஜனை பற்றி நாவலில் குறிப்பிடுகிறார்.

> "கார்த்திகை மாசம் முழுசும் தெருத் தெருவா பஜனை செய்றது ரொம்ப காலமா எங்களுக்கு வழக்கம். அதுக்கு எதிரா பொதுவா யாரும் எதுவும் பண்ணமாட்டாவ பட்டாபிசேக நாள்ல ஜெபஸ்ட்டியார் சப்பரத்த அலங்கரிச்சி, ஜீப்ல வச்சி பாடிக்கிட்டே தெரு தெருவாப் போவோம்"...[111]

எனக் கத்தோலிக்கர்களின் பஜனை பற்றிக் குறிப்பிடப்படுகிறது.

## வாழ்வியல் சடங்குகள் :

வாழ்க்கை வட்டம் என்பது பல்வேறு சடங்குகளால் சூழப்பட்டது. வாழ்வில் சிக்கல்களுக்கான தீர்வாக மக்கள் பல்வேறு சடங்குகளைச் செய்து வருகின்றனர். எல்லாச் சடங்குகளும் பொருள் பொதிந்தவை என நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர். மறுபக்கம் நாவலில் இடம் பெற்றுள்ள வாழ்வியல் சடங்குகளாவன: உறுமால் கட்டுச் சடங்கு, மாப்பிள்ளைக்கல் தூக்கும் சடங்கு, தாலிகட்டும் சடங்கு, இறப்புச் சடங்கு என்பனவாகும்.

## உறுமால் கட்டுச்சடங்கு :

முற்காலத்தில் நாடார் சமூக வீடுகளில் உறுமால் கட்டுச் சடங்கு நடைபெறும். இச்சடங்கு பற்றிய குறிப்பு நாவலில் உள்ளது.

> "கடந்த வைகாசியில்தான் நாடார் மகனின் உறுமால்க் கட்டுச் சடங்கு நடந்தது. நாடாருக்கும் தனக்கும் நல்ல உறவு இருக்க வேண்டும் என்பதற்காகவே மூன்று பணம் மொய் வைத்துக் கொடுத்தார் சாமிக்கண்ணு. அந்தப் பையனின் இடுப்பில் செருகுகிற உறைக்கத்தியைத் தொட்டுக் கொடுக்கும்போது, தனியாக ஒரு முழுப் பணம் மொய் அழுதார்"[112]

என அச்சடங்கையொட்டிய கடமைகள் குறிக்கப்படுகின்றன.

## மாப்பிள்ளைக்கல் தூக்கும் சடங்கு :

நாட்டுப்புற மக்கள் வீரத்தைப் போற்றியதன் அடையாளங்களில் ஒன்றாக மாப்பிள்ளைக் கல் திகழுகிறது. பெண்ணைத் திருமணம் செய்வதற்கான தகுதிகளில் மிக முக்கியமானதாக ஆணின் வீரம் கருதப்பட்டது. கனமான மாப்பிள்ளைக் கல்லைத் தூக்குபவர்கள் நாட்டுப்புறங்களில் மதிக்கப்பட்டனர். மாப்பிள்ளைக் கல்லைத் தூக்குவதற்குப் பலமும் பயிற்சியும் முக்கியமானது என்பதை நாவல் எடுத்தியம்புகிறது.

> "ஊர் அம்மன் கோயிலை ஒட்டி, வேப்பமர நிழலில் கிடக்கிறதே மாப்பிள்ளைக் கல், சாயங்காலமானால் இளவட்டப் பயல்கள் அதைச் சுற்றித்தான் கூடிக்கிடப்பார்கள், அதைத் தூக்கிப் பழக, மாப்பிள்ளைமார் மாலையும் கழுத்துமாக ஊருக்குள்ளே நுழையும்போது. முதல்வேலை இந்த மாப்பிள்ளைக் கல்லைத் தூக்கித் தோள் வழியாகப் பின்னால் மறிப்பதுதான்.

பல மாப்பிள்ளைமாருக்கு இந்தக் கல்லைக் குனிந்து தூக்கித் தோளுக்கு உயர்த்துவதற்குள்ளேயே குசு தெறித்துவிடும்”[113]

என மாப்பிள்ளைக் கல்லைத் தூக்குவதிலுள்ள கடினத்தை ஆசிரியர் நகைச்சுவையுடன் விளக்குகிறார்.

## தாலி கட்டுதல் :

தாலி கட்டும் சடங்கு இந்து, கிறித்தவ மதத்தினரிடையே காணப்படுகிறது. மேற்கத்தியக் கலாச்சாரத்தில் மோதிரம் மாற்றும் பழக்கம் வழக்கத்தில் இருந்தாலும், இந்தியக் கிறித்தவர்கள் இங்குள்ள கலாச்சாரத்துக்கேற்ற வகையில் தாலி கட்டிக் கொள்ளுகின்றனர். பெந்தேகோஸ்தே திருச்சபையினரில் நகையணியும் பழக்கம் இல்லாததால் அவர்கள் தாலியைத் தவிர்த்து விடுகின்றனர். வேதாகமத்தை மணமகனும் மணமகளும் மாற்றிக் கொள்ளும் பழக்கம் மட்டுமே அவர்களிடம் உள்ளது. சீர்த்திருத்தக் கிறித்தவர்கள் தாலியை நின்ற வண்ணம் அணிவிக்கின்றனர். புழுக்கையர் பிரிவைச் சார்ந்த கத்தோலிக்கர்கள் தரையில் உட்கார்ந்து தாலி கட்டும் வழக்கத்தைப் பின்பற்றுகின்றனர்.”[114]

## இறப்புச் சடங்கு :

இறப்புக்குப் பிந்தைய உடல் சடங்குகள் வழி உறவுத் தொடர்ச்சியைப் பெறமுடிகிறது.

“உலகில் பிறந்த ஒவ்வொரு மனிதனுக்கும் இறப்பு நிச்சயமான ஒன்று. இறப்பைக் கண்டு அஞ்சும் மனிதர் மற்றவரின் இறப்பிற்குச் சென்று அவரின் குடும்பத்திற்கு ஆறுதல் கூறுகின்றனர். இறந்தவரின் ஆத்மா அமைதி பெற வேண்டியும், அவர்களால் இனி துன்பம் நேராமல் இருப்பதற்கும் சடங்குகள் செய்யப்படுகின்றன”[115]

என்று மு.ஷோபனா குறிப்பிடுகிறார்.

மரணத்துக்குப்பின் புதைத்தல் அல்லது எரித்தல் எனும் சடங்குகள் செய்யப்படுகின்றன. தமிழர்களிடையே மிகப் பெரும்பான்மைச் சமூகங்களில் இறந்தவர்களைப் புதைக்கும் வழக்கம் உள்ளது.

“இறந்தவரைப் புதைக்கும் சடங்குமுறை வேளாண் நாகரிகத்தோடு உருவானதாகும். புதைத்தல் என்பது விதைகளை மண்ணுக்குள் புதைத்தல் என்பதற்கு இணையானதாகும். விதை முளைப்பது போன்று இறந்தவரும் மறு உயிர் பெறுகிறார்”[116]

எனும் நம்பிக்கையின் காரணமாகப் புதைத்தல் சடங்கு செய்யப்படுகிறது.

குமரி மாவட்ட இந்துக்களின் இறப்புச் சடங்கு குறித்துக் கஸ்தூரி ஜான்சன் கீழ்க்காணுமாறு குறிப்பிடுகிறார்.

"தாணுவன் சங்கொலி ஊத, இறந்தவரின் மைந்தன் கொள்ளிச் சட்டிப்புகை எடுத்துவர, சடலம் சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்லப்பட்டுத் தகனம் செய்யப்படுகின்றது. இறந்தவர்களுக்கென்று பதினாறாம் நாள் சடங்கு செய்கின்றனர். ஒருவர் இறந்து பதினாறு நாட்கள் முடியும் வரை கிழமை முறைகள், கல்லெடுப்பு, அடியந்தரம், சுடுகாட்டுக்குப் போய் முடியெடுத்து முகம் வழித்து குளித்தல், கல்லுக்குழிக்குப் பொங்கலிடுதல், பிண்டங்கரைத்துத் திரும்பிப் பார்க்காமல் வீட்டிற்கு நடந்து வருதல் போன்ற சடங்குகளைச் செய்கின்றனர். இறந்தவர்களுக்கு ஒவ்வோராண்டும் துணி உணவுப் பொருட்கள் படைத்து வழிபாடு செய்கின்றனர்"[117]

இறந்த உடலுக்குத் தீ வைக்கும் சடங்கு கொள்ளி வைத்தல் ஆகும். சின்ன நீலன் தன் தந்தைக்குக் கொள்ளி வைத்ததாக நாவல் குறிப்பிடுகிறது.[118] ஆனால் கொள்ளி வைத்தல் சடங்கைப் பற்றிய விளக்கங்கள் எதனையும் நாவலிலிருந்து அறிய முடியவில்லை.

குமரி மாவட்ட மக்களில் சிலரிடம் பத்மாசன நிலையில் பிணத்தைப் புதைக்கும் பழக்கம் உள்ளது. இச்சடங்கில் இரட்டைச் சங்கு ஊதப்படுகிறது. மக்கள் ஊர்வலமாகப் பிணத்தைப் புதைக்கச் செல்லுகின்றனர். துணியால் அமைக்கப்பட்டதும், பூக்களால் அலங்கரிக்கப்பட்டதுமான தேரை எட்டுப்பேர் சுமக்கின்றனர். தேரின் முன் வெள்ளைப் பாவாடையில் சிலர் செல்லுகின்றனர். உடம்பெல்லாம் திருநீறு பூசிய இளைஞன் ஒருவன் மண்குடத்தைத் தோளில் சுமந்து செல்லுகிறான். பிரேதக் குழியை மூன்றுமுறை சுற்றியபின் தேர் மண்ணில் இறங்குகிறது. தேரின் உள்ளே கால்களை மடக்கி கைகளை மடியில் மடக்கி பத்மாசன நிலையில் பிணம் உட்கார வைக்கப்படுகிறது. கிழக்கே பார்த்தபடி ஒரு ஆள் உட்காருவதற்கேற்ற வகையில் மண் குடைந்து எடுக்கப்பட்டுள்ளது. அதற்கு இருப்புக்குழி என்று பெயர். பிணத்தைக் கிழக்கு நோக்கி இருப்புக் குழிக்குள் பத்மாசன நிலையில் வைத்து மண்ணைப் போட்டு மூடுகிறார்கள்.[119] இத்தகைய மரணச்சடங்கு மிகச்சிலரிடம் மட்டுமே இன்று காணப்படுகிறது. இது தவிர கருமாதி வாய்க்கரிசி போடுதல் போன்ற மரணச் சடங்குகளையும் நாவல் சுட்டுகிறது.[120]

## சமாதியில் மேளம் தட்டுதல் :

ஊரில் வாழும் மேளக்காரர்கள் சமாதிகளின் முன்னால் நின்று மேளம் தட்டி விட்டு, வீட்டாரிடம் சன்மானம் பெறும் பழக்கமும் இங்கு உள்ளது.[121] மேளக்காரர்களை ஒருவர் வழிநடத்தி வருவார். அவர் பின்னால் கொம்பூதுகிறவர்கள், சங்கு ஊதுகிறவர்கள், நாயனம் வாசிக்கிறவர்கள், தவில் அடிக்கிறவர்கள், சிஞ்சா போடுகிறவர்கள் ஆகியோர் வருவர். ஆடி மாதம் முதல் தேதியன்று வீடு வீடாக வரும் இவர்களுக்கு மக்கள் வெகுமதி வழங்குவார்கள்.

## திருவிழா :

நாட்டார் பண்பாட்டில் விழாவுக்கென்று தனியிடம் உள்ளது. நான்கு சுவர்களுக்குள் தம்மைச் சுருக்கிக் கொண்டும், சமூகத்தொடர்பிலிருந்து தன்னைத் துண்டித்துக் கொண்டும் வாழும் நவீன மனிதர்களுக்கு உறவின் உச்சத்தையும், கொண்டாட்டத்தின் மகிழ்வையும் உணர்த்துவதாக இவ்விழாக்கள் அமைகின்றன.

> "கோயில் என்றாலே திருவிழா. திருவிழா என்றாலே கோயில். விழாக்கள் சமயத்தின் கூறாக மட்டுமின்றி கலைகளின் வளர்ப்புப் பண்ணையாகவும் திகழ்கின்றன. திருவிழாக்கள் பண்பாட்டு உறவை வளர்க்கவும் ஒருமைப்பாட்டுணர்வை வளர்க்கவும் பயன்படுகின்றன"[122]

என்று சக்திவேல் திருவிழாவின் சிறப்பை எடுத்தியம்புகிறார்.

திருவிழா என்பது சமூகத்தின் கூட்டு மனஎழுச்சியாக அமைகிறது. கொண்டாட்டங்களற்ற வாழ்க்கை என்பது சடத்தன்மையையே உருவாக்க முடியும். எனவே வாழ்க்கையை உயிர்ப்புடன் வைக்க முன்னோர்கள் திருவிழா என்பதனை உருவாக்கி வைத்துள்ளனர். கோயில் சார்ந்து சமூகத்தின் மொத்த மனங்களும் அதில் கட்டுண்டு கிடக்கின்றன.

> "பண்பாடு என்னும் முழுமையில் திருவிழா என்பது பல தனிக் கூறுகளை ஒருங்கிணைத்துச் செல்லும் தொகுதி"[123]

என்று கருத முடிகிறது. இது மனித மகிழ்வுறு தருணங்களை உச்சநிலைக்கு எடுத்துச் செல்லுகிறது.

> "திருவிழா என்பது ஓர் ஆண்டின் சமூக - சமய வாழ்வின் உச்சகட்டம் அல்லது சில ஆண்டுகளுக்கு முன்பு நடத்திய திருவிழாவிற்குப்பின் ஏற்பட்டுள்ள சமூக சமய வாழ்வுக்கான உச்ச கட்டம் எப்போதும் இல்லாத அளவிற்குக் கூட்டு நனவிலியில் ஏற்பட்டுள்ள மிகப்பெரிய நெருக்கடியைச் சமாளிக்கச் சேர்ந்த சேர்மமே திருவிழாக் கூட்டம்"[124]

என்பார். சாதிப் படிநிலைகளின் தொகுதியாக இருக்கும் ஊர், திருவிழாவின் போது முரண்பாடுகளைக் களைந்து உறவுக்கான களமாக உருமாறுகிறது. சாதி கட்டமைப்பின் இடைவெளியை அகற்றுவது இத்திருவிழாவின் ஆக்கப்பூர்வமான அம்சமாகும்.

திருவிழாவில் காப்புக் கட்டுதல், வீதியுலா வருதல், பொங்கலிடுதல், பலியிடுதல், பிரார்த்தனை செய்தல், வாக்குக் கேட்டல், சாமி மலை ஏறுதல் ஆகியவை இடம் பெறுகின்றன.

நாட்டுப்புற கோயில் வழிபாடுகளில் சிறப்பாகப் பண்டிகைகள் கொண்டாடப்படுகின்றன. அம்மன் கோயில் பண்டிகைகளில் வாகனம் எடுத்தல், தீவட்டி பிடித்தல், நடை பாவாடை விரித்தல் போன்ற நிகழ்வுகள் இடம் பெறுகின்றன. துணி வெளுக்கும் சமூகப் பிரிவைச் சார்ந்தவர்கள் இத்திருப்பணிகளில் ஈடுபடுவதை அச்சமூகப் பாத்திரக் கூற்றொன்று எடுத்துரைக்கிறது.

> "அம்மங்கோயில் பண்டிகை முதல் அத்தனைக்கும் நாங்கதான் முன்ன வந்து நிக்கிறோம். அம்மன் வாகனம் எடுக்கச்சில தீவட்டி பிடிச்சிட்டு, நாங்கதான் முன்ன போறோம். நடை பாவாட விரிக்கிறோம். கல்யாணமோ, கருமாதியோ எல்லாம் நாங்கதான் முன்னே நின்னு, முறையாகச் செய்கிறோம். பத்திரகாளி வளத்த மக்கள்ல மூத்த மகன் வம்சம் நாங்களும் நாசுவன்மாரும்னு சொல்லுவாவ"[125]

எனக் கோயில் விழாக்களில் அடித்தட்டு சமூகப்பிரிவினருக்கான இடம் சுட்டப்படுகிறது.

அம்மன் கொடைதான் இங்குள்ள கிராமங்களின் முக்கியமான விழாவாகும். இவ்விழாவில் வில்லிசை முக்கிய நிகழ்ச்சியாக இடம் பெறும். இவ்விழா செவ்வாய்க் கிழமையன்று தொடங்கும். கிடாய் வெட்டுதல், கம்பத்தட்டு கொழுத்துதல் ஆகியவை இவ்விழாவின் முக்கிய நிகழ்ச்சிகளாகும். இவ்விழா பெரும்பாலும் மூன்றுநாட்கள் தொடர்ந்து கொண்டாடப்படுகின்றது.[126]

கொடை விழாவை முன்னிட்டு வெளியில் நடைபெறும் வியாபாரங்களும் அவ்விழாவின் மகிழ்ச்சிக்குரிய உந்து சக்திகளாய் அமைகின்றன.

> "கொடைக்குப் பதினைந்து நாளுக்கு முன்னாலேயே ஊர் களை கட்டிவிடும் வளேல்... வளேல் என்று வளையல்காரர் சத்தம் வேட்டி சேலை கண்டா...ங்கி என்று ஜவுளிக்காரர் சத்தம், மிட்டாய் மிட்டாய் சீனிமிட்டாய் என்று தட்டு மிட்டாய்க்காரர் சத்தம், எல்லாரையும் கவரும் பொம்மை மிட்டாய்க்காரர் கிலுக்குச் சத்தம் எல்லாம் ஒன்றாக சேர்ந்து ஊரைக் கலக்கும். பொம்மை மிட்டாய்க்காரர் தன் மூங்கில் கழியில் செக்கச் செவேரென்று கையகலத்தில்

சவ்வு மாதிரிப் பெரிதாக எதையோ சுற்றி வைத்திருப்பார். கொடுக்கிற காசுக்குத் தக்க அதிலிருந்து கொஞ்சம் இழுத்து பிய்த்து காக்காய், மயில், குதிரை... மாடு என்று வெவ்வேறு ரூபங்களில் மிட்டாய்ப் பொம்மை செய்து தருவார்..."[127]

என்று சிறுவர், சிறுமிகளை மகிழ்ச்சிப்படுத்தும் வியாபாரங்கள் பற்றி நாவல் குறிப்பிடுகிறது.

அம்மன் கொடைக் காலங்களில் ஆலியாட்டம், பொய்க்கால் குதிரை ஆட்டம், மயிலாட்டம் போன்ற கலை நிகழ்ச்சிகளும் நிகழ்த்தப்படுகின்றன.[128]

அம்மன்கொடைக் காலத்தில் ஊர் அலங்கரிக்கப்படுகிறது. தெருக்களில் உள்ள புற்கள் வெட்டப்படுகின்றன. கோயில் வெள்ளையடிக்கப்படுகிறது. குருத்தோலை, வேப்பிலை, மாவிலைத் தோரணங்களைப் பனைநாரில் தொடுத்து ஊர் முழுவதும் கட்டுகின்றனர்.[129]

திருக்கார்த்திகைவிழா இங்குச் சிறப்பாகக் கொண்டாடப்படுவது பற்றியும் நாவல் பேசுகிறது. விழாவுக்காகச் சொக்கப்பனைகள் தயார் செய்யப்படுகின்றன. வீடுகள்தோறும் தீபங்கள் ஏற்றப்படுகின்றன. ஊர் முழுவதும் ஒளியால் நிறைகின்றது. திருக்கார்த்திகை விழாவில் கொழுக்கட்டைகளைச் செய்து உண்பதோடு, பிறருக்கும் வழங்கி மகிழ்கின்றனர்.

**நாட்டார் உணவு :**

நாட்டுப்புற சமூகப் பண்பாட்டாய்வில் உணவு பற்றிய ஆய்வுக்கு முக்கிய இடம் உள்ளது. மேற்கத்திய உணவு வகைகளும், சீன உணவு வகைகளும், வடஇந்திய உணவு வகைகளும் நவீன வாழ்வை ஆக்ரமித்துக் கொண்டிருக்கும் இச்சூழலில் நாட்டார் உணவு பற்றிய தேடல் அவசியமாகிறது.

"தொடர்ந்து மரபு வழியாக உண்ணப்பட்டு வரும் உணவுமுறைகளை நாட்டார் உணவு முறை எனலாம். அன்றாட குடும்பம் சார்ந்த நாட்டார் உணவுமுறை வட்டார மரபை அடிப்படையாகக் கொண்டது. அது வணிகமுறை சார்ந்த, நிறுவன மயமாக்கப்பட்ட விடுதி உணவினின்றும் வேறுபட்டது."[130]

என லூர்து குறிப்பிடுகிறார்.

மண்டைக்காட்டு அம்மனை வழிபட வருபவர்கள் மீன் அல்லது தாரா முட்டையை உண்ணுவதை நாவல் எடுத்துக் காட்டுகிறது. மண்டைக் காட்டு அம்மன் கோயிலுக்கருகில் அவித்த தாராமுட்டைகள் வியாபாரம் நடைபெறும். அங்கு வரும் பெரும்பாலான பக்தர்கள் தாராமுட்டையை வாங்கி உண்ணுவது வழக்கம். தாரா

முட்டை தவிர மீனை வாங்கி உண்ணும் வழக்கமும் இங்குவரும் பக்தர்களிடம் உள்ளது.[131]

நெய்தல் நில மக்கள் விருந்தினருக்கு மீன் துண்டுகளையும், ஏற்றங்காய் வறுவலையும் கொடுக்கின்றனர்.[132]

மறுபக்கம் நாவலில் கதைக்களம் கிராமத்தை மையமிட்டதாக அமைகிறது. எனவே கிராம மக்களின் கலாச்சாரம் பண்பாட்டு நடவடிக்கைகள் இதில் விளக்கப்படுகின்றன. நாட்டுப்புற மக்களின் உணவு வகைகள் பற்றியும் இதில் சொல்லப்படுகின்றன. நாட்டுப்புற உணவு வகைகளாக மோதகமும், முறுக்கும் குறிக்கப்படுகின்றன.[133]

குழாய்ப் பிட்டு குமரி மாவட்டத்தினரின் முக்கியமான காலை உணவாகும். பிட்டில் சர்க்கரை தூவியோ, பழம் பிசைந்தோ, சிறுபயிறு சேர்த்தோ, மீன் குழம்பு ஊற்றியோ உண்ணும் வழக்கம் நாகரிக வளர்ச்சிக்குப் பின்னரும் இப்பகுதியில் தொடர்கிறது. நாவலின் நாயகனான சேதுவுக்கு வெங்கடேசன் வீட்டில் குழாய்ப்பிட்டு, பயிறு, முந்திரிப்பருப்பு, பப்படம், வாழைப்பழம் ஆகியவை பரிமாறப்படுகின்றன.[134] இங்குள்ள மக்கள் தேயிலையைச் சாயாஎன்று அழைக்கின்றனர்.[135]

விருந்தினரை உபசரிக்க உன்னியப்பமும் வறுத்த முந்திரி பருப்பும் வழங்கப்படுகிறது. முந்திரிப் பருப்பு இங்குக் கொல்லாங் கொட்டை என்று அழைக்கப்படுகிறது. முந்திரிப் பருப்புக்கு அண்டிப்பருப்பு என்ற பெயரிருப்பதையும் நாவல் கவனத்தில் கொள்கிறது.[136]

விருந்து உபசரிக்க ஆட்டு இரத்தம் கலந்து தயாரிக்கப்பட்ட நெய்ச்சோற்றை வழங்குகின்றனர். இவ்வுணவு பித்தளைச் சட்டியில் வைத்துப் பரிமாறப்படுகிறது.[137]

நாட்டுப் புறங்களில் கிராமத்து மக்கள் பண்டிகைக் காலங்களில் முறுக்கு செய்கின்றனர். முறுக்கு விருந்தினர்களுக்கு வழங்கப்படும் உணவாக உள்ளது.[138]

அவித்த கிழங்கும் மீனும் இரவு உணவாக உண்ணப்படுவதனையும் நாவல் காட்டுகிறது.[139]

சாமை அரிசிச் சோறும், கோழிக்குழம்பும் இணைத்து உணவாக உண்ணப்படுகின்றன.[140]

நாட்டுப்புறச் சிறுவர்கள் விரும்பி உண்ணும் உணவாகக் காரம்பழம் விளங்குகின்றது. [141]

இளைஞர்கள் பறக்கும் வவ்வால்களை முள்ளுப்படல்களால் அடித்துக் கீழே தள்ளி, சுட்டுத் தின்னுகிறார்கள்.[142]

வேட்டைச் சமூகக்காலம் முடிவுற்று விட்டாலும், இன்றளவும் ஆடவரின் மனங்களில் வேட்டையாடுதலின் வேட்கை தொடர்ந்து கொண்டிருக்கிறது. வேட்டையாடும் முயலை உணவாக உட்கொள்ளுவது என்பது வெறும் உணவுப் பழக்க வழக்கம் சார்ந்ததாக மட்டும் அமையாமல், நாட்டுப்புற மக்களின் பொழுது போக்கோடும் தொடர்புடையதாக அமைகிறது.

நாவலில் மூர்த்தி எனும் கதாப்பாத்திரம் வேட்டையாடுவதில் ஆர்வம் காட்டுகிறது. முயலைச் சுட்டுக் கள்ளுடன் உண்ணுவது, மீனைச் சுட்டு உண்பது ஆகியவை அவரது உணவுப் பழக்கமாகக் குறிக்கப்படுகின்றன.

> "மூர்த்தியார் வேட்டைப்பிரியர். முயல் வேட்டைக்குச் சேக்காளிகளோடு புறப்பட்டார் என்றால், நான்கைந்து கொண்டு வந்து விடுவார். காட்டில் தீ வளர்த்து அவற்றைச் சுத்தப்படுத்திச் சுட்டுக் கள்ளுடன் சாப்பிடுவது அவருக்கு நிரம்பப் பிடிக்கும். நல்ல மீன்பாடு காலத்தில் கடற்கரைக்குப் போய் மீன் வாங்கிக் கொண்டு வருவார் மீனைச் சுத்தம் செய்து மிளகு தடவிச் சுட்டு கள்ளோடு சாப்பிடுவார்"[143]

எனத் தீயில் சுட்டுச் சாப்பிடும் பழக்கம் சுட்டப்படுகிறது.

பெரும்பயிறு, சிறுபயிறு ஆகிய சத்தான உணவுகளும் நாட்டுப்புறங்களில் விரும்பியுண்ணப்படுகின்றன. இப்பயிறுவகைகள் அவித்து உண்ணப்படுகின்றன.

அவித்த பயிறின் மேல் தேங்காய் துருவி போடப்படுகின்றது. இதனுடன் சுட்ட சாளை மீன் இணைப்புணவாக உண்ணப்படுவதுமுண்டு. இனிப்புக்குத் தொட்டுக் கொள்ள கருப்பட்டியும் அருகில் வைக்கப்படுகின்றது.[144]

சந்தைக்கு வெளியே இருந்த சாலையோரக் கடைகளில் அவித்த கிழக்கு, பணியாரம், முறுக்கு, நுங்குச்சுளை, சீவி அவித்த பனம்பழம், மாம்பழம், கொல்லாம்பழம், வறுத்த புளியங்கொட்டை ஆகிய உணவுப் பொருட்கள் விற்கப்படுகின்றன. [145]

முந்திரிக்கொத்து எனும் உணவு விருந்துகளில் பரிமாறப்படுகின்றது.[146]

வீடுதேடி வந்தவர்களுக்கு மாம்பழம் கொடுத்தனுப்பும் பழக்கமும் இங்குள்ளது[147]

சர்பத் எனும் குளிர் பானம் கிராமங்களில் விரும்பி அருந்தப்படுகிறது[148] தேனீர் எனும் சுடுதிரவ பானத்தை இங்குள்ள மக்கள் சாயா என்றழைக்கின்றனர்.[149]

குமரி மாவட்டத்தில் பனை மரங்கள் மிகுதியாக இருப்பதால் நுங்கு உணவாக உண்ணப்படுகிறது. நுங்கு உருவாகும் விதம் குறித்து ஷோபனா கீழ்க்காணுமாறு குறிப்பிடுகிறார்.

"பனை மரங்களில் ஆண்பனை பெண்பனை என இருவகை உள்ளது. அவற்றில் பெண்பனையிலிருந்து மட்டுமே நுங்கு கிடைக்கின்றது. பெண் பனைகளில் ஏப்ரல் மாதத்தில் வெளிவரும் பாளைகளில் குரும்பக்காய் தோன்றுகிறது. இது சிறிது சிறிதாக வளர்ந்து நுங்காக மாறுகின்றது. நுங்கில் இளம் நுங்கே உண்பதற்கு ஏற்றது"[150]

என்று குறிப்பிடுகிறார்.

நாவலில் முத்து, சேதுவுக்கு நுங்கை உண்பதற்குக் கொடுக்கிறாள். நுங்கை வெட்டி, முகத்தைச் சீவி, பெருவிரலைக் கண்களுக்குள் செலுத்திக் குடைந்து ஒரு பெரிய பாத்திரத்தில் சேகரித்து அதில் பதநீர் விட்டு அவனுக்குக் கொடுக்கிறாள்.

பனை மிகுந்த நிலப்பரப்பில் பதநீர்கள், கூப்பனி, கருப்பட்டி, நுங்கு, பனம்பழம், அவுண் போன்றவை உணவுப் பொருட்களாக விளங்குகின்றன. பனை மரத்தின் அடியில் ஏற்றுக்காரர்கள் ஊற்றிக் கொடுக்க இன்னொருவர் தரையில் குந்தி வால் பட்டையைக் கையில் பிடித்துப் பருகும் உணவுப் பழக்கம் பழங்காலத்திலிருந்து இன்று வரை தொடர்கிறது.[151]

குமரி மாவட்டத்தில் நீராளம் எனும் திரவ உணவும் உண்ணப்படுகிறது. சுண்ணாம்பு தடவாத பதநீரை நீராளம் என்று அழைப்பர். பல மருந்துகளை ஒன்றாகக் கட்டி உள்ளே போடுவர். இது போதையில்லாத திரவ உணவாகும்.[152]

கூழ்ப்பதனீர் என்பது கூப்பனி என்று அழைக்கப்படுகிறது. கூப்பனி செய்யப்படும் விதம் நாவலில் சுருக்கமாகக் கூறப்படுகிறது.

"பயினியக்குறுகக் காய்ச்சி பாகுப்பருவத்தில் இறக்கி, அண்டிப் பருப்பும் சிறு பயித்தம் பருப்பும் போட்டு, ஆறுமாதம் ஊறவச்சது"[153]

எனக் கூப்பனி உருவாகும் முறை சொல்லப்படுகிறது. கூப்பனியை வைக்க கிண்ணங்களும், அதனை எடுத்துச் சாப்பிட கரண்டியின் வடிவிலமைந்த நறுக்கிய பனைஓலை இலக்குகளும் பயன்படுத்தப்படுகின்றன. பழங்காலங்களில் குமரி மாவட்டத்தில் இத்தகைய உணவு வகைகளே உண்ணப்பட்டு வந்தன. பனை ஏற்றுத் தொழில் அழிந்து வரும் இக்காலத்தில் பனையிலிருந்து தயாரிக்கப்படும் உணவுப் பொருட்களும் அருகி வருகின்றன.

"ஒரு காலத்துல எங்க சாதிக்கி மொத்த ஆகாரமே பயினியும், அதில இருந்து உண்டாக்கப்பட்ட பண்டங்களுந்தான். அதோட, மீனும், பயிறு வகைகளுஞ் சேரும். அரிசி எங்காது எப்பாவது ஆடிக்கி ஆவணிக்கித்தான். இப்பப் பாருங்க எல்லாமே தலைகீழாப் போச்சி"[154]

என்ற பாத்திரக்கூற்று மேற்காட்டிய கருத்தை உறுதி செய்கின்றது.

கூழ்ப்பதனீர் எனும் கூப்பனி காய்ச்சும் முறையும் நாவலில் கூறப்படுகிறது. அடுப்புகளில் தீ வேகமாக எரிகிறது. அடுப்புகளின் மேலே பெரிய மண்பானைகள் வைக்கப்பட்டுள்ளன. சுருள் சுருளாகப் படரும் புகை மண்டலத்துக்குள் வியர்த்துக் கருத்துப் போன பெண்கள் குனிந்து தீயைக் கிண்டி விடுகின்றனர். பானைகளில் கொதிக்கும் பதனீரைக் துடுப்பு மட்டைகளால் கலக்குகின்றனர். அவ்வப்போது மட்டையைத் தூக்கி முகர்ந்து பார்த்துக் கொள்ளுகின்றனர். மட்டையில் ஒட்டிக் கொண்டிருக்கும் தேன் நிறக்கூழை விரல்களால் தொட்டுப் பருவம் பார்க்கின்றனர். பாம்படம் போட்ட பெண்கள் காவோலைகளை வெட்டி விறகுக்குப் பயன்படுத்துகின்றனர். சில பெண்கள் வெற்றிலையை மென்று கொண்டே வேலைகளைக் கண்காணிக்கின்றனர். பதநீர் பக்குவப்பட்டு இறுகும் மணம் மூக்கில் அடிக்கிறது. அதன்பின் தீயின் வேகம் குறைக்கப்படுகிறது. கருப்பட்டித் தயாரிப்புக்காகத் தேங்காய்ச் சிரட்டைகள் கழுவி மண்ணில் பரப்பப்படுகின்றன. பருவம் வந்தபின் கூப்பனிப் பானைகள் இறக்கப்படுகின்றன. நீண்ட அகப்பைகளால் அள்ளப்பட்டு அவை சிரட்டைகளில் நிரப்பப்படுகின்றன.[155]

பனையிலிருந்து கிடைக்கும் உணவுப் பொருட்களைப் பொன்னீலன் தொகுத்துரைக்கிறார்.

> "ஆண்டு பிறப்புக்குப் பெட்டி நிறைய கருப்பட்டி, உளக்காம் பெட்டி நிறைய கற்கண்டு, வெண்ணெய் மாதிரி ஒரு தூரை நிறைய வீணிக் கருப்பட்டி, வாரந்தோறும் இள நொங்கு, மாலைப் பயினி எவ்வளவு சுமந்திருப்பார் அவர்"[156]

என்று கூறுமிடத்து பனையிலிருந்து கிடைக்கும் உணவுப் பொருட்கள் பலவற்றை அறியமுடிகிறது. சடைச்சாமி எனும் ஊர்சுற்றிச்சாமி பதநீர், கருப்புக் கட்டி, அவித்த பயிறு ஆகியவற்றைச் சாப்பிடுகிறார். கள் குடித்து, சாளை மீனைச் சுட்டுச் சாப்பிடுகிறார். [157]

## நாட்டுப்புற விளையாட்டுகள் :

நாட்டுப்புறவியலின் ஒரு கூறாக நாட்டுப்புற விளையாட்டுக்கள் அமைகின்றன. கிராமங்களைச் சுறுசுறுப்புடன் இயக்குவது இவ்விளையாட்டுக்களாகும். நாட்டுப்புற விளையாட்டுக்கள் நாட்டுப்புற மக்களின் ஒற்றுமையுணர்வு, போராட்ட மனம், விதிமுறைக்குட்பட்ட இயக்கம், வெற்றியை நோக்கிய தேடல், தோல்வியை எதிர்கொள்ளும் மனம், தலைமைத்தன்மை ஆகியவற்றை வளர்க்கிறது. சக்திவேல்,

"நாட்டுப்புற மக்களின் நாகரிகத்தோடும், பண்பாட்டோடும் விளையாட்டு இணைந்ததாகும். விளையாட்டு என்பது வெளித்தூண்டல்களின்றி மகிழ்ச்சியூட்டும் செயல்களில் இயற்கையாக ஈடுபடுவதாகும்"[158]

என்கிறார்.

குமரி மாவட்ட ஊர்ப்புறங்களில் விளையாடும் சிறுவர் விளையாட்டுக்களைப் பொன்னீலன் சுட்டிக்காட்டுகிறார். தொட்டு விளையாடுதல், ஒளித்து விளையாடுதல், சடுகுடு, கிளித்தட்டு ஆகியவிளையாட்டுக்களின் பெயர்களைச் சுட்டுகிறார். இதில் ஒளித்து விளையாடுதல் இங்குப் 'பாட்டம் ஒளிச்சி' என்ற பெயரில் அழைக்கப்படுகிறது. ஐஸ் வியாபாரம் செய்பவரிடமிருந்து ஐஸ்களை வாங்கி ஒருவர் சட்டையில் ஒருவர் போட்டு விளையாடும் விளையாட்டையும் சிறுவர்கள் விளையாடுகின்றனர்.[159]

நெய்தல் நிலத்தில் வாழும் சிறுமிகள் வேப்பமர நிழலில் வட்டமாக உட்கார்ந்து மணற் குவியலில் வாளி விட்டு விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். வாளி விளையாட்டு என்பது குமரி மாவட்ட நாட்டுப்புற விளையாட்டுக்களில் ஒன்று ஆகும்.[160] சிறுவர், சிறுமிகள் ஈரமான மணலைக் குவித்து வைத்து விட்டு, வாளி வேகமாகச் செல்வதற்கேற்ற வழியை உருவாக்குவர். வாளி பளபளப்பாக ஆகத் தமது உடையில் வைத்தே அதனைத் தீட்டுவர். அதிக தூரத்திற்கு வந்த வாளியை விட்டவர் வெற்றி பெற்றவராவர். இவ்விளையாட்டு கடற்கரை கிராமங்களில் மட்டுமின்றி, கடற்கரையை ஒட்டியுள்ள பகுதிகளிலும் விளையாடப்படுகின்றது.

சிறுவர்கள் விளையாடும் 'நுங்கு வண்டி விளையாட்டு' பற்றியும் நாவல் குறிப்பிடுகிறது.[161] பனை மரத்திலிருந்து நுங்கு வெட்டியபின் சுரண்டி குடித்து எறியப்பட்ட நுங்குகளில் இரண்டை எடுத்து அதன் மையத்தில் ஒரு கூர்மையான குச்சியைக் குத்தி வண்டியாக மாற்றி, கவுளி உடைய கம்பால் தள்ளிச் செல்வது இவ்விளையாட்டு ஆகும். சிறுமிகள் ஊஞ்சல் கட்டி விளையாடுவதனையும் நாவல் காட்டுகிறது.

நாட்டுப்புற விளையாட்டுக்களில் பட்டம் விடுதலும் ஒன்று ஆகும். நாவலின் கதைக்களமான பனைவிளையில் பட்டம் விடும் விளையாட்டு விளையாடப்படுவதைப் பொன்னீலன் காட்சி முறை எழுத்தாக வாசகர்களுக்கு வழங்குகிறார். அம்மன் கோயிலின் பரந்த மைதானத்தில் இவ்விளையாட்டு விளையாடப்படுகிறது. இங்குள்ள இளைஞர்கள் பட்டம் விடும் முயற்சியில் தீவிரமாக ஈடுபடுகின்றனர். அது இரண்டு முழ உயரமும் ஒன்றரை முழ அகலமும் கொண்ட ஏழு கொம்புச் சன்னல் பட்டம் ஆகும். கற்றாழை நாரில் பின்னப்பட்ட ஈர்க்கு பருமனுள்ள கயிற்றால் அப்பட்டம் கட்டப்பட்டுள்ளது. ஒரு இளைஞன் பட்டத்தைக்

கிழக்கே தூரத்தில் உயர்த்திப் பிடித்துக் கொண்டு நிற்கிறான். மேற்கு திசையில் மற்றொரு இளைஞன் கயிற்றைப் பிடித்தபடி நிற்கிறான். மீதிக்கயிறு இரண்டு மைல் நீளத்துக்கு நீண்டுள்ளது. அக்கயிறு கட்டையில் சுற்றப்பட்டுள்ளது. சுற்றிலும் பத்திருபது பேர் காற்றை எதிர்பார்த்து அங்குமிங்கும் தலையைத் திருப்பியபடி நிற்கின்றனர். திடீரெனக் காற்று வேகமாக வீசுகிறது. பட்டத்தைப் பிடித்திருந்தவன் அது உயரே செல்வதற்கு ஏற்ற வகையில் மேல்நோக்கி உந்தும் அதே நேரம், கயிற்றைப் பிடித்திருந்தவன் இழுத்தல், விடுதல் ஆகிய உத்திகளைப் பயன்படுத்தி பட்டத்தை மேலே ஏற்றுகிறான். எதிர்காற்றுக்கேற்ப பட்டம் மேலே ஏறும்படி அவன் கயிற்றை விட்டுக் கொடுக்கிறான். சிறிது நேரத்தில் பட்டம் ஆகாய வெளியில் ஏறி வாலை அங்குமிங்கும் ஆட்டியபடி, கம்பீரமாகப் பறக்கின்றது. பட்டத்தில் கட்டப்பட்டிருந்த உறுமியின் முழக்கம் சுற்றிலும் உள்ள ஊர்களுக்கெல்லாம் கேட்கிறது. காற்றின் வேகத்தால் பட்டம் இழுத்துக் கொண்டு செல்கிறது. அதனால் இளைஞன் கயிற்றைப் பக்கத்திலிருந்த வேப்ப மரத்தில் கட்டுகிறான்.[162] இதில் பொன்னீலன் சொற்களால் ஒரு நேரலைப் பதிவைத் தருகிறார்.

குழந்தைகள் மரைக்காப்பிள்ளை வைத்து விளையாடுவது பற்றிய குறிப்பும் நாவலில் உள்ளது. ஓலையில் பொம்மை செய்து வைத்து இது விளையாடப்படுகிறது. பனை நிறைந்த பகுதிகளில் பனை ஓலையில் பொம்மை செய்து விளையாடுவது இயல்பான ஒன்றாகும்.

குமரி மாவட்டம் குளங்களும் ஆறுகளும் நிறைந்த பகுதி என்பதால் தண்ணீருடன் தொடர்புடைய விளையாட்டுக்களைக் காணமுடிகிறது. பெண்கள். தண்ணீரில் நீச்சலடித்தல், தொட்டு விளையாடுதல் ஆகிய விளையாட்டுக்களை விளையாடுகின்றனர். இளைஞர்கள் ஆற்றுக்குள் குட்டிக்கரணம் அடித்து விளையாடுகின்றனர். ஒற்றைக் கரணம், இரட்டைக்கரணம், முன் கரணம், பின்கரணம் எனப் பலவகைக் குட்டிக்கரணங்கள் உள்ளன."[163]

கிராமப்புறங்களில் வாழும் சிறுவர்கள் பொன்வண்டு வளர்ப்பதைப் பொழுது போக்காகச் செய்கின்றனர். பொன்வண்டைத் தேடிப்பிடித்து அதனைப் பெரிய தீப்பெட்டியில் அடைத்து அதற்குரிய உணவை உள்ளே போட்டு வளர்ப்பார்கள். நாவலில் சங்கரன் சிறுவயதில் பொன்வண்டு தேடியலைந்த பழைய நினைவுகளை அசைபோடுகிறார்."[164]

## நாட்டுப்புற மருத்துவம் :

நாட்டுப்புற மக்கள் பின்பற்றும் மந்திர மருத்துவம், இயற்கை மருத்துவம், சடங்கு சார்ந்த மருத்துவம், சித்த மருத்துவம் போன்றவற்றை நாட்டுப்புற மருத்துவம்

என்று கூறலாம். இது நாட்டு வைத்தியம், கை மருத்துவம், பாட்டி வைத்தியம், மூலிகை மருத்துவம் எனப் பல பெயர்களில் அழைக்கப்படுகின்றது. தொல் பழங்காலம் முதல் தற்காலம் வரை நாட்டுப்புற மருத்துவம் நோய்களுக்கான தீர்வாக நம்பப்பட்டு வருகிறது.

"நாட்டுப்புற மருத்துவம் அதர்வணவேத காலத்திலேயே நடைமுறையில் இருந்தது. அறிவியல் நாகரிக இயந்திர வளர்ச்சி பெற்ற இக்காலத்திலும் கூட, கிராமப்புறங்களில் நாட்டுப்புற மருத்துவமுறை வழக்கில் உள்ளது"[165]

என்பர்.

பொன்னீலன் குமரி மண்ணில் பின்பற்றப்படும் சில மருத்துவ முறைகளைச் சுட்டிச் செல்லுகிறார். காலில் முள்தைத்தால் இங்குள்ள மக்கள் மஞ்சளைத் தீயில் சுட்டு எண்ணெயில் உரசி முள்தைத்த இடத்தில் பூசுகின்றனர்.[166]

பனை ஏறும் தொழிலைச் செய்பவர்கள் அடிக்கடி பனையிலிருந்து கீழே விழுந்து விடுவதால் அவர்கள் நாட்டுப்புற மருத்துவத்தையே நம்பியிருந்தனர். மூர்த்தி, பண்டாரக்குட்டி போன்ற வர்மக்கலை வைத்தியம் தெரிந்தவர்கள் அவர்களுக்கு மருத்துவ உதவி செய்தனர்.[167]

மீன் பிடித்தொழில் செய்பவர்களும் வர்மக்கலை வைத்தியர்களைச் சார்ந்திருந்தனர். பனையிலிருந்து விழுந்து அடிபட்டவர்களை மூர்த்தியிடம் அழைத்துச் சென்றால் அவர் முதலில் அடிபட்டவருக்கு நினைவு இருக்கிறதா என்பதைச் சோதிப்பார். தன் ஆசானை வணங்கி விட்டு, பெருவிரல்களைக் கொடுத்து இரண்டு விலாப்புறத்திலும் அமுத்துவார். நொறுங்கிக் கிடப்பவரும் அவ்வழுத்தத்தில் கண்திறந்து விடுவர். பிறகு ஒடிந்திருக்கும் எலும்புகளைக் கண்டறிந்து மருத்துவம் செய்வார். வர்மக்கலை தெரிந்த வைத்தியர்கள் முறிவு கட்டும் முறைக்குச் சான்றாக மூர்த்தியின் வைத்திய முறையைக் குறிப்பிட முடியும்.

"மூர்த்தியார் முறிவு கட்டும் முறையே விசேசமாக இருக்கும், எப்படி விழுந்தாய், ஏன் விழுந்தாய் அன்று அவனிடம் கதை கேட்டுக் கொண்டே இருப்பார். முறிந்த இடத்தை அவர் கை தடவிக் கொண்டே இருக்கும். திடீரென்று ஆ . . . என்பான் ஒடிந்தவன். அதற்குள்ளே எலும்புகளை இழுத்துப் பொருத்தி, நேராக்கியிருப்பார் அவர். அவ்வளவு கை நிச்சயம். அவர் குடும்பத்துக்கென்றே சில எண்ணெய்கள் உண்டு. பூட்டனார் காலத்திலிருந்தே, பேர் கேட்ட எண்ணெய்கள். அதுகளைக் காய்ச்சிப் பாதுகாப்பாக வைத்திருப்பார். அதில் முறிவுக்குள்ள எண்ணெயைத் துணியில் நனைத்து முறிந்த இடத்தில் சுற்றி மெல்லிய மட்டைகளை வைத்துக் கட்டிவிட்டாரென்றால் எண்ணிப் பதினைந்தாம் நாள் அவன்

திரும்ப முருக்குத் தடியும் அரிவாள் பெட்டியும் தூக்கிக் கொண்டு பனைக்குப் போய் விடுவான்"[168]

என்பதில் எண்ணெய் பூசுதல், கட்டுதல் போன்ற நாட்டுப்புற மருத்துவ முறைகளைக் குறிப்பிடுகிறார்.

## நாட்டுப்புற ஆயுதங்கள் :

நாட்டுப்புற மக்கள் தங்கள் வன்மங்களைத் தீர்த்துக் கொள்ள ஆயுதங்களைப் பயன்படுத்துகின்றனர். இயந்திரத் துப்பாக்கியையோ, பீரங்கியையோ, அணுகுண்டையோ அவர்கள் நாடுவதில்லை. வாள், குண்டாந்தடி, ஈட்டி தீவட்டி போன்வற்றை எதிரிகளை வீழ்த்தப் பயன்படுத்துகின்றனர். கடப்பாறை, கோடாலி, மண்வெட்டி ஆகியவை எதிரிகளைத் தாக்கும் ஆயுதங்களாகப் பயன்படுத்தப்படுகின்றன.[169]

எதிரிகளைத் தாக்க வேளாமுள், திரைச்சிவால், தொளவைக் கம்பு, உலக்கை, கோடாலிக் காம்பு போன்ற ஆயுதங்களைக் கிராமப்புற மக்கள் பயன்படுத்துகின்றனர். உலக்கையுடன் குண்டாந்தடி என்ற ஆயுதத்தையும் இங்குள்ள மக்கள் வைத்துள்ளனர்.[170]

மீனவர்கள் தீப்பந்தங்கள், திரைச்சி வால்கள், வேளாமுட்கள், உலக்கைகள், விறகுக் கட்டைகள் ஆகிய ஆயுதங்களைப் பயன்படுத்துவதை நாவல் எடுத்துக் காட்டுகிறது.[171]

## ஊர்ப்பெயராய்வு :

தமிழ்ச்சூழலில் ஊர்ப் பெயர்கள் பெரும்பாலும் இடுகுறிப் பெயர்களாக அமைவதில்லை. அவை காரணப் பெயர்களாக அமைந்துள்ளன. ஊர்ப்பெயர்களின் பின்னால் தொன்மக்கதைகள், புராணச் செய்தி, வரலாற்று நிகழ்வு, ஆளுமைகள் பற்றிய பதிவு, சாதிசமயப் பின்புலம் ஆகியவை அமைந்துள்ளன.

"இடப்பெயர்களை இடவரலாற்றின் காலப்பெட்டகம் எனலாம். ஊர்ப்பெயர்கள் பழமை எச்சங்களாக நின்று மனித வரலாற்றையும் பண்பாட்டையும் விளக்குகின்றன"[172]

மறுபக்கம் நாவலின் கதை மண்டைக்காட்டைச் சுற்றி நிகழ்வதால் மண்டைக்காடு என்ற ஊரின் பெயர்க்காரணத்தை ஆசிரியர் ஆராய்கிறார்.

மண்தைக்காடு என்பதே மண்டைக்காடு என மருவியிருக்க முடியும் என்றொரு விளக்கத்தை அவர் கூறுகின்றார். மண்நிறைந்த குறுங்காடு என்பது அதன் பொருளாகும். ஆரம்ப காலத்தில் மண்டைக்காட்டிலமைந்த அம்மன்

கோயிலிலோ, காளி கோயிலிலோ நரபலி கொடுக்கப்பட்டு, இக்காட்டில் மண்டையோடுகள் நிறைந்து கிடந்திருக்கலாம் என்றும் அதனால் மண்டைக்காடு என்ற பெயர் வந்திருக்கலாம் என்றும் மற்றொரு பெயர்க்காரணத்தைக் கூறுகிறார்.[173]

மறவன்குடியிருப்பு, கலயம் இறக்கும் குடியிருப்பு ஆகிய ஊர்களின் பெயர்ப் பொருத்தங்களை நாவல் சுட்டுகிறது.

> "அப்புறம் மறவன் குடியிருப்பு ஊர், அதப்பற்றியும் கொஞ்சம் விசாரிச்சேன். பேருக்கேத்தபடி எதுக்கும் அஞ்சாத ஆளுகள்தான், பக்கத்துல இருக்கே கலைநகர் அதோட உண்மையான பேரு என்ன தெரியுமா? கலயம் இறக்குங் குடியிருப்பு. நாஞ்சில் நாட்டைப் பிடாகைகளாப் பிரிச்சிருந்த காலத்தில, வரிக் கலயங்கள சேமிச்சி வைக்கிற இடமாம். அதப் பாதுகாக்குறதுக்காகப் பாண்டியில் இருந்து கொண்டு வரப்பட்ட மறவர்படை குடியமர்த்தப்பட்ட இடந்தான் மறவன் குடியிருப்பாம்"[174]

என ஊர்ப் பெயர்கள் காரணப் பெயர்களாய் அமைவதைப் பொன்னீலன் உணர்த்துகிறார்.

கோவளம் என்ற ஊருக்கு முதலிலிருந்த பெயர் கோவைகுளம் என்று குறிப்பிடுகிறார்.[175] கோவளத்துக்கு வடக்கேயுள்ள மன்னத்தேவன் பாறையின் பெயர்க்காரணத்தையும் நாவல் அலசுகிறது. பழங்காலத்தில் மன்னன், மதிப்பன் என்ற இரு தளபதிகள் செண்பகராமனிடம் தளபதிகளாக இருந்தவர்கள். அவர்களுக்குப் பூர்வீகம் வள்ளியூர் ஆகும். அவர்கள் போரில் இறந்து போனதால் இங்குள்ள மக்கள் பீடம் அமைத்து வழிபடுகின்றனர். மன்னன் மதிப்பன் ஆகியோரை நினைவூட்டும் வண்ணம் மன்னத்தேவன் பாறை என்ற ஊர்ப் பெயர் அமைந்துள்ளது.[176]

வேதக்காரக் குடியிருப்பு என்ற ஊருக்கு அப்பெயர் வருவதற்கான காரணம் கிறித்தவர்கள் அங்கு மிகுந்திருப்பது என ஆசிரியர் குறிப்பிடுகிறார்.[177]

## நாட்டுப்புறக் கதைகள் :

எழுத்திலக்கியம் புழக்கத்திற்கு வருவதற்கு முன்னரே கதை சொல்லும் கலை நாட்டுப்புற மக்களிடம் இருந்து வந்துள்ளது. மனிதனின் இலட்சியங்கள், கனவுகள், ஆசைகள், வெற்றிகள், தோல்விகள், எதிர் வினைகள் போன்றவை கற்பனையோடு கதைகளாகியுள்ளன.

> "நாட்டுப்புறக் கதைகள் வாய்மொழியாகப் பரப்பப்படுவதாகும். மரபு வழிப்பட்டதாகும். பல நூற்றாண்டுக் காலமாக வாய்மொழியாக மக்களிடையே வழங்கி வருவதால், மாற்றத்தைக் காண்கிறோம். மூல ஆசிரியர் யாரென அறியவொண்ணாமையும் ஒருவித வாய்ப்பாட்டுக்குள் அடங்குவதும் நாட்டுப்புறக் கதைகளுக்கும் பொருந்தும்"[178]

என்பர், புராணக்கதைகள், பழமரபுக் கதைகள், வரலாற்றுக் கதைகள், சாதாரணக் கதைகள், துணுக்குக் கதைகள் எனப் பல வகைளை இதில் காண முடிகிறது.

## சிவனணைஞ்சி அம்மை கதை :

சிவனணைஞ்ச பெருமாள் சாமி மற்றும் சிவனணைஞ்சி அம்மையைப் பற்றிய நாட்டுப்புறக் கதையொன்று குமரி மாவட்டத்தில் வழக்கத்தில் உள்ளது. பொன்னீலன் இக்கதையை மறுபக்கம் நாவலில் எடுத்தாளுகிறார். இத்தகைய நாட்டுப்புறக் கதைகள் நெடுங்கதையின் நடுவே குறுங்கதைகளாய்க் கிடந்து அழகூட்டுகின்றன. சிவனணைஞ்சி அம்மையின் கதை முன்னர் குமரி மாவட்டத்தில் வில்லுப்பாட்டாகப் பாடப்பட்டு வந்துள்ளது. இக்கதையில் மன்னர் குலமும் துணிவெளுக்கும் சமூகமும் ஒன்றிணைக்கப்படுகின்றன. நாட்டார் வழிபாடுகளின் அடிப்படைக் கூறாக அமையும் 'தியாக மரணம்' இக்கதையிலும் அடிக்கருத்தாக அமைகிறது.

> "சிவனனைஞ்ச பெருமாள் சாமியும் சிவனணைஞ்சி அம்மையும் அருள் பாலிக்கிற கிராமக் கோயில் அது. சிவனணைஞ்சியம்மை சாதியில் வண்ணார். சிவனணைஞ்சபெருமாள் தென்காசிராசா, கல்யாணமாகாதவர். அவர் குடும்பத்துக்குத் துணி வெளுக்கிறார். சிவனணைஞ்சி கலியாணமாயி ஒரு பிள்ளையும் இருக்கிறது அவருக்கு. ராசா சிவனணைஞ்சியை விரும்பி அவரை வசப்படுத்தி தன் அரண்மனையில் தன்னோடேயே வைத்துக் கொள்கிறார். கோபமடைந்த வண்ணார்கள் வண்ணார்படை திரட்டி, ராசாவோடு போர் தொடுத்து, அவரை வெட்டிக் கொல்லுகிறார்கள். ராசா எரிகிற தீயில் விழுந்து சிவனணைஞ்சியும் சாகிறார். இரண்டு பேரையும் தென்பகுதி மக்கள் தெய்வமாக வணங்குகிறார்கள்"[179]

என அந்நாட்டுப்புறக்கதை சொல்லுகிறது.

## மண்டைக்காட்டு அம்மன் கதை :

மண்டைக்காட்டு அம்மன் பற்றிய இன்னொரு வாய்மொழிக் கதையும் நாவலில் இடம் பெற்றுள்ளது. இக்கதையை அலெக்சுவின் வேண்டுகோளுக்கு இணங்க சுயம்பு சேதுவுக்குப் புரியும் வண்ணம் சொல்லுகிறான். மேக்க, யாவாரம், சக்கடாவண்டி, அவிய போன்ற வழக்காற்றுச் சொற்களைக் கொண்டு சுயம்பு கதை சொல்லுகிறான். இக்கதை வாய்மொழி மரபில் தொன்மங்களின் இணைவை உறுதி செய்வதாய் அமைகிறது.

"மேக்க கேரளத்தில இருந்து யாவாரத்துக்குச் சக்கடா வண்டியில் நாலஞ்சு பேர் வந்திருக்காவ. பொழுது அடஞ்சி போச்சி. ஏதாவது சாப்பிடவும், படுக்கவும் இடம் கிடைக்குமான்னு ஒரு வீட்டுல போயிக் கேட்டிருக்காவ. அவிய என்ன செய்திருக்காவ யாரும் போவாத இந்தக் காட்டைக் கைகாட்டி, அதோ அந்தக் காட்டுக்குள்ள பாருங்க, விளக்கு தெரியுவா? அங்க போனா, உங்களுக்குச் சோறுங் கிடைக்கும். தங்க இடமும் கிடைக்கும், அப்டின்னு அனுப்பி விட்டிருக்காவ. இவியளும் அத நம்பி காட்டுக்குள்ள வந்திட்டாவ. இங்க வந்தா ஒரு குடிச அதில ஒரு வெள்ளை உடுத்த அம்ம. அந்த அம்ம இவியள வரவேற்றுச் சோறு கொடுத்துத் தங்க இடமுங் கொடுத்திருக்காவ. விடியக்காலம் இவிய எந்திரிச்சிப் பாக்கச்சில, வீட்டையுங் காணல்ல, அந்த அம்மையையுங் காணல்ல. வெறுங்காடு அந்த இடத்தில என்ன இருக்கு? ஒரு புற்று இருக்கு! அந்தப் புற்ற அவிய சாமியாக வணங்கியிருக்காவ. அதுதான் காலப்போக்கில கோயிலா வளந்திருக்கு. இப்ப இருக்கிற சிலை அறநிலையத்துறை வச்சது. பின்னால இருக்கக் கூடிய புற்றுதான் பூர்வீகமானது. சந்தனத்தத் தெளிச்சி அது வளர்ந்திட்டு"[180]

என்பதில் இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்வுகள் இடம் பெற்றுள்ளன.

மண்டைக்காட்டம்மன் பற்றி பல்வேறு வாய்மொழிக் கதைகள் உலவி வருகின்றன. அவ்வாய்மொழிக் கதைகள் பொன்னீலனால் எழுத்து மொழியாக மாற்றப்படுகின்றன. அதில் ஒன்று மணல் புற்றில் இரத்தம் வடிந்த கதையாகும்.

"சின்னப்பயலுவ அதில மாடு மேய்பானுவளாம். மாடு மேயச்சில, அவனுவ மணலைப் புற்று மாதிரிக் குவிச்சி, சாமிவச்சி விளையாடுவானுவளாம். சாயங்காலம் வீட்டுக்குத் திரும்பச்சில அதைக் காலால அழிச்சிட்டுப் போயிருவானுவளாம். அப்றம் ஒரு நாள் சாயங்காலம் எப்போதும் போல அந்த மணலக் காலால அழிக்கச்சில, அதில இருந்து ரத்தமா வடியுவாம். பயலுவ பயந்து போயி, ஊர்ல இதச் சொன்னனுவளாம். ஊர்கார வந்து பாத்தா மணற்புற்றில ரத்தம் வடிஞ்சிக்கிட்டே இருக்காம். அவியளும் பயந்து

போயி, அதுக்குப் பூச குடுத்தாவளாம். இப்பவும் அது புற்று மாதிரிதான் இருக்கு. இப்படித்தான் பழைய ஆளுவ சொல்லுவாவ"[181]

என்பதில் மண்டைக்காட்டம்மன் பற்றிய வாய்மொழிக்கதை எடுத்தாளப்படுகிறது. அலெக்சின் கூற்றாகச் சொல்லப்படும் இக்கதை, பிறசமயத்தவர்களும் மண்டைக் காட்டம்மன் பற்றிய வாய்மொழிக்கதைகளை அறிந்திருந்தமையைப் புலப்படுத்துகிறது.

மண்டைக்காட்டம்மை பற்றிய மற்றொரு கதையையும் பொன்னீலன் நாவலில் தருகிறார். இக்கதை சாதிய இயல்புகளை ஏற்பது போலவும், சாதிய முரண்களை நியாயப்படுத்துவது போலவும் அமைந்த கதையாகும். நாவலாசிரியர் முற்போக்காளராக இருந்தாலும், வாய்மொழிக் கதைகளில் தணிக்கைகளோ, திருத்தங்களோ செய்யாமல் அப்படியே தருகிறார்.

மண்டைக் காட்டம்மை ஒரு நம்பூதிரி வீட்டில் பிறந்தவர். அவர்களது வீட்டில் ஒரு தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த சிறுவன் மாடு மேய்க்கும் வேலை பார்த்து வந்தான். அச்சிறுவனுக்கு வேதம் கற்கவேண்டும் என்ற ஆசையில் தொலை தூரத்துக்கு ஓடிச் சென்று விடுகிறான். அங்கே சென்று தான் ஒரு நம்பூதிரியின் மகன் என்று பொய் சொல்லுகிறான். வேதம் கற்றுத்தரும்படி ஒரு நம்பூதிரியை வேண்டுகிறான். இவன் நம்பூதிரியிடம் ஒன்பது ஆண்டுகள் வேதம் கற்கிறான். மண்ணைப் பொன்னாக மாற்றுதல், சுகமில்லாதவனைச் சுகமாக்குவது உள்ளிட்ட எல்லா வித்தைகளையும் கற்றுக் கொடுக்கிறார். கல்வி கற்று முடித்தபின் அத்தாழ்த்தப்பட்டவன் மண்டைக்காட்டுக்கு வந்து ஒரு குடிசையில் வாழ்ந்தான். அங்கு ஏழைகளுக்கு மண்ணைப் பொன்னாக்கிக் கொடுக்கிறான். உடல் நலம் சரியில்லாதவர்களைக் குணமாக்குகிறான். இதையறிந்த மண்டைக்காட்டு நம்பூதிரி அவனை விசாரிக்கிறார். அவன்தான் வேறு பகுதியிலுள்ள நம்பூதிரியின் மகன் என்று பொய் சொல்லுகிறான். மண்டைக்காட்டு நம்பூதிரி அவனை வீட்டுக்கு அழைத்துவந்து தனது மகளைத் திருமணம் செய்து கொடுக்கிறார். அவர்களுக்கு ஒரு காத தூரத்துக்கப்பால் ஒரு வெங்கலக் கோட்டை கட்டி, நடுவில் ஒரு வீடும் வைத்துக் கெடுக்கிறார்.

மண்டைக்காட்டம்மைக்கு முதலாவது ஒரு ஆண்குழந்தை பிறந்தது. நாலு வயதில் அதனை வேதம் கற்க குருக்களிடம் அனுப்பினால், அக்குழந்தை வேதம் கற்காமல் குளத்துக்குப்போய் மீன் பிடித்துத் தின்று விட்டு வீட்டிற்கு வரும். அதனைத் தொடர்ந்து பிறந்த இரு ஆண் குழந்தைகளும் இதே செயலையே செய்தனர். மண்டைக்காட்டு நம்பூதிரிக்குப் படிப்படியாக உண்மை விளங்குகிறது. உண்மையை உணர்ந்த மண்டைக்காட்டம்மையின் செயல் பயங்கரம் நிறைந்து.

> "மண்டைக்காட்டு அம்மைக்க புருசன் சாயங்காலமா வீட்டுக்கு வாறார். தோழி மார்க்கிட்ட அம்ம சொல்றா, இன்னிக்கி நூற்றி ஒரு கூட்டும் பால்ப் பாயாசமுமா விசேசமான சாப்பாடு வையிங்க. சாப்பிட்ட பிறகு, மண்டைக்காட்டம்மை தோழிமாரக் கூப்பிட்டு, உங்களுக்கு எவ்வளவு பணம் வேணுமோ, எவ்வளவு சொர்ணம் வேணுமோ, எவ்வளவு துணி வேணுமோ, எடுத்துக்கிட்டு, ஒங்க ஒங்க வீடுகளுக்குப் போங்க. நாளை காலையில வந்தாப் போதும் என்கிறா. அதுக போனதும் புருசனுக்கும் பிள்ளைகளுக்கும் தனித்தனியாகப் படுக்கை விரிச்சி, உறங்க வச்சா. வெங்கலக் கோட்டைக் கதவச் சங்கிலியால கட்டிப் பூட்டுப் போட்டா. அவளும் ஒரு படுக்கையில படுத்துக்கிட்டுச் சொல்றா, 'நான் பத்தினியா இருந்தா, இந்தக் கோட்டைக் குள்ள அக்கினி மழை பெய்யணும், இந்தக் கோட்டை எரியணும். இப்படிச் சொன்னதும், அக்கினி மழை பெஞ்சது. மூணு பிள்ளையோடையும் புருசனோடையும் மண்டைக்காட்டு அம்மை செத்தா"[182]

மேற்காட்டிய கதையில் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்தவன் ஆக்கப்பூர்வமான விஷயத்துக்காகப் பொய் உரைத்ததைத் தவிர வேறு எந்தத் தவறையும் செய்யவில்லை. வேதத்தைக் கற்றது, அற்புதம் நிகழ்த்தியது போன்றவை உயர்வான விஷயங்களே ஆனால் அவனும் அவனது குழந்தைகளும் அழிக்கப்படுகின்றனர். சாதி வேறுபாட்டின் பயங்கரத்தை விளக்குவதாக இவ்வாய்மொழிக்கதை அமைந்துள்ளது.

**பத்ரகாளியின் கதை :**

சாதிகளின் தோற்றம் பற்றிய தொன்மக்கதைகள் நாட்டுப்புறங்களில் வழங்கி வருகின்றன. பக்தவத்சலபாரதி, நாடார் சமூகத் தோற்றம் பற்றிய தொன்மக் கதையைத் தமிழர் மானிடவியல் நூலில் தருகிறார்.

> "தேவலோகத்தின் ஏழு கன்னிகள் பூலோக ஆற்றில் குளித்தபோது அவர்கள் மீது இந்திரன் காதல் கொண்டதால் ஏழு சகோதரர்கள் பிறந்தனர். குழந்தைகளைப் பூலோகத்திலேயே கன்னிகள் விட்டுவிட்டுச் சென்று

விட்டதால் பத்ரகாளி வளர்த்து ஆளாக்கினாள். வைகைக் கரை வெள்ளப்பெருக்கெடுத்து உடைந்தபோது மண்ணெடுக்க மறுத்ததால் மன்னன் முதல் இருவரின் தலையை வெட்டிய போது இவர்கள் தெய்வீகசக்தி பெற்றவர்கள் என உணர்ந்தான். அதனால் மற்ற ஐவரையும் விடுவித்தான். அவர்கள் வழி வந்தோரே நாடார்கள்”[183]

என்று குறிப்பிடுகின்றார்.

குமரிமாவட்ட நாட்டுப்புறக்கதையில் வேறுசில மாற்றங்கள் இடம்பெற்றுள்ளன.

காட்டில் தாமரை மலர்கள் நிறைந்த ஒரு குளத்தின் கரையிலமைந்த பாறையில் திருமால் தியானம் செய்து கொண்டிருக்கிறார். அவர் கண்ணைத் திறந்து பார்த்தபோது ஏழு கன்னியர்கள் குளத்தருகே இன்னொரு பாறையில் இறங்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் குளத்தில் குதித்து ஒருவரை ஒருவர் துரத்தி நீர்விளையாட்டு விளையாடுகின்றனர். பின் ஏழு கன்னியரும் வெயிலில் உடம்பை உலர்த்துகின்றனர். திருமால் தன் மந்திர சக்தியால் புயலையும் குளிரையும் அவர்கள் மேல் ஏவுகிறார். ஏழு பெண்களும் அருகிலிருக்கும் முனிவரிடம் சென்று கதகதப்பூட்டிக் கொள்கின்றனர். முனி கர்ப்பம் இராத்தங்காது என்பதால், அக்கணமே கருவுற்ற கன்னியர்கள், அக்கணமே குழந்தையைப் பெற்றுப் போட்டுவிட்டு அந்தரத்தில் மறைகிறார்கள். தன்முன்னே கிடக்கும் ஏழு ஆண்குழந்தைகளையும் எப்படி வளர்ப்பது என்று திருமால் யோசிக்கிறார். அவரது தங்கையாகிய காளியிடம் குழந்தைகளை வளர்த்து ஆளாக்கச் சொல்லுகிறார். காளி தன் படைத்தலைவனை இந்திரனிடம் அனுப்பி, பிள்ளைகளை வளர்க்க சொல்லுகிறாள். இந்திரன் ஒரு காராம் பசுவை அனுப்புகிறான். அதில் பால்குடித்துக் குழந்தைகள் வளருகிறார்கள்.[184]

மேற்காட்டிய கதையின் உள்ளடக்கத்துக்குள் நுழைந்து விமர்சனச் சாட்டைகளைச் சுழற்றுவது தொன்மவியலுக்கு எதிரானது. இதனைப் பழங்கால மனிதர்களின் படைப்பாற்றலுக்கான சான்றாகக் கொள்வதே முறையானது. ஆதிமனிதர்கள் தங்கள் வேட்கைகளின் வடிகாலாக இத்தகைய புனைவுகளை உருவாக்கியதாக எண்ணுவதற்கும் இடமுள்ளது. இக்கதைக்கு இன்னொரு தொடர்ச்சியும் உள்ளது.

திருமாலின் ஏழுகுழந்தைகளுக்கும் பத்திரகாளி எல்லாக் கலைகளையும் கற்றுக் கொடுக்கிறார். அவர்கள் வீரர்களாக மாறுகின்றனர். அவர்களை அழைத்துக் கொண்டு போய்த் தாருகனோடு போர் செய்து அவனைக் கொன்று வெற்றியோடு திரும்புகிறார். அவர்கள் பாலை வழியில் கடுமையான தாகத்தோடு

நடக்கிறார்கள். தண்ணீரைத் தேடி அலைகிறார்கள். தூரத்தில் ஒரு சுனையைக் காணுகிறார்கள். அதில் தண்ணீரைப் பருகிவிட்டு மீதியைக் குடிக்க ஆகாமல் கலக்கியும் போட்டிருக்கிறார்கள். அடுத்தவருக்குப் பயன்படாதபடி சுனையைக் கலக்கிய பார்ப்பானும் பாப்பாத்தியும் அகப்படுகிறார்கள். காளி அவர்களைத் தலைகீழாக நட்டுப் பனையாக்குகிறார். தன் காற்சிலம்பைத் தளை நாராகவும், திருநீற்றுக் கொப்பறையைக் கலயமாகவும், தண்டத்தை முருக்குத் தடியாகவும், சூலத்தை இரண்டாக ஒடித்துக் கடிப்பாகவும் மாற்றி ஒருகையில் கொடுத்தார். இவர்கள் உண்ட அமுதை வடித்து எடுத்து எல்லாருக்கும் கொடு என்று கட்டளையிடுகிறார்.[185]

இக்கதை, கள் குடிப்பது இழிவானது என்ற கருத்து உருவாக்கப்பட்ட காலத்தில், அதற்கு எதிராக உருவாக்கப்பட்டிருக்கும் வாய்ப்புள்ளது. பார்ப்பனியத்துக்கெதிரான ஒடுக்கப்பட்ட மக்களின் புனைவாக இது தோன்றியிருக்க முடியும் எனக் கருதவும் வாய்ப்புள்ளது.

பத்திரகாளியின் மக்களை மண்சுமக்க வற்புறுத்திய கதையும் நாட்டார் வழக்காற்றில் உள்ளது. பொன்னீலன் இக்கதையை எடுத்தாளுவதோடு அதற்குள்ளிருக்கும் சாதி ஒடுக்குமுறைக்கெதிரான எதிர்ப்புணர்வையும் புலப்படுத்துகிறார்.

இரவும் பகலும் இடைவிடாமல் மழை பெய்ததனால் காவேரி ஆறு கரையுடைத்து வீடுகளை இடித்துச் செல்லுகின்றது. கரைக்கு மண்சுமப்பதற்காகச் சோழ மன்னன் பத்திரகாளியின் மக்களைக் கட்டி இழுத்துக் கொண்டு வந்து கட்டாயப்படுத்துகிறான். பத்திரகாளியின் மக்கள் மண்சுமக்க மறுக்கிறார்கள். சோழன் காவிரிக் கரை மணலில் குழி தோண்டி, மூத்தவனை அதில் நிறுத்தி, கழுத்துவரை புதைக்கிறான். மண்ணுக்கு மேலே முகம் மட்டும் தெரியும்படிச் செய்கிறான். மண்சுமக்க முடியுமா என வினவுகிறான். பத்திரகாளியின் மகன் மீண்டும் மறுக்கிறான். பட்டத்து யானையை விட்டு அவனது தலையை இடறப்போவதாகச் சோழன் மிரட்டுகிறான். அவன் மன்னனின் ஆணைக்குப் பணியாததால் யானை தன் முன்னங்காலால் அவன் தலையை இடறுகிறது.[186] இதனை நாட்டுப்புறப் பாடலொன்று பிரதிபலிக்கிறது.

"எங்கள் குலம் சாணார் குலம்
ஏரிவரி சுங்கம் கொடோம்
கொத்தெடுத்து மண் வெட்டோம்
கொற்றவரைக் கைம் முகையோம்,
கூடைதொடோம் வெட்டி செய்யோம்,"[187]

மேற்காட்டிய பாடல் பத்திரகாளியின் மகன் தலை உருண்டோடும் போது பாடியதாக நம்பப்படுகிறது. பனங்காட்டில் சுதந்தரமாக வாழ்ந்த இனத்தை அரசு அடிமைப்படுத்த முயன்ற காலத்தில், இத்தகைய கதைகளும் பாடல்களும் மக்கள் வழக்காறுகளில் இடம்பிடித்திருப்பதாகக் கருத இடமுள்ளது.

## இயக்கியின் கதை :

இயக்கியம்மன் பற்றிய நாட்டார் வழக்காற்றுச் செய்தியொன்று உள்ளது. கடற்புறத்தைச் சார்ந்த காணியாளர் குடும்பத்தைச் சார்ந்த முன்னோர்கள் ஒரு கட்டு மரத்தில் மீன் பிடிக்கச் செல்கிறார்கள். அவர்களது வலையில் மீன் எதுவும் சிக்கவில்லை. அம்மனின் சிலை சிக்கிக் கொள்கிறது. மீன் கிடைக்காத வருத்தத்தில் ஒருவர் துளவைக் கம்பால் அந்தச் சிலையைக் குத்தியிருக்கிறார். குத்துப்பட்ட சிலையின் கண்ணிலிருந்து இரத்தம் வடிகிறது. சிலையை வீட்டுக்குக் கொண்டு வந்து அரங்குக்குள் வைத்துப் பூசை செய்திருக்கிறார்கள். முன்னோர் ஒருவரின் கனவில் அம்மன் தோன்றி சரியான இடத்தில் வைத்து வழிபட அறிவுறுத்தியது. அவர்கள் மேளதாளத்துடன் சென்று சிலையைக் கொண்டுவந்து ஓடையின் பக்கத்தில் வைத்து வணங்குகிறார்கள். ஆண்டுதோறும் கார்த்திகை மாதம் முதல் நாள் சிலையைக் கடலிலிருந்து எடுத்துத் தந்தமைக்கு நன்றி கூறும் வண்ணம் கடற்கரைக்கு மேளதாளத்துடன் சென்று காணியாளர் குடும்பத்தில் மூத்தவருக்குப் புதிய வேட்டியும், துண்டும் கொடுத்து வருகிறார்கள்.[188] இந்துக்களுக்கும் கிறித்தவர்களுக்குமிடையே இருந்த மத நல்லிணக்கச் சிந்தனையை இவ்வாய்மொழிக்கதை உணர்த்துகிறது.

## யயாதியின் கதை :

சான்றார் குலத்தாரும், மீனவர்களும் உடன்பிறப்புக்கள் என்பதை விளக்கும் கதையொன்று வழக்கில் உள்ளது.

ஊர்வசியின் மரபில் வந்த யயாதி என்பவனுக்கு ஐந்து மக்கள் இருந்தனர். பாப்பாத்தியாகிய தெய்வயானையின் மக்கள் இருவரும் தகப்பனின் வார்த்தைக்கு இணங்காததால் சாபத்தை அடைந்து காட்டில் வேடர்களாயினர். அரசர் மகளாகிய சன்மிஷ்டை என்பவளுடைய பிள்ளைகளில் இளையவர் இருவரும் தந்தையின் சொல்லுக்கிணங்காமல் சாபத்தை அடைந்து ஒருவன் கள் விற்பவன் ஆகிறான். இளையவன் மச்சம் விற்கும் தொழில் செய்கிறான்.[189] இக்கதை சான்றாரும் மீனவரும் உடன்பிறப்புகள் என்பதை நிறுவுகிறது.

### சாதித் தோற்றம் பற்றிய கதை :

பறையர் சமூகம் பற்றிய சாதித் தொன்மக்கதையை பக்தவத்சலபாரதி எடுத்தாண்டுள்ளார். சைவ அசைவ உணவை அடிப்படையாகக் கொண்டு மேல், கீழ் எனும் பாகுபாடு தோன்றியதை அவர் சுட்டிக்காட்டுகிறார்.

> "கடவுளுக்குச் சைவ உணவு படைத்து, சைவ உணவையே உண்டு வந்த அண்ணன் மீது கோயிலில் யாருக்கும் தெரியாமல் கறி உண்டான் எனப் பழி சுமத்தியதால் ஊரை விட்டு வெளியேறிய போது கோயிலைப் பார்ப்பது யார் என மக்கள் கேட்க என் தம்பி பார்ப்பான் என்றதால் தம்பி பார்ப்பனராகவும், மாட்டுக்கறி உண்டதாகப் பழிச் சுமத்தப்பட்ட அண்ணன் பறையராகவும் மாறினார்"[190]

என்ற சாதித்தோற்றம் பற்றிய கதையைப் பக்தவத்சல பாரதி கூறுகின்றார். சாதியில் மேல் கீழ் என்ற பகுப்பு உருவானது பற்றிய விடைகாணும் முயற்சியில் இத்தகைய நாட்டுப்புறக் கதைகள் உருவாக்கப்பட்டு, வழக்கிலுள்ளன. பொன்னீலன் இக்கதையை நாவலில் விரிவாகத் தருகிறார்.

ஒரு தந்தைக்கு இரண்டு மகன்கள் இருந்தார்கள். இளையவன் தெய்வபக்தி மிகுந்தவன். அவன் தினந்தோறும் சிவபூசை செய்வான். அவனது பக்தியைப் பாராட்டி தினமும் பூசை நேரம் தேவலோகத்தில் இருந்து காமதேனு இறங்கி வரும். இளையவன் காமதேனுவை அடித்து சமைத்து, சிவனுக்குப் படைத்துப் பூசை செய்வான். அவன் பூசை முடிந்ததும் அந்தப்படையல் மேலே தண்ணீர் தெளிப்பான். உடனடியாக அக்கறியெல்லாம் ஒன்று திரண்டு, திரும்பவும் காமதேனுவாகி இந்திரலோகத்துக்குப் பறந்து போய்விடும்.

ஒருநாள் இளையவனுக்கு வெளியூரில் அவசர வேலையாகிவிட்டது. அதனால் தன் அண்ணனிடம் சிவபூசை செய்யும்படிச் கூறிச் சென்றுவிட்டான். அண்ணன் பூசை செய்த பொழுது இந்திரலோகத்திலிருந்து காமதேனு வந்திறங்குகிறது. அதை வெட்டி சமையல் செய்து சிவனுக்குப் படைக்கிறான். நிறை சூலியான அண்ணனின் மனைவி அதில் ஒரு துண்டு கறியை உண்ண ஆசைப்படுகிறாள். சாமிக்குப் படைத்ததை எடுக்கக் கூடாது என அவன் கூறியும் அவள் கேட்கவில்லை. நிறைசூலி என்பதனால் அவள் மீது இரக்கப்பட்டு சிறிது கறியை எடுத்துக்கொள்ள அனுமதிக்கிறான். அவள் நகத்தளவு கறியை எடுத்து வாயில் போடுகிறாள்.

பூசை முடிந்ததும் அண்ணன் படையல் மேல் தண்ணீர் தெளிக்கிறான். ஆனால் காமதேனு உயிரோடு எழும்பவில்லை செய்த தவறை எண்ணிக் கதறுகிறான். மாலையில் தம்பி வருகிறான். அண்ணன் நடந்தவற்றையெல்லாம்

அப்படியே கூறுகின்றான். தெய்வத்துக்குப் படைத்ததை எச்சில்படுத்தினதால் அண்ணன் கீழாய்ப் போகவேண்டுமெனச் சாபம் கொடுக்கிறான். அதன் பிறகு அண்ணனின் வழி வந்த சாதியினர் கீழாகப் போய்விட்டனர்.[191]

சாதிப் பிரிவில் மேல், கீழ் என்ற பாகுபாடு தோன்றுவது பற்றிய இத்தகைய கதைகள் குமரி மாவட்டத்தில் சொல்லப்பட்டு வருகின்றன. காமதேனுப்பசு இந்திரலோகத்தில் இருந்து இறங்கி வருதல், சமைத்தபின் உயிரோடு எழும்புதல் போன்ற இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்வுகள் இதில் அடங்கியுள்ளன. சாபங்களுக்கு அடிப்படையாகப் பெண் இருப்பதனை அடிக்கருத்தாகக் கொண்டு இக்கதை இயங்குகிறது. சாபங்கள் வாழ்க்கையின் வீழ்ச்சியில் முழுப்பங்காற்றுவது என்ற நாட்டுப்புற நம்பிக்கையையும் இக்கதையுடன் பொருத்தி ஆராய முடியும். இக்கதையில் "பார்ப்பானுக்கு மூத்த பறையன் கேட்பார் சொல் கேட்டுக் கீழானான்"[192] என்ற நாட்டார் வழக்கைப் பொன்னீலன் எடுத்தாளுகிறார்.

"பார்ப்பானுக்கு மூப்பு பறையன், கேட்பார் இல்லாமல் கீழ்ச்சாதியானான்"[193] எனத் தென் மாவட்டங்களில் வழங்கப்படும் நாட்டுப்புறக்கதையின் அடிக்கருத்தை எடுத்துக் காட்டுகிறார். இவ்விரு அடிக்கருத்துக்களுக்கிடையிலமைந்த ஒருமைகள் கவனிக்கத்தக்கது.

## அண்ணன் தம்பி கதை :

ஆதிக்க சமூகம் அடித்தட்டு சமூகத்தின் வீழ்ச்சிக்கான காரணத்தைப் புனைவுகளாக்கும் அரசியல் நாட்டார் பண்பாட்டில் இருந்து வருகிறது. எடுத்துக்காட்டாக ஒரு நாட்டுப்புறக்கதை இங்குத் தரப்படுகிறது.

ஒரு அண்ணனும் தம்பியும் சேர்ந்து வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இருவரும் ஒருநாள் மலையில் மாடு மேய்த்துக் கொண்டிருக்கிறார்கள். வீட்டிற்குச் சென்று கஞ்சி குடித்துவிட்டு, அண்ணனுக்கும் கஞ்சி கொண்டு வருவதாகச் சொல்லி தம்பி வீட்டுக்குக் கிளம்புகிறான். தம்பியின் வருகைக்காக அண்ணன் நீண்டநேரம் காத்திருந்தும், தம்பியைக் காணவில்லை. அண்ணன் ஒரு கன்றுக்குட்டியை அடித்து உப்புமிளகு தடவி தீயில் வாட்டிச் சாப்பிடுகிறான். தம்பிக்குத் தொடைக்கறியை மீதி வைக்கிறான். வெகுநேரம் தாண்டி தம்பி வருகிறான். அண்ணன் கன்று சமைத்த பின்னணியைச் சொல்லி தம்பிக்குத் தொடைக் கறியைச் சாப்பிடக் கொடுக்கிறான். தம்பிக்குக் கோபம் வருகிறது. அண்ணனால் குலப்பெருமை கெட்டுவிட்டதாகக் குற்றம் சாட்டுகிறான். மாடுகளைப் பாகம் பிரித்துக் கொள்ள வேண்டும் என்ற உடன்பாடு இருவருக்குள்ளும் ஏற்படுகிறது. மந்தையில் படுத்துக்கிடக்கும் மாடுகள் அண்ணனுக்கென்றும், நின்று

கொண்டிருக்கும் மாடுகள் தம்பிக்கென்றும் அவற்றைப் பிரித்துக் கொள்ளுகின்றனர். தம்பி புல்லாங்குழலை எடுத்து வாசிக்கிறான். நின்று கொண்டிருந்த மாடுகள் தம்பியின் பின்னால் செல்லுகின்றன. இதைப் பார்த்ததும் படுத்துக் கிடக்கிற மாடுகளும் எழுந்து தம்பியின் பின்னால் செல்லுகின்றன. ஊனமுற்ற மாடுகள் மட்டுமே அண்ணனுக்கு மிஞ்சுகின்றன. தம்பியின் வம்சம் வளமையான மேல்தட்டு சமூகப் பிரிவாகவும், அண்ணனின் வம்சம் வறுமையில் உழலும் அடித்தட்டு சமூகப்பிரிவாகவும் மாறுகின்றன.[194] இதில், ஒரு குறிப்பிட்ட சமூகப் பிரிவு வறுமையில் உழலுவதற்கான காரணம் சொல்லப்படுகிறது. அக்காரணம் மேல் தட்டினரால் உருவாக்கப்பட்டதாகக் கருத இடமுள்ளது.

இவ்வகைக் கதைகளின் பின்னாலிருக்கும் வைதீகத்தின் முகத்தை நாவலாசிரியர் எடுத்துக் காட்டுகிறார்.

> "இப்படித்தான் அண்ணே, கதைகளைக் கட்டி மக்களை நம்ப வச்சி அமுக்கிப் போட்டானுவ, திருட்டுப் பயலுவ. கள் இறக்கினவன், உழுது பயிர் செய்தவன், மீம்பிடிச்சவன், வேட்டையாடினவன், இப்படி இப்படியே கீழ்ச்சாதிகளைப் பற்றின கதைகளையெல்லாம் நுழைஞ்சி பாத்தா, உள்ளே வைதீகம் உட்கார்த்திருக்கது தெரியும். நிஷா அக்கா சொல்லுவாவ. நம்மள ஒடுக்கி, அந்த ஒடுக்கு முறைய நியாயப்படுத்துறதுக்காக உண்டாக்கப்பட்டதுதான் இந்தக் கதைகளாம் இப்ப நாம என்ன செய்யணும் இந்தக் கதைகள உடைச்சி அதுகளுக்குள்ளே பதுங்கி இருக்கிற மனுவ மக்கள்கிட்ட காட்டணும்"[195]

இக்கூற்று நாட்டார் கதைகளுக்குள் இயங்கும் அரசியலை வெளிக்கொணரும் கடமை சமூகப் பார்வையுடையவர்களுக்கு இருப்பதனை உணர்த்துகிறது.

## நாட்டுப்புறப் பாடல்கள் :

நாட்டுப்புறத்தின் ஆன்மா என்பது அங்குள்ள பாடல்களில் உள்ளது. எளிமையும், இனிமையும் இப்பாடல்களின் பொதுப்பண்பாக அமைந்துள்ளன. தலைமுறை தலைமுறையாக வாய்வழிப் பாடப்பட்டு செவிவழி அறியப்பட்டு வரலாற்றுத் தொடர்ச்சியை உடையனவாக இந்நாட்டுப்புறப் பாடல்கள் விளங்குகின்றன.

> "நாட்டுப்புற மக்களால் பாடப்படும் பாடல்கள் நாட்டுப்புறப் பாடல்களாகும். நாட்டுப்புறப் பாடல்கள் நாட்டுப்புற மக்களின் வாழ்வோடு பின்னிப் பிணைந்துள்ளன. மனிதனின் பிறப்பு முதல் இறப்புவரையுள்ள நிகழ்வுகள் நாட்டுப்புறப் பாடலின் பொருளாகின்றன. மண்ணின் மைந்தர் தம் மனக்

கருவறையில் கருக்கொண்டு உருப்பெற்று உயிர்பெற்று உலாவரும் உள்ளத்தின் உண்மையான வெளிப்பாடுகளே நாட்டுப்புறப் பாடல்கள்”[196]

என்று சு.சக்திவேல் குறிப்பிடுகிறார்.

கேரளாவில் கொண்டாடப்படும் திருஓணப் பண்டிகை குமரி மாட்டத்திலும் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. ஓணப்பண்டிகையன்று கீழ்க்காணும் நாட்டுப்புறப்பாடல் பாடப்படுவதுண்டு

“ஓராம் பூசரி பூக்கவே
பூத்த பூவெல்லாந் தொழியவே
முன்னூறு கைகொண்டு ஏந்தவே
வெள்ளி முளைக்க வருவோம் நாங்க
வெள்ளப் பிராமணன் மக்கோ நாங்க . . . . ”[197]

என்பது அப்பாடலாகும்.

ஈத்தாமொழி என்ற ஊரின் சிறப்பைச் சொல்லும் நாட்டுப்புறப் பாடலொன்றைப் பொன்னீலன் முப்பத்து மூன்றாம் அத்தியாயத்தின் தொடக்கத்தில் தருகிறார். சம்பா நெல்லுடன், குதிப்புமீனை வைத்து உண்ணும் ஈத்தாமொழி மக்களின் உணவுப் பழக்கம் பற்றி அப்பாடல் பேசுகிறது. சிறிய இலங்கை போல் இருக்கும் ஈத்தா மொழியில் இளமரங்களும் தோப்புகளும் மிகுந்திருப்பதையும் அப்பாடல் சுட்டுகிறது.

“பொன்னு முத்துச் சம்பாவாம்
பூவாலு குதிப்பு மீனாம்
தின்னத் தின்னத் தனிருசியாம்
தேன் மணக்கும் ஈத்தாமொழி
குட்டிக் கொழும்பாம் - ஈத்தாமொழி
கொறு கொறுத்த மணல் தோப்பாம்
இளமரத்துச் சோலைவிட்டு
எங்கே நான் போவேனப்பா”[198]

என்பது அந்நாட்டுப்புறப் பாடலாகும்.

பறவைகளைப் பற்றிய நாட்டுப்புறப் பாடலொன்றை நாவலாசிரியர் நாவலினிடையே தருகிறர். அண்ணன் குருவியும் தம்பிக்குருவியும் அன்பாக வாழ்கின்றன. பொறாமை கொண்ட மற்றொரு குருவி, அண்ணன் குருவியிடம் கோள் சொல்லி தம்பிக்குருவியைக் கொன்று விடுகிறது. பின்னர் உண்மையை

உணர்ந்த அண்ணன் குருவி தம்பியைத் தேடிப் பாடிக் கொண்டே அலைவதாக அப்பாடல் கூறுகிறது.

"தம்பி தம்பிடே
சித்திரக் குட்டிடே . . .
பூ ஒத்து டே . . .
கோளுச் சொன்னவன்
குண்டணி சொன்னவன்
ஒக்கப்போ ஒக்கப்போ ஒக்கப்போ . . ."[199]

என்ற நாட்டுப்புறப்பாடல் பிரித்தாளும் சூழ்ச்சியிலீடுபடுபவர்களை விலக்கும்படி அறிவுறுத்துகிறது.

## நாட்டார் கலைகள் :

நாட்டுப்புற மக்கள் கலையுள்ளம் கொண்டவர்கள். அவர்களது தனிப்பட்ட வாழ்விலும், சமூக வாழ்விலும் கலைக்கு முக்கிய இடம் கொடுத்து உள்ளனர். திருவிழாக்கள் கலைக்கான களமாக அமைகின்றது.

> "நாட்டார் கலைகள் அழகியல் சார்ந்தவை. நாட்டார் கலைகளை நிகழ்த்து கலைகள் என்றும் கைவினைக் கலைகள் என்றும் இருவகையாகப் பிரிக்கலாம்"[200]

என்பர்.

## சிலம்பம் :

நாவலில் வரும் கதாப்பாத்திரமான சாமிக்கண்ணுவின் மகன் சிலம்பம் பயிலுகின்றான்.[201] பெரிய நீலனின் தம்பி வர்மக்கலை பயிலச் சென்றிருப்பதாக நாவலில் வருகிறது.[202] கம்பு வீச்சுக் கலையை ஆசான்கள் மூலம் கற்பது பற்றிய குறிப்பும் நாவலில் உள்ளது.[203]

## வர்மக்கலை :

மூர்த்தி உள்ளூரில் அடிமுறை படித்துவிட்டு ராஜாக்கமங்கலம் காணியாளர் குடும்பத்து இன்னாசியாரிடம் இரண்டு ஆண்டு படிக்கிறார். மேலும் அவர் பண்டாரக்குட்டி ஆசான் என்பவரிடம் வர்மக் கலையையும் கற்றுக் கொள்ளுகிறார். அத்துடன் மல்லன்விளை ஆசான்களிடம் பூட்டும் பிரிவும் எனும் கலையைக் கற்றுக் கொள்ளுகிறார்.[204]

வர்மக்கலையை அறிந்தவர்கள் எளிதில் அதனை மற்றவர்களுக்குக் கற்றுக் கொடுப்பதில்லை. ஏனெனில் எதிராளியை இடம் பார்த்து ஒரு தட்டு தட்டினால் அவர்களை விழச்செய்யும் அபாயம் இக்கலையிலுண்டு.[205]

குமரிமாவட்டத்தில் ஆண்கள் மட்டுமின்றி சில பெண்களும் சிலம்பக்கலை கற்றுக் கொள்வது பற்றி நாவல் பேசுகிறது. பெண்கள் ஆண்களைப்போல தாறு பாய்த்துக் கொண்டு, மார்பைக் கச்சையால் இறுக்கிக் கட்டிக் கொண்டு இக்கலையைக் கற்கின்றனர். நாவலில் குஞ்சன் காட்டு ஆசாத்தி வர்மம் கற்றவராகக் காட்டப்படுகின்றார். அவரது தந்தையும் தாயும் வர்மக்கலை தெரிந்தவர்கள் என்பதால் அவரால் அக்கலையை எளிதாகக் கற்றுக் கொள்ள முடிந்தது. இரு ஊர்களுக்கிடையான சண்டையில் ஒருவன் கதவை உடைத்துக் கொண்டு ஆசாத்தியின் வீட்டுக்குள் புகுந்தபேது, வாசலில் நின்ற ஆசாத்தி ஒரு கம்பால் அவன் விலாவில் தட்டி அவனைச் சுருண்டு விழச்செய்கின்றார். அவன் அப்போதே மரணமடைகிறான். சண்டைக்கு வந்தவர்கள் மன்னிப்பு கேட்டபோது, ஆசாத்தி அவனைக் கால் விரலால் மிதித்து உயிருடன் எழுப்பி விடுகிறார்.[206]

மூர்த்தி தன் மகளைக் கல்வி நிலையத்துக்கு அனுப்பாமல், அவளுக்கு அவரே வைத்தியக்கலையையும், வர்மக்கலையையும் கற்பிக்கிறார். இவ்வாறு வர்மக்கலையில் ஈடுபாடு கொண்டவர்களை மறுபக்கம் நாவல் காட்டுகிறது.

## நாட்டுப்புற இசைக்கருவிகள் :

நாட்டுப்புற இசையில் நாட்டார் இசைக்கருவிகள் முக்கிய இடம் பெறுகின்றன. கொம்பு, சங்கு, நாயனம், தவில், ஜாலர் ஆகிய இசைக்கருவிகள் நாவலில் குறிப்பிடப்படுகின்றன.[207]

பெரியவர்களை வரவேற்க கொம்புகள் ஊதிக் குரவையிடுகின்றனர். மேளதாளங்களை அடித்து ஊரைச் சுற்றி வருகின்றனர். அவர்கள் தப்பட்டைகளையும் முழக்குகின்றனர்.[208]

## வில்லுப்பாட்டு :

இசைக்கருவிகளின் அடிப்படையில் நாட்டுப்புற நிகழ்கலைகளை வகைப்படுத்தும் முறை உள்ளது. வில்லுப்பாட்டு, உடுக்கடிப்பாட்டு, மகுடாட்டம், தப்பாட்டம் போன்ற கலைகள் இம்முறையில் பெயர் பெற்றவை ஆகும்.

வில்லுப்பாட்டுக்கு வில்லடி, வில்லடிச்சான்பாட்டு என்ற பெயர்கள் வழங்கப்படுகின்றன. திருநெல்வெலி, கன்னியாகுமரி, தூத்துக்குடி மாவட்டங்கில்

கொடை விழாக்களில் வில்லுப்பாட்டு நிகழ்த்தப்படுகின்றது. வில்லுப்பாட்டுக் குழு குறித்து லூர்து கீழ்க்காணுமாறு குறிப்பிடுகிறார்.

> "வில்லுப்பாட்டின் அடிப்படை அமைப்புகளுள் ஒன்று நிகழ்த்தும் குழுவாகும். இந்தக்குழுவில் பெரும்பாலும் ஐவர் இருப்பர். இவர்கள் ஒவ்வொருவரும் பாடிக்கொண்டே இசைக்கருவிகளை இசைப்பர். சில வேளைகளில் ஓரிருவர் மேலும் உதவி செய்வர். இந்தக்குழு இருவகையாகப் பிரிக்கப்படும். முன்னோடிப் பாடகர்கள் வலம்பாடிகள் என்று குறிப்பிடப்படுவர். முன்னோடிப் பாடகர், தாளக்காரர், அண்ணாவி (குரு) வந்திருந்தால் அவரும் இதில் அடங்குவர். சேர்ந்து பாடுவோர் இடம்பாடிகள் எனப்படுவர். குடம் அடிப்பவர், உடுக்கை வாசிப்பவர், கட்டைக்காரர் போன்றோரும் இக்குழுவில் அடங்குவர்,"[209]

என்று அவர் குறிப்பிடுகிறார்.

வில்லுப்பாட்டு பாடுவர்களுக்கு பங்குனி, சித்திரை ஆகிய மாதங்களில் இடைவிடாத நிகழ்ச்சி இருப்பதையும் நாவல் குறிப்பிடுகின்றது.[210]

அம்மன் கோயில், சுடலை மாடன் கோயில், இசக்கி கோயில் ஆகியவை இருக்கும் ஊர்களில் வில்லுப்பாட்டு, கணியாட்டு, கும்பாட்டம், நையாண்டி மேளம் போன்ற கலைகளுக்கு முக்கியத்துவம் இருப்பதை நாவல் வழி அறியமுடிகிறது.[211]

வில்லுப்பாட்டில் பாடப்படும் கதைகளில் ஒன்றாக சிவனணைஞ்சியம்மை கதை இருந்து வந்தது. வைதீக அபிமானம் பெருகிய பின்னர் இக்கதையைக் கோயிலில் பாட வில்லிசைக் கலைஞர்கள் தயக்கம் காட்டுகின்றனர். தென்காசி இராசாவின் துணைவியான சிவனணைஞ்சியம்மையின் கதை முற்காலத்தில் கோயில் கொடை விழாக்களில் பாடப்பட்டதாகப் பொன்னீலன் குறிப்பிடுகின்றார். அம்மன்கோயில் கொடை விழாவைச் செவ்வாய்க் கிழமையன்று வில்லுப்பாட்டுடன் தொடங்கும் மரபு இங்குள்ளது.[212]

அம்மன் கோயில் வில்லிசை நிகழ்ச்சியில் முத்தாரம்மன் கதை, கால சாமி கதை போன்றவை பாடப்படும். வில்லுப்பாட்டு நிகழ்ச்சியை வாசகர் நேரில் பார்ப்பது போன்ற உணர்வுடன் பொன்னீலன் வடித்துக் காட்டுகிறார்.

> "பாட்டுக்காரர்கள் புகழ்மிக்கவர்கள். வீசுகோலை அதோ பார் என்று ஆகாயத்தில் வீசி உள்ளங்கையில் ஏந்தி பம்பரமாய்ச் சுழலவிட்டபடி, தலைமைப் பாட்டுக்காரர் பாடத்தொடங்கியதும் கூட்டம் மூச்சுவிட மறந்து போகும். வில்லைத் தட்டி ஜலீல் என்று மணிகள் கிலுங்க அவர் பாடுவதைக் கேட்கப் பல ஊர்களிலிருந்தும் ஆட்கள் வருவர்கள். அவர் முத்தாரம்மன் கதையை அல்லது காலசாமி கதையையே பாடுவார்".[213]

என்பதில் வில்லிசை, சொற்கள் வழி நேரடியாக ஒளிபரப்பப்படுகிறது.

வில்லுப்பாட்டு பாடுவதில் ஆண்கள் குழுக்களும், பெண்கள் குழுக்களும் உள்ளன. இளைஞர்கள் பெண்கள் குழுவினரின் இசையை விரும்புகின்றனர். ஆண்கள் குழுவில் தலைமைப்பாடகர் கதையையும் பாடலையும் இணைத்து வழிநடத்துகின்றார். அவர் மஞ்சள் கவணியைப் பின் குஞ்சம் விட்டுக்கட்டியுள்ளார். அவருக்கு இடப்பக்கம் குடம் இசைப்பவர் இருக்கிறார். அவரைச் சுற்றிலும் பக்கப்பாட்டுக்காரர்கள் இருக்கின்றனர்.[214]

## நையாண்டிமேளம் :

அம்மன் கோயிலில் கேட்கும் நையாண்டி மேளம் பற்றிப் பொன்னீலன் பேசுகிறார். நையாண்டி மேளம் நாட்டார் வழக்காற்றைச் சார்ந்ததாக இருந்தாலும் நவீனத்துவத்தின் வளர்ச்சிக்குள்ளும் அது கால்பதிக்கிறது. இது எல்லா நாட்டார் கலைகளுக்கும் பொருந்தும். ஒலி பெருக்கி வழியாக அது தன் சத்தத்தை ஊரார் அனைவரின் காதுகளுக்கும் வழங்குகிறது. ரெண்டரக்கன. . . ரெண்டரக்கன . . . எனும் தாள முழக்கம் காதுகளை ஈர்க்கிறது. சும்மா நிக்கிறவன் உடம்பையும் துடிக்க வைக்கிற துடுக்குத்தனம் அதில் மின்னிக் கொண்டிருக்கிறது. இப்பகுதியில் நாவலாசிரியர் நையாண்டி மேளத்தோடு ஒன்றிக் கலவாதவனுக்கு அவ்விசை ஒலிபெருக்கியின் வழியாக எவ்வித எதிர்வினையை உருவாக்கும் என்பது பற்றிய விவாதம் எதனையும் எழுப்பவில்லை. ஒலி மாசுவின் மோதலே உயிர்களின் மோதலாக மாறியதாக நாவலை நீட்டிச் செல்லும் கதைசொல்லி இவ்விடத்தில் நையாண்டி மேளத்தின் ஓசையில் கிறங்கிக் கிடக்கிறார்.

> "தவில் சத்தமும், நாதஸ்வர ஓசையும், நையாண்டி மேளக் கும்மாளமும் போட்டி போட்டுக் கொண்டு செவிப்பறைகளைக் கிழிக்கின்றன"[215]

என்ற இடத்தில் மாத்திரம் விமர்சனத்தின் மெல்லிய அதிர்வைக் காணமுடிகிறது.

## கோயில் கலை :

புதியதாகக் கட்டப்பட்ட அம்மன் கோயில் பற்றிய சித்திரிப்பு நாவலில் உள்ளது. கோயிலைச் சுற்றிக்காட்டுவது போன்ற சொற்களை இவ்விடத்தில் பொன்னீலன் ஆளுகின்றார்.

> "புதிய அம்மங்கோயில் உண்மையிலேயே பிரம்மாண்டமாகத்தான் இருக்கிறது. எல்லாவற்றுக்கும் நடுவே அம்மனுக்கும் சாமிக்குமாகக் கருவறை. இடதுபக்கம் மாரியம்மனுக்குத் தனியறை. வலது பக்கம்

பெருமாளுக்குத் தனியறை. எல்லாமே ரொம்ப அழகாகக் கட்டப்பட்டிருக்கிறது. வாசல் கதவு ஒவ்வொன்றுமே தேக்கு. ஒவ்வொன்றும் முப்பதாயிரம் நாற்பதாயிரம் பெறும் அருமையான வேலைப்பாடுகள் மண்டபத்தையும் அற்புதமாகக் கட்டியிருக்கிறார்கள். விலையுயர்ந்த ராஜஸ்தான் கல்பதித்த தளத்தில் ஐந்நூறு பேர் தாராளமாக உட்காரலாம். மண்டபத்தின் நடுப்பக்கத்தில் நாற்பட்டக வடிவத்தில் படிப்படியாக மேல் நோக்கி அமைந்த காலசாமி பீடத்தின் உச்சி, கலயம் போல் அமைந்திருக்கிறது. வெளியே, வடகிழக்கு மூலையில் சுடலை மாடசாமிக்குத் தனிமண்டபம். கம்பியளிக் கூண்டுக்குள் வெட்டரிவாளை உயர்த்திப் பிடித்தபடி, வலது காலைச் சற்றுமுன்னே வைத்து முறுக்கின மீசையோடு கம்பீரமாக, நின்று கொண்டிருக்கிறார் சுவாமி"[216]

என அம்மன் கோயில் பற்றிய சித்திரம் விரிகிறது.

**முடிவுரை:**

இவ்வியலில் நாட்டார் வழிபாட்டு மரபுகள் விளக்கப்பட்டுள்ள. சமயங்களில் சடங்குகள் பெறும் இடம் குறித்து ஆராயப்பட்டுள்ளது. குமரி மாவட்ட நாட்டுப்புற நம்பிக்கைகளும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. நாட்டுப்புற விளையாட்டுக்கள், மருத்துவம், ஆயுதங்கள் ஆகியவை பற்றிய செய்திகளும் தரப்பட்டுள்ளன. நாட்டுப்புறக்கதைகள், நாட்டுப்புறப்பாடல்கள், நாட்டுப்புறக் கலைகள் ஆகியவையும் ஆராயப்பட்டுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. ஆ.சிவசுப்பிரமணியன், வரலாறும் வழக்காறும், ப.24
2. புறநானூறு, பா.58
3. ஜி.ஐசக் அருள்தாஸ், குமரிமண்ணில் கிறிஸ்தவம், ப.57
4. பொன்னீலன், மறுபக்கம், ப.59
5. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானுடவியல், ப.515
6. சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.225
7. பொன்னீலன், மறுபக்கம், ப.47
8. தே.லுர்து, நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், ப.401
9. ஐ.ஐசக் அரள்தாஸ், குமரி மண்ணில் கிறிஸ்தவம்,ப.58
10. ஷோபனா, பனைசார் உலகம் நாடார் இனவரைவியல், ப.35
11. பொன்னீலன் மறுபக்கம், ப.614
12. மேலது, ப.602
13. தொ. பரமசிவம், தெய்வங்களும் சமூக மரபுகளும், ப.146
14. பொன்னீலன், மறுபக்கம், ப.591
15. தே.லூர்து, நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், ப.403
16. பொன்னீலன், மறுபக்கம், பக்.323,324
17. ஏ.என்.பெருமாள், (க.ஆ), நாட்டுப்புறக் கதைகள் தரும் வரலாற்றுச் செய்திகள், செ. தங்கமணி, (தொ.ஆ), கன்னியாகுமரி மாவட்ட அரசியல் சமூக வரலாறு, ப.44
18. பொன்னீலன், மறுபக்கம், ப.592
19. மேலது, ப.118
20. ஏ.என்.பெருமாள், (க.ஆ), நாட்டுப்புறக் கதைகள் தரும் வரலாற்றுச் செய்திகள், செ.தங்கமணி, (தொ.ஆ), கன்னியாகுமரி மாவட்ட அரசியல் சமூக வரலாறு, பக்.36,37
21. பொன்னீலன், மறுபக்கம், ப.556
22. மேலது, ப. 388
23. ஏ.என், பெருமாள், (க.ஆ), நாட்டுப்புறக் கதைகள் தரும் வரலாற்றுச் செய்திகள். செ.தங்கமணி, (தொ.ஆ), கன்னியகுமரி மாவட்ட அரசியல் சமூக வரலாறு, ப.431
24. பொன்னீலன், மறுபக்கம், ப.591
25. தொ. பரமசிவம், தெய்வங்களும் சமூக மரபுகளும், ப.147
26. பக்தவத்சல பாரதி, தமிழர் மானிடவியல், ப.294

27. மேலது , ப.27
28. கஸ்தூரி ஜான்சன், குமரிமாவட்டப் புதினங்களில் சமூக நிறுவனங்கள், ப.73
29. பொன்னீலன், மறுபக்கம், ப.304
30. மேலது, ப.405
31. மேலது, ப.409
32. ரெ. முத்துராஜன், ஐயனார் வழிபாடு, ப.80
33. பொன்னீலன், மறுபக்கம், ப.403
34. தே. லூர்து, நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், ப.404
35. மேலது, ப.404
36. பொன்னீலன், மறுபக்கம், ப.59
37. மேலது, ப.237
38. பக்தவத்சல பாரதி, தமிழர் மானிடவியல், ப.174
39. மேலது, ப.524
40. மேலது, ப.175
41. மேலது, ப.186
42. மேலது, ப.175
43. மேலது, ப.285
44. ரெ.முத்துராஜன், ஐயனார் வழிபாடு, ப.100
45. பொன்னீலன் மறுபக்கம், ப.264
46. தே.லூர்து, நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், ப.414
47. பொன்னீலன், மறுபக்கம், ப.69
48. தே.லூர்து, நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், ப.415
49. பொன்னீலன், மறுபக்கம், ப.160
50. மேலது, ப.253
51. தே.லூர்து, நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், ப.415
52. ரெ.முத்துராஜன், ஐயனார் வழிபாடு, ப.42
53. பொன்னீலன், மறுபக்கம், ப.69
54. பக்தவத்சல பாரதி, தமிழர் மானிடவியல், ப.244
55. பொன்னீலன், மறுபக்கம், ப.76
56. மேலது, ப.65
57. மேலது, ப.74
58. மேலது, பக்.75-76
59. மேலது, ப.75

60. மேலது, ப.390
61. ஷோபனா, பனைசார் உலகம் நாடார் இன வரைவியல், ப.51
62. அகநானூறு, பா.156
63. பொன்னீலன், மறுபக்கம், ப.303
64. மேலது, ப.65
65. மேலது, ப.344
66. மேலது, ப.253
67. மேலது, பக்.253,254
68. மேலது, ப.411
69. மேலது, ப.81
70. மேலது, பக்.368,369
71. மேலது, பக்.254,255
72. மேலது, பக்.367,369
73. மேலது, ப.343
74. மேலது, பக்.100,101
75. மேலது, பக்.96,97
76. ரெ.முத்துராஜன், ஐயனார் வழிபாடு, ப.57
77. தொ.பரமசிவம், தெய்வங்களும் சமூக மரபுகளும், பக்.141,142
78. பக்தவத்சல பாரதி, தமிழர் மானிடவியல், ப.293
79. மேலது, ப.301
80. பொன்னீலன், மறுபக்கம், பக்.256,257
81. மேலது, ப. 301
82. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானுடவியல், ப.489
83. பொன்னீலன், மறுபக்கம், ப.252.
84. மேலது, ப.252
85. மேலது, ப.253
86. மேலது, ப.720
87. மேலது, ப.531
88. மேலது, பக்.627,628
89. ஜி.ஐசக் அருள்தாஸ் குமரிமண்ணில் கிறிஸ்தவம், பக்.58,59
90. சாமுவேல் சகரியா, தென்திருவிதாங்கோட்டுத் திருச்சபை சரித்திர சுருக்கம், ப.46
91. பொன்னீலன், மறுபக்கம், ப.137

92. மேலது, ப.178
93. மேலது, ப.237
94. மேலது, ப.258
95. கழனியூரன், மண்ணின் மரபுகளும் மக்களின் நம்பிக்கைகளும், ப.107
96. பொன்னீலன், மறுபக்கம், ப.254
97. மேலது, ப.255
98. மேலது, ப.236
99. மேலது, ப.244
100. மேலது, பக்.302,303
101. மேலது, ப.367
102. மேலது, ப.48
103. மேலது, ப.253
104. மேலது, ப.139
105. மேலது, ப.268
106. பக்தவத்சல பாரதி, தமிழர் மானிடவியல், ப.188
107. பொன்னீலன், மறுபக்கம், ப.550
108. மேலது, ப.55
109. மேலது, ப.551
110. மேலது, பக்.629,630
111. மேலது, ப.193
112. மேலது, ப.193
113. மேலது, ப.260
114. மேலது, ப.542
115. மு.ஷோபனா, பனைசார் உலகம் நாடார் இனவரைவியல், ப.34
116. பக்தவத்சல பாரதி, தமிழர் மானிடவியல், ப.211
117. கஸ்தூரி ஜான்சன், குமரி மாவட்டப்புதினங்களில் சமூக நிறுவனங்கள், ப.70
118. பொன்னீலன், மறுபக்கம், ப.241
119. மேலது, ப.540
120. மேலது, ப.602
121. மேலது, ப.328
122. சு.சக்திவேல், நாட்டுப்புறவியல் ஆய்வு, ப.235
123. பக்தவத்சல பாரதி, தமிழர் மானிடவியல், ப.282

124. மேலது, ப.281
125. பொன்னீலன், மறுபக்கம், ப.41
126. மேலது, ப.52
127. மேலது, ப.52
128. மேலது, ப.253
129. மேலது, ப.256
130. தே.லூர்து, நாட்டார் வழக்காறுகள் சில அடிப்படைகள், ப.369
131. பொன்னீலன், மறுபக்கம், ப.68
132. மேலது, ப.84
133. மேலது, ப.42
134. மேலது, ப.48
135. மேலது, ப.51
136. மேலது, ப.148
137. மேலது, ப.123
138. மேலது, ப.188
139. மேலது, ப.230
140. மேலது, ப.231
141. மேலது, ப.246
142. மேலது, ப.253
143. மேலது, ப.260
144. மேலது, ப.261
145. மேலது, ப.380
146. மேலது, ப.340
147. மேலது, ப.342
148. மேலது, ப.423
149. மேலது, ப.425
150. மு.ஷோபனா, பனைசார் உலகம் நாடார் இனவரைவியல், ப.68
151. பொன்னீலன், மறுபக்கம், ப.82
152. மேலது, ப.98
153. மேலது, ப.94
154. மேலது, ப.95
155. மேலது, பக்.119,120
156. மேலது, ப.143

157. மேலது, ப.145
158. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.246
159. பொன்னீலன் மறுபக்கம், ப.53
160. மேலது, ப.246
161. மேலது, ப.247
162. மேலது, பக்.337,338
163. மேலது, ப.474
164. மேலது, ப.338
165. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 264
166. பொன்னீலன், மறுபக்கம், ப.255
167. மேலது, ப.262
168. மேலது, ப.262
169. மேலது, ப.295
170. மேலது, ப.465
171. மேலது, ப.598
172. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.322
173. பொன்னீலன், மறுபக்கம், ப.75
174. மேலது, ப.493
175. மேலது, ப.589
176. மேலது, ப.592
177. மேலது, ப.689
178. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.66
179. பொன்னீலன், மறுபக்கம், ப.40
180. மேலது, ப.73
181. மேலது, ப.73
182. மேலது, ப.78
183. பக்தவத்சல பாரதி, தமிழர் மானுடவியல், ப.107
184. பொன்னீலன், மறுபக்கம், ப.110
185. மேலது, ப.111
186. மேலது, ப.113
187. மேலது, ப.113
188. மேலது, ப.406
189. மேலது, பக்.661,662

190. பக்தவத்சல பாரதி, தமிழர் மானுடவியல், ப.110

191. பொன்னீலன், மறுபக்கம், பக்.204,206

192. மேலது, ப.206

193. தொ.பரமசிவம், தெய்வங்களும் சமூக மரபுகளும், ப.116

194. பொன்னீலன், மறுபக்கம், பக்.204,205

195. மேலது, ப.205

196. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.28

197. பொன்னீலன் மறுபக்கம், ப.276

198. மேலது, ப.401

199. மேலது, ப.496

200. தே.லூர்து, நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், ப.343

201. பொன்னீலன், மறுபக்கம், ப.143

202. மேலது, ப.250

203. மேலது, ப.251

204. மேலது, ப.261

205. மேலது, ப.263

206. மேலது, ப.263

207. மேலது, ப.328

208. மேலது, ப.338

209. தே.லூர், நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், ப.345

210. பொன்னீலன் மறுபக்கம், ப.302

211. மேலது, ப.419

212. மேலது, ப.52

213. மேலது, ப.53

214. மேலது, ப.54

215. மேலது, ப.720

216. மேலது, ப.719

# ஆய்வு நிறைவுரை

'மறுபக்கம் நாவலில் சமூகமும் வரலாறும்' எனும் தலைப்பில் செய்யப்பட்ட இவ்வாய்வில் கண்டறியப்பட்ட உண்மைகள் கீழே தொகுத்துத் தரப்படுகின்றன.

பொன்னீலன் ஆசிரியர், பள்ளித்துணை ஆய்வாளர், தலைமையாசிரியர், ஆய்வாளர், கல்வித்திட்ட அலுவலர், பள்ளிக்கல்வித்துறை உதவி இயக்குநர், கல்விப் பயிற்சி நிறுவன முதல்வர், முதன்மைக் கல்வி அலுவலர் ஆகிய பதவிகளில் திறம்படப் பணியாற்றியுள்ளார்.

பொன்னீலன் மொத்தம் முப்பத்தாறரை ஆண்டுகள் கல்விப் பணி புரிந்துள்ளார்.

தமிழ்வழிக் கல்வி என்பது பொன்னீலனின் கல்வியியல் கொள்கையாக அமைந்திருந்தது.

தொடக்கப்பள்ளி ஆசிரியரான தாணுமாலயப்பெருமாள் பிள்ளை, பெரியப்பா, பள்ளிக்கல்லூரி ஆசிரியர்கள், தாயார், எழுத்தாளரான கிருஷ்ணன் நம்பி, சுந்தரராமசாமி ஆகியோர் பொன்னீலனை எழுதத் தூண்டிய சக்திகளாவர்

குன்றக்குடிஅடிகளார், தொ.மு.சி.ரகுநாதன், பாலதண்டாயுதம், தஞ்சை இராமமூர்த்தி, மாயாண்டிபாரதி, கே.சி.எஸ்.அருணாச்சலம், எஸ்.இராமகிருஷ்ணன், நா.வானமாமலை ஆகிய ஆளுமைகள் பொன்னீலனிடம் தாக்கத்தை ஏற்படுத்தியவர்களாவர்.

தமிழக அரசு, தஞ்சைப் பல்கலைக்கழகம், சாகித்திய அகாதெமி, திருப்பூர் சங்கம் ஆகியவை பொன்னீலனுக்கு விருதுகளையும் பரிசுகளையும் வழங்கிச் சிறப்பித்துள்ளன.

பொன்னீலன் நாவல், சிறுகதை, கவிதை, வாழ்க்கை வரலாறு, தன்வரலாறு, நாட்டார் இலக்கியம், திறனாய்வு, மொழிபெயர்ப்பு, பயண இலக்கியம் ஆகிய இலக்கிய வகைகளில் படைப்புகளைத் தந்துள்ளார்.

பொன்னீலனின் எழுத்திலிருக்கும் முற்போக்கு, எதார்த்தம், இயல்பான பாத்திரப்படைப்பு, அநீதிக்கெதிரான போர்க்குணம், மார்க்சியத் தாக்கம், சார்பற்றத் தன்மை, நாட்டார் வழக்காற்றுச் சொற்கள், ஒற்றைத் தன்மை இல்லாத எதார்த்தவாதம், அரசியல் விமர்சனம், சமூகப்பார்வை, சமகால வரலாற்று நோக்கு, கிராமத்து வாழ்வியல் சித்திரிப்பு ஆகியவை விமர்சகர்களால் புகழப்பட்டுள்ளன.

சமூகம், சமுதாயம் ஆகிய சொற்களிடையே நுட்பமான வேறுபாடுகள் இருந்தாலும் அவை ஒரே பொருளிலேயே தமிழில் பயன்படுத்தப்படுகின்றன.

நகரம், கிராமம் என்ற முரண்எதிர்வில் பொன்னீலன் கிராமத்தைத் தேர்வு செய்துள்ளார்.

பொன்னீலன் கிராமம் சார்ந்த பின்னணியில் கதை சொல்லும் போது அக்கிராமத்தின் இயற்கை அமைப்பு, சுற்றுச்சூழல், குடியிருப்பு, வாழும் முறை சமூக அமைப்பு, பொருளியல் நிலை ஆகியவற்றை விளக்கியுள்ளார்.

பொன்னீலன் ஊரைப் பற்றி விளக்கும்போது ஊர்த்தலைவர், ஊர்க்கூட்டம், சட்டதிட்டங்கள், கட்டுப்பாடுகள், ஊர்க்கோயில், வழிபாடு, வரிபிரித்தல், கொண்டாட்டம், பொழுது போக்குகள், தெருஅமைப்பு, சாதி சார்ந்த செயல்பாடுகள் ஆகிய செய்திகளைத் தந்துள்ளார்.

ஊர்த்தலைவர் பதவி பொருளாதாரத்தில் மேம்பட்டு நிற்பவர்களுக்கு மட்டுமே கொடுக்கப்படுவதனைக் காணமுடிகிறது.

ஊரின் கொள்கை முடிவுகளைத் தீர்மானிக்கும் இடமாக ஊர்க்கூட்டம் அமைவதனை மறுபக்கம் நாவல் எடுத்துக்காட்டியுள்ளது.

ஊர்க்கூட்டத்தில் பெண்களுக்குப் பேசும் உரிமை இருப்பதனை நாவலிலிருந்து அறியமுடிகிறது.

சமூக நிறுவனங்கள் பல இருந்தாலும் சாதி எனும் சமூகநிறுவனம் பற்றிய விவரணைகளே மறுபக்கம் நாவலில் முக்கியத்துவம் பெற்றுள்ளன.

இந்து, கிறித்தவ, இசுலாமிய சமயங்களைச் சார்ந்தவர்களாகப் பாத்திரங்கள் படைக்கப்பட்டுள்ளன. இந்து சமயக் கடவுள்கள், நம்பிக்கைகள், வழிபாட்டு மரபுகள், நாட்டார் தெய்வங்கள், விழாக்கள், சடங்குகள், கலைகள் ஆகியவற்றை நாவல் மிகுதியாகப் பிரதிபலிக்கிறது.

இந்து, கிறித்தவ சமயப் பாத்திரங்களோடு ஒப்பிட்டுப்பார்த்தால் இசுலாமியக் கதாப்பாத்திரங்கள் மறுபக்கம் நாவலில் மிகக் குறைவாகவே படைக்கப்பட்டுள்ளனர்.

சைவ வழிபாடு, வைணவ வழிபாடு, சிறுதெய்வவழிபாடு, வீரர் வழிபாடு, மூதாதையர் வழிபாடு, அய்யா வழி ஆன்மீகம் எனப் பல்வேறு வழிபாட்டு மரபுகளை மறுபக்கம் நாவல் காட்டுகிறது.

கிறித்தவ சமயத்துக்குள் பல்வேறு உட்பிரிவுகள் காணப்பட்டாலும், அனைத்துப் பிரிவினரும் கிறிஸ்துவையே வழிபடு கடவுளாகக் கொண்டுள்ளமையைக் காணமுடிகிறது.

பொன்னீலன் மறுபக்கம் நாவலில் நாடார், பரவர், முக்குவர், நம்பூதிரி, நாயர், குறுப்பு, தலித்துகள் ஆகிய சமூகப் பிரிவினரைப் பற்றி எழுதியுள்ளார்.

நாடார்களின் வாழ்வியலே மறுபக்கம் நாவலின் மையமாக அமைந்துள்ளது.

பனைத்தொழில் தற்காலத்தில் அருகிவருவது பற்றிய கவலையை நாவல் வெளியிட்டுள்ளது.

குமரி மாவட்டத்தில் பெரும்பான்மையான மக்கள் 'பிட்டு' எனும் அரிசி மாவு உணவைக் காலை உணவாகக் கொள்வதை நாவல் காட்டுகிறது.

குமரிமாவட்ட மக்கள் விருந்தோம்ப மோதகம், முறுக்கு, கூப்பனி, உன்னியப்பம், முந்திரிப்பருப்பு, காரசேவு, ஏற்றம்பழ அப்பம், எரிசேரி, புளிச்சேரி, வறுத்தமீன், ஏற்றங்காய் வறுவல் ஆகிய உணவு வகைகளை வழங்குவதனை நாவல் காட்டுகிறது.

மறுபக்கம் நாவலானது சமுதாயத்தில் காணப்படும் பல்வேறு சமூகச் சிக்கல் குறித்து பேசினாலும், சாதிச் சிக்கலையே அது முதன்மைப்படுத்துகிறது.

தனிமனிதனைச் சாதி அடையாளத்தோடு நோக்குதல், பழகாமல் தவிர்த்தல், வழிபாட்டுரிமையை மறுத்தல், சமயத்துக்குள் வேறுபாட்டை உருவாக்குதல், திருமணத்தடை, தொழில் சார்ந்த இடங்களில் சமத்துவத்தை அழித்தல், இடஒதுக்கீட்டை இழிவுபடுத்துதல், ஓரங்கட்டுதல், சுய மரியாதையை அழித்தல், மேலாதிக்கம் செய்தல், தீட்டு என்று ஒதுக்குதல் ஆகிய வடிவங்களில் சாதி செயல்படுவதை மறுபக்கம் நாவல் விரித்துரைக்கிறது.

மதச்சண்டைகளின் பின்னணியில் மதத் தலைவர்களின் அரசியல் செயல்படுவதை நாவல் எடுத்துரைக்கிறது.

வறுமை, ஊழியம், அடிமை முறை ஆகிய சமூகச்சிக்கல்களுக்கு அடிப்படையாகப் பொருளாதார ஏற்றத்தாழ்வு இருப்பதனை நாவல் சுட்டுகிறது.

வன்முறை என்பது திட்டுதல், மிரட்டுதல், அடித்தல், மிதித்தல், குத்துதல், வெட்டுதல், ஆயுதங்களால் தாக்குதல், எரியூட்டுதல், கொலை செய்தல் ஆகிய வடிவங்களில் செயல்படுவதை மறுபக்கம் நாவல் நுட்பமாக உணர்த்துகிறது.

திருவிதாங்கூர் சமஸ்தானத்துக்கு உட்பட்டதாகக் கன்னியாகுமரி மாவட்டம் இருந்த காலகட்டத்தில், குமரித் தமிழர்கள் மீது தலைவரி, முலைவரி, தொழில்வரி, மரவரி, தரைவரி போன்ற வரிகள் திணிக்கப்பட்டதனை நாவல் பதிவுசெய்துள்ளது.

இயற்கையை அழித்தல், ஓசை மாசுபாடு ஆகிய சுற்றுச் சூழல் சிக்கல்களும் மறுபக்கம் நாவலில் இடம் பெற்றுள்ளன.

பெண் அடிமைத்தனம், மேலாடை அணியும் உரிமையின்மை, பெண்கல்விக்குத் தடை, கைம்பெண்ணுக்கெதிரான கொடுமைகள் ஆகியவற்றை பெண்ணுக்கெதிரான சமூகச்சிக்கல்களாக நாவல் காட்டுகின்றது.

கிறித்தவக் கதாப்பாத்திரங்கள் இந்து சமயத்தைப் புகழுமிடங்களையும், இந்து சமயக் கதாப்பாத்திரங்கள் கிறித்தவ சமயத்தைப் புகழுமிடங்களையும் நாவலில் காணமுடிகிறது.

பொன்னீலன் சாதி வேறுபாடற்ற சமூக உருவாக்கத்துக்கான மாதிரியாக வைகுண்டரைக் காட்டுகிறார்.

சாதி வேறுபாட்டை அகற்ற, உயர்ந்த ஆளுமைகளின் மேற்கோள்களும் நாவலுக்குள் எடுத்தாளப்பட்டுள்ளன.

சமூக வரலாறாகச் செயற்படும் மறுபக்கம் நாவலானது சமுதாய மாற்றத்துக்கான தீர்வுகளையும் முன் வைக்கிறது.

பொருளாதார மேம்பாட்டின் வழியாக மட்டுமே தாழ்த்தப்பட்ட மக்களுக்கு சமூக மரியாதையை உருவாக்க முடியும் என்ற கருத்து நாவலில் வலியுறுத்தப்பட்டுள்ளது.

வருணாசிரம முறை ஒழிக்கப்படும்போதுதான் சமுதாய மாற்றம் நிகழும் என்பதனை நாவல் அறிவுறுத்துகிறது.

பெண்விடுதலை, சாதி விடுதலை, இனவிடுதலை, மொழி விடுதலை, மத விடுதலை, பொருளாதார விடுதலை ஆகிய விடுதலைகள் நாவலின் உள்ளடக்கமாகியுள்ளன.

சமூக மாற்றத்தை உருவாக்கும் உந்து சக்தியாகக் கல்வி இருப்பதனை நாவல் எடுத்துக் காட்டியுள்ளது.

கன்னியாகுமரி பற்றிய குறிப்புகளை தொல்காப்பியர் காலத்திலிருந்தே இலக்கண, இலக்கியங்களில் காணமுடிகிறது.

புறநானூறு, சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி ஆகியவற்றில் கன்னியாகுமரி பற்றிய குறிப்புகளைக் காணமுடிகிறது.

மேனாட்டார் குமரி மாவட்டம் பற்றி எழுதிய வரலாறுகளில் சமயச்சார்பு காணப்படுகிறது.

மறுபக்கம் நாவல் சங்ககாலம் முதல் தற்காலம் வரையிலான வரலாற்றை வரிசையாகச் சொல்ல வேண்டும் என்ற நோக்கில் எழுதப்படவில்லை.

மண்டைக்காட்டுக் கலவரம் பற்றிய உள்ளடக்கத்திற்குத் தேவையான வரலாற்றுச் செய்திகளை மட்டுமே பொன்னீலன் தேர்வு செய்து எழுதியுள்ளார்.

கி.பி. 1750-க்கு முன்னர் திருவிதாங்கூர் பகுதி வேணாடு என அழைக்கப்பட்டது.

1729 முதல் 1949 வரை திருவிதாங்கூர் பகுதியை பன்னிரண்டு கேரள மன்னர்கள் ஆட்சி செய்துள்ளனர்.

பன்னிரு மன்னர்களில் மார்த்தாண்ட வர்மா பற்றிய வரலாற்றுச் செய்திகள் நாவலுக்குள் முக்கியத்துவம் பெற்றுள்ளன.

மார்த்தாண்ட வர்மா ஆட்சிப் பொறுப்பில் ஏறத் துணை நின்றவராக அனந்தபத்மநாபன் குறிப்பிடப்படுகிறார்.

குமரிமாவட்டத்தில் வைகுண்டரை இறையவதாரமாக எண்ணி வழிபடும் எட்டாயிரத்துக்கும் மேற்பட்ட பதிகள் உள்ளன.

பொன்னீலன் வைகுண்டரை எளிமையானவராகவும், அய்யா வழியை உருவாக்கியவராகவும், துவையல் பந்தியை ஏற்படுத்தியவராகவும், நிழல்தாங்கல்களை அமைத்தவராகவும், சமூக ஆன்மீகப் போராளியாகவும், சாதிய எதிர்ப்பாளராகவும் அடையாளப்படுத்தியுள்ளார்.

குமரி மாவட்ட அடித்தள மக்களிடம் மேலாடை அணியும் விழிப்புணர்வை ஏற்படுத்திய முதல் சமூகப்போராளியாக வைகுண்டர் காட்டப்படுகின்றார்.

குமரி மாவட்டத்தில் தாமஸ் கிறித்தவர்கள் கி.பி.ஆயிரத்து அறுநூறுகளில் இருந்ததாக வரலாறு குறிப்பிடுகிறது.

வாஸ்கோடகாமாவின் வரவுக்கு முன்னரே குமரிமாவட்டத்தில் கத்தோலிக்கக் கிறித்தவம் இருந்தமையை அறியமுடிகிறது.

புனித சவேரியாரின் ஆன்மீகப் பணியால் குமரி மாவட்ட கடற்கரை வாழ் மக்கள் முழுமையாகக் கிறித்தவத்தை ஏற்றுக்கொண்டதையும் அறியமுடிகிறது.

குமரி மாவட்டத்தில் நிறுவப்பட்ட முதல் சீர்திருத்தத் திருச்சபை மைலாடி ஆகும்.

மீட் அய்யரின் கல்விப்பணி சாதியற்ற சமூகம், அடிமைகளற்ற சமூகம், பாலின சமத்துவம் ஆகிய இலக்குகளைக் கொண்டதாக அமைந்தமையை மறுபக்கம் நாவல் விளக்கியுள்ளது.

மீட் அய்யரின் சமயப்பணி நாவலில் பகடி செய்யப்பட்டுள்ளது.

குமரி மாவட்டப் பெண்களின் மேலாடையான குப்பாயத்தை வடி வடிவமைத்தவர் மீட் அய்யரின் மனைவி ஜோஹன்னா ஆவார்.

நாகர்கோவில் பகுதியில் வாழ்ந்த கைம்பெண்களின் பொருளாதார வளர்ச்சிக்காக தையல் சார்ந்த கலைகளைக் கற்பித்தவராக ஜோஹன்னா காட்டப்படுகிறார்.

குமரிமாவட்டத்தில் முதல் முதலாய்ச் சீர்திருத்தத் திருச்சபையைத் தழுவிய வேதமாணிக்கம் ஒடுக்கப்பட்ட சமூகத்தைச் சார்ந்தவர் ஆவார்.

அருந்ததியர்கள் சங்கம் அமைத்துப் போராடத் தூண்டியவராக ஜீவா காட்டப்படுகிறார்.

ஹிட்லரும், ஸ்டாலினும் சர்வாதிகாரத்தின் இரண்டு வடிவங்கள் எனப் புரிந்து கொள்ளப்பட்ட நவீன சமூகத்தில் ஸ்டாலினை மட்டும் உயர்வானவராகச் சித்திரிக்கும் ஜீவாவின் கருத்தைப் பொன்னீலன் மேற்கோள் காட்டுவது, அவரது இடதுசாரி இயக்கச் சார்புநிலையைப் புலப்படுத்துகிறது.

மார்ஷல் நேசமணியின் வழக்கறிஞர் பணி, அரசியல் பணி, சமூகப்பணி, தென்எல்லைப் போராட்டப்பணி ஆகியவற்றை நாவல் உயர்வாக மதிப்பிடுகிறது.

நேசமணியோடு ஒத்துச் செல்லாத மனோபாவம் கொண்டவராகத் தாணுலிங்க நாடார் நாவலில் அடையாளப்படுத்தப்படுகிறார்.

குமரிமாவட்டத்தில் ஈழவர், புலையர், வேடர் ஆகிய சமூகத்தினர் அடிமைகளாக இருந்துள்ளனர்.

குமரி மாவட்டத்தில் அடிமைச்சந்தைகள் இருந்ததனைப் பொன்னீலன் வரலாற்றிலிருந்து எடுத்து நாவலுக்குள் பதிவு செய்துள்ளார்.

அடிமைகள் ஜென்மம், காணம், பாட்டம் ஆகிய முறைகளில் விற்கப்பட்டுள்ளனர்.

குமரிமாவட்டத்தில் அடிமை முறையை ஒழிக்க மீட், மால்ட், ஆக்ஸ் போன்ற மேனாட்டுக் கிறித்தவ அருட்தொண்டர்கள் முயற்சி எடுத்துள்ளனர்.

15/10/1853 அன்று உத்திரம் திருநாள் மன்னரால் இயற்றப்பட்ட சட்டத்தின்படி அடிமைகள் விடுதலை செய்யப்பட்டனர்.

முற்காலத்தில், குமரிமாவட்டத்தில் நாடார், ஈழவர், காவேரி, நாவிதர், பறையர், புலையர், சாம்பவர், வள்ளுவர், சேரமர் ஆகிய சாதிப் பிரிவுகளைச் சார்ந்த பெண்கள் மார்பில் மேலாடை அணிய அனுமதிக்கப்படவில்லை.

வைகுண்டரின் கொள்கைகள், மீட் அய்யரின் சட்டப்படியான நடவடிக்கைகள், காக்ஸ் அய்யரின் தொடர் நடவடிக்கைகள், மக்களின் ஒருங்கிணைந்த போராட்டம் ஆகியவற்றால் தோள்சீலை அணியும் உரிமையை குமரிமாவட்ட மக்கள் பெற்றனர்.

தோள் சீலைக்கலகம் மூன்று காலகட்டங்களாக நடைபெற்றுள்ளது.

குமரி மாவட்டத்தைத் தாய்த் தமிழகத்துடன் இணைக்க நடந்த போராட்டத்தை இரண்டு தேசிய இனங்களுக்கிடையேயான போராட்டம் என நாவல் அடையாளப்படுத்துகிறது.

மலையாளிகளின் மனிதாபிமானமற்ற அரசியல் அமைப்புமுறைகள் அதன்மேல் கட்டப்பட்ட சமூக, பொருளாதார, சமய, மொழி, கலாச்சார அடிப்படையிலான நியாயமற்ற கட்டுமானங்களும் குமரிமாவட்ட மக்களைப் போராடத் தூண்டிய காரணிகளாகும்.

குமரி மாவட்டத்தைத் தமிழகத்தோடு இணைக்கப் போராடியவர்களுக் கெதிராகப் புதுக்கடையில் மலையாள அரசு செய்த அதிகார வன்முறைகளையும், ஜாலியன் வாலாபாக் படுகொலையையும் பொன்னீலன் ஒப்பிட்டுள்ளார்.

நாட்டார் வழக்காறுகள் விளிம்புநிலை மக்களின் வரலாற்றைத் தொகுக்க உதவும் தரவுகளாக அமைகின்றன.

பிராமணர்கள், சைவ வேளாளர்கள் தவிர்ந்த சாதிப் பிரிவினரிடையே சிறுதெய்வவழிபாடு காணப்படுகிறது.

முன்னோர்களின் ஆற்றல் அனுபவம், ஆசி ஆகியவை பின் தலைமுறையினருக்குக் கிடைப்பதற்காக இவ்வழிபாடு செய்யப்படுகிறது.

குடும்பங்களில் திருமணம் ஆகாமல் இறந்து போன கன்னிகளைத் தெய்வமாகக் கருதி வழிபடும் முறை குமரிமாவட்டத்தில் காணப்படுகிறது.

பிராமணர்களுக்கும் நாட்டார் குலசாமிகள் இருப்பதாக மறுபக்கம் நாவல் கூறுகின்றது.

பலியிடப்படும் மனிதஉடல்கள் காலங்காலமாகக் கொண்டாடப் படுகின்றன.

கோவளத்தின் காவல்தெய்வங்களாக மன்னன் மதிப்பன் ஆகியோர் போற்றப்படுகின்றனர்.

பப்புத்தம்பி, இராமன் தம்பி ஆகியோருக்குக் குமரிமாட்டத்தில் இருபத்திநான்கு கோயில்கள் உள்ளன.

சாதி வெறியால் கொல்லப்பட்ட சிதம்பரநாடார் குமரிமாட்டத்தில் தெய்வமாக வழிபடப்படுகிறார்.

பாண்டியிலிருந்து குமரி மாவட்டத்துக்கு வந்த தெய்வம் சேர்வைக்காரன் சாமி ஆவார்.

குமரிமாவட்டத்திலுள்ள மன்னன் தேவன் பாறையில் வழிபடும் வெள்ளைக்காரன் சாமி யாரைக் குறிக்கிறது என்பதில் நாட்டுப்புற மக்களிடையே ஒருமித்த கருத்து நிலவவில்லை.

தாய்த்தெய்வங்கள் கன்னி, தேவி, மனைவி எனும் மூவகைப் பாகுபாட்டுக்குள் அடக்கப்படுகின்றனர்.

இயக்கி எனும் பெண் தெய்வம் பற்றிய படிமம் நாவலுக்குள் பயங்கரமானதாகக் காட்டப்பட்டுகிறது.

இயக்கி, எசக்கி, ஏக்கி, ஏக்கியம்மை என்ற பெயர்களில் இசக்கி அழைக்கப்படுகிறார்.

நரபலி உயிர்ப்பலி, பதிலிப்பலி ஆகிய பலியிடல் மரபுகளை நாட்டார் வழக்காறு தனைக்குள் கொண்டுள்ளது.

ஒடுக்குப்பூசை, சாவுச்சடங்கைப்போல நிகழ்த்தப்படுகிறது.

தெய்வங்களுக்கு மண்டையப்பம், வெற்றிலை பாக்கு, கோழி, கடா, பதநீர் ஆகியவை படைக்கப்படுவதைக் காணமுடிகிறது.

தீமிதித்தல், தீச்சட்டி ஏந்துதல், அக்கினிக்காவடி எடுத்தல் ஆகியவற்றில் ஏற்படும் வலிகளை மக்கள் இறைவனுக்காகத் தாங்கிக்கொள்ளுகின்றனர்.

கோமாதாப்பூசை, பனைமரப்பூசை ஆகியவற்றில் விலங்கும் தாவரமும் புனிதமாகக் கருதப்படுகின்றன.

சாமியாட்டம் என்பது மனிதனுக்கு அப்பாலான உணர்வெழுச்சி நிலையாக அமைகிறது.

வழிபடுபவரும், வழிபாடுக்குரியவரும் ஒன்றிணையும் சங்கம நிலையாகச் சாமியாட்டம் அமைகிறது.

சமயம் சார்ந்த நம்பிக்கை, அமானுஷ்ய நம்பிக்கை, பேய்பற்றிய நம்பிக்கை மந்திரவாதம் பற்றிய நம்பிக்கை, சகுனம், ஆணை, காலெடுத்த வைத்த ராசி போன்ற நம்பிக்கைகளுக்கான சான்றுகளை மறுபக்கம் நாவலில் காணமுடிகிறது.

கிறித்தவர்களின் குருத்தோலை எரித்தல் சடங்கு, நாற்பது நாள் உபவாசம், சிலுவைப்பாதை, மந்திரக்கோல் வழிபாடு, பஜனை ஆகிய வழிபாட்டு மரபுகளையும் நாவல் சுட்டுகிறது.

உறுமால் கட்டுச்சடங்கு, மாப்பிள்ளைக்கல் தூக்கும் சடங்கு, தாலிகட்டும் சடங்கு, இறப்புச்சடங்கு ஆகிய சடங்குமுறைகளை நாவல் விவரித்துள்ளது.

திருவிழா என்பது சமூகத்தின் கூட்டு மன எழுச்சியாக அமைகிறது.

திருவிழாவில் காப்புக்கட்டுதல், வீதியுலாவருதல், பொங்கலிடுதல், பலியிடுதல், பிரார்த்தனை செய்தல், வாக்குக்கேட்டல், சாமி மலை ஏறுதல் ஆகிய நிகழ்வுகள் நடைபெறுகின்றன.

குமரி மாவட்டத்தில் தாராமுட்டை, மீன், ஏற்றங்காய் வறுவல், பிட்டு, உன்னியப்பம், முந்திரிப்பருப்பு, நெய்ச்சோறு, முறுக்கு, கிழங்கு, சோறு, காரம்பழம், வௌவால், முயல், பெரும்பயிறு, சிறுபயிறு, கோழி, ஆடு, பனம்பழம், மாம்பழம், கொல்லாம்பழம், வறுத்த புளியங்கொட்டை, நுங்கு, பணியாரம், கருப்புக்கட்டி, முந்திரிக்கொத்து, சர்பத், சாயா, நீராளம், கூழ்ப் பதநீர், கள் ஆகிய உணவு வகைகளை உண்ணுகின்றனர்.

வாளிவிடுதல், பாட்டம் ஒளிச்சி, நுங்கு வண்டி, பட்டம் விடுதல், மரைக்காப்பிள்ளை, நீச்சல், தொட்டுவிளையாட்டு, குட்டிக்கரணம் ஆகிய குமரிமாவட்ட நாட்டுப்புற விளையாட்டுக்களை நாவல் காட்டுகிறது.

குமரி மாவட்டத்தில் நாட்டுப்புற மருத்துவத்துக்கு முக்கிய இடம் உள்ளது.

சிவனணைஞ்சி அம்மை, மண்டைக்காட்டம்மன், பத்ரகாளி, இயக்கி, யயாதி ஆகியோரைப் பற்றிய நாட்டுப்புறக் கதைகள் நாவலில் இடம் பெற்றுள்ளன.

சாதியில் மேல்/கீழ் என்ற பகுப்புக்கு விடை காணும் முயற்சியில் சாதித்தோற்றம் பற்றிய நாட்டுப்புறக்கதைகள் உருவாக்கப்பட்டுள்ளன.

சிலம்பம், வர்மக்கலை, வில்லுப்பாட்டு, நையாண்டி மேளம், கோயில்கலை ஆகிய நாட்டுப் புறக்கலைகள் பற்றிய குறிப்புகளை நாவலில் காணமுடிகிறது.

# துணைநூற்பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரம்


1. பொன்னீலன் — மறுபக்கம்
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிமிடெட்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு,2010


## துணைமைச் சான்றாதாரங்கள்


2. அறவாணன், க.ப., — படைப்பாளி + சமூதாயம் = இலக்கியம்,
தமிழ்க்கோட்டம்,
புதுச்சேரி,
முதல் பதிப்பு,1995

3. ஆல்பென்ஸ் நதானியேல்.மு.
அரிகரசுதன், இரா.(தொ.ஆ.), — மார்ஷல் நேசமணி குமரியின் தந்தை,
நேசமணி தமிழர் பதிப்பகம்,
நாகர்கோவில்,
முதல் பதிப்பு, 2011

4. இரவீந்திரபாரதி., — நவீன தமிழ் இலக்கியம் சில பார்வைகள்,
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
சென்னை,
முதல் பதிப்பு, 2008

5. இராபர்ட் ஹார்டு கிரேவ், எல்.
ஜெயபாண்டியன், எஸ்.டி(மொ.ஆ), — தமிழக நாடார் வரலாறு,
முருகன் பப்ளிகேஷன்ஸ்,
தூத்துக்குடி,
முதல் பதிப்பு, 1979

6. இராமலிங்கம்,மா., — நோக்கு நிலை,
இராசிபதிப்பகம்,
கும்பகோணம்,
முதல் பதிப்பு,1984.

7. இளங்கோவன்.பெ கணபதிசுப்பிரமணியன்.இரா முதலியோர்,(ப.ஆ.), மானுடப்பறவை, திணைவெளீட்டகம், நாகர்கோவில், முதல் பதிப்பு,2001.

8. இளம்பூரணர் (உ.ஆ), தொல்காப்பியம் எழுத்ததிகாரம் சாரதா பதிப்பகம், சென்னை, ஆறாம் பதிப்பு, 1955.

9. இன்னாசி,சூ.(ப.ஆ.), சமயமும் சமுதாயமும், சென்னைப்பல்கலைக்கழகம், பதிப்புத்துறை, சென்னை, முதல் பதிப்பு,1993

10. ஐசக் அருள்தாஸ்,ஜி., குமரி மண்ணில் கிறிஸ்தவம், நாஞ்சில் ஆப்செட் பிரிண்டர்ஸ், நாகர்கோவில், முதல் பதிப்பு, 2010

11. ஐவி பீட்டர்., சமயத் தொண்டர்களும் சமுதாய மறுமலர்ச்சியும், கன்னியாகுமரி வளர்ச்சி ஆய்வு மன்றம், நாகர்கோவில், முதல் பதிப்பு, 1999

12. கம்பர்., கம்பராமாயணம், பாலகாண்டம், வை.மு.கோபாலகிருஷ்ணமாசாரியர் கம்பெனி, சென்னை, ஏழாம் பதிப்பு, 1964

13. கல்யாணி,க., நாவலும் தோள்சீலைப்போராட்டமும்,
காவ்யா வெளியீடு,
சென்னை,
முதல் பதிப்பு, 2003

14. கழனியூரன்., மண்ணின் மரபுகளும் மக்களின் நம்பிக்கைகளும்,
அன்னம் பதிப்பகம்,
தஞ்சாவூர்,
முதல் பதிப்பு, 2008

15. கனகசுந்தரம், வெ., ஜெகசிற்பியனின் சமூகப் புதினங்கள்,
செவ்வேளகம்வெளியீடு,
சென்னை,
முதல் பதிப்பு,1985

16. கஸ்தூரி ஜான்சன்., குமரிமாவட்டப் புதினங்களில் சமூக
நிறுவனங்கள்,
கிரேஸ் பதிப்பகம்,
நாகபட்டினம்,
முதல் பதிப்பு,2000

17. காளியப்பன், ந., குமரிமாவட்ட விடுதலை வரலாறு
காவ்யா வெளியீடு,
சென்னை,
முதல் பதிப்பு,2012

18. கிருஷ்ணசாமி,ப. (தொ.ஆ.), ஜெயகாந்தன் இலக்கியத்தடம்,
காவ்யா வெளியீடு,
பெங்களூர்,
முதல் பதிப்பு,1997

19. கீதா,சு.அர., பொன்னீலன் படைப்பிலக்கியங்கள்-ஓர் ஆய்வு,
அண்ணா நிலையம்,
சிவகாசி,
முதல் பதிப்பு,2006

20. கைலாசபதி, க., பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும்,
மக்கள்வெளியீடு,
சென்னை,
முதல் பதிப்பு, 1996

21. ............................ தமிழ் நாவல் இலக்கியம்,
நியூசெஞ்சுரிபுக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 1977

22. ............................ சமூகவியலும் இலக்கியமும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
சென்னை,
முதல் பதிப்பு,1979

23. சக்திவேல், சு., நாட்டுப்புற இயல் ஆய்வு,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
முதல் பதிப்பு,1983

24. சச்சிதானந்தன், வை., ஒப்பிலக்கியம்,
ஆக்ஸ்போர்டு யுனிவர்சிட்டி பிரஸ்,
சென்னை,
முதல் பதிப்பு,1985.

25. சாந்தினி. மே.தாஸ்., குமரி மாவட்ட சமூக அரசியல் வரலாறு, காவ்யா
காவ்யா வெளியீடு,
சென்னை,
முதல் பதிப்பு, 2013

26. சாமிநாதையர், உ.வே. (உ.ஆ.)., புறநானூறு
உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம் வெளியீடு,
சென்னை,
முதல்பதிப்பு, 1984.

27. சாமுவேல் சகாரியா., தென்திருவிதாங்கூர் திருச்சபை சரித்திரச் சுருக்கம்
லண்டன் மிஷன் பிரஸ்,
நாகர்கோவில்,
முதல்பதிப்பு,1998

28. சிவசுப்பிரமணியன்., வரலாறும் வழக்காறும்,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்,
இரண்டாம் பதிப்பு, 2010.

29. சுகுமாறன், கு., எங்கள் விடுதலைப்போர்,
சாந்தினி பதிப்பகம்,
நாகர்கோவில்,
முதல் பதிப்பு,2011

30. செயபால்,இரா.(உ.ஆ.), அகநானூறு,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை.
முதல்பதிப்பு, 2004.

31. செயராணி ராசதுரை., பெண்கள் படைப்பில் சமூகம்,
வைகை வெளியீடு,
பவானி,
முதல் பதிப்பு,1990

32. சேதுமணி மணியன்., தமிழ் நாவல்களில் மதிப்புகள்,
செண்பகம் வெளியீடு,
முதல் பதிப்பு,1990

33. ஞானி, (தொ.மு.), புதியதரிசனங்கள் கலையும் அரசியலும்,
விஜயா பதிப்பகம்,
கோவை,
முதல் பதிப்பு,1994

34. தங்கமணி, செ., கன்னியாகுமரி மாவட்டம் அரசியல் சமூக வரலாறு,
கன்னியாகுமரி மாவட்ட வரலாற்றுப் பார்வை
வெளியீடு,
சென்னை,
முதல் பதிப்பு,2005

35. தண்டாயுதம், இரா., சமூக நாவல்கள் ,
தமிழ்புத்தகாலயம் வெளியீடு,
சென்னை,
முதல் பதிப்பு,1979

36. திருவள்ளுவர்., திருக்குறள், (புலவர் அரசுமணி உரை),
அருணோதயம் பதிப்பகம்,
சென்னை,
ஏழாம் பதிப்பு,2003.

37. நடராசன்,தி.சு., திறனாய்வுக்கலை,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் பிமிடெட்,
சென்னை,
ஒன்பதாம் பதிப்பு, 2009.

38. பக்தவச்சல பாரதி., பண்பாட்டு மானுடவியல்,
மணிவாசர் பதிப்பகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 1999.

39. ............................ தமிழர் மானிடவியல்,
மெய்யப்பன் தமிழாய்வகம்,
சிதம்பரம்,
முதல் பதிப்பு, 2002.

40. பரமசிவன்,தொ., தெய்வங்களும் சமூக மரபுகளும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு. 2005

41. பரமேஷ், செ.ரா., சமூக உளவியல்,
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை,
முதல் பதிப்பு,1973

42. பரிமளா,ச., வாஸந்தி நாவல்கள்-ஓர் ஆய்வு,
மதி பதிப்பகம்,
மதுரை,
முதல் பதிப்பு, 1995

43. பாரதிதாசன்., பாரதிதாசன் கவிதைகள்,
அருணா பப்ளிகேஷன்ஸ்,
சென்னை,
முதல் பதிப்பு, 2008

44. பாரதியார்., பாரதியார் கவிதைகள்,
பாரதி பதிப்பகம்,
சென்னை,
மூன்றாம் பதிப்பு, 2015

45. பிச்சமுத்து, ந., முதுவ.வின் நாவல்களில் சமுதாய மறுமலர்ச்சியின் தாக்கம்,
சக்தி புத்தகாலயம்,
சென்னை,
முதல் பதிப்பு, 1998.

46. பீட்டர்,டி., குமரிமாவட்ட விடுதலை கல்குளம்-விளங்கோடு நாடார் மக்கள் தந்தவிலை கன்னியாகுமரி வளர்ச்சி ஆய்வு மன்றம்,
நாகர்கோவில்,
முதல் பதிப்பு,2008,

47. பெருமாள்,அ.கா., தென்குமரியின் கதை,
யுனைடெட். ரைட்டர்ஸ்,
சென்னை,
முதல் பதிப்பு, 2003

48. ............................ தென்குமரியின் சரித்திரம்,
சுதர்சன்புக்ஸ்,
நாகர்கோவில்,
முதல் பதிப்பு, 2004.

49. பொன்னீலன்., அத்தாணிக் கதைகள்,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
சென்னை,
முதல் பதிப்பு, 2004

50. ............................ புதிய தரிசனங்கள்,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
சென்னை,
மூன்றாம் பதிப்பு, 2005

51. ............................ பொட்டல் கதைகள்,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
சென்னை,
முதல் பதிப்பு, 2007.

52. ............................ ப.ஜீவானந்தம் நூல் திரட்டு,
சாகித்திய அகாதெமி வெளியீடு,
புதுடில்லி,
இரண்டாம் பதிப்பு,2011

53. பொன்னு,இரா., தென்கோடியில் ஒரு சமுதாயப் புரட்சி, தென்குமரி
தென்குமரி அச்சகம்,
நாகர்கோவில்,
முதல் பதிப்பு, 1987.

54. பொற்கோ., ஆராய்ச்சி நெறி முறைகள்,
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 1998.

55. மணிகண்டன்,துரை., மனித உரிமைச் சிந்தனைகள்,
நல்நிலம் பதிப்பகம்,
சென்னை, முதல் பதிப்பு, 2008

56. மாலதி மைத்ரி, வெட்ட வெளிசிறை,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்,
முதல்பதிப்பு, 2014

57. முத்துராஜன்,ரெ., ஐயனார் வழிபாடு
நல்நிலம் வழிபாடு,
சென்னை,
முதல் பதிப்பு, 2008

58. முத்தையா,கே., தமிழ் இலக்கியங்கள் கூறும் தத்துவப் போராட்டங்கள்,
அன்னம் பிரைவேட் லிமிடெட்,
சிவகங்கை,
முதல் பதிப்பு,1991

59. முருகேசன், ச., சாகித்திய அகாதெமி விருது பெற்ற புதினங்களில் சமுதாயப் பார்வை,
திி பார்க்கர் பதிப்பகம்,
சென்னை, முதல் பதிப்பு, 2007

60. யோகீசுவரன்,. பி., தமிழ்க்கவிதைகளில் சமுதாயச் சிக்கல்கள்,
நிலா பதிப்பகம்,
சென்னை,
முதல் பதிப்பு, 1985.

61. லூர்து, தே., நாட்டார் வழக்காறுகள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
முதல் பதிப்பு, 1988

62. வரதராசன், கே.பி., இரண்டாவது தோள்சீலைக் கலவரத்தில் அனந்தன் வழியார்களின் பங்கு,
அனந்த பத்மநாலயம்,
காட்டாத்துறை,
முதல் பதிப்பு,2000

63. வளவன்,சா., பெண்படைப்பாளர் தம் படைப்புகள்,
சென்னை,
முதல் பதிப்பு, 1995.

64. வாசுகி ஜெயரத்னம்., பெண்ணியச் சுவடுகள்,
அறிவு பதிப்பகம்,
சென்னை,
முதல் பதிப்பகம், 2009

65. வானமாமலை,நா., தமிழர் பண்பாடும் தத்துவமும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, முதல் பதிப்பு, 1978

66. விவேகானந்தன்,என். (ப.ஆ.)., அருள் நூல் விவேகானந்தன் பதிப்பகம், ஆசாரிப்பள்ளம், முதல் பதிப்பு,1993,

67. வேங்கடராமன், சு., புனைகதை இலக்கியம், மீனா பதிப்பகம், மதுரை, முதல் பதிப்பு,1997

68. ஜாய்ஞானதாசன். கிருஷ்ணசாமி. பொன் (மொ.ஆ.)., ஒரு மறக்கப்பட்ட வரலாறு, இந்தியக் கல்விக்கழகம், மதுரை, முதல் பதிப்பு, 1998

69. ஜார்ஜ்,டி.எச்., குமரி மாவட்டப் பெண்ணுரிமைப் போராட்டம், மார்த்தாண்டம், முதல் பதிப்பு,1997

70. ஷோபனா, மு., பனைசார் உலகம் நாடார் இன வரைவியல், காவ்யா வெளியீடு, சென்னை, முதல் பதிப்பு, 2013

இதழ் :-

குமுதம் ரிப்போர்டர் 15/4/2001.சின்னக்குத்தூசி, தேர்தலோ தேர்தல்.